கழக வெளியீடு: எஅகூ

பாட்டுடைத்தலைவன் தம்பியருள் ஒருவர்

பாடிய

# நந்திக் கலம்பகம்



பெருநாவலர், பேராசிரியர்,

வித்துவான்,

## பு. சி. புன்னைவனநாத முதலியார்

கழகப் புலவர், செல்லூர்க்கிழார்

## செ. ரெ. இராமசாமிபிள்ளை

இவர்கள் எழுதிய

**உரையுடன்**



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை-1.

First Edition: Aug., 1955.

# NAṈTHIK KALAMBAGAM



*Published by*

THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS
PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD.,
1/140, BROADWAY, MADRAS - 1.

Head Office:

24, EAST CAR STREET, THIRUNELVELI

Appar Achakam, 2/140, Broadway, Madras-1. C. 1020.

# பதிப்புரை

நம் இன்பத் தமிழகத்தை முடியுடைவேந்தர் மூவர்களும் ஆட்சி செய்தபின், பற்பல வேற்று நாட்டவர் கைப்பற்றி ஆண்டனர்; அவருள் இறுதியாக ஆண்டு சென்றோர், ஆங்கிலேயர்.

இவ்வேந்தர்களுள் ஒருசாராரே பல்லவர். பல்லவர்களால் ஓவியக்கலை நடனக்கலை இசைக்கலைகள் வளர்ந்தன. ஆனால் தமிழ் மொழிமட்டும் இக்காலம்போல் ஒதுக்கம்பெற்று மூலையில் முடங்கிற்று. அக்காலத்துச் சிறிது தமிழைத் தலைதூக்கச்செய்தவன், இப்பாட்டுடைத் தலைவனை **மூன்றும் நந்திவர்மன்**. இவன் பெருங் கொடையாளன், பெருவீரன், குடிபுரவுண்டு கொடுங் கோலஞ்சி வாழ்ந்தபெருந்தகை. சிவபெருமான்பாற் பற்றுக்கொண்ட தூய நெஞ்சினன்.

இத்தகையான்மீது பாடப்பெற்றதே இந் **நந்திக் கலம்பகம்** என்னும் இசசிறு நூல். இது உருவிற்சிறிதேயாயினும் பொருட்செறிவு, சொற்செறிவு, அரிய கருத்து நயம், ஓசையின்பம் யாவும் ஒருங்கே வாய்ந்த அரிய சீரிய நூல். இது கலம்பகங்கட்கெல்லாம் முற்பட்டதென வரலாற்றறிஞர் கூறுகின்றனர். இது புனைந்துரைவகையைக் கிளத்தும் நூலாகமட்டுமிராமல், நந்தி வரலாற்றை அறிவிக்கும் வரலாற்று நூலாகவும் திகழ்கின்றது.

இத்தகைய சீர்சால் நூல், முன்னர் எண்பதாண்டுக்கு முன் சென்னைப் புரசைப்பாக்கம் விவேக விளக்க அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பெற்ற பதிப்பு ஒன்றும் 1927-இல் சென்னை அடையாற்று நே. தி. கல்லூரித் தமிழாசிரியராக இருந்த பண்டித. திரு. அ. கோபாலையரவர்களால் திருத்தப்பெற்றுப் பதிப்பித்த பதிப்பு ஒன்றும் வெளிவந்துளது. மூலம் மட்டுமே இப்பதிப்புக்களில் வந்தன; குறிப்புரைகள்கூடச் சரிவர வரையப்பெற

வில்லை. தற்போது அப்பதிப்புக்கள் கிடைக்கப்பெற வில்லை. அப்பால் அண்மையில் காலஞ்சென்ற இரசிக மணி டி. கே. சிதம்பரநாத முதலியாரவர்கள் எழுதி வைத்திருந்த கையெழுத்துப்படியிற் கண்டபடி சில பாடல்களுக்கு உரை விளக்கத்துடன்கூடிய பதிப்பு ஒன்றை, 1955 ஆம் ஆண்டு சூலைத்திங்களில் சென்னை திருவல்லிக்கேணி ஸ்டார் பிரசுர வெளியீட்டகத்தார் வெளியிட்டுள்ளனர்.

இத்தனை வெளியீடுகளும் இக்கலம்பகத்தின் உள்ளுறை பொருள்களைத் தெளிதற்கு ஏற்றனவாக முற்ற முடிய எடுத்து விளக்கப்பெறவில்லை.

ஆகவே, இந்நூலுக்கு எம் கழகப் புலவர்களான **பெருநாவலர் பு. சி. புன்னைவனநாத முதலியாரவர்களை**யும் **செல்லூர்க்கிழார், செ. ரெ. இராமசாமிபிள்ளை**யவர்களையும் கொண்டு சொல்லுரை கருத்துரை விளக்கவுரைகளை எளிய இனிய நடையில் கற்றாரும் மற்றாரும் பயிலுதற்கு வாய்ப்பாகத் தலைப்புகளில் துறை விளக்கமும் கொடுத்து எழுதுவித்து அழகுறப்பதித்து நூலுருவாக்கி வெளியிட்டுள்ளோம்.

செந்தமிழ்த் திருநாட்டுமக்கள் வாங்கிக் கற்று, நம் பழந்தமிழக நாட்டின் சிறப்பையும் பண்பாட்டையும் வேற்றுமொழிக்குரிய மன்னனொருவன் தமிழுக்காக உயிர்நீத்த நிலையையும் நன்குணர்ந்து இன்புறுவதோடு, எம்மையும் இன்னனபோன்ற பணிகளைத் தொடர்ந்து செய்வதற்கு ஊக்குவிப்பார்களென நம்புகின்றோம்.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்**

# புனைந்துரை

[கழகப் புலவர், செல்லூர்க்கிழார் செ. ரெ. இராமசாமிபிள்ளை]

## நந்திக்கலம்பகமும் நூலாசிரியரும்

நூல் :

நந்திக்கலம்பகம் என்னும் இந்நூல் மூன்றாம் நந்திவர்மன்மீது பாடப்பெற்றதாகும். இது ஏனைய கலம்பகங்கள் போலாகாது வரலாற்று நூலாக விளங்குகின்றது; இத்தகைய நூலைப் பாடியவர் யாரென்று தெற்றென அறிதற்கில்லை; பண்டைக்காலமான சங்ககாலமுதல் இற்றைநாள்வரை நம் தமிழகம், வரலாறு காண்பதில் பிற்போக்காகவே உள்ளது; இச்செயல் வருந்தத் தக்க தொன்றாகும்.

உலகத் தனி அறநூல் ஆக்கிய வள்ளுவர்பெயரும் தாய் தந்தை நாடு நகர் முதலியனவும் அவர் மேற்கொண்டிருந்த தொழில் முதலியனவும் அறிதற்கில்லை. கட்டுக்கதைகளாகப் பலவாறாக அவர் வரலாறு வழங்கப்படுகின்றது; ஒலியையும் பிற உலகியல் முறைகளையும் காதலையும் வீரத்தையும் உயிர்களின் வகைகளையும் ஆய்ந்து **தொல்காப்பியம்** என்னும் ஒப்பற்ற நூலை ஆக்கித்தந்த தொல்காப்பியர் வரலாறும் திரிபுபட வழங்குகின்றது; சங்கநூல்களில் பல பாடல்கள் யாத்த புலவர் பெருமக்களின் பெயர்கள்கூட அறிதற்கியலாது, அவர் பாடிய பாடல்களில் வரும் அரிய கருத்துத் தொடர்கொண்டு அப்பெயர்களால் அவர்கள் பெயர்கள் வழங்கப்படுகின்றன. ஆகவே, தொன்று தொட்டே, புலவர் பெருமக்கள், அரிய பெரிய செயலாற்றிய ஆண்டகைகள் போன்ற நல்லோர் வரலாறுகளைத் தொகுத்து வைக்காதே போயினர் நம்தமிழக மாந்தர்கள். தற்காலத்தும் ஓராண்டு ஈராண்டுகளுக்குமுன் மறைந்த புலவர்கள் போன்ற சிறப்புக்குரியவர் வரலாறுகளுங்கூடச் சிறிதும் அறிதற்கியலாது இருப்பது, நம்நாட்டு மக்களின்

இனப்பற்றின்மையை வெளிக்காட்டுகின்றது! இனியேனும் நல்லோர் வரலாறெழுதி நம் தமிழகம் கழுவாய் தேடிக் கொள்ளுமெனா நம்புகின்றேம்.

இந் நந்திக்கலம்பகம், சொற்சுவை பொருட்சுவைகளில் சிறந்து விளங்குகின்றது. இதில் பாட்டுடைத் தலைவன் மாண்பை அகப்பொருள் புறப்பொருள் திணைகளமைத்து மிகத்திறம்படக் கூறுகின்றனர்.

கலம்பக உறுப்பாக அறியக்கிடப்பன : நேரிசை வெண்பா, மதங்கு, அம்மானை, காலம், சம்பிரதம், கார், தவம், குறம், மறம், பாண், களி, சித்து, இரங்கல், கைக்கிளை, தூது, வண்டு, தழை, ஊசல் என்னும் பதினெட்டு உறுப்புக்களும், பிற்காலத்து மருவிவந்துள்ள பிச்சியார், கொற்றியார், இடைச்சியார், வலைச்சியார் முதலியனவுமாகும்.

ஆனால், இக்கலம்பகம், உலாக்களுக்கெல்லாம் முற்பட்ட ஆதியுலாப் போன்று, கலம்பகங்களுக்கெல்லாம் முன்னதாக இருத்தலால், மேற்கூறியவற்றுள் ஒருசிலவே உறுப்பாக அமைந்துள்ளன. கலம்பகம் என்ற சொல் கலம்பு அகம—கலத்தலைத் தன்னுட் கொண்டுள்ள நூல் என்பதாகும். கலத்தல் என்பது, பல்வகைப்பாவும் பொருள்களும் கலந்து வருவதாகும். அவை, யாப்பிலக்கண நூலிற் காணக்கிடக்கும் பாவும் பாவினமுமாகிய செய்யுள் வகைகளும், அகப்பொருள் புறப்பொருள் குறித்த கருத்துக்களும் இயைந்து அந்தாதித்தொடை அமைய இணைப்புற்று நூறு பாட்டுள் முடிந்து திகழ்வது.

முல்லை மல்லிகை இருவாட்சி முதலிய நறுமணமிக்க பல்வகை மலர்கள் வைத்துத் தொடுத்துப் படலைமாலைகளாக்கி இடையிடைக்கண்டம் வைத்துத் தொடுத்து, மாலையின் முதலினும் கடையினும் ஒரே வகையான மலரை வைத்துக்கட்டி, இரண்டு தலைப்பையும் ஒன்றுபட முடிபோட்டு மாலையாக ஆக்குவர் ; அதுபோல முதற்பாட்டில் துவங்கிய சொல்லே இறுதியில் வந்து முடிவதே சிறப்பு. இதனைப் பரந்துபட்ட அந்தாதி, கலம்பம், மாலை முதலிய

வற்றில் காணலாம். ஆகவே, கலம்பகம், பல பூக்கள் கலந்து தொடுத்த மாலைபோன்று பலவகைப் பாக்களும் கலந்து, முதலும் கடையும் ஒரே சொல்லால் முடித்தலே புலவர்கொண்ட மரபு.

இக்கலம்பகம், அவ்வாறு வந்ததாயினும் பிற்பகுதி ஏட்டுச் சுவடிகளில் கிடந்து சிதைந்தும் வடிவுகள் திரிந்தும் இருத்தலால் பல பாடல்களில் அந்தாதித் தொடைகளாக அமைவுபெறவில்லை. அன்றியும் அரசர் கட்குப் புனையும் கலம்பகப் பாட்டுக்கள் தொண்ணூறே. இது, நூறு பாட்டுக்கு மேலும் போயுள்ளது. ஆனால், அவைகள் சுவைமிக்கனவாக இருக்கின்றன. ஒருகால நந்தி மன்னன்மீது தனித்தனிப்பாடலாக வேறு சில புலவர்கள் பாடிச் சிதைந்துகிடந்தவற்றை நந்திமன்னனைப் பற்றிய பாடல்களாக இருத்தலால் கலம்பகத்தில் சேர்த்திருக்க லாமோ என, ஐயத்துக்கும் இடனாகின்றது.

அஃதெவ்வாறாயினுமாக, பாட்டுகள் சொன்னயமும் பொருள்நயமும் வாய்ந்து கற்றோர் நெஞ்சை அள்ளும் நீர்மைத்தாய்த்திகழ்கின்றன. அவை :

'புவியினுக் கணியாய் ஆன்ற பொருள்தந்து புலத்திற் றாகி
அவியகத் துறைகள் தாங்கி ஐந்திணை நெறிஅளாவி
சவியுறத் தெளிந்து தண்ணென் றொழுக்கமும் தழுவிக்'

கிடப்பதே சான்றோர் கவி எனக் கம்பர், பாவுக்கு இலக்கணம் கூறும் தன்மையாவும் ஒருங்கே இயைந்து மிளிர்தலைக் கற்பார் தெற்றெனஅறியலாம்.

இந்நூற்பாடல்கள் பலவும் கைக்கிளைத்துறைகளும், அன்பின் ஐந்திணையான முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலைத்திணைகளின் துறைகள் கொண்ட அகப்பொருளன வும், வெட்சி, கரந்தை, வாகை முதலிய திணைகளின் துறை கொண்ட புறப்பொருளனவுமாக அமைந்து, பாட்டுடைத் தலைவன் ஏற்றத்தை விளக்குவது, பேரின்பம் ஊட்டுவ தாக இருக்கின்றது. அகப்பொருட் கிளவித்தலைவன் தலைவிகளாகப் புனைந்துரைவகையால் ஆக்கப்பட்டிருப்ப

தன்றிப் பாட்டுடைத்தலைவனையே கிளவித்தலைவனாக ஆசிரியர் யாத்துக், கோத்தமைத்திருப்பதும் பேரின்பு தருவதாக இருக்கின்றது. பாட்டுக்கள் இடத்துக்கேற்ப, மனநிலைகளான இன்ப துன்பத்துக் கேற்ப, இசையின்பம் தோன்றும்படி அமைத்துள்ளனவும், அதன்கண் பொருளின் ஒட்பம சிறந்திருப்பனவும், தேனொடு பாகு கலந்த தொப்பத் தனித்தனி முக்கனிபிழிந்து வடித் தொன்றாய்க் கூட்டியவென்ன இலங்கிக், கற்பார் நெஞ்சுக்குக் கழிபேரோகையைக் கனிவிக்கும் நிலையில் அமைந்துள்ளன. அவைகளுட் சில:

ஊசல் என்னும் பகுதியில், பருவம்வாய்ந்த மங்கையர் கள் பாட்டுடைத்தலைவன் புகழைப்பாடி ஊசலாடுங்கால் அவர்கள் கூற்றாக அமைத்து, இசை பாடி ஊசலாட, அதற்கேற்ப இசை, இசைவுபெற்று அசையும் நிலையில் சுவைகெழும முதல்மூன்று சீர்களும் முவ்வசை கொண்டு ஊசலாட்டுவதுபோல் இசை தோன்றி நிற்ப, இறுதிச்சீர் ஒன்றும் ஈரசையாக அடிகள் தோறும் நின்று இசைவுபெற யாத்திருப்பது, இலக்கியச் சுவைஞர்க்கும் இசை வாணர்க் கும் மேலும் இன்பந்தோன்ற நிற்கின்றன; இது, தமிழ் மொழியின் இழுமென் ஓசை நயத்துக்கு எடுத்துக் காட்டாக இருக்கின்றது. அது:

'ஓடரிக்கண் மடநல்லீர் ஆடாமோ ஊசல்
உத்தரியப் பட்டாட ஆடாமோ ஊசல்' (௫௫)

என வருவது,

'தனதந்த தனதந்த தாதந்த தான
தத்தனதத் தத்தான தந்தான தான'

என, ஓசையெழுப்பிப் பாடற் கேற்றவாறு இருப்பது காண்க.

இதன்கண் தொல்காப்பியனார் வகுத்துக் காட்டிய நகை அழுகை இளிவரல் மருட்கை அச்சம் பெருமிதம் உவகை வெகுளி என்னும் எண்வகை மெய்ப்பாடுகளும்

தோன்ற ஆசிரியர் அமைத்துக்காட்டியிருக்கும் ஒட்பம், பயில்வார் மனத்தைப் பதியவைப்பதாகும்.

தலைவன் பொருளீட்டற்கு வேற்றுநாடு சென்றான்; செல்லுங்கால், மழை பொழியுங்காலமாகிய கார்காலத்தில், தான் வருவதாகக் கூறிச்சென்றான்; குறித்த காலம் வந்தது; கார்கள் மழையைப் பொழிந்தன; கொன்றை முல்லை காயா பிடவம் முதலிய மரங்களும், முல்லை பிச்சி மல்லிகைபோன்ற செடிகொடிகளும் தளிர்த்து மெல்லரும்பீன்று சிரித்தன; தலைவன் வந்தானில்லை; அதைக் கண்டாள் தலைவி; அவட்கு வருத்தம் தாங்க முடியவில்லை; தலைவன் வாராமைக்கு ஆற்றாது வருந்துமிந்நிலை, அழுகைச் சுவைக்கு எடுத்துக்காட்டாக நம்மையும் அறியாது நாமும் தலைவியுடன் சேர்ந்து வருந்துமாறு இசையும் பொருளும் பருந்தும் நிழலும்போல் தொடர்ந்து வருத்தத்தினும் சுவையின்பங்கொட்டுதல் காண்க :

'மங்கையர்கண் புனல்பொழிய மழைபொழியுங் காலம்
மாரவேள் சிலைகுனிக்க மயில்குனிக்கும் காலம்
கொங்கைகளும் கொன்றைகளும் பொன்சொரியும் காலம்
கோகனக நகைமுல்லை முகைநகைக்கும் காலம்
செங்கைமுகில் அனையகொடைச் செம்பொன்செய் வகத்
தியாகியெனும் நந்திபுரள் சேராத காலம்
அங்குயிரும் இங்குடலும் ஆனமழைக் காலம்
அவரொருவர் நாமொருவர் ஆனகொடுங் காலம்.' (கக)

என்பதில் எவ்வளவு சுவைபட அழுகைச் சுவையை அமைத்துள்ளார்! இதில் காலநிலையாகிய கார்காலத்தின் இயல்பும், தலைவியின் காதல் மாறாது கனிவுகொண்ட நெஞ்சப்பாங்கும், அழுகை மெய்ப்பாடும் அமைந்து, இன்பஞ்செய்தலோடு பாட்டுடைத் தலைவன் ஏற்றத்தை விளக்க—அவன்கொடைத்திறத்தைக் காட்டி—அவன் கைகள் ஈந்தே சிவந்தன என்னுஞ் சிறப்புத்தோன்ற, 'செங்கை' என்று அடைகொடுத்தும், அக்கைகள் கைம்மாறு கருதாது பிறர் நலங்கருதியே கொடுக்கின்றன என்

பதை உணர்த்த 'முகிலனைய கொடை' என்று உவமை காட்டியும் கூறினர். மேகத்திற்கு மேகம், கார், மாசு, புயல் போன்ற பல பெயர்கள் இருப்பினும் நீர்மொண்டெழுந்த மேகம் என்பதைக் குறிக்க 'முகில்' என்னுஞ் சொற் பெய்துரைத்த திறப்பாடு, சொல்லின் திறனறிந்த ஆசிரியரின் நுண்மாண் நுழைபுலமாட்சியைக் காட்டுகின்றது. முகில் என்பது நீர்கொண்டெழுந்தமேகத்தைக் குறிக்கும் சொலாகும். 'அங்குயிரும் இங்குடலும் ஆன மழைக் காலம்' எனபதில், தலைவியின் கட்டற்ற தலையன்பு புலனுதல் காண்க. தலைவன் தலைவியரை 'உயிரொன்று உளமுமொன்று' எனவும், 'ஒருயிர் ஈருடற்புட்போல' 'ஓராவிற்கு இருகோடுபோல' எனவும் அவர்தம் ஒன்றுபட்ட காதலன்பை விளக்குவர் ஆன்றோர். அம்முறையும் இங்கே தோன்றுதலோடு தலைவியின கரைகடந்த அவலமும் தோன்றி நின்று, இறும்பூதுபயந்துநிற்றல் காண்க.

நகைச்சுவையை விளக்கத் தலைவி பாணனை இகழ்ந்து கூறும் துறையில் அமைந்திருக்கும் பாடலால் அறியலாம். அது, தலைவன் தலைவி இருவருக்கும மணம் நிகழ்ந்தது; இருவரும் மலரும் மணமும்போல் இணைந்து இல்லறம் நடத்தி வந்தனர்; அவர்கட்கு செல்வப்புதல்வன் தோன்றினன்; தலைவனுக்கு வேற்றுமங்கையர்கள்பால் காதல் தோன்றிற்று; பிரிந்தான்; காதற்பரத்தையர் இல்லங்களில் தங்கினன்; காலங்கள் கழிந்தன; ஆண்டு ஒன்ருயிற்று; தன் புதல்வனைக் காணவிழைந்தான்; தலைவி வெறுப்பாக இருப்பாளெனக் கருதினன்; தன்னோடு திரிதரும் பாணனொருவனைத் தூதாக அனுப்பித் தன்வருகையை உணர்த்துமாறு கூறினன். பாணன்சென்று தலைவிக்குத் தான் பாடியும் ஆடியும் பல்வகைப் பசப்புமொழிகள கூறியும் தலைவனை வரவேற்க வேண்டினன். தலைவி இசைந்தாளில்லை; பாணனை இகழ்ந்தாள்; வெறுத்தாள்; அங்கிருந்து போகும்படி அறிவித்தாள். அப்பாட்டு :

'ஈட்டு புகழ்நந்தி பாண!நீ எங்கையர்தம்
வீட்டிருந்து பாட விடிவளவும்—காட்டிலழும்

பேயென்றாள் அன்னை பிறர்நரியென் றார்தோழி
நாயென்றாள் நீஎன்றேன் நான்.' (௧0௧)

என்பது. இதில் பாணன் குரலெடுத்துப் பாடிய பாட்டிசையைப் பேயின் அழுகையென்றும், நரியின் ஊளை ஒலியென்றும், நாயின் குரைப்பொலியென்றும் பிறர் கூறுவதாகக்கூறி, நகைச்சுவைக்கு ஏற்றதாக அமைத்துள்ளதறிக. இதன்பொருள் நூலினகத்து விளக்கமாக விரித்துரைத்திருப்பதால் அதனை ஆங்கே காண்க. ஈண்டு விரிப்பின் ஏடுவிரியும்.

பிறாண்டும் இந்நூலகத்து அவலச்சுவைக்குப் பாட்டிலேயே அது தோன்றும்படி மெல்லெழுத்து இடையெழுத்துக்களைப் பெரும்பகுதி கோத்தும், வீரச்சுவைக்கு அது தோன்றும்படி பெரும்பகுதி வல்லெழுத்துக்கள்வரத் தொடுத்தும் பாக்கள் பாடியிருப்பது, மிக்க சுவை தருவதாக இருக்கின்றது.

தலைவி, நிலவின் கதிர்களால் நொந்து, மதியைநோக்கி வருந்துந்துறையில்,

'மண்ணெலாம் உய்ய மழைபோல் வழங்குகரத்
தண்ணுலா மாலைத் தமிழ்நந்தி நன்னாட்டில்
பெண்ணிலா ஊரில் பிறந்தாரைப் போலவரும்
வெண்ணிலா வேயிந்த வேகமுனக் காகாதே.' (௧0௬)

என்னும் பாட்டில் மெல்லினமும் இடையினமும் மிகுதியாக விரவித் தலைவியின் அவலக்குரலைக் காட்டுதலறிக.

பாங்கி, தலைவன் உலாவருங்கால் தலைவிக்கு அருள் செய்யாது செங்கோலென்றுகூறிக் கொடுங்கோன்மையாக இருப்பது, தகாது என வெகுண்டுகூறுந் துறையில்,

'தார்வட் டக்கிளி மருவுஞ் சொற்பகர்
தளரிடை தையல் வஞ்சிக்கின்று
ஏர்வட் டத்தனி மதிவெள் ளிக்குடை
கொடிதென் றூலது பழுதன்றே.' (௫அ)

என்னும் பாட்டில் வல்லினமே மிகுதியாக வந்து (வீர) வெகுளிச் சுவையைக் காட்டுதல் காண்க,

இன்னும் இந்நூலகத்துக் கற்பார் சுவையின்பம் நுகரும் வண்ணம் நூலினை முழுதும் கற்றுத் துறைபோவார் காணலாம். அவைகளைச் செய்யுட்கள்தோறும் காட்டும் உரை விளக்கத்திற் காண்க.

ஆசிரியர் :

இந்நூலை இவ்வளவு திறம்பட ஆக்கித் தமிழ்கூறு நல்லுலகத்திற்கு உதவிய ஆசிரியர் பெயரும் ஊரும் நாடும் பிறவும் நன்கு அறிதற்கில்லை ஆனால் கேள்வி முறையாக வழக்காற்றில் சில கதைப்போக்காக வழங்கு கின்றன. அவைகள் உண்மை வரலாறென்று கூறுவ தற்கில்லை; கல்வெட்டுக்களிலும் முழு உண்மை இருக் கின்றதென்று நம்புதற்கில்லை; அவ்வவ்வேந்தர்களும் அவர் சார்புடையாருமே பொறித்தவையாகலான், தம்பாற் குறை வரும் வரலாற்றைக் குறிக்காதுவிடுவாரென்பது உறுதி. ஆகவே, யாம் பல அறிஞர்கள் வழியாகச் செவியுணர்வாகக் கேட்டுணர்ந்தவற்றையே ஈண்டுக் குறிக்கின்றோம். கொள் ளின் கொள்ளுக. தள்ளின் தள்ளுக. ஆயினும் நடுநின்று ஆய்ந்துணர்க.

இப்பாட்டுடைத் தலைவனின் மாற்றாந்தாய்க்கு ஆண் மக்கள் நால்வரென்றும், அந்நால்வருள் ஒருவரே இந்நந்திக் கலம்பக ஆசிரியரென்றும் கூறுகின்றனர்.

பாட்டுடைத் தலைவன் வரலாற்றிற் கூறியபடி நந்தி யால் துரத்தப்பட்டுவெளியேறிய நால்வரும் எவ்வாறேனும் ஆட்சியைக் கைப்பற்றித் தாம் ஆள விரும்பினரென்றும் அதற்கு வாய்ப்பாக ஒருவன் மந்திர வித்தையும் மற்றொரு வன் சூழ்ச்சி (தந்திர) வித்தையும் வேறொருவன் வாட் போர் வன்மையும் ஏனையோன் தமிழ்நூற்களை ஐயந்திரி பறக்கற்றுச் செய்யுட்கள் பாடுந்திறனும், அதில் அறம் வைத்துப் பாடும் திறமையும் பெற்றிருந்தானென்றும் வழங்குகின்றது.

பின் இவர்கள் நால்வருங்கூடிக் கலந்தெண்ணிப் பிறர் துணைகொண்டு நந்தியை எதிர்த்துப் போரிட்டும் வெல்ல இயலாது முறியடிக்கப்பட்டனர். அதனை இந்நூலகத்து வரும், 'தம்பியர் எண்ணமெலாம் பழுதாகவென்ற தலைமான வீரதவசன்' என்னும் ஆசிரியர் கூற்றே நன்கு வலியுறுத்தும். அப்பாலே இந்நூல் பாடப்பெற்றது. நந்தியைக் கொல்லுதற்கே பாடப்பெற்றது. அதனால் இடை இடையே கவர்படுபொருள்தோன்ற வசைவைத்துப் பாடியுள்ளார். அவ் வசைக்குறிப்புகளை இந்நூலின் இறுதியிற் சேர்த்திருக்கும் **வசைக்குறிப்புக்கள்** என்னும் பகுதியில் காண்க. இவ்வாறு கொல்லுதற்கு மடிதற்று நின்று பாடினும் புலனுழு செந்நாவாகலான், நடுநின்று நந்தி புகழ்மையை உள்ளது உள்ளவாறே பாடியிருப்பது, அவர்தம் நடுநிலை மாறு நெஞ்சநிலையைக் காட்டுகின்றது.

இந்நூலைப் பாடிய பின்னர் ஆசிரியர் உலகநிலையாமையையும், இளமைபோய் மூப்பு பிணிகள்வந்து உயிர்கள் மாளும் இயற்கையையும் உணர்ந்து, துறவுக்கோலம்பூண்டு சுரைக்குடுக்கையைக்கொண்டு யாழாக அமைத்துப் பாடிக்கொண்டு வீடுகள்தோறும் பிச்சையேற்றுண்டு காலங்கழிப்பாராயினர். பிச்சையேற்குங்கால் ஏனைய வேறு பாடல்களோடு தாம் பாடிய நந்திக்கலம்பகத்திற் சில இசையும் சுவையும் நிறைந்த பாடல்களையும் பாடுவதுண்டு. அப்படிப் பாடிக்கொண்டு வருங்கால் நந்தி மன்னன் தலைநகராகிய காஞ்சிபுரத்துக்குவந்து, ஒரு கணிகை இல்லத்தின் முன் நந்திக் கலம்பகப் பாட்டில் இரண்டு மூன்று பாடல்களைப் பாடிக்கொண்டு நின்றார். அவ்வீட்டிற்குரிய கணிகை மாது, இளம்பருவத்தாள்; ஆடல் பாடல் அழகிற் சிறந்தவள்; கலையறிவு கைவரப்பெற்றவள்; அவள் இச்சுவையுள்ள பாடல்களைக்கேட்டு ஓடிவந்தாள்; முனிவரை மறுமுறையும் பாடவேண்டினாள்; பாடினார்; இன்புற்றாள்; அப்பாடல்களை எழுதிக்கொண்டாள்; துறவோர்க்கு உவந்து அமுதளித்தாள்; அடிக்கடி தன் இல்லம் போந்து செல்லுமாறு வேண்டினாள்; செல்லப் பணித்தாள்; அவர் சென்றார்.

பின்னர், இவள் தன் மாளிகையின் மேன்மாடத்தில் இரவுப்போதில் அமர்ந்து யாழ்மீட்டி இப் பாடல்களையே நாள்தோறும் பாடிவருவாளாயினள். இவ்வாறு பாடிவருங்கால், ஒருநாள் ஊர்க்காவலர் சுற்றிவரும்போது இப் பாடல் பாடுவதைக் கேட்டனர்; சுவைத்தனர். அதில், 'வானுறுமதியை அடைந்ததுன் வதனம்' என்ற பாட்டைப்பாடுங்கால், அதில் மன்னன் மாண்டுபோனதாக வருந் தொடர்கண்டு திடுக்குற்றுத் தம் தலைவனுக்கு அறிவித்தனர். தலைவன்வந்து கேட்டு அறிந்து, மறுநாட் காலையில் அரசன் பேரவையில் அறிவிக்க, அரசன் அவளைக் கொணருமாறு கட்டளையிட்டான். கணிகையை அழைத்து வந்தனர்; அரசன் யாவும் உசாவி அறிந்தான்; துறவி வந்தால் தன்முன்னிலையில் கூட்டிவருமாறு கணிகைக்குக் கட்டளையிட்டான்; ஊர்க்காவல் தலைவனுக்கும் கட்டளை கொடுத்தான்; காலங்கள் கழிந்தன; முனிவர் வந்தாரில்லை; கணிகை பல்லிடங்களில் முனிவரைத் தேடிப்பிடிக்க ஏற்பாடு செய்தாள்; ஒருநாள் முனிவர் தானாகவே வந்து காட்சியளித்தார். அரசன் முன்னிலையில் கொண்டு சென்றனர். சடைமுடி, காவியுடை, திருநீற்றுக்கோலம், இவைகளைக்கண்டதும் மன்னன் உள்ளம்,

'தூயவெண் ணீறு துதைந்தபொன் மேனியும் தாழ்வடமும்
நாயகன் சேவடி தைவரு சிந்தையும் நைந்துருகிப்
பாய்வது போலன்பு நீர்பொழி கண்ணும் பதிகச்செஞ்சொல்
மேயசெவ் வாயும் உடையார் புகுந்தனர்வீதி யுள்ளே'

என, நாவுக்கரசர் கல்லைத் தெப்பமாகக்கொண்டு கரையேறித் திருப்பாதிரிப்புலியூர் வீதியில் வரக்கண்ட காட்சியொப்பக் கண்டு களித்தான்; அவர் வரலாற்றை வினவினின்றான்; துறவிக்குத் தமையன் என்பது நன்குதெரியுமாதலால் உண்மையையுணர்த்தினர். அரசன் கலம்பகப் பாட்டுக்களை பாடுமாறு வேண்டினன். இவர் நிலையை எடுத்துக்கூறி 'அது வேண்டா' என்றார். ஆயினுமென்ன? அரசன் கருத்து ஊழ்வழி நின்றது; பாடுமாறு வற்புறுத்தி வேண்டினன்; துறவி இசையவில்லை; கடுமையாகப் பேசி

னான்; சீற்றங்கொண்டான். 'கடப்பாரெவரே கடுவினையை' என்று கருதினார்; ஒப்புக்கொண்டார்.

'பச்சை ஓலைகளால் நூறுபந்தர் அமைத்தல் வேண்டும்; ஒவ்வொரு பந்தரிலும் தாம் அணி ஆடை முதலியன அணிந்து, அரசக்கோலத்தோடு வீற்றிருந்து பாட்டைக் கேட்டல்வேண்டும்; பாட்டு ஒன்று முடிந்தவுடன் அப்பந்தர் எரிந்துவிடும்; அப்பால் கடைசிப் பாட்டைக் கேட்பதற்கு ஈமவிறகுகள் அடுக்கி அதில் தமக்குப் பிணச் சடங்குகள் யாவும் செய்து தாம் பிணம்போல் படுத்துக் கொண்டு கேட்டல்வேண்டும்; அப்பாட்டு முடிந்ததும் உடலிலும் விறகிலும் தீப்பற்றும்; வானுலகெய்துவை; இதற்குச் சம்மதமா?' என்றார். அரசன் அதுகேட்டு மகிழ்ந்தான்; உடனே ஆசிரியர் கூறியவாறு செய்யப் பட்டது. நந்திமன்னன், தன் தம்பி பாட ஒவ்வொன்றாகக் கேட்டான்; அவர் கூறியவாறே பந்தர்களும் ஒவ்வொன்றாக எரிந்தன; இறுதியில் ஈமத்தில் விறகு மெல்லணையில் படுத்தான். 'வானுறு மதியை'யென்று துவங்கும் பாட்டைப் பாடினார்; அதையும் உவப்புடன் கேட்டான்; செந்தழல், நந்தியின் செம்மேனியைத் தீண்டிற்று; மன்னனுயிர், தமிழ்ச்சுவை உண்டுதேக்கி, வானமிழ் தண்டு இன்புறச்சென்றது.

தமிழுக்காக—தமிழின்பப் பாடலுக்காக—ஒரு மன்னன்—நினைத்தன முடிக்கும் ஆற்றல்பெற்ற வீரன்—தன் இன்ப வாழ்வைத் துறந்து—தன் அரிய உயிரையும் பணயமாக்கினான் என்றால், அவன் புகழை எவ்வெழுத்துக்களால் பொறிப்பது! அவன் தாய்மொழி தமிழன்று; வேற்றுமொழி; அவனது ஊன்றிய தமிழ்ப்பற்று, தன்னலந் துறந்தது; தமிழைத் தாய்மொழியாகக்கொண்ட யாரும் செய்யமுடியாத செயலைச்செய்து புகழுடம்பு பெற்றான்; அதனால் நம்நாடு இன்றும் அவன் புகழ்பாடி மகிழ்கின்றது. அவன் புகழுடல் நந்திக்கலம்பக உருவெடுத்திருக்கிறது.

'நந்தி கலம்பகத்தால் மாண்டகதை நாடறியும்'

என்னும் சோமேசர் முதுமொழி வெண்பாப் பாடலும்,

'பொள்ளா ருமைழவழி போய்த்தலை நீட்டும் புலவர்முன்சொல்
கள்ளாரும் செம்சொல் கலம்பகமே கொண்டு காயம்விட்ட
தெள்ளாறை நந்தி யெனுந்தொண்டை மான்கலி தீர்ப்பதற்கு
வள்வார் முரசம் அதிர்த்தாண்ட துந்தொண்டை மண்டலமே'

என்னும் தொண்டைமண்டல சதகப்பாடலும் இதன் உண்மையைப் புலனாக்குகின்றன.

பின்னர், இந்நூலாசிரியர் அங்கு நின்றும் கண்ணீர் வார அழுதுகொண்டே சென்றார். பின்னர் அரசுமுறை இந் நந்திமன்னன் மகன் நிருப துங்கனுக்குச் சென்றது. அவன் முடி சூடி அரசாண்டான்.

இந்நூலாசிரியர் அந்தமில் இன்பத்தரசாள் வேந்தராய்த் துறவுநெறியில் வழுவாது நின்று பிறப்பென்னும் பேதைமை நீங்கிச் சிறப்பென்னும் செம்பொருளையடைந்தார்.

இவர் பெயர் யாதென்று தெரியவில்லை; இந்நூலில் 'காடவற்கு முன்தோன்றல்' என்று நந்திமன்னனைக் குறிப்பிடுதலால் இவர்பெயர் காடவர் ஆக இருக்கலாமோவெனக் கருத இடமுண்டு. இதில் காடவன் என்றே ஒருமையாகக் கூறுதலால், தம்மையே பிறர்போல் மாந்திக் கூறினாரெனக் கொள்ளலாம். தேவாரத் திருமறைகளை அருளிச்செய்த மூவரில், திருஞான சம்பந்தரும், சுந்தரரும் தாம் பாடிய தேவாரப் பதிகங்கள் ஒவ்வொன்றின் இறுதியிலும் தம் திருப்பெயர்களைப் படர்க்கைமுகமாக வைத்துக் கூறியிருப்பதும் யாம் கூறுவதை வலியுறுத்தும்.

'கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினும்
மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான்—மலரவன்செய்
வெற்றுடம்பு மாய்வனபோல் மாயா புகழ்கொண்டு
மற்றிவர் செய்யும் உடம்பு'

என்பது குமரகுருபர அடிகள் பொன்னுரை. இதற்கு இலக்காகத் தம்பெயரும் ஊரும் கூறாது, நூலின் பெயர் கூறிய ஆசிரியர் புகழ், தமிழகம் முழுதும் என்றும் நின்று நன்று நிலவுக.

---

# பாட்டுடைத் தலைவன் வரலாறு

வண்புகழ் மூவர்களாகிய சேர சோழ பாண்டியர் மன்னர்களின் ஆட்சி, நம் தமிழகத்தினின்றும் விடுபட்ட பின்னர், நம் தமிழகம் வேற்று நாட்டு அரசர்கள் ஆட்சிக்கு உள்ளாயிற்று. வேற்று நாட்டு அரசர்களுள் ஒருசாராரே பல்லவரெனப் படுவோர்; பல்லவர், பாரசீக நாட்டினின்றும் வந்த ஒரு கூட்டத்தார் என்ப.

இப்பல்லவர் மரபில் தோன்றியவனே இந்நூலின் பாட்டுடைத் தலைவனாகிய நந்திவர்மனாவன். இவன் பல்லவ மன்னவர் மரபில், மூன்றும் நந்திவர்மனென்று வரலாற்று ஆசிரியர்கள் ஆய்ந்து முடிவுகட்டிக் காலத்தையும் கி பி. அஉரு-அ௫0. என, கல்வெட்டு முதலிய அகச் சான்றுகள் கொண்டு நிறுவிக்காட்டுகின்றனர். ஆகவே, ஏறக்குறைய ஆயிரத்துநூறு ஆண்டுகட்கு முற்பட்டிருந்தவனெனக் கொள்ளலாம்

எனவே, இந்நூலினைப் பாடிய காலமும் ஆயிர ஆண்டுக்கு முற்பட்டதெனக் கொள்ளலாம். எனவே, இதுவே கலம்பகங்களுக்கெல்லாம் முதன்மையானதெனக் கொள்ளக்கிடக்கின்றது.

இந்நந்திவர்மனைப் பெரியபுராணத்தின் அறுபான் மும்மைத்தொண்டருள் ஒருவரானக் கழற்சிங்க நாயனார் ஆக இருக்கலாமெனவும் ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். அவர்கள் அவ்வாறு கருதுதற்குக் காரணம், இந்நந்திக்கலம்பகத்துக் 'காடவற்கு முன்தோன்றல்' (செய்: ௩௩) எனவும் 'பல்லவர்கோன் நந்தி' (௪0) எனவும் 'பொற்கழல்நந்தி' (௩௪) எனவும் வருதல்கொண்டும் எனக் கொள்ளலாம். ஆனால் பெரியபுராணத்துள் ஒரு குறிப்பும் இதற்குச் சான்றாக அறிதற்கில்லை.

இந் நந்திமன்னன் குருக்கோட்டை, தெள்ளாறு, வெறியலூர் போன்ற பல ஊர்களில் போர்செய்து

வென்றானென்று இந்நூலத்துப் பல்லிடங்களில் வருத லால், சிறந்த போர் வீரன் என்று கொள்ளலாம். இவன் ஆசிரியரால் பல்லிடத்தும் பலவாறாகச் சிறப்பித்துக் கூறப்பெறுகின்றான். ஆதலால் இவன் சிறந்த கொடை யாளி, ஏழைகட்கு இரங்குவோன், சிவபெருமானிடத்து மிக்க பற்றுடையவன், கல்வி கேள்விகளிற் சிறந்தவனாகக் கொள்ளலாம்.

இவன், தந்திவர்மனுக்குக் கதம்ப அரசன் மகள் வயிற்றில் தோன்றியவனாதல் வேண்டுமென்று பல்லவர் வரலாற்று நூல் ஆசிரியர் வேலூர்ப்பாளையப் பட்டயத் துணைகொண்டு கூறுகின்றார். நாட்டில் பண்டுதொட்டு வழங்கிவரும் வழக்காற்றினால் இந்நந்திவர்மன் இழிகுல மகளுக்குப் பிறந்தவனென்றும், இவன் தந்தையின் பட்டத்தரசிக்கு ஆண்மக்கள் நால்வர் என்றும் அவர்கள் யாவரும் இவனுக்குப் பின்தோன்றியவர்களென்றும், இவன பருவம் வந்த காலத்துத் தந்தை இறந்தானென் றும், அதன்பின் இவன் தன் வீர ஆற்றலினால் தம்பியர் களை வெளித்துரத்திவிட்டுத் தானே முடிசூடி அரசாண்டா னென்றும் கூறுகின்றனர். இவனை எதிர்த்த தம்பியர் களும், அவருக்கு உதவியாக வந்த வீரர் பலரும் இவனால் முறியடிக்கப்பட்டதாகவும், அப்பால் இவன் தம்பிகளில் ஒருவரான இந்நூலாசிரியர் இவனைக்கொல்லற்கே இந் நூலைப்பாடினதாகவும் வழங்கப்பெறுகின்றது.*

இவ்வாறான வரலாறுகளுக்கு அகச்சான்றாக அரண் செய்வன, இந்நூலகத்துக் 'காடவற்கு முன்தோன்றல்' (செய்: ௩௩) எனவும், 'கொம்புயா வாமை நாகம் எதிர் வந்த நந்திகுல வீரர் ஆகம் அழியத், தம்பியர் எண்ண

* பட்டயங்கள் அவ்வவ் அரசர்களால் வரையப் பெற்றன. ஆதலால், தம்மைப் பற்றிய சில குறைவான தன்மைகளை வரை யார். ஆகவே, பட்டயத்திலில்லாதது வழக்காற்றில் என்றும் வழங்கி வருவது நம்புதற்குரியதே. பட்டயத்தில் உள்ளன யாவும் உண்மை யென்றுகொள்ளற்கில்லை. சில விடுபட்டிருப்பதும் இயல்பே.

மெல்லாம் பழுதாக வென்ற தலைமான வீர துவசன்' (செய் : அகூ) எனவும், 'வானுறுமதியை அடைந்ததுன் வதனம்' (செய்: ககரு) எனவும் வரும் செய்யுட்களும் பிறுண்டும் வரும் குறிப்புக்களுமாகும்.

ஆகவே, நந்திமன்னன் பாடல்சால் சிறப்பிற்குரிய பல்வகைப் பண்புடையனாகவும் விளங்கிப் புலவர்பாடும் புகழுடையனாகவும் இருந்தானென்பதொருதலை. இவன் சிறப்பை இவன் காலத்திருந்த பாரதம் பாடிய பெருந் தேவனாரென்பார்,

> 'வண்மையால் கல்வியால் மாபலத்தால் ஆள்வினையால்
> உண்மையால் பாராள் உரிமையால்—திண்மையால்
> தேர்வேந்தர் வானேறத் தெள்ளாற்றில் வென்றானோடு
> யார்வேந்தர் ஏற்பார் எதிர்.'

எனப் பாராட்டி, இவன் சிறப்புகளையெல்லாம் கூறுவது தெளிவாக்கும்.

இவன் ஆட்சி, சேர சோழ பாண்டி நாடுகளிலெல்லாம் பரந்திருந்ததாக இந்நூல் பகர்வதால், இவன் முடியுடைப் பேரரசனாகவும், அறத்திற் சிறந்தவனாகவும், தமிழ்மொழிக் கலைகளில் வல்லுநனாகவும், கலையை வளர்த்த காவலனாகவும விளங்கினான்.

இவனும் இவனைச் சேர்ந்த பல்லவமன்னர்களும் காஞ்சிபுரத்தைத் தலைநகராகக்கொண்டு மாநிலங்காவல் கொண்டு ஆண்டதாகத்தெரிகின்றது. இவன் காலத்திலும் இவன்குல முன்னோர்கள் காலத்திலும் மாமல்லபுரமென வழங்கித் தற்காலம் மகாபலிபுரமென வழங்குகின்ற நகரில் ஆக்கி இருக்கும் சிற்பங்கள் இன்றும் கண்ணையும் கருத்தை யும் கவரும் உயிரோவியங்களாகத் திகழ்ந்து தமிழர்தம் கலைத்திறனைக் கீழைநாட்டினரேயன்றி மேலைநாட்டினரும் வியந்து மயிர்ச்கூச்செறியும் வண்ணம் விளங்குகின்றன. இவர்களால் மாமண்டூர்க் குகைககோவில் திருச்சிக் குகைக்கோவில்களும் மலையைக்குடைநதே ஆக்கப்பட்டுள்

என. சித்தன்ன வாசல் ஓவியங்கள் கலைத்திறன் ஆய் வாளர்க்குப் பெருவிருந்தாகத் திகழ்கின்றன.

இப்பல்லவர்கள் வேற்றுமொழிக்குரியராயினும் தமிழை நன்குகற்றுப் புலமையாளராக விளங்கியிருந் தனர். இவர்களின் மாலை, ஆதொண்டை. இவர்கள் கொடி, காளையுருவம் பொறித்தது. இவர்களில் பலர் வைணவ, சமண சமயத்தராகவும் சைவசமயத்தராகவும் இருந்தாரெனத்தெரிகின்றது. அவர்களுள் இப்பாட்டுடைத் தலைவனாகிய மூன்றும் நந்திவர்மன் சைவசமயத்தில் உறைத்து நின்றவனாக இக்கலம்பக நூலால் அறிகின்றோம்.

இந்நூலில் சிவபெருமான் வணக்கங்கூறும்போது 'உலகுடையான் திருமுடியும் உள்ளமுமே உவந்தனையே' என்று இறைவனை முன்னிலையாக்கிக் கூறுவதும் 'சிவனை முழுதும் மறவாத சிந்தையான்' (௧0௧) என்று பிறவிடங் களினும் கூறுவதுகொண்டும் தெளியலாம்.

இவன் ஆட்சி, தமிழகம் முழுதுமன்றி வடநாடு வரை பரவிக் கால்கொண்டிருந்ததாக இந்நூலிற் கூறுவன கொண்டு அறியலாம். இது புனைந்துரையாக இருக்க முடியாது; உண்மையே யாகும்.

எனவே, இவன் சிறந்த மன்னனாக நாட்டை ஆண்டு வந்தானென்று அறிகின்றோம். இவன் புகழை அறிதற்குக் கல்வெட்டுக்களும நந்திக்கலம்பகமாகிய இந்நூலும் துணை புரிகின்றன.

பல்லவர்கள் தமிழரல்லர்; பாரசீக நாட்டினர் என வரலாற்றாசிரியர்கள் ஆய்ந்து முன்னர்க்கூறினர்; இப் போது அஃதில்லையென்று கூறி, நம் நாட்டினரேயெனக் கொள்கின்றனர். அதற்கு ஏற்ற அகச்சான்று, புறச் சான்றுகள் காட்டப்பெறவில்லை. அஃதெவ்வாறாயினுமாக, இவர்கள் தமிழரல்லாதாராக இருந்ததால்தான் தமிழ் மொழி இவர்கள் காலத்தில் வளர்ச்சியின்றி மங்கிக்கிடந் திருக்கின்றது; இவர்களால் வடமொழி மங்கை வளம்பெற் றுள்ளாள்; கல்வெட்டுக்கள் யாவும் மிகுதியாக வடமொழி

எழுத்துக்களாலேயே பொறிக்கப்பட்டிருப்பதொன்றே இதற்குச் சான்றாக அமையும். பல்லவர் காலத்துச் சிற்பக் கலை, நடனக்கலைகள் வளம்பெற்றிருந்திருக்கின்றன. தமிழில் எந்த நூலும் தோன்றவில்லை; தமிழ்ப் புலவர்களை யும் ஆதரித்ததாகவும் காணப்பெறவில்லை.

இப்பல்லவர் மரபுள், இம்மூன்றாம் நந்திவர்மன் காலத்தே தான் பெருந்தேவனார், மன்னன் அவைத் தமிழ்ப் புலவராக இருநததாகத் தெரிகின்றது. அவரால் அக்காலத்து ஆக்கப்பட்ட நூலே பாரத வெண்பா என வழங்கும் பெருந்தேவனார் பாரதம். அந் நூலும் இக்காலத்து முழுதும் கிடைக்கப்பெறவில்லை. அப்பால் அவனுக்குத் தெரியாது பாடிய நந்திக்கலம்பகமாகிய இந்நூலும் பாடப் பெற்றது. இவ்விரு தமிழ்நூல்களும் இவன் காலத்தே தோன்றின. பின்னரும் முன்னரும் பல்லவமன்னர் காலத்தே எந்தத் தமிழ் நூலும் வெளிவரவில்லை.

இந்நந்திமன்னன் தமிழ்க் கல்வியிலும் கொடையிலும் சிறந்தவனாக விளங்கினான். இக்கலம்பகத்துக்காக—தன முன்னோர் தமிழுக்கு ஆக்கங்கொடுக்காத பிழைக்காக—கோணலுக்காக—அக்கோணல் நிமிரத் தன் உயிராணி கொடுத்து நிமிர்த்தான் என்றால், இவன் தமிழ்ப்பற்று மலையினும் மாணப்பெரிதாகத் திகழ்கின்றதன்றோ? இதனால் இவனை மதித்துப் புகழ்தல் ஒன்றே இவன் பெருமையை நிலைக்கச் செய்வதாகும.

‘ மன்னர் மடங்கல்; மறையவர் சொல்மாலை
அன்ன நடையினார்க் காரமுதம்;—துன்னும்
பரிசிலர்க்கு வானம்; பனிமலர்ப் பைந்தார்
எரிசினவேல் தானையெம் கோ.’

என, ஆன்றோர் சிறந்த அரசனுக்கு இன்றியமையாதன வெனக் கூறும் பண்புகளெல்லாம ஒருங்கே வாய்க்கப் பெற்றவனே இப்பாட்டுடைத் தலைவனான நந்தியேந்தல் என விளக்கம் பெறுகின்றது.

---

## இந்நூலில் பாட்டுத்தலைவன் பெயர்கள்

*நந்தி, அவனி நாராயணன், மல்லைப்புரவலன், மல்லைகாவலன், மல்லைவேந்தன், மல்லையர்கோன், மல்லையங்கானல் முதல்வன், மயிலை காவலன், பல்லவன், பல்லவர் கோன், பல்லவர் தோன்றல், தொண்டைவேந்தன், சோணாடன், உறந்தையர் கோன், அங்கநாடன், சந்திரகுலப் பிரகாசன், உக்ரமகோபன், குவலயமார்த்தாண்டன், தேசபண்டாரி, மானோதயன், விடேல் விடுகு, பாராளும் கோமான், அரசர் கோமான், குமரிக்கொண்கன், கங்கைமணாளன், நயபரன், கச்சிநாட்டோன், கச்சியுளார்கோ, ஒரு கோமகன், நானிலங்காவலன், புகழ்நந்தி, நரபதி முதலியன.*

## இந்நூலில் குறிப்பிடப்பட்ட ஊர்கள், நாடுகள், போர்க்களங்கள்

**ஊர் :** *மல்லை, கச்சி, மயிலை.*

**நாடு :** *கச்சிநாடு, வடவேங்கடநாடு, அங்கநாடு, தென்னாடு, சோணாடு.*

**போர்க்களம் :** *கடம்பூர், குருக்கோட்டை, தெள்ளாறு, தொண்டி, பழையாறு, வெள்ளாறு, வெறியலூர்.*



# பல்லவர் குடிவழி

## இடைக்காலப் பல்லவர் பட்டியலிலுள்ள மூன்றாம் சிம்மவர்மன் மக்கள் இருவர்

சிம்மவர்மன்
கி. பி. 575—615.
|
மகேந்திரவர்மன் - 1.
கி. பி. 615—630.
|
நரசிம்மவர்மன்
கி. பி. 636—668.
|
மகேந்திரவர்மன் - 2.
கி. பி. 668—670.
|
பரமேசுவரவர்மன்
கி. பி. 670—685.
|
இராசசிம்மன்
கி. பி. 685—705.
|
- பரமேசுவரன் - 2.
  கி. பி. 705—710.
  |
  சித்திரமாயன் (சிறுவன்)
- மகேந்திரவர்மன் - 3.

பீமவர்மன் (கி. பி.)
|
புத்தவர்மன்
|
ஆதித்தவர்மன்
|
கோவிந்தவர்மன்
|
இரண்டியவர்மன்
|
- ஸ்ரீமல்லன்
- இரணமல்லன்
  |
  பல்லவமல்லன்
  (நந்திவர்மன் - 2)
  கி. பி. 710—775.)
- சங்கிரணமல்லன்

சிறுவனை சித்திரமாயனை அரசனாக்கப் பொதுமக்கள் விரும்பவில்லை. வடக்கே சாளுக்கியர் அச்சமும் தெற்கே பாண்டியர் படையெடுப்பும் நாட்டின் அமைதியைக் கெடுப்பனவாயின. அப்பொழுது அரசியல் அறிவும் ஆண்மையும் படைத்த இரசய்யவர்மனை அரசனாகுமாறு தூண்டினர். அவன் மறுக்கவே நான்காவது புதல்வனை பல்லவமல்லன் நந்திவர்மன்-2 என்ற பெயருடன் பட்டாபிடேகம் செய்யப்பட்டனன்.

இவனது ஆட்சிக்காலத்தில் 65-ஆம் ஆண்டுக் கல்வெட்டுக் கிடைத்திருப்பதால், அறுபத்தைந்து ஆண்டுக்காலமாவது ஆட்சி புரிந்துளான் என்ப. இவனுக்கு, இராட்டிர கூடத் தந்திதுர்க்கன் ஆகிய வயிரமேகன் மகள் ரேவா வயிற்றிற் பிறந்தவன் தந்திவர்மன். இவன் கி.பி. 775 முதல் 825 வரை ஆண்டனன். இவன் காலத்துப் பாண்டிய மன்னர் நெடுஞ்சடையன் பராந்தகன் (கி. பி. 765 - 790) இரண்டாம் இராசசிம்மன் (கி. பி. 790 - 800) வரகுண மகாராஜன் (கி. பி. 800 - 830). நந்திவர்மனுக்குக் கதம்ப அரசர் மகளிடம் பிறந்தவன் மூன்றும் நந்திவர்மன். இவனது பத்தாம் ஆட்சி ஆண்டில் வெளியிடப்பட்ட திருநெயத்தானம் கோவிலிலுள்ள கல்வெட்டு, தெள்ளாற்று வெற்றியைக் குறிக்கிறது. இவன் ஏறத்தாழ 25 ஆண்டுகள் ஆட்சி புரிந்துள்ளான். இவனே இந் நந்திக்கலம்பகத்துப் பாட்டுடைத் தலைவனாவான்.

---

உ

# நந்திக் கலம்பகம்

## மூலமும் உரையும்



### தற்சிறப்புப்பாயிரம்

### கடவுள் வாழ்த்து

*பிள்ளையார்*

**அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்**

மும்மைப் புவனம் முழுதீன்ற
முதல்வி யோடும் விடைப்பாகன்
அம்மை தருக முத்தம்என
அழைப்ப ஆங்கே சிறிதகன்று
தம்மின் முத்தம் கொளநோக்கிச்
சற்றே நகைக்கும் வேழமுகன்
செம்மை முளரி மலர்த்தாள்எம்
சென்னி மிசையிற் புனைவாமே.

(இதன் பொருள்) *மும்மைப் புவனம் முழுது ஈன்ற* மூன்றுவகை உலகங்கள் யாவையும் பெற்ற, *முதல்வி* - முதன்மையுடையவராகிய உமையம்மையாரும், *ஓடும் விடைப்பாகன்*-விரைந்து செல்கின்ற எருதை ஊர்தியாகக் கொண்டு செலுத்துகின்ற சிவபெருமானும், *அம்மை* - அம்மையே, *முத்தம் தருக என அழைப்ப* - முத்தம் கொடுப்பாயாக வென்று தம்பால் அழைக்க, *ஆங்கு சிறிது அகன்று* - அவர்களிடம் சிறிது (மெல்லச்) சென்று

போய்நிற்க, தம் இன் முத்தம்கொள நோக்கி - தம்மிடம் இனிய முத்தங்கொள்ளுதலைப் பார்த்து, சற்று நகைக்கும் வேழமுகன் - சிறிது புன்சிரிப்புக்கொள்கின்ற யானைமுகக் கடவுளுடைய, செம்மை முளரி மலர்தாள் - சிவந்த தாமரைமலர் போன்ற திருவடிகளை, எம் சென்னி மிசையில் புனைவாம் - எமது தலைமேல் சூடுவாம். (யானைமுகக் கடவுளின் திருவடிகளை வணங்குவோம் என்றபடி.)

(விளக்கவுரை) ஏகாரம்: ஈற்றசை. மும்மைப்புவனம் - மூன்றாகிய உலகம்: அவை, மண்ணுலகம், விண்ணுலகம், கீழுலகம் எனப்படுவனவாம். இவற்றை இறைவி, படைத்துக் காத்து அழித்துத் திருவிளையாடல் புரிபவளாதலால், இவைகளை உள்ளடக்கிப் 'படைத்தலை' மட்டும் 'ஈன்ற' என்று கூறினர். குழந்தைகளின்பால் தாய்தந்தையர் கொண்ட பேரன்பினால் ஆண்பாலைப் பெண்பாலாகவும், பெண்பாலை ஆண்பாலாகவும் அழைத்து மகிழ்வது உலகியல் நிகழ்ச்சி. அம்முறையில் விநாயகக் கடவுள் இறைவன் இறைவிக்கு அரும்பெறல் முதல்மகனாராக லான், தம்பால் வந்து முத்தங்கொடுத்தற்கு 'அம்மே முத்தம் தருக' என அழைத்தனர் இங்கே ஆண்பால் பெண்பாலாயிற்று உவகை மிகுதியால். சற்று, சிறிது என்னும் பொருளது. வேழம் - யானை. யானைமுகத்தையுடையவர் விநாயகராதலான், 'வேழமுகன்' என்றார்.

தம் தாய்தந்தையர் தம் இடத்து இனிய முத்தம் பெறுதலைக் கண்டு சற்றே நகைக்கும்வேழமுகன் என்ற குறிப்பு, தம் அன்பர் கட்கு வேண்டிய வேண்டியாங்கு எல்லா நலங்களையும் ஈந்து அதனால் மகிழ்ச்சி கொள்ளுவோன் என்றபடியாம். அதனால் நமக்கும் இந்நூலுக்கு வேண்டும் சொல்லும் பொருளும் ஈந்தருளுவன் என்பது கருத்தாகக் கொள்க. தம்: அசையாகக் கொள்ளலுமாம்.

இறைவனும் இறைவியும் தமக்குள் முத்தங் கொள்ளுதலைச் சற்றே விலகி நின்று பார்த்துச் சிறிது நகைக்கும் எனப் பொருள் கொள்ளின், அதற்கோர் பொருட்சிறப்பு இன்றாதலோடு உலகியல் நிகழ்ச்சிகட்கு ஒத்துவாராததாதலுமாம். 'அம்மை தருக முத்தமென' என்னும் சொற்றொடரும் வாளாநின்று பொருள் பயவாதொழியும். அன்றியும் அவர் முத்தந்தாராது விலகிநிற்பா ராயின், தந் தாய்தந்தையரின் உள்ளக்குறிப்புக்கு மாறுபட்ட நிகழ்ச்சியுமாம். அன்றிச் சிவபெருமான் அம்மையாரையே நோக்கி 'அம்மை முத்தந்தருக'வென விளித்தாரெனக் கொள்

ளின், அம்மை இறைவனைவிட்டு நீங்கி வேறோரிடத்துக்குச் சென்றிருந்தாரெனப் பொருள்படும். இறைவியை,

"[1]நீல மேனி வாலிழை பாகத் தொருவன்"

என்றும்,

"[2]பெண்ணுரு ஒருதிறன் ஆகின்று"

என்றும்,

"[3]இரண்டுருவாய் ஈரணி பெற்ற எழிற்றகையன்"

என்றும்,

"[4]உண்ணாமுலை உமையாளொடும் உடனாகிய ஒருவன்"

என்றும்,

"[5]மையிலங்குநற் கண்ணி பங்கனே"

என்றும் பிறவும் மலரும் மணமும்போல் பிரியாதிருப்பதாகக் கூறும் ஆன்றோர் வழக்கொடு முரணுதலால் அஃதுரை யன்மை தெளிக.

பிள்ளையார்ப் பெருமானையும் முருகப் பெருமானையும் இறைவனும் இறைவியும் முததமிட் டின்புற்ற நிலையை, தச்ச நல்லூர்ப் பெரும்புலவர் அழகிய சொக்கநாதபிள்ளை தாம் பாடிய நெல்லைக் காந்திமதியம்மை பிள்ளைத்தமிழ் வருகைப்பருவச் செய்யுளொன்றில்,

"[6]கலையை விளைத்த பிறைக் கோட்டைங்
கரத்தோன் துணைவன் தனைநோக்கிக்
கவின்கொள் முகமா றுன்னுருவில்
காணு நிமித்தம் கழறுகெனக்
கொலையை வளைத்த நெடுங்கதிர்வேற்
குகவேள் நமையீன் றவளுருவகை
கொழிப்ப ஒருமித் தென்னைமுத்தம்
கொண்டு விளையா டுதற்கெனலும்

---

1. ஐங்குறுநூறு : க; 2. புறம் : க; 3. பதிற்றுப்பத்து : க
4. சம்பந்தர் தேவாரம்: 5. திருவாசகம்:
6. நெல்லைக் காந்திமதியம்மை பிள்ளைத் தமிழ்:

மலையை வளைத்த கணவரொடும்
மகிழ்கூர்ந் தினிய மதலைதனை
வாரியெடுத்து மடியில் வைத்திவ்
வாறின் றுணர்ந்தோம் எனப்பேசித்
தலையை வளைத்து முத்தமிடும்
சயிலக் குயிலே வருகவே
சாலிப் பதிவாழ் காந்திமதித்
தாயே வருக வருகவே

எனக் கூறுவது இதனோடொத்த கருத்தாதலைக்கண் டின்புறுக

தாயன்பு தந்தையன்பினும் சிறந்ததாதலால் முதலில் 'மும்மைப்......முதல்வி' என்றார். முதல்வி, விடைப்பாகன் என்பனவற்றில் வரும் எண்ணும்மைகள் பாட்டின் இசைநோக்கித் தொக்குநின்றன. முதல்வி ஓடும் என்பதிலுள்ள 'ஓடு' உருபை மூன்றாம் வேற்றுமையுருபாகக் கொண்டு உடனிகழ்ச்சிப்பொருளாக்கி அவ்வுருபொடு சார்ந்துள்ள உம்மையை இனைத் தென்றறிந்த முற்றும்மையாக்கி 'முழுதும் ஈன்ற' என்று கூட்டிப் பொருள் கூறினுமாம். இங்கே ஓடும் என்பதை எதிர்காலப் பெயரெச்சமாகக்கொண்டு பொருளுரைக்கப்பட்டது. ஓடல் - விரைந்து செல்லல். ஓடும் - விரைந்து செல்கின்ற. ஊர்தியாகிய எருதுக்கு அதன் விரைவைக் குறிக்கவந்த அடைமொழி. ஓடும் என்னும் பெயரெச்சம் விடையென்னும் பெயரை ஏற்று நின்றது. ஆங்கே- அவ்விடத்தினின்றும். சிறிது அகன்று - கொஞ்சம் விலகி. அஃதாவது தாம் நின்ற இடத்தைவிட்டுப் பக்கலில் போய் என்னும் பொருளது.

விநாயகக் கடவுளின் திருவடிகளை வணங்குவார்க்குத் தாம் நினைந்த பொருள்களெல்லாம் கைகூடி வருமாதலால் 'செம்மை... ...புனைவாமே' எனக் கூறிமுடித்தார்.

[1]"திருவாக்கும் செய்கருமம் கைகூட்டும் செஞ்சொல்
பெருவாக்கும் பீடும் பெருக்கும்—உருவாக்கும்
ஆதலால் வானோரும் ஆனை முகத்தானைக்
காதலால் கூப்புவர்தம் கை."

எனப் பிற ஆன்றோர் கூறுதல் கொண்டு தெளிக. புலவர்கள் தாம் எடுத்துக்கொண்ட பொருள்கள் இனிது முடிதற் பொருட்டுக் கடவுளரை வழிபடுதல் மரபு. அம்முறையில் இந்நூல்

1. பதினோராந்திருமுறை:

முட்டின்றி முடிதற்பொருட்டு முதற்கண் பிள்ளையார் வணக்கங் கூறினர். இனி, ஏனைக் கடவுளர் வணக்கம் கூறுகின்றார். (க)

## சிவபெருமான்

### தரவு கொச்சகக் கலிப்பா

பொருப்பரையன் மடப்பாவை
புணர்முலையின் முகடுதைத்த
நெருப்புருவம் வெளியாக
நீறணிந்த வரை மார்ப !
பருப்புரசை மதயானைப்
பல்லவர்கோன் நந்திக்குத்
திருப்பெருக அருளுகநின்
செழுமலர்ச்சே வடிதொழவே.

(இ - ள்.) பொருப்பு அரையன் மடப்பாவை - பொன்மலை அரசனை இமவான் பெற்ற இளமைபொருந்திய பாவைபோன்றவராகிய உமையம்மையாரின், புணர் முலையின் முகடு தைத்த - இரண்டு கொங்கைகளின் மேலிடம் அழுந்திய, நெருப்பு உருவம் வெளி ஆக - தீ போன்ற செந்நிற வடிவம வெண்ணிறமாகப் புலப்படும் படி, நீறு அணிந்த வரை மார்ப - திருநீற்றைப்பூசியுள்ள மலைபோன்ற திருமார்பையுடையவனே, நின் செழுமலர் சேவடி தொழ - உன்னுடைய செழித்த செந்தாமரை மலர் போன்ற சிவந்த திருவடிகளை வணங்க, பரு புரசை மதயானை - பெரிய கழுத்துக்கயிற்றைப்பூண்ட மதமிக்க ஆண் யானையையுடைய, பல்லவர்கோன் நந்திக்கு - பல்லவ வேந்தனை நந்திப்போத்தரையனுக்கு, திரு பெருக அருளுக - செல்வம் பெருகும்படி நீ அருள்புரிவாயாக.

(வி - ரை.) பொருப்பு - மலை ; இங்கே, பொன்மலையாகிய இமயமலையைக் குறித்தது. அரையன் - அரசன் : இடைப்போலி. உமையம்மை இமயமலைத் தலைவனாகிய இமவானுக்குத் திருமகளாய்த் தோன்றி இறைவனை மணந்த கந்தபுராண வரலாற்றை இங்கே குறித்தது. அதனால் 'மடப்பாவை' என்றார். சிவபெரு

மானின் திருமேனி நெருப்புப் போன்ற செந்நிறம்; அதன்கண் பூசிய திருநீற்றுடன், நீறுபூத்த நெருப்புப்போல் காட்சிதருதலால், 'வெளியாக நீறணிந்த வரைமார்ப' என்றார். வெளிது எனற் பாலது கடைக்குறைந்து நின்றது. அம்மையின் கொங்கைச் சுவடு பட்டவுடன், நீறுகலந்து திருவுருவநிறம் வெளிப்படையாகத் தோன்றும் குறிப்பை, 'நீறணிந்த' என்னுஞ்சொல்லால் விளக்கி ஞர். ஆசிரியர், பல்லவவேந்தன் நந்திபாற்கொண்ட பேரன்பினுல் இறைவனை நோக்கி, 'உன்திருவடிகளை வணங்குதலால், நீ எம் வேந்தனுக்கு எல்லாவகைச செல்வமும் பெருகி யோங்க அருளுக' என்று வேண்டுகின்றார். 'தமக்கென வாழாப் பிறர்க்குரியாள ராய்' வாழும் பெரியோரின் இயல்பு இஃதேயாதலான் என்க. செழுமலர், இங்கே சிறப்புப்பற்றிச செந்தாமரைப் பூவைக் குறித்தது. (உ)

## திருமால்

### வஞ்சித் துறை

கரியின் முனம்வரும்
அரியின் மலர்பதம்
உருகி நினைபவர்
பெருமை பெறுவரே.

(இ - ள்.) கரியின் முனம் வரும் - கசேந்திரன் என்னும் யானையின் துன்பத்தைத் தீர்க்க நேரில் தோன் றிய, அரியின் மலர் பதம் - திருமாலினுடைய செந்தாமரை மலரை யொத்த திருவடிகளை, உருகி நினைபவர் - மனங் கசிந்து நினைக்கும் அடியார்கள், பெருமை பெறுவர் - சிறப்பினையடைவர்.

(வி - ரை.) கசேந்திரன் என்னும் யானை ஒரு மடுவில் முதலையால் பிடியுண்டு வரமாட்டாமல் வருந்தி 'ஆதிமூலமே' என் றலறியபோது வந்து முன்னின்று திருமால் அதனைக் காத்த புராண வரலாற்றைக் கொண்டது, இங்கே கூறுவது. இக் கதையை,

" முந்தருளும் வேழம் முதலே என அழைப்ப
வந்தருளும் செந்தா மரை "

என்று நளவெண்பா ஆசிரியர் கூறுவதும் இங்கு ஒப்புநோக்கத் தக்கது. அதனுல், 'அரியின்......மலர்பதம்' என்றார்: இதில்

வலி இயல்பாயிற்று, வடசொல்லாதலான். கரி - கருமை நிற முடையதென்னும் பொருளது. அன்றிக் கருமை பெருமை யெனக்கொண்டு உருவில் பெரிதாக இருத்தலால் யானைக்குப் பெயராயிற்றென்று கொள்ளலுமாம். இறைவனை உருகி உருகி நெக்கு நெக்குள் உடைந்து வழிபடுவார்க்கு அவர் நினைத்த வடிவோடு வந்து அருள் சுரப்பானாதலால், 'உருகி நினைபவர் பெருமை பெறுவர்' என்று கூறினார். (௩)

## கலைமகள் முதலிய கடவுளர்கள்

### நேரிசை வெண்பா

திருவாணி யைக்குருவைத் தென்முனியைப் போற்றத்
தருவாணி ஆண்மைஇறை சாரும் — உருவாணி
ஐங்கரனைச் சங்கரனை ஆறுமுகத் தோன்உமையைப்
பங்கில்வைப்பார்க் கில்லைப் பவம்

(இ - ள்.) திருவாணியை குருவை தென்முனியை - நாவீற்றுச் செல்வத்தையுடைய கலைமகளைத் தென்முக (தக்கணாமூர்த்தி)ப் பெருமானைத் தென்மலையாகிய குற்றால மலையில வீற்றிருக்கின்ற அகத்தியரை, ஆணி உரு ஐங்கரனை - அச்சாணி போன்று விளங்குகின்ற வடிவமைந்த ஐந்து கைகளையுடைய விநாயகரை, சங்கரனை - சிவபெருமானை, ஆறுமுகத்தோன உமையை - ஆறுமுகங்களையுடைய முருகபெருமானை உமையம்மையாரை, பங்கில் வைப்பார்க்கு - தமமிடத்துக்கொண்டு இடைவிடாது நினைத்து வழிபாடுசெய்வோர்க்கு, போற்றத்தரு - யாவரும் கொண்டாடததக்க, வாணி - சொல்வன்மையும், ஆண்மை - பேராற்றலும், இறைசாரும் - நிலைபெற்று நிற்கும், பவம் இல்லை - (அவர்க்குப்) பிறவியும் ஒழியும.

(வி - ரை.) திரு: பல பொருள் குறித்த உரிச் சொல். ஈண்டுச் சொல்லால் வரும் செல்வத்தைக் குறித்தது. 'நாவீற்றிருந்த நாமகள்' என்றார் திருத்தக்கதேவரும். திரு - திருமகள் என்றலுமாம். இறைவன் தக்கணாமூர்த்தி வடிவமாகக் கல்லாலின் கீழிருந்து ஞானாசிரியராகச சனகர், சனந்தர், சனாதனர், சனற்குமாரர் ஆகிய நால்வர்க்கும் நான்மறைகளை அருளிச் செய்தாராகலின், 'குரு' என்ற சொற்கு ஈங்கே, தென்முகப்

பெருமானெனப் பொருளுரைக்கப்பட்டது. தென் - தெற்குப் பக்கம், அப்பக்கமுள்ள பொதியமலையைக் குறித்தலால் இடவாகு பெயர். அன்றித் தென்னாட்டு முனியென்றலுமாம். ஆணி - அச்சாணி. பெரிய உருவுடைய தேர் முதலியவற்றைக் கெடுதல் வாராது காப்பது அச்சில் கோத்த சிறிய ஆணி. அது கழன்று விடுமேல் அவைகள் செல்லாது கீழ் விழுந்து அசசு முறியும். இதனை வள்ளுவர் "உருள் பெருந்தேர்க்கு அச்சாணி அன்னார்" எனப் போற்றியுரைப்பர். அவ் ஆணி போன்று விநாயகப்பெருமானும் யாவற்றையும் இடையூறின்றி நடத்தி நல்வழியிற்செலுத்தும பேராற்றல் பெற்றவராகலான் 'ஆணி' யென்றார். இதனால் 'விக்கினேசுவரர்' எனப் பண்டையோர் கூறிப் போற்றினர். இப் பாட்டில் சிவபெருமான், முருகப்பெருமான், உமையம்மையார் முதலிய பல கடவுளர்களையும் இடைவிடாது நினைந்து வழிபடும் அன்பர்க்கு வரும் பயன் கூறப்பட்டது. இவர்களை வழிபடுதலால் இம்மையிற் சொல்வன்மையும் பேராற்றலும் அதனால் புகழும் மேன்மையும் பெருக வாழ்ந்து மறுமையில் வீடுபேறடைதல் உறுதி யென்பாராய், 'இறைசாரும் . ...பவம் இல்லை' என்றார்.

எனவே நாமும் இக்கடவுளர்களை வழிபட்டால் நாம் நினைந்த நல்லனயாவும் கைவரப் பெற்று நலம் பெறுவோம் என்பது குறிப்பு பிறவியே எல்லாத் துன்பங்களுக்கும் அடிப்படையானது. அதனைத் தற்றோர் இன்ப வடிவினராய் இறையடிப் பேறுற்று என்றும் பிறப்பிறப்பின்றி வாழ்வாராதலான், அதனை விளக்கம் பெறக் கூறினார்.

"பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்ப தறிவு"

எனப் பிறர் கூறுமாற்றானும் தெளிக. (ச)

தற்சிறப்புப்பாயிரம் முற்றும்.

---

1, 2. திருக்குறள்: சுசுஎ; நடுஅ.

# நூல்

## மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா.

### (க) தரவு

மண்டலமாய் அம்பரமாய் மாருதமாய் வார்புனலாய்
ஒண்சுடராய் ஒளிஎன்னும் ஓர்உருவம் மூன்றுருவ
மைவடிவோ வளைவடிவோ மரகதத்தின் திகழ்வடிவோ
செவ்வடிவோ பொன்வடிவோ சிவனேநின் திருமேனி;

[[1] அருவரையின் அகங்குழைய அனல்அம்பு தெரிந்தவுணர்
பொருமதில்கள் அவைமூன்றும் பொன்றுவித்த புனிதற்கும்
குருமணிசேர் அணிமுறுவற் குலக்கங்கை நதிபாயத்
திருமுடியைக் கொடுத்தாற்கும் செம்பாகம் திறம்பிற்றே;]

இலகொளிய மூவிலைவேல் இறைவாநின் இயற்கையிலைக்
குலகிரியும் அருமறையும் குளிர்விசும்பும் வறிதாக
அலைகதிர்வேற் படைநந்தி அவனிநா ராயணன்இவ்
உலகுடையான் திருமுடியும் உள்ளமுமே உவந்தனையே.

### (உ) அராகம்

செழுமலர் துதைதரு தெரிகணை மதனனது
எழில்உடல் பொடிபட எரிதரு நுதலினை;
அருவரை அடிஎழ முடுகிய அவுணனது
ஒருபது முடிஇற ஒருவிரல் நிறுவினை.

### (ங) தாழிசை

வீசிகையிற் கொன்றையும்
வெள்ளெருக்கும் விராய்த்தொடுத்த
வாசிகையின் ஊடேவெண்
மதிக்கொழுந்தைச் சொருகினையே;

---

1. இத்தரவு இடையில் யாரோ புலமை நிரம்பாத இளம் புலவரொருவரால் பாடி இடைச்செருகலாக இடையில் சேர்த்ததாகத் தோன்றுகின்றது. பொருள் சிறக்கவில்லை. முன்னிலைப் படர்க்கை வழுவும் காணப்படுகின்றது.

பாய்புலியின் உரிஅசைத்த
பலபுள்ளிப் படிவம்எலாம்
ஆயிரவாய்க் கருங்கச்சை
அழல்உமிழ அசைத்தனையே;

சோர்மதத்த வார்குருதி
சோனைநீர் எனத்துளிப்ப
ஏர்மதத்த கரிஉரிவை
ஏகாசம் இட்டனையே ;

திசைநடுங்கத் தோன்றிற்று
நீ உண்ட திறல்நஞ்சம்
உயிர்நடுங்கத் தோன்றிற்று
நீ உதைத்த வெங்கூற்றம்.

***(ச) முச்சீர் ஓரடி எட்டு அம்போதரங்கம்***

அனைத்துலகில் பிறப்பும் நீ ;
அனைத்துலகில் இறப்பும் நீ ;
அனைத்துலகில் துன்பமும் நீ ;
அனைத்துலகில் இன்பமும் நீ ;
வானோர்க்குத் தாதையும் நீ ;
வந்தோர்க்குத் தந்தையும் நீ ;
ஏனோர்க்குத் தலைவனும் நீ ;
எவ்வுயிர்க்கும் இறைவனும் நீ.

***(ரு) இருசீர் ஓரடி எட்டு அம்போதரங்கம்***

ஊழி நீ ; உலகு நீ ;
உருவும் நீ ; அருவும் நீ ;
ஆழி நீ ; அமுதம் நீ ;
அறமும் நீ ; மறமும் நீ.

(சு) தனிச்சொல்

என ஆங்கு ;

(எ) நேரிசை ஆசிரியச் சுரிதகம்

ஒருபெருங் கடவுள்நிற் பரவுதும் எங்கோன்
மல்லை வேந்தன் மயிலை காவலன்
பல்லவர் தோன்றல் பைந்தார் நந்தி
வடவரை அளவும் தென்பொதி அளவும்
விடையுடன் மங்கல விசையமும் நடப்ப
ஒருபெருந் தனிக்குடை நீழல்
அரசுவீற் றிருக்க அருளுக எனவே.

(க) தரவு

(இ - ள்.) சிவனே-சிவபெருமானே, நின் திருமேனி-உனது அழகிய உருவம், மண்தலம் ஆய்-மண்ணுலகமாகி, அம்பரம்ஆய் - வானமாகி, மாருதம்ஆய் - காற்றாகி, வார் புனல்ஆய் - இடையறா ஒழுக்குடைய நீராகி, ஒண்சுடர்ஆய்- ஒளிபொருந்திய நெருப்பாகி, ஒளிஎன்னும் ஓர்உருவம் - ஒளிப்பொருளாகிய ஒரே வடிவமே, மூன்று உருவு அமைவடிவோ - மூன்றுவகையான உருவமாக அமைந்த திருவுருவாயிற்றோ, வளைவடிவோ - (அம்மூவுருவில்) சங்கு போன்ற வெண்ணிற உருவமோ, திகழ் மரகதத்தின் வடிவோ - விளங்குகின்ற பச்சைமணிக்கல் நிற உருவமோ, பொன்வடிவு செம்மை வடிவோ - பொன்னுருவம்போன்ற செந்நிறத் திருவுருவமோ? (யாதென்று உன் திருவுருவை அளவிட்டுரைப்பேன், எல்லாப் பொருளும் எல்லா உருவமும் நீயேயாவாய்.)

அருவரையின் அகம்குழைய - அரிய பொன்மலையின் உள்ளிடம் வளைந்துகொடுத்து வில்லாக அமைய, அனல் அம்பு தெரிந்து - நெருப்பு வடிவான அம்பினை ஆராய்ந்தெடுத்து, அவுணர் பெருமதில்கள் அவை மூன்றும் - முப்புர அசுரர்களின் பெரிய கோட்டைகள் மூன்றையும்,

பொன் றுவித்த புனிதற்கும் - அழித்தொழித்த தூய வடிவினனிடத்தும், குருமணிசேர்-வெண்ணிறம் பொருந்திய முத்தினையொத்த, அணிமுறுவல் - அழகிய பற்களை யுடைய, குலக்கங்கை நதிபாய - மாறுநிலைபெற்ற கங்கை யாற்றின் நீரொழுகிப் பெருகிவர, திருமுடியைக் கொடுத் தாற்கும்-தன் அழகிய சடையைக்கொடுத்து அதனை ஏற்றவ னிடத்துமே, செம்பாகம் திறமபிற்று - அந்தச் செந்நிற உருவம் மற்ற நிறங்களோடு மாறுபட்டுநின்றது; (எனவே, செந்நிற உருவமே ஏனைய உருவங்களால் செய்ய இயலாத வற்றைச் செய்ததென்றபடியாம்.)

இலகு ஒளிய மூ இலைவேல் இறைவா - விளங்குகின்ற ஒளியையுடைய முத்தலை வேலாகிய சூலத்தையுடைய எங்கும் நிறைந்தவனே, நின் இயல்கயிலை குலகிரியும் - உனது இயற்கையாக அமைந்த சிறந்த வெள்ளிமலையும், அருமறையும் - அரிய நான்மறைகளும், குளிர்விசும்பும் - குளிர்ச்சியையுடைய வானிடமும், வறிதாக - வெற்றிட மாகும்படி (அவைகளைவிட்டு நீங்கி), அலைகதிர் வேல்படை நந்தி - ஒளிவிட்டெறிகின்ற வேற்படை தாங்கிய நந்தி யென்னும் பெயருடையவனும், அவனி நாராயணன் - இம் மண்ணுலகிற்குத் திருமால் போன்றவனும், இ உலகு உடையான் - இம்மண்ணுலகை ஆளபவனுமாகிய நந்திப் போத்தரையனுடைய, திருமுடியும் உள்ளமுமே உவந்தனை - திருமுடியின்மீதும் மனத்திடத்துமே நீ மகிழ்ந்துறைவா யாயினை ;

(வி - ரை.)' சிவபெருமான் முழுமுதற் கடவுளாதலால், அவன் மண்ணுலகமும் விண்ணுலகமும் காற்றும் நீரும் தீயும் விண்மீன் முதலிய வேறு ஒளியுடைப் பொருள்களுமாய் ஆனான் என்பாராய் ' மண்டலமாய்... ..என்னும் ' என்றார். இப்பெரும் பொருள்கள் யாவும் இறைவனே என்பாராய், ' ஓர் உருவாய் ' என்றார். அவ்வோருருவே, படைத்தல் காத்தல் அழித்தல் செய்வ தற்குச் சிவபெருமானே திருமால், நான்முகன், உருத்திர னென்னும் வடிவாக மும்மூர்த்தியாக நின்றானென்பாராய் 'மூன் றுரு அமைவடிவோ ' என்றார். அம் முப்பெருங் கடவுளர்க்கும் வெண்மை கருமை பொன்மை யென்னும் நிறங்கள் அமைந்தன வாதலால், ' வளைவடிவோ ......பொன்வடிவோ ' எனத் திறம்

படக் கூறினார். ஓகாரங்கள் ஐந்தில் முதல் நான்கும் ஐயப் பொருளில் வந்தன. இறுதியில் ஒன்றும் பாட்டின் இசைநிறைக்க வந்த அசைநிலை. 'சிவனே உன் திருமேனியின் நிறத்தை எந்நிறமென்று கொள்வேன்' என்று வியந்தவாறும்.

அருவரை, ஈண்டுப் பொன்மலையைக் குறித்தது. அனல் அம்பு - வெப்பமுள்ள வாளி. குழைய - பணிய, தன்வன்மை கெட்டு மென்மையாக என்னும் பொருளது. குழைய என்னும் செயவெனெச்சம் காரியப்பொருட்டாக வந்து இறந்தகாலங் காட்டிற்று.

ஒருகாலத்தில் பொன் வெள்ளி இரும்பால் ஆகிய மூன்று கோட்டைகள் கட்டிக்கொண்டு அதிலிருந்து அவுணர்கள் உலகை யழித்தார்களென்றும் அதைப் பொறுக்கலாற்றாத மக்களும் தேவர்களும் இறைவனிடம் குறைகூறி வேண்ட, அதுகாலை, பொனமலையை வில்லாகக்கொண்டு, திருமாலை அம்பாக அமைத்துச்சென்று திரிபுரத்தையும் அவுணர்களையும் சிவபெருமான் அழித்தான் என்னும் புராணக்கதையைக் கொண்டு இங்கே இறைவனைப் படர்க்கையிடமாக அமைத்து 'மதில்கள்......பொன்றுவித்த புனிதற்கும்' என்றும், பகீரத னுக்காகக் கங்கையைச் சடைக்கண் தாங்கிக் காத்த வரலாற்றைத் 'திருமுடியைக் கொடுத்தாற்கும்' என்றும் இங்கும் படர்க் கையாற் கூறினார். எனவே, இம்மூவரில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு தொழிலே ஆற்ற இவன் முப்புரத்தை அழித்தலால் அழித்தலும், கங்கையையேற்றுப் பகீரதனைக் காத்தலால் காத்த லும், இவைகளால் உலகை நன்னிலையில் நிறுத்திப் படைத்தலு மாகிய முத்தொழில்களும் இவ் வொருவனே செய்தலால் இப் பேருருவ இறைவன் திருவுரு, ஏனைய பொன்மை கருமைகளை வென்று மாறுபட்டுத் தன்னுரு செம்மைநிறமாக நிலைபெற்றது, என, சிவபெருமான் பேராற்றலை விரித்துரைத்தார். இங்கே வெண்ணிறமாகக் கூறியது, 'சிவனென்னும் நாமம் தனக்கே யுடைய செம்மேனி எம்மான்' என்னும் தமிழ்மறைக்கு முரணு காதோவெனின், அம் மறையில் பிறிதோரிடத்தே, 'மெய்யெலாம வெண்ணீறு சண்ணித்த மேனியான்' என்று விளக்கப்படுதலால் அந்நிறம் செயற்கை முறையில் அமைந்ததாகக் கொள்க. அன்றி எல்லா நிறமும் அவனுக்கே உரிமையாதலால் கொண்டா ரென்றலுமாம். ஈண்டுப் 'புனிதற்கும் கொடுத்தாற்கும்' என்பன, முன்னிலைப் படர்க்கையாக வந்த இடவழுவமைதி.

இத்தகைய பேராற்றல் படைத்த இறைவன், தனக்கே உரிமையாகக் கொண்டிருக்கின்ற கயிலைமலையையும், தன் பெருமையை விரித்துப் பேசுகின்ற நான்குவேதங்களையும்

விரிந்த வானவெளியையும் விட்டுவந்து நந்திப்போத்தரைய னுடைய திருமுடிமீதும், அவன் நெஞ்சினிடத்தும் மாறாது எழுந்தருளியிருக்கின்றனென, வேந்தனின் செங்கோற் சிறப்பை யும், சிவபெருமானிடத்து அவன் மாறாதுகொண்டிருக்கின்ற பேரன்பையும் 'உலகுடையான்......உவந்தனே' என்றார். இவன் பால் இறைவன் என்றும் மாறாது குடிகொண்டு காத்துவருகின்றா னென்பதை விளக்கியுரைத்தார்.

எனவே, நந்திவர்ம மன்னனின் வெற்றிச்சிறப்பும், செங்கோல்மாட்சியும், இறைவன்பால் இடையறாப் பேரன்பும் விளக்கிப் பாட்டுடைத்தலைவன் பாடல்சால் சிறப்பிற்குரியான் எனத் தோற்றுவாய் செய்து, அவன்பால் தமக்குரிய பேரன்பை யும் விளக்கினார்.

புனிதற்கும், கொடுத்தாற்கும் என்பனவற்றில் நான்க னுருபு ஏழனுருபோடு மயங்கிவந்த வேற்றுமைமயக்கம். புனித னிடத்தும் கொடுத்தானிடத்தும் எனக்கொண்டு செம்பாகம் திறம்பிற்றே என முடிபு கொள்க.

(உ) அராகம்

(இ - ள்.) செழுமலர் துதைதரு-மணம் பொருந்திய செழித்த மலர்களை, தெரிகணை-தெரிந்தெடுத்து அம்பாகக் கொண்ட, மதனனது எழில் உடல் - மன்மதனுடைய அழகிய உடம்பினை, எரிதரு நுதலினை - எரித்தொழித்த நெற்றிக்கண்ணையுடையோயே;

(வி - ரை.) எரிதரு: பகுதிப் பொருள் விகுதி.

அருவரை அடிஎழ - அரிய வெள்ளிமலையின் அடி யுடன் மேலே கிளம்ப, முடுகிய - தூக்கிய, அவுணனது ஒருபது முடிஇற - அரக்கனாகிய இராவணனுடைய பத்துத் தலைகளும் நறுங்கும்படி, ஒரு விரல் நிறுவினை - உனது கால்விரல்களில் ஒன்றை ஊன்றினையே;

(வி - ரை.) நெற்றி, அதனிடமுள்ள கண்ணுக்கு ஆயிற்று; இடவாகுபெயர்.

(ங) தாழிசை

(இ - ள்.) கொன்றை வீயும் வெள் எருக்கும் - கொன்றைமலரையும் வெள்ளெருக்குமலரையும், விராய்த் தொடுத்த-கலந்து இணைத்துக்கட்டிய, வாசிகையின் ஊடே -

மாலையினது உள்ளிடத்தே, வெண்மதிக் கொழுந்தை - வெண்ணிறம் பொருந்திய மூன்றாம் பிறையை இணைத்து, சிகையில் - உன் செஞ்சடையிடத்தே, சொருகினையே - முடித்துக்கொண்டோயே ;

பாய்புலியின் பலபுள்ளி உரி அசைத்த - பாய்ந்து கொல்கின்ற புலியினது பல புள்ளிகளையுடைய தோலை உடுத்த, படிவம் எலாம் - உன் திருமேனியெங்கும், ஆயிர வாய்-ஆயிரம் வாய்களினின்றும், அழல் உமிழ-நெருப்புப் போன்ற கொடிய நஞ்சைக் கக்கும்படி, கருங் கச்சை - கரியநிறம் பொருந்திய ஆதிசேடன் என்னும் பாம்பினை அரையில் கட்டுங் கயிறாக, அசைத்தனையே - கட்டிக் கொண்டனையே ;

(வி - ரை.) ஆயிரம் வாய் - ஆயிரம் தலைகளையுடைய ஆதிசேடனாகிய பாம்பு. அன்றி, ஆயிரம் பாம்புகள் என்றலுமாம்.

சோனைநீர் என - இடைவிடாது நின்றொழுகும் நீர்த் துளி யென்னும்படி, சோர் மதத்த வார்குருதி - வலிமை மிக்கதான இரத்தப் பெருக்கு, துளிப்ப - பெருகி ஓட, ஏர்மதத்த கரிஉரிவை - எழுச்சியுள்ள மதத்தையுடைய யானையினது தோலினை, ஏகாசம இட்டனையே - தோள் உத்தரீய ஆடையாக அணிந்தோயே ;

திசை நடுங்கத் தோன்றிற்று - எட்டுத் திசைகளிலுமுள்ள உயிர்கள் யாவும் நடுக்கங்கொள்ளும்படி உண்டாயிற்று, நீ உண்ட திறல்நஞ்சம் - உன்னால் உண்ணப்பட்ட வலிமையுடைய ஆலகால நஞ்சு, உயிர் நடுங்கத் தோன்றிற்று - உயிர்ப்பொருள்கள் எல்லாமும் நடுக்கங்கொள்ளும் படி தோன்றலாயிற்று, நீ உதைத்த வெங்கூற்றம்-உன்னால் உதைத்துத் தள்ளப்பெற்ற கொடிய காலன் ;

## (௪) முச்சீர் ஓரடி எட்டு அம்போதரங்கம்

(இ - ள்.) அனைத்து உலகில் பிறப்பும் நீ - எல்லா உலகங்களினும் உயிர்கள்தோன்றக் காரணமாக இருப்பவனும் நீயே, அனைத்து உலகில் இறப்பும் நீ - எல்லா உலகங்களினும் தோன்றிய உயிர்கள் இறப்பதற்குக்

காரணமாக இருப்பவனும் நீயே, அனைத்து உலகில் துன்பமும் நீ - எல்லா உலகங்களினும் உள்ள உயிர்கட்குத் துன்பத்தைக் கொடுக்கின்றவனும் நீயே, அனைத்து உலகில் இன்பமும் நீ - எல்லா உலகங்களினும இருக்கின்ற உயிர்கட்கு இன்பங் கொடுப்பவனும் நீயேயாகும்;

வானோர்க்குத் தாதையும் நீ - தேவர்களைத் தோற்றுவித்தவனும நீயே, வந்தோர்க்குத் தந்தையும் நீ - அடைக்கலம் அடைந்தவர்க்கு தநதைபோல் பாதுகாப்பவனும் நீயே, ஏனோர்க்குத் தலைவனும் நீ - மற்ற எல்லோர்க்கும் முதல்வனும நீயே, எவ்உயிர்க்கும் இறைவனும் நீ - எல்லா வகை உயிர்ப்பொருள்கட்கெல்லாம் அரசனும் நீயேஆகும்;

## (ரு) இருசீர் ஓரடி எட்டு அம்போதரங்கம்

(இ - ள்.) ஊழி நீ - உலக முடிவுக்காலமும் நீயே, உலகும் நீ - உலகங்கள் யாவும நீயே, உருவும் நீ - வடிவப் பொருள்களும் நீயே, அருவும் நீ - உருவமில்லாத பொருள்களும நீயே, ஆழி நீ - கடலும் நீயே, அமுதம் நீ - அதில் தோன்றிய அமிழ்தமும் நீயே, அறமும் நீ - அறத்தைத் தருவோனும் நீயே, மறமும் நீ - பாவத்தைத் தருவோனும் நீயே;

## (சு) தனிச்சொல்

(இ - ள்.) என ஆங்கு - என்று; ஆஙகு: அசைச் சொல்.

## (எ) நேரிசை ஆசிரியச் சுரிதகம்

எம்கோன் - எம்வேந்தனும், மல்லைவேந்தன் - மாமல்லபுரத்திற்கு அரசனும், மயிலை காவலன் - மயிலாப்பூரைக் காக்கின்ற மன்னனும, பல்லவர் தோன்றல் - பலலவர் மரபிற் பிறந்தவனுமாகிய, பைந்தார் நந்தி - பசிய தொண்டை மாலையணிந்த நந்தியென்னும் திருப்பெயருடையவன், விடையுடன் மங்கல விசையமும் - தனது எருதெழுதிய கொடியோடு நன்மையான வெற்றியும், நடப்ப - எவ்விடத்தும் செல்ல, வடவரை அளவும் தென் பொதி அளவும் - வடபால் இமயமலை வரையினும்

தென்பால் பொதியமலை வரையினும் எல்லையாகக்கொண்டு, ஒரு பெரும் தனிகுடை நீழல்-ஒப்பற்ற சிறந்த ஒரே வெண் கொற்றக்குடை நிழலின்கண்ணே. அரசு வீற்றிருக்க அருளுக என - அரசனாகப் பெருமிதத்துடன் இருத்தற்கு நீ அருள்புரிவாயாக என்று வேண்டி, ஒரு பெருகடவுள்- ஒப்பற்ற முழுமுதற் கடவுளே! நின் பரவுதும் - உன்னை வணங்குகின்றேம் (யாம் வேண்டியவாறு அருள்புரிக.)

(வி - ரை.) மல்லை - மாமல்லபுரம். இதனை இக்காலத்து மகாபலிபுரம் என, வழங்குகின்றனர். இதில் பல்லவர்கள் தம் கலையின்பத்தைப் பல்வகைச சிற்பங்களாக அமைத்துள்ளனர். அவை, இன்றும் கலையின்பங்காண்பார்க்கு அரிய காட்சியாக விளங்குகின்றன. மயிலை, சென்னையில் ஒரு பகுதியாகிய மயிலாப் பூர். மல்லை, மயிலை என்பன மரூஉமொழிகள் இவைகளை ஆண்ட சிறப்பு, நந்திமன்னனுக்குரியது. பல்லவர்தோன்றல்- பல்லவர் மரபிற்பிறந்த மேதகையான். பைந்தார் - பசிய தொண்டைமாலை; அஃது வெற்றிமாலை. வடவரை - இமயமலை. தென்பொதி - தென்பொதியம். கடைக் குறைந்து நின்றது. (ரு)

## தலைவி கூற்று

### நேரிசை வெண்பா

எனதே கலைவளையும் என்னதே மன்னர்
சினவேறு [1]செந்தனிக்கோல் நந்தி—இனவேழம்
கோமறுகில் சீறிக் குருக்கோட்டை வென்றாடும்
பூமறுகில் போகாப் பொழுது.

(இ - ள்.) (தோழீ!) மன்னர் சின ஏறு-பகைவேந்தர் களாகிய யானைகளைச் சினந்து கொல்கின்ற ஆண்சிங்கம போன்றவனாகிய, செம் தனி கோல் நந்தி - ஒப்பற்ற செங் கோல் செலுத்துகின்ற நந்திவர்மனுடைய, ஆடும் இன வேழம் - போரில் கொல்கின்ற யானைக்கூட்டங்கள், கோம றுகில் சீறி - பகைவேந்தர்களின் தெருக்களில் சீற்றங் கொண்டு, குருக்கோட்டை வென்று - குருக்கோட்டை யென்னும் நகரைவென்று, (அம்பாரிமிழ்வினால்), பூமறுகில் போகா பொழுது - அழகிய வீதிகளில் செல்லாத காலத்தே,

(பாடம்) 1. செந்தனிவேல்.

கலை எனதே - உடுத்த ஆடையும் என்னதாகவே நிலை பெற்றிருக்கும், வளையும் என்னதே - கைவளையல்களும் என்னுடையதாகவே நிலைபெற்றிருக்கும். (அவை கீழே நழுவி விழ மாட்டா)

(வி - ரை.) 'யானைக் கூட்டங்கள் சூழ, நந்திவர்மன் யானை மீது பவனிவந்தால், நான்உடுத்துள்ள ஆடையும் கைகளில் அணிந்துள்ள வளையல்களும் நழுவிக் கீழே சோர்ந்து விழுந்து விடும்; என்செய்வேன்' என்று நந்திவர்மன்பால் வாங்காக் காதல் கொண்ட மங்கையொருத்தி தன் தோழியிடம் கூறி வருந்துவ தாக அமைந்தது இப்பாட்டு.

கலை என்பதை முதற்குறையாகக்கொண்டு மேகலை சோர்ந்து விழுமெனப் பொருள் கொள்ளலுமாம். 'மன்னர் சினவேறு' என்ற மையால் அரசன் ஆண்மையும், 'செந்தனிக்கோல் நந்தி' என்றமை யால் அரசன் செங்கோல்மாண்பும் குறித்தவாறும்.

அரசன் உலாவருங்கால் தன் படை முதலியவைகளையும் வெற்றிப்பறை முதலியவைகளையும் தனக்கு முன்னர்ச செலுத்திப் பின்வருதல் முறைமை; அம்முறையில் நந்தியும் போந்தானாக, அவன் வருகைக்கு முன்சென்ற யானைக்கூட்டங்களைக் கண்ட போதே, அரசன் விரைவில் வருவானென உணர்ந்த காதன்மிக்க மங்கையின் நெஞ்சம், காதலால் நெகிழ்ச்சி கொள்ள, ஆடையும் வளையல்களும் சரிந்து வீழநின்றாள். 'அவன் வரும் முன்னரே நான் இந்நிலையளானால் அவனை நேரிற் கண்டால் நான் உணர்விழந்துபோதல் உறுதி' என்பாளாய், 'எனதே கலைவளையும்,' எனத்தோழிக்குச சுருங்கச சொல்லி விளங்கவைத்தலாகக கூறியதாகக் கூறிய ஆசிரியரின் சதுரப் பாடு போற்றற்குரியது.

ஆடும் என்னும் எதிர்காலப் பெயரெச்சம் நிகழ்காலத்துக்கு வந்தது. இயல்பாகவந்த காலவழுவமைதி. (கு)

### கிள்ளைவிடு தூது

#### கட்டளைக் கலித்துறை

பொழுதுகண் [1]டாய்அதிர் கின்றது
போகநம் பொய்யற்கென்றும்
தொழுதுகொண் டேன்என்று சொல்லுகண்
டாய்தொல்லை நூல்வரம்பு

(பாடம்) 1. டாய்திறக்.

[1]முழுதுகண் டான்நந்தி மல்லைஅம்
கானல் முதல்வனுக்குப்
பழுதுகண் டாய்இதைப் போய்ப்பகர்
வாய்சிறைப் பைங்குருகே.

(இ - ள்.) சிறை பைங்குருகே - சிறகுகளையுடைய பச்சைநிறக் கிளியே! பொழுது போக கண்டு-ஞாயிறுபோய் மறைய மாலைப்பொழுது வருதலைப் பார்த்து, ஆய அதிர் இன்றது - என்தாய் பேரிரைச்சலிட்டு வைகின்றாள், தொல்லை நூல் வரம்பு-பழைமையாகிய இலக்கிய நூல்களின் அளவு எல்லை, முழுது கண்டான் - யாவும அறிந்த, நந்தி - நந்தியென்னும் பெயரையுடையவனுக்கு, மல்லை அம் கானல் முதல்வனுக்கு-மாமல்லபுரத்தைச் சார்ந்த அழகிய கடற்றுறைத் தலைவனுக்கு, நம் பொய்யற்கு - நம்பால் படயப் பொய்ம்மொழி பேசுகின்றவனுக்கு, என்றும் தொழுது கொண்டேன் என்று சொல்லு - எக்காலத்தும உன்னையே நினைந்து வணங்கிக்கொண்டே இருக்கின்றே னென்று நீ கூறுவாயாக; அன்றியும், பழுதுகண்டாய் - இது அவன் தகுதிக்குக் குற்றமாகும் என்பதை நீ அறிந்து கொள், போய் இதை பகர்வாய் - நீ அவனிடஞ் சென்று இச் செய்தியை மறவாது சொல்வாயாக.

(வி - ரை.) நந்திவர்மன்பால் காதல்கொண்ட மங்கை யொருத்தி காதலைத் தாங்கலாற்றாது அவன்பால் தூதுபோக்கி அவன் அன்பைப்பெற விழைந்தாள்; அதற்காக எல்லா வற்றினும் சிறந்ததாய், தன்னோடு உடனுறைவதாகிய கிளியே தனக்கு ஏற்ற தூதாக அமையுமெனக் கருதினாள்; அதைப் பார்த்துப் "பைங்குருகே! நான் நந்திமன்னன்பால் காதல் கொண்டுள்ளதை அறிந்த என் தாய் பொழுதுபோய் மாலைப் பொழுது வருவதை யறிந்து கடுஞ்சொற்களால் என்னை வைது இல்லில் இருக்கச்செய்து காவல்கொண்டாள்; நீ என் அன்பிற் குரிய நந்திமன்னனிடஞ் சென்று நான் அவரையே தொழுது கொண்டிருக்கின்றேனென்று சொல்லு; நூல் வரம்புகண்ட

(பாடம்) 1. முழுதுகண்டார் முனைத்தார்தந் தோன்றல் முரிகுறும்பிற், பழுதுகண டாய்நந்தி மல்லையங் கானற் பனிக் குருகே.

வனுக்கு - மல்லையங்கானல் முதல்வனுக்கு - 'வருவேன் வருவே' னென்று கூறி வாராது இருக்கின்ற பொய்யனுக்கு - இவ்வாறு பொய்பல கூறி ஏமாற்றுதல் தகுதியல்லவென்று எடுத்துக் கூறுவாயாக" என்று சொல்லித் தூதனுப்புவதாக அமைந்தது இவ்வழகிய பாட்டு.

'பொழுதுகண்டாயதிர்கின்றது போக' என்னும் தொடரைப் பொழுது போகக்கண்டு ஆய அதிர்கின்றது எனச் சொற்களைக் கூட்டிப் பொருள்கொள்க. கண்டாய்: முன்னிலை அசைச்சொல். நந்தி - நந்திக்கு எனக் கொள்க. இதில் நான்காம் வேற்றுமை உருபு தொக்குநின்றது. முழுதுகண்டான்: என்பதை முற்றெச்சமாகக்கொண்டு பொருளுரைக்கப்பட்டது. (எ)

தோழி கூற்று: தலைவனை வேண்டல்

**எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்**

குருகுதிர்முன் பனிக்கோதுங்கிக் கூசும் கங்குற்
குளிர்திவலை தோய்ந்தெழுந்த நறுந்தண் வாடை
அருகுபனி [1]சிதறவர அஞ்சு வாளை
அஞ்சல்அஞ்சல் என்றுரைத்தால் அழிவ துண்டோ?
திருகுசினக் கடக்களிற்றுச் செங்கோல் நந்தி
தென்னவர்கோன் தன்குறும்பிற் [2]சென்று சூழ்ந்த
சுரிகைவினைப் பகைஞர்உடல் துண்டம் ஆகத்
துயிலுணர்ந்த வல்லாண்மைத் **தொண்டை வேந்தே.**

(இ - ள்.) திருகுசின கடக்களிற்று - மாறுபட்ட சினமும் மதமும் பொருந்திய ஆண்யானைகளையும், செங்கோல் - செம்மையான ஆளுகையையும் உடைய, நந்தி - நந்திமன்னா! தென்னவர்கோன் குறும்பில் சென்று - பாண்டிமன்னனது கோட்டைக்குள் நுழைந்து, சூழ்ந்த - அக்கோட்டையில் சுற்றியிருக்கின்ற, சுரிகை வினைப் பகைஞர் உடல் - வாட்போரில் வல்ல பகைவீரர்களின் உடல்கள், துண்டம் ஆக - துண்டு துண்டாகத் துமித்து ஒழியும்படி, துயில் உணர்ந்த - இருப்பிடம் விட்டெழுந்து செல்கின்ற, வல் ஆண்மை-மிக்க ஆண்மையை

(பாடம்) 1. 'சீதம்வர'. 2. 'செருநர்'.

யுடைய, தொண்டை வேந்தே - தொண்டை நாட்டுக்கு அரசனே! உதிர் முன்பனிக்கு - சிதறுகின்ற முன்பனித் துளிக்கு, குருகு ஒதுங்கிக் கூசும் கங்குல் - நீர்வாழ் பறவைகளும் விலகி நடுக்கங்கொள்கின்ற நள்ளிரவுப் பொழுதில, குளிர் திவலை தோய்ந்து எழுந்த - குளிர்ந்த பனித்துளிகள் தனபால்சார மேலெழுந்து வந்த, நறும் தண்வாடை - மணமும் குளிரும் மிக்க வாடைக்காற்றானது, அருகுபனி சிதற வர அஞ்சுவாளை - தன் பக்கத்தில் பனித்துளிகளைத தூற்றுதற்கு வருதலையறிந்து அச்சங் கொள்கின்ற என் தோழியைப் பார்த்து, அஞ்சல் அஞ்சல்- அஞ்சாதே அஞ்சாதே, என்று உரைத்தால் - என்று நீ அவட்கு ஆறுதல்மொழி கூறினால், அழிவு அது உண்டோ- உனக்கு அதனால் இகழ்ச்சி உண்டாகுமோ?

(வி - ரை.) வாடையால் மெலிவுற்று வருந்துந் தலைவிக்கு இரங்கி, உலாவருகின்ற தலைவனைப் பார்த்துத் தோழிகூறி வேண்டுவதாக அமைந்தது, இப்பாட்டு.

தலைவன் பேராண்மைமிக்கவன்; பகைநாட்டுக்குச்சென்று அவர்தம் கோட்டைகளுள் நுழைந்து அங்குள்ள போர்வீரர்களை அழிக்கும் வல்லாண்மைமிக்க வில்லாளன். இத்தகைய வீரனுக்கு - தொண்டைநாட்டுக் காவலனுக்கு - திருகுசினக் கடக்களிற்றுச செங்கோல்நந்திக்கு - வாடைக்காற்றை வாராது அடக்கும் ஆண்மையில்லாது போகுமா? அதை அடக்குவதற்குத் தனக்கு அன்பில்லாது போயினும், 'சஞ்சலம் கலந்தபோது தையலாரை உய்யவந்து, அஞ்சல் அஞ்சல் என்கிலாத ஆண்மை யென்ன ஆண்மை?" என்பாளாய், "அதனால் உனக்குப் பழி யுண்டா? பழியில்லையே! எனவே, இக்காதல் நங்கையைக்காத்து அருள்புரிக; 'அஞ்சாதே அஞ்சாதே' என்றுவது ஒருவார்த்தை கூறுக" எனத் தலைவனைவேண்டித் தொழுது தோழி விளைவுவதாக அமைந்த இபபாட்டின் இன்பத்தையுணர்ந்து மகிழ்க. (அ)

## வெற்றிமுரசச் சிறப்பு

**அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்**

தொண்டை வேந்தன் சோழனுடன்
  தொல்நீர் அலங்கல் முந்நீரும்
கொண்ட வேந்தர் கோன்நந்தி
  கொற்ற வாயில் முற்றத்தே

விண்ட வேந்தர் தம்நாடும்
வீரத் திருவும் எம்கோனைக்
கண்ட வேந்தர் கொண்மின்கள்
என்னும் கன்னிக் கடுவாயே.

(இ - ள்.) தொண்டை வேந்தன் - தொண்டை நாட்டு மன்னன், சோணாடன் - சோழநாட்டுக்குரிமையுடையவன், தொல்நீர் அலங்கல் - வற்றாத தன்மையையுடைய அலையை யுடைய, முந்நீரும் - கடலையும், கொண்ட வேந்தர்கோன் நந்தி - தமக்கு உரிமையாகப் பெற்ற மன்னர் மன்னனாகிய நந்திவர்மனுடைய, கொற்றவாயில் முற்றத்து - வெற்றி பொருந்திய அவன் அரண்மனை வாசலின் முனனிடத்தில், கன்னி கடுவாய் - நிலைபெற்ற வெற்றிமுரசானது, எம் கோனை கண்ட வேந்தர் - எம மன்னனைக் கண்டு வணங்கிய பகையரசர்களும், விண்ட வேந்தர் - தம் நாடு நகர்களை இழந்த அரசர்களும், தம நாடும் வீர திருவும் - இழந்த தம் நாட்டையும வெற்றிச் செல்வப்பொருள்களையும், கொள் மின்கள் என்னும் - பெற்றுக்கொள்ளுங்கள் என்று கூறி முழக்கஞ் செய்யும்.

(வி - ரை.) நந்திவர்மன் பேரிரக்கப் பண்புடையவன்; முறைவேண்டினோர்க்கும், குறைவேண்டினோர்க்கும், அவர் வேண் டிய வேண்டியாங்கே மகிழ்ந்து கொடுக்கும் ஈகையாளன்; அவன் ஒருகால் போர்தொடுத்தான்; குருக்கோட்டை முதலிய நாடு களையும், அங்குள்ள பொன், மணி, நெல் முதலிய பொருள்களை யும், ஆடல் பாடல் மிக்க மகளிரையும் கவர்ந்துகொண்டு தன் நாட்டிற் சேர்த்தான். அந்நாட்டு வேந்தர் வணங்கி, மன்னிப்புக் கேட்டுக் கொண்டனர். அவர்கள்பால் மனம் இளகிய மன்னன், தன் கொற்றவாயிலிடத்தே முரசறைவோரை அழைத்து, மாற்றரசர்கள் யாவரும் வருக, அவர் நாடு நகர் செல்வங்கள் முதலிய யாவற்றையும் திரும்பக் கொடுப்போம்; கொள்ளுக; என்று கூறி முரசறையச செய்தான். இதனால் மன்னன் நல்லு ளப்பாங்கை முரசு வாயிலாக ஏற்றிக் 'கன்னிக் கடுவாய் கொள் மின்கள் என்னும்' என்றார்.

கடுவாய் - ஒருவகை வெற்றிப் போர்முரசம். லெக்சிகன் அகராதி பார்க்க. இதில் முரசம் கொள்ளுங்கள் என்று முழங்கு வதால் இப்பாட்டு முரசுவென்றி கூறியவாறும். (௬)

## செவிலி தலைவிக்குக்கூறல்

### எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

கடுவாய் இரட்ட வளைவிம்ம மன்னர்
கழல்சூட அங்கண் மறுகே
அடுவார் மருப்பின் அயிரா வதத்தின்
அடுபோர்செய் நந்தி வருமே
கொடுவார் புனைந்து நகுவாட் படைக்கண்
மடவார் இடைக்குள் மனமே
வடுவா யிருக்கும் மகளேஇ முன்றில்
மணிஊசல் ஆடல் மறவே.

(இ - ள்.) *வார்கொடு புனைந்து - கச்சினைக் கொண்டு கொங்கையை அழகு செய்து, நகுவாள் படைக்கண் - ஒளி விடுகின்ற வாளபோன்ற கண்களையுடைய, மடவார் இடைக்கு உள் - இளம்பெண்களின் கூட்டத்தில், மனம வடுவுஆய் - காதலால் மனம் வேறுபட்டு, இருக்கும் மகளே - இருக்கின்ற என் புதல்வியே! கடுவாய் இரட்ட - வெற்றி முரசம் முழங்கவும், வளை விமம - சங்கின் ஒலி பெருகவும், மன்னர் கழல்சூட - அரசர்கள் நந்திமன்னன் தன் அடிகளில் வந்து வணங்கவும, அம்கண் மறுகு - அழகிய தெருக்களில், அடுவார் மருப்பின் - கொல்லுகின்ற நீண்ட கொம்புகளையுடைய, அயிராவதத்தின் - ஐராவதம் எனனும் யானை போன்ற யானையின் மீதேறி, அடுபோர் செய் நந்தி வரும் - வெல்லும் போர்செய்கின்ற நநதி மன்னன் உலா வருவான் ஆதலால், முன்றில் - நம முற்றத்திடத்தேயுள்ள, மணிஊசல் ஆடல்மற - அழகிய ஊஞ்சலில் ஏறி விளையாடுதலை மறந்துவிடு. (ஊசலில் ஏறி இனி நீ விளையாடினால், ஏற்கெனவே காதல் கொண்டிருக்கின்ற உனக்கு முன் நந்திவர்மன் உலாவருவான்; நீ காதல் தாங்கலாற்றாய் என்றபடி.)*

(வி-ரை.) *நந்திவர்மன்பால் ஓர் மங்கை காதல் கொண்டாள்; அவனை அல்லும் பகலும் நினைந்தாள்; உணவையும் வெறுத்தாள்;*

உண்ணும் நீரினும் அவனையே உவந்தாள்; அதனால் ஊர் மக்கள் அலர்தூற்றினர். அதை அறிந்தாள் செவிலி; அவளை அருமையாக வளர்த்த அன்புத்தாய் அவள்; இவளை இற்செறித்தாள்; காவல் கொண்டாள்; இவ்வாறாக, ஒருநாள் மன்னன் உலாவருவதாக அறிவிக்கப்பட்டது; அதை அறிந்தாள் இம்மங்கை. தன் வளர்ப்புத் தாயை நோக்கி, 'அம்மே! நம் வீட்டு முற்றத்துக்கு அடுத்த இடத்தில்-பொது இடத்தில்-ஊசல் அமைத்துள்ளனர்; அங்குச் சென்று அதில் ஏறி விளையாட எண்ணுகின்றேன்; போக விடை கொடு' என்றாள். செவிலி, 'என் அன்புக் கனியே! நீ முன்னரேயே மனம் வேறுபட்டிருப்பதாகக் கூறுகின்றனர்; இனி, அம்முற்றத்தில் சென்று மணியூசல் ஆடுதலை மறந்துவிடு; நம் வேந்தன் அவ்வழியாக உலாவருவான்; நீ அவனைக் கண்டு மயங்கி உணர்விழந்து வருந்துவாய்; அது நம் குடிக்குப் பழியைத் தருவதாகும்; அவ்வழியில் செல்லுதல் ஆகாது' என, நயமாகவும் பயந்தோன்றவும் மகளுக்கு ஊசலாடலை விலக்கி அறிவுறுத்துவதாக அமைந்தது, இச் செய்யுள். இதில் செவிலியின் மனப் பண்பும், குழந்தைமீது அவள் கொண்டுள்ள அன்பின் பெற்றியும் தோன்ற நயமாகப் பாடிய ஆசிரியரின் சீரிய புலமை பாராட்டற்குரியது.

அரசர் உலாவருங்கால் முரசுகள் முழங்கும், சங்கொலி தழைக்கும், குறையும் நிறையும் வேண்டிய மன்னரும் பிறரும் வணங்கி நிற்பர், இவைகளை முறையே 'கடுவாய் இரட்ட......... கழல்சூட' என்றார். கழல் - செருப்பு: அதை அணிந்த கால்களுக்கு ஆகுபெயர். வணங்குதலைத் தலையிற் சூடிக்கொள்வதாக இலக்கணை வழக்கால் கூறினார். (௧0)

## தோள் வகுப்பு

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

மறமத கரிதிசை நிறுவின
மணிநகை யவர்மனம் நகுவன
விறல்அர சர்கள்மனம் நெகிழ்வன
விரைமலர் களிமுலை பொருவன
திறல்உடை யனதொடை புகழ்வன
திகழ்ஒளி யனபுகழ் ததைவன
நறுமலர் அணியணி முடியன
நயபர நினதிருப் புயமதே.

(இ - ள்.) நயபர - நன்மை பொருந்திய நந்திவர்ம வேந்தே! நின திரு புயமதே - உன்னுடைய அழகிய தோள்கள், மறம்மதம் கரி திசை நிறுவின - வலிமையோடு மதமுமுடைய திசகு யானைகளை அவ்வத்திசைக்கண் நிலை பெற்று நிற்கச் செய்தன, மணி நகையவா மனம் நகுவன - முத்துப்போன்ற பற்களையுடைய இள நங்கையர் மனத்தை மலரச் செய்வன, விறலரசர்கள மனம் நெகிழ்வன - வெற்றி யுடைய வேந்தர்களின் மனத்தை அஞ்சச் செய்வன, விரை மலர் களிமுலை பொருவன - மணமாலைகளையணிந்த இள நங்கையர் தம் மதர்ப்புள்ள கொங்கைகளோடு எதிர்த்துப் போராடுவன (தழுவுவன), திறல் உடையன - பளபளப்பு வாய்ந்தன, தொடை புகழ்வன - நல்லிசைப் புலவர்களின் பாட்டுக்களால் புகழப்பெறுவன, திகழ் ஒளியன - விளங்கு கின்ற ஒளி பொருந்தியன, புகழ் தகைவன - நல்ல மேலான மொழிகள் கொண்டு யாவராலும் புகழுகின்ற சொற்கள் நெருங்கும் தன்மையன; நறுமலர் அணி அணிமுடியன - மணம்பொருந்திய மணமாலைகளும் பொன்மணிகளால் இயன்ற கண்டிகை முதலிய அணிகளும் அணிந்து உயர்ச்சி பெற்ற மேலிடமும் உள்ளனவாகும.

(வி - ரை) நந்திவர்மன் தோள்கள், வெற்றித் திருவும் வீர மேம்பாடும் பெற்று, எட்டுத் திசைகளும் தன் ஆட்சி மேலோங்கச் செய்வன, இளநங்கையர் மனத்தை மலரச் செய்யும் அழகுடையன, பிற எல்லாவகை மேம்பாடும் பெற்றன என, தோளின் சிறப்பை விளக்கி, அதனால் பாட்டுடைத் தலைவன் ஏற்றத்தையும் அழகையும் விளக்கி விரித்துரைத்தவாறும். புயமது என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி. தோள்வகுப்பு - தோளின் பல சிறப்புக்களையும் வகைப்படுத்திக் கூறுவது. (கக)

தலைவி வாடைக்கு வருந்துதல்

**கலிவிருத்தம்**

புயங்களில் பூவைமார் பொங்கு கொங்கையின்
நயங்கொளத் தகுபுகழ் நந்தி கச்சிசூழ்
கயங்களில் கடிமலர் துழாவிக் காமுகர்
பயங்கொளப் புகுந்தது பருவ வாடையே.

(இ - ள்.) தோழீ! புயங்களில் - தன் தோள்களிடத்து, பூவைமார் - நாகணவாய்ப் புள்ளின் சொல்போன்ற சொற்களையுடைய இளமங்கையர்களின், பொங்கு கொங்கையின் - வளர்கின்ற கொங்கையின் தழுவுதலாகிய, நயம் கொள - நன்மை பெற்று, தருபுகழ் - தருந்த புகழ்ச்சிவாய்ந்த, நந்தி - நந்திவர்ம வேந்தனுக்குரிய, கச்சிசூழ் - காஞ்சிபுரத்தைச் சுற்றியிருக்கின்ற, கயங்களில் - தடாகங்களிடத்துள்ள, கடிமலர் - மணம்பொருந்திய தாமரை அல்லி முதலிய மலர்களை, தழாவி - தடவிக்கொண்டு அவற்றின் மணங்களைக் கவர்ந்து, காமுகர் பயம்கொள - காதல் கொண்ட மகளிர்கள் அஞ்சும்படி, பருவ வாடை புகுந்தது - முன்பனிக்கால வாடைக்காற்று வந்தது. (என் செய்வேன்! இக்காற்று என்னை வருத்துகின்றதே!)

(வி - ரை.) ஒருதலைக் காமங்கொண்ட பெண்டிர்க்கோ ஆடவர்க்கோ தென்றற் காற்றும், வாடைக் காற்றும், வேனிற் பருவமும், குயிற் குரலும், அன்றில் அழைப்பும், பிறவும் துன்பஞ் செய்வனவாம். அவைகளுள், இரவுப்பொழுது கழியக் கழியாது வருந்தும காதல் நெஞ்சினர்க்கு வாடைக் காலம் மிக்க துன்பந் தருவதாம். இத்தலைவிகு வாடைக்காற்று வந்து வந்து வருத்த ஆற்ளுது துன்புறுகின்ருள். அதிலும் தான் காதலித்த காதலனுகிய நந்திவர்மனுக்குரிய காஞ்சிபுர நகரைச் சூழ்ந்திருக்கின்ற தடாகங்களிலுள்ள மலர்களின் மணங்களை இவ்வாடை அள்ளிக் கொண்டு வந்து நுழைகின்றது. அது, மேலும் துன்பத்துக்கு மேல் துன்பந்தருகின்றது. அதனுல் தலைவி தன் தோழியிடங் கூறி ஆற்றி வருந்துவதாக அமைந்தது இப்பாட்டு. (கஉ)

## தலைவி இரங்கல்

### எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

வாடை நோக வீசு மால்அம் மாரன் வாளி தூவுமால்
ஆடல் ஓதம் ஆர்க்கு மால்என் ஆவி காக்க வல்லனே
ஏடு லாவு மாலை சேரி ராசன் மல்லை நந்திதோள்
கூடி ஞல லர்வ ராது கொங்கு விம்மு கோதையே!

(இ - ள்.) கொங்கு விம்மு கோதையே - மணமிக்க கூந்தலையுடைய தோழியே! வாடை நோகவீசும் - வாடைக்

காற்றனது நான் வருந்துமாறு வரும், அம் மாரன் வாளி தூவும்-அழகுள்ள மன்மதன் மலரம்புகளைச் சொரிகின்றான், ஆடல் ஓதம் ஆர்க்கும்-அலைகின்ற கடல் முழக்கஞ் செய்யும், ஆதலால், ஆவி காக்க வல்லனோ - நான் எனது உயிரைப் பாதுகாத்துக்கொள்ளும் வன்மையுடையவளாவேனோ? (இனி என் உயிரையிழப்பதன்றிக் காக்க ஒல்லாது), ஏடு உலாவு - இதழ்கள் மலர்ந்த, மாலை சேர் இராசன் - மலர் மாலையணிந்த மன்னனாகிய, மல்லை நந்திதோள் - மாமல்ல புரத்து நந்திவர்மனுடைய தோள்களை, கூடினால் - புணரப் பெறுவேனானால், அலர் வராது - ஊரரால் பழிதூற்று தலும் ஏற்படாது! (என் உயிரைப் பாதுகாப்பதற்கும் பழிச்சொல் பரவாமல் தடுப்பதற்கும் வழி, நந்திவர்மன் தோள்களைக் கூடுதலன்றி வேறில்லை)

(வி - ரை.) நந்திவர்மனிடம் காதல் கொண்ட நங்கையின் நெஞ்சில் மன்னன் குடிகொண்டுள்ளான்; எந்நேரமும் அவனைக் குறித்த சிந்தனையன்றி அவட்கு வேறில்லை; அதனால் வாடை வருதல் கண்டு மெலிகின்றாள்; மன்மதன் மலரம்புகளை ஏவித் துன்புறுத்துகின்றான்; இவ்விரு நிலையில் உயிர் பிரிந்து செல்வதா இருப்பதா என்று நிலைதடுமாறித் தத்தளிக்கின்றது; இவ்வாறிருந் தும் ஊர்மக்கள் இவளைக் குறித்துப் பழிதூற்றுகின்றனர்; இவைகளை ஒருங்கே தாங்கலாற்றாத தலைவி, தன் தோழியிடம் 'நான் இவ்வாறு துன்புற்று வருந்துதலை நீ அறிவாய்; இதை நீக்க வழி, தலைவனுடைய தோள்களைத் தழுவுதலொன்றேயே அமையும்; நீ அதற்கு விரைவில் வேண்டும் செயல்களைச் செய்து, அவன் தோள்களைத் தழுவி, அதனால் நான் உயிர்வாழச் செய்தல் உன் கடமையாகு'மெனக் குறிப்பினால் உணர்த்துவதாக இப் பாட்டு அமைந்துளது ஆல் மூன்றும் இசை இன்பம் நிறைக்க வந்த அசை நிலைகள். 'ஆவி காக்க வல்லனோ' என்பதில் ஓகாரம் வல்லள் அல்லேன் என்னும் பொருள் தருதலால் எதிர்மறை.

(கரு)

### தலைவன் தன் நெஞ்சொடு கிளத்தல்

**அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்**

கோதை சோரில் சோர்கொங்கை
விம்மில் விம்மு குறுமுறுவற்
சோதி வெளுக்கில் வெளுமருங்குல்
துவளின் நீயும் துவள்கண்டாய்

காது நெடுவேற் படைநந்தி
கண்டன் கச்சி வளநாட்டு
மாதர்[1] இவரோ டுறுகின்றாய்
வாழி மற்றென் மடநெஞ்சே!

(இ - ள்.) என் மட நெஞ்சே - எனது அறியாமையுள்ள மனமே! காது நெடுவேல் படை நந்திகண்டன் - அழித்தலைச்செய்கின்ற நீண்ட வேற்படையையுடைய நந்திகண்டனுக்கு உரிமையான, கச்சிவளநாட்டு மாதர் இவரோடு உறுகின்றாய் - வளம்பொருந்திய கச்சிநாட்டின்கண் வாழ்கின்ற பெண்ணாகிய இவரிடத்திலேயே நீ செல்கின்றாய், கோதை சோரில் சோர் - இவரின் கூந்தல் அவிழ்ந்து தொங்கினால் நீயும் தளர்ச்சியடைதல், கொங்கை விம்மில் விம்மு - இவர் கொங்கைகள் விம்மினால் நீயும் பொருமல் கொள்ளுதல், குறுமுறுவல் சோதி வெளுக்கில் வெளு - இவரின் சிறிய பற்களின் ஒளி வெளிறித் தோன்றினால் அதைக்கண்டு நீயும் நிறம் வேறுபடுதல், மருங்குல் துவளின் நீயுந் துவள் - இவரின் இடை தளர்ச்சியுற்று நின்றால் அதைக்கண்டு நீயும் தளர்ச்சிகொள்ளுதல், கண்டாய்-(ஆகிய இவைகளால் நீ என்ன பயனைக்) கண்டாய்; (நீ எதற்காக இவளையே எண்ணிஎண்ணி ஏங்குகின்றாய்! இவளை மறந்திருத்தலே உனக்கு நலமாகும்!) வாழி-ஆனால் உன் செயல் வாழ்க.

(வி - ரை) மற்று: அசைநிலை. கோதை சோரில் சோர், விம்மு, வெளு, துவள், என்பவை முதனிலைத் தொழிற்பெயர்கள். விம்முதல் வெளுத்தல் துவளுதல் ஆகிய செயல்கள் முறையே கொங்கைகட்கும் பல்வரிசைகட்கும் இடைக்கும் உள்ள செயல்கள். இவ்வழகிய பெண்ணின் உறுப்புக்களாகிய இவைகளைக் கண்டபோது நெஞ்சம் மிக ஏங்குகின்றது; தன் அறிவு திரிந்து அறியாமை (வெண்மை) அடைகின்றது; எச் செயலும் ஆற்ற இயலாது தடுமாற்றம் அடைகின்றது; இவைகளால் என்ன பயன் என்று தன் நெஞ்சொடு, காதல் கொண்ட தலைவன் கூறுகின்றான்.

நெஞ்சம் ஒருபொருளிடத்துப் பற்றுதல்கொள்ளின் அதை விடாது தொடர்ந்துகொண்டேயிருக்கும் இயல்

(பாடம்) 1. இவரோ குறுகின்றாய்.

புடையது. அது, தீமை தரும் செயல்களிலே தொடர்ந்து அலையும் தன்மையது. இதனாலே, இதன் தன்மையைக் 'காடும் கரையும் மனக்குரங்கு கால்விட்டோட' என்றார், தாயுமான அடிகளும். மனத்துக்கும் அறிவுக்கும் போராட்டம் நிகழ்வதுண்டு. அறிவு ஒன்று நடுநின்று, தீயவழியிற் செல்லும் நெஞ்சை இது தகாது என அறிவுறுத்துத் தடுக்கும். நெஞ்சு நான் அவ்வழியில்தான் போவேனென்னும். இறுதியில் இரண்டில் ஒன்று வெற்றிகொள்ளும். அவவாறே, இங்கே கச்சி வளநாட்டுக் காரிகையொருத்தியைக் கட்டழகும், இளமைச் செவ்வியும், எண்ணியது முடிக்கும் இயல்பும் வாய்ந்த இளைஞன் ஒருவன் கண்டான்; காதலால் இருவரும் மனமொத்தனர்; கூடினர்; பிரிந்தனர். ஆயினும், அவளின் கூந்தல், கொங்கை, புன்சிரிப்போடுகூடிய சிறு பற்கள், துவள்கின்ற நுண்ணியஇடை, இவைகளின் அழகுமிக்க தோற்றப்பொலிவுகள் ஒருங்கே, இவன் கண்ணையும் கருத்தையும் நெஞ்சையும் கொள்ளைகொண்டன. அவன் அவளை ஒருகால் கண்டுகூடிய காட்சி பன்னாளும் எந்நேரமும் அலைத்துவருத்திற்று. அதனால் வருந்திய இவ்விளைஞன், மனத்தை அழைத்து,

'நெஞ்சே, நீ என்ன அறியாமையுடையையாய் இருக்கின்றாய், அவள் கூந்தல் சோர்ந்தால் நீயும் சோர்கின்றாய்; அவள் கொங்கை விம்மினால் நீயும் விம்முகின்றாய்; அவள் குறுமுறுவல் சோதி வெளுக்கில் நீயும் வெளுத்துப் போகின்றாய்; அவள் மருங்குல் துவண்டால் நீயும் துவள்கின்றாய்; இம்மங்கையரோ நம்மால் எளிதில் பெறக்கூடியவரா? இவர் எங்கே வாழ்கின்றார் தெரியுமா? கொல்லும் வேற்படை யேந்திய நந்திகண்டன் ஆட்சி கொள்கின்ற கச்சிவள நாட்டிலன்றோ? இந்நாட்டில் காவல் மிகுதி! அவன் முறையோடு நடாத்தும் நிறைபெற்ற நாடன்றோ இஃது! இதிற சென்று இவளைப் பெறுதல் அரிது. இவளை இனியேனும்மற' எனக் கூறி வருந்தினான். அன்றி இரவுக்குறியீட்டில் இடையீடுபட்ட ஒரு தலைவன் தன் நெஞ்சோடு பேசுவதாக அமைந்தது, இவ்வழகிய பாட்டு எனக் கொள்ளலுமாம். (கஃ)

## தோழி கூற்று

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

நெஞ்சாகுல முற்றிங னேமெலிய
நிலவின்கதிர் நீளேரி யாய்விரியத்
துஞ்சாநய னத்தோடு சோருமிவட்
கருளாதொழி கின்றது தொண்டைகொலோ

செஞ்சாலி வயற்படர் காவிரிசூழ்
திருநாடுடை நந்தி சினக்கலியின்
வெஞ்சாயல் மறைத்த தனிக்குடையான்
விடைமண்பொறி ஓலை விடேல்விடுகே.

(இ - ள்.) *செம்சாலி - செந்நெற் பயிர்கள், வயல் படர் - கழனிகளில் விரிந்து வளர்தற்குக் காரணமான, காவிரிசூழ் - காவிரியாற்றின் நீர்வளம பொருந்திய, திரு நாடு உடை நந்தி - செல்வமிக்க சோழநாடுடைய நந்தி மன்னு! சினக்கலியின் - வருத்துகின்ற வறுமையின், வெம் சாயல மறைத்த - கொடிய தன்மையை ஒழித்த, தனிக் குடையான் - ஒப்பற்ற வெண்கொற்றக் குடையை உடைய வனே! ஓலை விடை மண்பொறி - தன் திருமுகக் கடிதத்தில் எருதின் உருவ இலச்சினையைக் குறிக்கின்ற, விடேல் விடுகே - விடேல் விடுகென்னும பட்டம் பெற்றோனே! (என்று உன் திருப்பெயர்களைக் கூறிக்கொண்டு), நெஞ்சு ஆகுலம உற்று - தன் நெஞ்சத்து வருத்தங்கொண்டு, இ(ங்)ஙன் மெலிய - இவ்வாறு வாட்டங்கொள்ளவும், நில வின் கதிர் - நிலவினது ஒளியானது, நீள் எரிஆய் விரிய - பெருநெருப்புப்போல் சுட்டு வருத்திப் பெருக, துஞ்சா நயனத்தொடு சோரும் இவட்கு - (அல்லும் பகலும்) தூங்காத கண்ணோடு மெலிகின்ற என் தோழியாகிய இவளுக்கு, தொண்டைகொலோ அருளாது ஒழிகின்றது- நீ அணிந்துள்ள தொண்டை மாலையைத்தானோ நீ கொடுத் தருளாதிருப்பது? (நீ வேண்டிய வேண்டியாங்கு விரும்பி யோர்க்குப் பொன்னும் மணியும் பிறவும் வரையாது கொடுக்கின்றவன்—உனக்கு இத தொண்டைமாலையைக் கொடுப்பது இயலாததா? எனவே, இவட்கு இம்மாலையைக் கொடுத்துக் காத்தருள்க என்றபடி.)*

(வி - ரை.) *செஞ்சாலி வயற்படர் என்றமையான், நாட்டு மருதவளனும், திருநாடு என்றமையான் நகரின் செல்வவளனும் காட்டியவாறும் காவிரி, அதன் நீருக்காதலால் ஆகுபெயர். விடை - எருதின் உருவம். மண்பொறி - இலசசினை: முத்திரை. மண்வைத்து ஓலையில் முத்திரையிடுவது. அரசர்கள் முத்திரை*

யிடும் இலச்சினையில், ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு குறிகள் அமைந்திருக்கும். தம் கொடியுருவை முத்திரையாக இடுவதும் உண்டு. முத்திரை இக்காலத்து ஆங்கிலத்தில் 'சீல்' என வழங்கப்படுகின்றது. ஓலை - கடிதம். அக்காலத்துப் பனை யோலையே திருமுகம் எழுதுவதற்கு எங்கும் உள்ளனவாதலால் இங்கே ஓலையென்று குறிக்கப்பட்டது.

நந்தி மன்னன்மேல் நங்கை ஒருத்தி காதல் கொண்டாள். அவள் அவன்றன் சிறப்பையெல்லாம் நினைந்து நினைந்து கூறிக் கூறி மெலிந்தாள்; பாலும் உண்ணாள்; துயிலும் மறந்தாள். இதை யறிந்து வருந்திக்கொண்டிருந்த தோழி, ஒருநாள் நந்திமன்னன் உலா வந்தபோது தன் தோழியின் நிலையை யெடுத்துக்கூறி, 'மன்ன! இவள் உன்னையே நினைந்து துன்புறுகின்றாள்; அதனால் இரவில் நிலவின் ஒளி இவளை வருத்துகின்றது; அது, இவள் உடலை நெருப்பெனச் சுட்டெரிக்கின்றது; இவள் கண்கள் இரவில் துயிலுகின்றனவில்லை. உன் திருப்பெயர்களைக் கூறிக் கூறி வருந்துவதே இவளுக்கு இயற்கையாயிற்று; நீ இரவலர்கட்கும், புரவலர்கட்கும், அடிபணி அரசர் முதலியவர்கட்கும் வரையாது கேட்டபடி பொன்னும் பொருளும், நாடும் ஊரும், தண்ணடை யும் கொடுத்து உதவுகின்றவன்; பிறருக்கு ஈந்து உவப்பதையே இன்பமாகக் கொண்டவன்; அரிய பொருள்களையெல்லாம் அதன் பெருமை கருதாது ஈந்து மகிழும் இயற்கைப் பண்பினன்; இத்தகைய பெருமை படைத்த நீ, எளிதில் கொடுக்கத்தக்கதாக வுள்ள இத் தொண்டைமாலையைக் கொடுத்தல் எவ்வளவு சிறந்தது! அம்மாலையைக் கொடுத்து இவளுயிரைக்காத் தருள்வா யாக' என, நந்திமன்னன் உலாப்போந்தகாலை அவனை நோக்கித் தோழி வேண்டுதல் விடுக்கின்றாள். 'மாலை தருக' என்ற குறிப்பு, 'இவளை மாலைசூட்டி மணந்துகொள்க' என்று கேட்டுக் கொண்டபடியாம். 'விடேல் விடுகு' என்பது, மன்னன் பட்டப் பெயர்களில் ஒன்று. (௧௫)

## படைவீரன் தன் மன்னன்மாண்பை எடுத்துரைத்தல்

### கட்டளைக் கலித்துறை

விடுதிர்கோல் லோவள நாடுடை
வீரர சற்கு முன்னின்று
இடுதிர்கோல் லோபண் டிறுக்குந்
திறையெரி கானத்தும்மை

அடுதிர்கோல் லோதிறல் நந்திஎம்
கோனயி ராவதத்தில்
படுதிர்கோல் லோபடை மன்னீரேன்
ஞுழுங்கள் பாவனையே.

(இ - ள்.) படைமன்னீர் - படைகளையுடைய பகை வேந்தர்களே! விடுதிர்கொல்லோ - நீவிர் பகைமையை விட்டுவிடுவீர்களா, வளநாடு உடை - செல்வமிக்க நாட்டினையுடைய, வீர அரசற்கு முன்நின்று - (அன்றிப்) பெருமிதம் பொருந்திய எம் நந்தி மன்னனுக்கு முன்பாக வணங்கி நின்று, பண்டு இறுக்கும் திறை - பழங்கடனாக நீங்கள் செலுத்தும் இறைப்பொருளை, இடுதிர்கொல்லோ - செலுத்துவீர்களா, எரிகானத்து உம்மை அடுதிர் கொல்லோ (அன்றி) வெப்பமுள்ள பாலைநிலத்திற் சென்று உம்மை நீரே தற்கொலை செய்துகொள்வீர்களோ, திறல் நந்தி எம்கோன் - (அன்றி) வலிமைமிக்க நந்தியாகிய எம் வேந்தனுடைய, அயிராவதத்தில் படுதிர் கொல்லோ - ஐராவத யானையையொத்த ஆண் யானையினால் கொல்லப்பட்டு இறப்பீர்களோ, உங்கள் பாவனை என் - உங்களின் உள்ளக் கருத்து என்ன? கூறுங்கள்.

(வி - ரை.) நந்திமன்னனுக்கும் அவன் பகை வேந்தர்களுக்கும் போர் மூண்டது; நந்திமன்னனின் படைவீரன் எதிரிப் படைகள் புறமுதுகிட்டோடப் போர்புரிந்தான்; யானை குதிரை தேர் போர்வீரர் ஆகிய நால்வகைப் படைகளும் நாலுபக்கங்களிலும் சிதறியோடின. பகைமன்னர்கள் யாவரும் சோர்ந்த நிலையினராய்க் களைத்துக் கவலையும், அச்சமும் கொண்டு வருந்தி நின்றனர். அதைக்கண்ட போர்வீரனுக்கு இரக்கவுணர்வு தோன்றிற்று. 'இப் பகைவேந்தர்களை இம் மெலிந்தகாலைக் கொல்வதாயின் எமக்கு மிக எளிது; அவ்வாறு இவர்களைக் கொல்வது வீரமுமாகாது; போரின் அறமுமன்று' என்று கருதினான். அக் கருத்தினால் "பகைவேந்தர்களே! நீங்கள் யாவரும் இனி என்ன செய்யப்போகின்றீர்கள்? நும படைகள் யாவும் சிதறுண்டு பல பக்கங்களிலும் சென்றுவிட்டன; நீவிர் இப் போரை விட்டுவிட்டுப் பணிந்து நுங்கள் பழங்கடனை கப்பப் பொருள்களைச் செலுத்துவீர்களா? அன்றி மானமேலிட, 'இனி எப்படிப் பணிவது?' என்று கருதி நீங்களே இப் பாலைப்

பெருவனத்தில் ஓடி ஒளித்துத் தற்கொலையாக அன்றி நீரும் நிழலும் கிட்டாமல் இறந்துபோக எண்ணுவீர்களா? அன்றி எம் நந்தமன்னனுடைய ஐராவதம் போன்ற யானைகள் அணியணியாக வரிசையுடன் நிற்கின்றன. அவைகளால் அடிக்கப்பட்டும், குத்தப்பட்டும், காலால் மிதிக்கப்பட்டும் இறந்துபோகக் கருதுவீர்களா? இங்குக் கூறிய வழிகளன்றி வேறு நீங்கள் உய்யும் வழி இல்லை; உங்களால் வெல்லுதலும் இயலாது; இவைகளில் ஒன்றை நீங்கள் கருதிப் பார்த்து நீவிர் உய்ந்து போகும் வழியைக் காணுங்கள். வீணுக மடியாதீர்,' என்று பேராண்மையும் ஊராண்மையுங் கொண்ட, படைவீரன் பகைமன்னர்கட்கு அறிவுறுத்துகின்றான். இக் கருத்தோடொப்ப,

> [1]" என்ஐமுன் நில்லன்மின் தெவ்விர் பலர்என்ஐ
> முன்நின்று கல்நின் றவர் "

என்னும் வள்ளுவர் பெருமான் வாய்மொழியும், அவரே,

> [2]" பேராண்மை யென்ப தறுகண்ஒன் றுற்றக்கால்
> ஊராண்மை மற்றதன் எஃகு "

என்று கூறிய வீரரின் இலக்கணத்துக்கு இலக்காக இவ்வீரனின் வீரமேம்பாடும் விளங்கித் தோன்றுதல் காண்க.

அன்றி, இலங்கை வேந்தற்கும், கோசல நாட்டு எந்தலுக்கும் நிகழ்ந்த கன்னிப்போரில், படைத்துணையும், நடைத்துணையும் இழந்து தன்னந் தனியனாக இலங்கைக்கிறை நின்றபோது, அயோத்திக்கரசு அரக்கர் தலைவனை நோக்கி,

> [3]" ஆளை யாஉனக் கமைந்தன மாருதம் அறைந்த
> பூளை ஆயின கண்டனை இன்றுபோய்ப் போர்க்கு
> நாளை வாஎன "

நவின்று, அவன் உயிரை நல்கிய சிறப்பும் இக்கருத்தோ டொப்ப வைத்து மகிழற்பாலது.

கொல், ஓ என்பன, நான் கிடத்தும் ஐயப்பொருளினும் வினப்பொருளினும் வந்தன. பாவனை - கருத்து; எண்ணம். ஐராவதம் போன்ற யானைகளை ஐராவதம் என்றது, உவமை ஆகு பெயர். விடுதிர் படுதிர் என்பன. முன்னிலைப் பன்மை வினைமுற்று. மன்னீர்: முன்னிலை விளி. ஏகாரம்: ஈற்றசை. (௧௬)

---

1, 2. திருக்குறள்: எஎக, எஎ௩.
3. கம்பரா, உயுத்த, முதற்போர்: உ௫௬.

## தோழி, கார் வரவுகண்டு தலைவியை ஆற்றுவித்தல்

### வஞ்சி விருத்தம்

வனைவார்குழல் வேணியும் வாடைகணீர்
நனைவார்துகி லும்இவை நாளும்இரா
வினைவார்கழல் நந்திவி டேல்விடுகின்
கனையார்முர சோத்தது கார்அதிர்வே.

**(இ - ள்.)** (தோழி!) கார் அதிர்வு - மேகங்களின் முழக்கமானது, வினைவார் கழல் - தொழில் முற்றிய நீண்ட வீரக் கழலணிந்த, நந்தி விடேல் விடுகின் - நந்தி மன்னனாகிய விடேல் விடுகென்னும் பட்டத்தையுடையானுடைய, ஆர்கனை முரசு ஒத்தது - பேரொலியையுடைய முரசின் முழக்கம்போல் முழங்குகின்றது, (ஆதலால்) வனைவார் குழல் வேணியும் - அழகுபடுத்தப் பெறுகின்ற நீண்ட கூந்தலின் சடைத்திரளும், வாடை - உடலின் மெலிவும், கண்நீர் நனை - அழுது அழுது கண்ணின் நீரினால் ஈரம் படிந்துள்ள, வார் துகிலும் - நீண்ட மேலாடையும் ஆகிய, இவை - இவ் வேறுபாடுகள், நாளும் இரா - இனி எந்நாளும் இராதொழியும. (இனி வருந்தாதே; நம் தலைவர் விரைவில் வந்துவிடுவர் என்றபடி.)

**(வி-ரை.)** தலைவன் வேந்தற்குற்றுழிப் பிரிவாக நந்திமன்னனுக்குத் துணையாகப் படைவீரனாகச் சென்றான்; செல்லுங்கால் கார்காலத்தில் மீண்டு வருவதாகச சொல்லிச் சென்றான்; அவன் குறித்த காலஎல்லை கழிந்தது; கார்ப்பருவமும் வந்தது. கார்கள் நீர்மொண்டு கொணர்ந்து, நந்திமன்னன் வெற்றி முரசம் போல் இடி இடித்து முழங்கி மழைபொழிந்தன. தலைவி கண்டாள், தாம குறித்தகாலம் வந்தும் இன்னும் நம் தலைவர் வந்தாரில்லையே யென்று கருதி வருந்தினாள்; இவ்வருத்த மேலீட்டினால் தலைவாரிக் கூந்தலைப் பின்னலிட்டாளில்லை; பூ முடித்தாளில்லை; அதனால் கூந்தல் சிக்குற்றுச் சடையாகத் திரண்டது; உடல் வாடிற்று; இடையறாது அழுதுகொண்டேயிருப்பதால் கண்ணீர் வடிந்து மேலாடையை நனைத்தது; இதனை நாள்தோறும் கண்டுவரும் அவள் தோழி, தலைவியை நோக்கி, 'நங்காய்! நீ என்ன அறியாள்போல வருந்துகின்றாய்; அவர் குறித்துச் சென்றகாலம் வந்துவிட்டது; கார்கள் வானிட

மெங்கும் பரவி நிற்கின்றன; நம் நந்தி மன்னனின் வெற்றிப் பேரிகையென அவை முழக்கஞ் செய்கின்றன; இதோ வருதற்கான நன்னிமித்தங்கள் தோன்றுகின்றன; அவர் விரைவில் வந்துறுவார்; இனித் தங்கார்; இனி உன், கூந்தற் சடையும், உன் உடல் மெலிவும், கண்ணீர்ப் பெருக்கும், அதனால் ஆடையின் ஈரமும் ஒரு நொடிப் பொழுதளவுகூட நில்லா,' என, அவள் உறுப்புக்கள் முதலியவற்றில் வைத்துத் தலைவியின் வருத்தத்தை மாற்றித் தோழி தேற்றுகின்றாள். எனவே, இது முல்லைத் திணையில் தலைவியைத் தேற்றுந்துறையாக அமைந்த பாடலாகும்.

தலைவி கூந்தலை ஒப்பனைசெய்யாது உடல்மெலிந்து கண்ணீர்பெருகி ஆடைநனைந்து ஓவியம் புகையுண்டதென இருந்த தன்மையைத் தோழி, 'நீ இனிக் கூந்தலைச் சடை நீக்கி மணமூட்டிப் பூ முடிப்பாய்; உடல் பூரிப்பாய்; மகிழ்வாய்; புத்தாடை புனைவாய்,' என்று கூறுது, அவ்வவ் வுறுப்புக்களிலும் புனை பொருள்களிலும் ஏற்றிக் கூறிய தோழியின் அறிவுத்திறம் மகிழ்ந்தின்புறற்பாலது.

வாடை, வாடு + ஐ-வாடுதல் என்னும் தொழிற்பெயர். வாடைக் காற்றன்று. கொடை, தொடை, விடை போன்ற ஐகார விகுதிபெற்ற தொழிற்பெயராகக் கொள்க. இரா - இருக்கமாட்டா. எதிர்மறைப் பன்மைக் குறிப்புவினைமுற்று. 'வனைவார்......இவை,' என்னும் துணையும் வரும் பெயர்கள் இரா என்னும் பயனிலை கொண்டன. (௧௭)

### யானைமறம்: கண்டோர்கூற்று

#### தரவு கொச்சகக் கலிப்பா

அதிர்குரல மணிநெடுந்தேர்
　　அவனிநா ரணன்களிற்றின்
கதிரொளிய வெண்மருப்புக்
　　கனவயிரம் செறிந்ததால்
மதுரைகொலோ அடுபுலிக்கோன்
　　நகரிகொலோ மாளிகைசாய்ந்து
எதிரெதிரே கெடநின்ற
　　தெவ்வூர்கொல் அறியோமால்.

(இ - ள்.) அதிர் குரல மணி நெடுந்தேர் - பேரொலி யையுடைய மணிகள் பூண்ட நெடிய தேர்களையுடைய, அவனி நாரணன் களிற்றின் - மண்ணுலகத் திருமாலான நந்திமன்னனுடைய ஆண் யானைகளின், வெண் மருப்பு - வெண்ணிறமுள்ள கொம்புகளிடத்து, கதிர் ஒளிய - மிக்க ஒளிபொருந்திய, கனவயிரம் செறிந்தது - சிறந்த வயிர மழுத்திய பொற்பூண்கள் அணியப் பெற்றுள்ளன, மதுரை கொலோ - (பாண்டிவேந்தர்க் குரிமையான) மதுரைமா நகரமோ, அடுபுலிக்கோன் நகரிகொலோ - கொல்லுகின்ற புலி உருவக் கொடியையுடைய சோழமன்னனுக்கு உரிமையான உறையூர் நகரமோ, மாளிகை எதிர் எதிர் சாய்ந்து - இவ் யானைகளின் கொம்புகளால் முட்டித் தகர்த்து அரண்மனை முதலிய நகரின் மாளிகைகள் யாவும ஒவ்வொன்றுக்கும் நேர்நேராக இடிந்துவிழுந்து, கெட நின்றது-அழிவதற்குரியதாக இருப்பது, எவ் ஊா கொல் - இவைகளுள் எந்த நகரமோ, அறியோம் - (நந்திமன்னன் எவ்வூரின்மேல் படையெடுத்துச் செல்கின்றானோ? யாம் யாதும்) அறியாதவர்களானோம். (அரசன் நோக்கம் எவ் வாறோ என்றபடி.)

(வி - ரை.) நந்திவேந்தனின் யானைகள் யாவும் ஆடைக ளாலும், அணிகளாலும் அழகுபடுத்தப் பெற்றன ; அவைகளின் கொம்புகளுக்குப் பொன்னாற் செய்து வயிரமிழைத்த பூண் (கிம்புரி) அணிந்திருந்தன ; இதனை ஊர்ப் பொதுமக்கள் கண்டனர். அவர்கள், 'நம் வேந்தன் யானைகள் காரணமில் லாமல் அணிசெய்யப் பெறுவதில்லை ; அன்றியும் எல்லா யானை கட்கும் கொம்புகளில் பூண் கட்டப் பெற்றுள்ளது; ஆகவே, மன்னன் எந்த நாட்டின்மீதோ போருக்கு ஆயத்தஞ் செய் துள்ளான் ; ஒருகால் பாண்டி மன்னன் நகராகிய மதுரைமீது போர்தொடுப்பானோ ? அன்றிப் புலிக்கொடி பொறித்த சோழ மன்னனின் நகராகிய உறையூர்மீது போர்தொடுப்பானோ ? இனி எந்த நகரின் கோட்டைகள் மாடமாளிகைகள் ஒன்றன்பின் ஒன்றாக எதிரெதிரே யானைகளின் கொம்புகளால் தகர்க்கப் பெற்று இடிந்து பாழாகப் போவனவோ ?' என்று தம் வேந் தனின் போரென்னப் புகலும் சிறப்பையும், அவன்றன் யானைப் படைகளின் மாண்பையும் ஊர்மக்கள் கூடிப் பேசுகின்றார்கள். அம்முறையில் அமைந்தது இப்பாடல். இதனைக்,

"[1] கொழும்பதிய குடிதேம்பிச்
செழுங்கேளிர் நிழல்சேர
நெடுநகர் வீழ்ந்த கரிகுதிர்ப் பள்ளிக்
குடுமிக் கூகை குராலொடு முரலக்
கழுநீர் பொலிந்த கண்ணகன் பொய்கைக்
களிறுமாய் செருந்தியொடு கண்பமன் றூர்தர
நல்லேர் நடந்த நசைசால் விளைவயல்
பன்மயிர்ப் பிணவொடு கேழல் உகள
வாழா மையின் வழிதவக் கெட்டுப்
பாழா யினநின் பகைவர் தேஎம்.'

எனவரும் மதுரைக் காஞ்சியானும் அறிக.

கொல்லும் ஓவும் ஐயமும் வினவும் வியப்பும் தரும் பொருள்களில் வந்தன. கெடாநின்றது - கெடாநிற்பது என்னும் பொருளது. தெளிவுபற்றி எதிர்காலம் இறந்தகாலமாகவந்த காலவழுவமைதி. அறியோம்: தன்மைப்பன்மை இறந்தகால வினைமுற்று ஆல்: அசைநிலை. அவனி நாரணன் என்பது, நந்திமன்னனுக்குரிய பட்டப்பெயர்களில் ஒன்று. களிறு, மருப்பு என்பன, சாதியொருமைகள். யானைகளின் கொம்புகட்குப் பூண் கட்டுவது, எதிரிநாட்டின் மாடமாளிகைகளைக் கோட்டை முதலியவைகளைக் கொம்பால் குத்திந் தகர்க்குங்கால் கொம்புகள் ஒடிந்துபோகாவாறு மேலும் வலிமை மிகுதற்கும், அழகிற்குமெனக் கொள்க. நாம் குறுந்தடிகட்குப் பூண் கட்டுவது, அவை ஒடிந்துபோகாமலிருத்தற்கே என்பது தெளிந்ததன்றே? அதுபோன்றே யானைகளின் கொம்புகட்கும் பூண கட்டப்பெற்றமை தெளிக. யானைகளின் மறத்தைக் கூறுங்கால், முத்தொள்ளாயிரத்தும்,

"[2] கொடிமதில்பாய்ந் திற்ற கோடும் அரசர்
முடியிடறித் தேய்ந்த நகமும்—பிடிமுன்பு
பொல்லாமை நாணிப் புறங்கடை நின்றதே
கல்லார்தோட் கிள்ளி களிறு.'

என்பது காண்க. இதில் கொடிமதில்களைப் பாய்ந்தமையால் யானைகளின் கொம்புகள் முறிவும், கீழே சாய்ந்து கிடக்கும் அரசர் முடிகள் இடறினமையால் அவைகளின் நகங்கள் தேய்வும் கூறப்பட்டன. (கஅ)

1. மதுரைக் காஞ்சி, கரு௭-க௭௬.
2. முத்தொள்ளாயிரம் : ௭௨

## நந்திமன்னன் திருவடிச்சிறப்பு

### நேரிசை வெண்பா

ஓம மறைவாணர் ஒண்போற் கழல்வேந்தர்
தாம முடிக்கணிந்த தாளிப்புல்—கோமறுகில்
பாவடிக்கீழ்ப் பல்யானைப் பல்லவர்கோன் நந்திதன்
சேவடிக்கீழ்க் காணலாம் சென்று.

(இ - ள்.) கோமறுகில் - அரச வீதிகளில், கீழ் பாவு அடி - தரைமேல் பரந்துபடுகின்ற கால்களையுடைய, பல் யானை பல்லவர்கோன் - அளவற்ற யானைகளையுடைய பல்லவர் குலத்தலைவனாகிய, நந்திதன் - நந்திப் போத்தரையனின், சே அடி கீழ் - சிவந்த திருவடிகளின் கீழிடத்தே, ஓம மறைவாணர் - வேள்விசெய்கின்ற வேதமுணர்ந்த அந்தணர்களும், ஒண்பொன் கழல் வேந்தர் - ஒளிபொருந்திய பொன்னாலான வீரக்கழலணிந்த அரசர்களும், தாம முடிக்கு அணிந்த தாளிப்புல் - மாலையையுடைய தம் முடிக்குச் சூட்டிய தாளியாகிய அறுகம்புல்லை, சென்று காணல் ஆம் - நாம் போய்ப் பார்க்கலாம்.

(வி - ரை.) நந்திமன்னன்பால் குறையிரந்தும் முறை வேண்டியும் வருகின்ற அந்தணர்களும் அரசர்களும் அவன் திருவடிகளில் பணிந்து தம் குறை சொன்னாராக, அவர் பணியுங்கால் அவர்தம் தலைகளில் சூடிய தாளிப்புல்லாகிய அறுகம்புல், உதிர்ந்து பரந்து கிடக்கின்றன. அதனால் அவன் காலடிகளில் குறை வேண்டுவோர் தம் முடிசூடிய எவ்வகை மலர்களும் உதிர்ந்து கிடப்பன, அவன் கால்களுக்கு மலரிட்டு வழிபாடு செய்ததுபோல் தோன்றும். அக் காட்சியை ஒருநாளல்ல, இருநாளல்ல, பல நாட்களும் சென்று காணலாம் என, மன்னன் உயரியதன்மையும் செங்கோல் மாண்பும் ஏழைமுதல் செல்வர்வரை அவன்பால் குறையிரந்து வணங்கி நிற்கும் ஏற்றமும் கூறியபடியாம்.

ஓம மறைவாணர் - வேள்வி செய்கின்ற அந்தணர்கள். கழல் வேந்தர் - வீரக்கழலணிந்த மன்னர். எனவே, அந்தணரும் அரசரும் பணியும் மாண்பு கூறியதாம்.

தாளிப்புல் - அறுகம்புல். அறுகு சிறந்த தென்பதை விநாயக புராணத்துக் காண்க. அறுகும் அரிசியும் கூட்டி

அட்சதையாக - மங்கலப் பொருளாக - மண இல்லங்களில் கொள்ளப்பெறுதலை இன்றுங்காணலாம்.

[1]"அறுகு வெள்ளரிசி கூட்டி அணிவது அக்கதம் என்றாகும்" எனவரும் சூடாமணி நிகண்டாலும் அறியப்பெறும். அன்றியும், இறைவன் திருமுடியில் அணிந்துள்ளதாகத்,

[2]"தாளி அறுகின் தாராய் போற்றி"

எனவரும் பட்டினத்தடிகளின் திருமொழியும் அறிக.

[3]"அந்தணர்கள் உள்ளார்கள் ஆசிசொல்லி யேகொடுத்த
கந்தமலர்த் தாளிக் கறுகம்புல்"

எனவரும் பெருந்தேவனார் பாரத வெண்பா ௧௬௧-ஆம் பாடலாலும் உணர்க. இத் தாளி, ஒருவகைப் புல்லெனக் கொள்ளலுமாம். இப்பாடலின் கருத்தோடொப்ப,

[4]"செங்கண் நெடியோன்பால் தேர்விசயன் ஏற்றியபூப்
பைங்கண்வெள் ளேற்றான்பால் கண்டற்றால் —எங்கும்
முடிமன்னர் சூடியபூ மொய்ம்மலர்த்தார் மாறன்
அடிமிசையே காணப் படும்"

எனவரும் முத்தொள்ளாயிரச் செய்யுளில் வருவது கண்டு மகிழ்க. (௧௧)

யானைமறம்: கண்டோர் கூற்று

கட்டளைக் கலித்துறை

சென்றஞ்சி மேற்செங்கண் வேழம் சிவப்பச் சிலர்திகைப்ப
அன்றும் சினத்தார் இனமறுத் தார்போலும் அஃதஃதே
குன்றஞ்செய் தோள்நந்தி நாட்டம் குறிதருக் கோட்டையின்மேல்
சென்றஞ்சப் பட்டதெல் லாம்படும் மாற்றலர் திண்பதியே.

(இ - ள்.) செங்கண் வேழம் - சிவந்த கண்களையுடைய போர் யானைகள், மாற்றலர் திண்பதி மேல்சென்று - பகை வேந்தர்கள் நிலைத்த நகரில்போய், சிவப்ப - சினந்துதாக்க, சிலர் அஞ்சி திகைப்ப - சில மக்களும் அரசர்களும் அச்சங்

1. சூடாமணி நிகண்டு. 2. பட்டினத்தார் பிரபந்தம்.
3. பெருந்தேவனார் பாரதம். 4. முத்தொள்ளாயிரம்: ௯.

கொண்டு மயக்கமடைய, அன்றும் சினத்தார் - கேட்டுக் குரிய சினத்திற்காளான பகைமன்னர்கள் தாமே இறந் தொழிதலுமல்லாமல், இனம் அறுத்தார் - தம் சுற்றத் தாரும் ஒருங்கே கெட்டொழியும் செயலுக்கு ஆளானார், அஃது அஃது - ஒவ்வொன்றும், குன்றம்செய் - மலையைத் தனித்தனியாக ஒத்திருக்கின்ற, தோள் நந்திநாட்டம் குறி- தோள்களையுடைய நந்திப் போத்தரையனது குறிக்கோ ளானது, குருக்கோட்டையின்மேல் சென்று - குருக் கோட்டை யென்னும் நகரிடத்தில் போய், அஞ்சப்பட்டது எல்லாம் படும் - அந்நகரில் வாழ்ந்தோர் அஞ்சியொடுங்கி அடிபணிந்து நிற்கும்படி செய்த செயல்கள் யாவும், இனி இதற்கும் ஆகும். (இனிப் பகைமன்னர்கள் யாது செய் வரோ? என்றபடி.)

(வி - ரை.) 'செங்கண் வேழம் மாற்றலர் திண்பதிமேல் சென்று, சிவப்ப, சிலர் அஞ்சித் திகைப்ப, அன்றும் சினத்தார், இனம் அறுத்தார்; அஃது அஃது குன்றம் செய் தோள்நந்தி நாட்டம் குறி, குருக்கோட்டையின்மேல் சென்று அஞ்சப்பட்ட தெல்லாம்படும்' என்று சொற்களைக்கொண்டு கூட்டி வினைமுடிபு செய்க. இச்செய்யுள் கொண்டு கூட்டுப் பொருள்கோள்.

நந்திமன்னன் ஒருகால் குருக்கோட்டைமீது போர் தொடுத் தான்; வென்றான்; அதற்குரிய மன்னனைத் தனக்குக் கீழ்ப் படியப் பணியவைத்தான். இன்றும் போர்யானைகள் பல வேந்தர்களின் நகரில் சென்று தாக்க முற்பட்டன; அதைக் கண்டு ஊர்மக்களும், அந்நகர் மன்னனும் அஞ்சி வெருண் டோடினர். 'இனி என்ன ஆகப் போகின்றது! அழிவதுதான் உறுதி; இப் பகைமன்னர்கள் நம் வேந்தன் கட்டளைக்குக் கீழ்ப்படிதல் கூடாதா? இம் மன்னர்களால் நம் வேந்தை எவ்வாறு வெல்லுதல் கூடும். இனி இம்மன்னர் தம் உயிரிழந்து போதல் உறுதி; இம்மன்னர்கள் தாம் இறந்துபோவ தன்றித் தம் சுற்றமும் துணைவரும் பிறரும் மாண்டொழிதற் கன்றோ வழிதேடிக் கொண்டனர். இனியென்ன குருக்கோட் டையில் முன்பு நிகழ்ந்த கொடுஞ்செயல்கள் யாவும் தவறாமல் இந் நகர்களிலும் நடக்கப் போகின்றன' என்று நகரமக்கள் தமக்குள் பேசிக்கொள்கின்றனர்.

போலும்: ஒப்பில் போலி. செங்கண்: சிவந்த கண், ஈண்டு யானைகட்கு இயற்கைச் சிவப்போடு, சினத்தால் மிகச் சிவந்த

கண்களெனக் கொள்க. [1]"செருமுகத் தழலுமிழ் செங்கண் யானையும்' என்றார் பிறரும்.

அஃது அஃது என்னும் சுட்டுக்கள் இரண்டும், நந்திமன்னனின் இரு தோள்களைக் குறித்து நின்றன, மேல் குன்றஞ்செய் என வருதலான். குன்றம் - சிறுமலை. செய், ஈண்டு உவம உருபாக நின்றது. மலையையொத்த தோள்கள் என்பது பொருள். நாட்டம் குறி: ஒருபொருட் பன்மொழி. அஞ்சப்பட்டது - அஞ்சிய நிலை. (உ0)

### நந்திமன்னன் வீரம்

#### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

பதிதொறு புயல்பொழி தருமணி
　　பணைதரு பருமணி பகராநெல்
கதிர்தொகு வருபுனல் கரைபொரு
　　திழிதரு காவிரி வளநாடா!
நிதிதரு கவிகையும் நிலமகள்
　　உரிமையும் இவைஇவை உடைநந்தி!
மதியிலி அரசர்நின் மலரடி
　　பணிகிலர் வானகம் ஆள்வாரே.

(இ - ள்.) நெல் கதிர் தொகு - வயல்களில் விளைந்து கிடக்கின்ற நெற்கதிர்கள் மறையும்படி, வருபுனல் - திரண்டு பெருகிவருகின்ற நீரானது, கரைபொருது - ஏரிகளின் கரைகளைமோதி, இழிதரு - கீழிறங்கி ஓடுகின்ற, காவிரி வளநாடா - காவிரியாற்றின் நீர்வளமிக்க நாட்டுக்குரியோனே! புயல் பொழிதருமணி-மேகங்களால் பொழிந்த முத்துக்களும், பணைதரு பருமணி - மூங்கில்களில் உண்டாகிய பெரிய முத்துக்களும், பதிதொறு பகரா - ஊர்கள்தோறும் விலைக்குவிற்று, நிதிதரு - செல்வம் பெருக்குகின்றதும், இவை இவை - இத்தன்மைய இத்தன்மையவான பல செல்வங்களையும், கவிகையும் நிலமகள் உரிமையும் உடைநந்தி - வெண்கொற்றக் குடையையும்

1. நைடதம், நகர்நீங்குபடலம்: கஈ.

பெருநில முழுதும் ஆளுகின்ற ஆட்சியுரிமையும் பெற்ற நந்தி மன்னு! மதிஇலி அரசர்கள் - நல்லறிவு இல்லாத தன்மையையுடைய மாற்றரசர்கள், நின் மலர் அடி பணிகிலர் - உன்னுடைய செந்தாமரைமலர் போன்ற திருவடிகளைப் பணியாதவராய், வான் அகம் ஆள்வார் - வீணே இவ்வுலகவாழ்வைவிட்டு வானுலகத்தை ஆட்சி கொள்பவரானார். (நின்னோடு பகைத்த மன்னர்கள் இறந்துபடுவர் என்றபடி)

**(வி - ரை.)** நந்திமன்னன், நாடுபடு பொருளும் நகர்படு பொருளும் பெற்ற பெருஞ் செல்வன்; அஃதன்றி வெண்கொற்றக்குடையும், பல நாடுகளும் தனக்கே உரிமையாகக் கொண்டு பேரரசனாக ஆளும் பேறுபெற்றவன்; அவனுக்கு எய்யென எழுகின்ற பகைவர் எட்டுத்திக்குகளிலும் இல்லை; அல்லாமலும் இவனுக்கு வேறுநாடுகளைக் கைப்பற்றி ஆள வேண்டுமென்னும் பேரவாவும் இல்லை; அவ்வாறிருந்தும் இவன் கட்டளைக் கிணங்கித் தமக்கு மதியில்லாமையால் பணியாத வேந்தர்கள் உள்ளனர். அவர்கள் பணிவின்மை கண்டு, சினந்து அவர்களை வென்று, தன் வெற்றிமேம்பாட்டையும் தன்னிகரில்லாத் தனிவீரத்தையும் நிலைநாட்டியுள்ளான். இதனை, 'மதியிலி அரசர்.........வானகம் ஆள்வாரே' என நயம்படக் கூறினார்.

இதனால் அரசன் செல்வப் பெருக்கும், நாட்டின் ஆளுகைப் பெருமையும் கூறியவாறும். மேகம் பொழிந்த முத்துக்களையும் மூங்கில்தந்த முத்துக்களையும் விற்று அவைகளால் வந்த செல்வமும் காவிரியாறு வேலியாயிரம் விளைவிக்கும் நெல்லின் கதிர்கள் மறையும்படி நீர்ப்பெருக்கைத் தருதலால், விளைவுமல்கிய செல்வமும், தன் ஆட்சி எங்கும் நிலவக்கொண்ட வெண்கொற்றக் குடையின் செல்வமும், எல்லா இடமும் தனக்கே யுரிமையாகக் கொண்ட நாடுகளைப்பெற்ற பெருஞ் செல்வமும் உடையன் ஆதலால், இனி, இவனுக்குச் செல்வக்குறைபாடு இல்லை. ஆகவே, நாடுபிடிக்கும் அவா இவனை அலைக்கவில்லை. பின் ஏன் பிற மன்னர்களோடு போர்தொடுக்கின்றானென்றால், இளையன் என்றும் போராற்றல் அறியாதவனென்றும் கருதிய அறிவிலிகளாகிய வேந்தர்களை அவர் செருக்கை யடக்குதற்கே போர் தொடுத்தான் என்ற குறிப்புத்தோன்றவே மேற்கூறியவாறு கூறி, அரசன் வீரமேம்பாட்டை விளக்கினார். இது நேரில் அரசனைப் புகழ்ந்து கூறியதாம். தன்னைத் தொழுதடைந்த வேந்தர்க்கு இம்மண்ணுலக ஆளுகையையும், தன்னைப் பகைத்த வேந்தர்க்கு

விண்ணுலக வாழ்வையும் கொடுப்போன் என, மன்னன் சிறப்பைக் குறித்தார். (உக)

## தலைவன், மடலேறத் துணிதல்

### கலி விருத்தம்

ஆட்குலாம் கடற்படை அவனி நாரணன்
தோட்குலாம் மதுமலர்த் தொண்டை வாய்ச்சியர்
வாட்குலாம் கண்ணினால் வளைத்த மம்மர்நோய்
மீட்கலாம் மடல்கையில் விரவும் ஆகிலே.

(இ - ள்.) ஆள்குலாம் கடல்படை - போர்வீரர்கள் விளங்குகின்ற கடல்போல் பெருக்கமுள்ள படைகளையுடைய, அவனி நாரணன் - மண்ணுலகத் திருமாலான நந்திமன்னனுடைய, தோள்குலாம்-தோள்களில் அணிந்து விளங்குகின்ற, மதுமலர் தொண்டை வாய்ச்சியர் - தேன் பொருந்திய மலர்களையுடைய கோவையின் கனிபோன்ற சிவந்த வாயையுடைய மங்கையர்களின், வாள்குலாம் கண்ணினால் - விளங்குகின்ற வாள்போன்ற கட்பார்வையினால், வளைத்த - பற்றப்பட்ட, மம்மர்நோய் - மயக்கந் தரும் காதல்நோயை, கையில் மடல் விரவும் ஆகில் - (இந்நோய்கொண்ட ஒருவன்) தன் கையிடத்தே உருவக் கிழியுடன் பனைமடற் குதிரையும் பொருந்துமானால், மீட்கல் ஆம் - அக்காதல் நோயைத் தடுத்தல் கூடும். (இன்றேல் இக்காதல்நோயை யாராலும் தவிர்க்க வொண்ணாது என்றபடி)

(வி - ரை.) நந்திமன்னன் நாட்டிலுள்ள ஒரு தலைவியின்பால் ஒரு தலைவன் காதல் கொண்டான்; தலைவியும் காதல் கொண்டாள்; இருவரும் கூடினர்; இரவுக்குறி பகற்குறிகளில் காலங்கழித்தனர் பின்னர் அலராயிற்று; தலைவன் தன் குறையைத் தோழிபாற் கூறினான். தான் எண்ணிய எண்ணம் முற்றவில்லை. இனி மடலேறியேனும் இவளைப் பெறுவேன் என்று துணிந்தான். மடலேறுதலாவது, தலைவியின் உருவை ஒரு கிழி (துணி)யில் எழுதிக் கையிற்கொண்டு, மெய்யெல்லாம் நீறு பூசி, எருக்கு பூளை ஆவிரை முதலியவற்றின் பூக்கள் விரவித்

தொடுத்த மாலையையணிந்து பனையின் கருக்குமட்டைகளால் செய்த குதிரையின்மேலேறி யிருந்து உணவுங்கொள்ளாது உருவக் கிழியைப் பார்த்தவண்ணம் இருப்பது. இதனை வள்ளுவரும்,

[1]'காமம் உழந்து வருந்தினார்க் கேமம்
மடலல்ல தில்லை வலி.'

எனவும்,

[2]'தொடலைக் குறுந்தொடி தந்தாள் மடலொடு
மாலை உழக்கும் துயர்.'

எனவும் கூறுவர். திருக்கோவையார்க் காதலனும்,

[3]'காய்சின வேலன்ன மின்னியல் கண்ணின் வலைகலந்து
வீசின போதுள்ள மீனிழந் தார்வியன் தென்புலியூர்
ஈசன சாந்தும் எருக்கும் அணிந்தோர் கிழிபிடித்துப்
பாய்சின மாவென ஏறுவர் சீறூர்ப் பனைமடலே'

என்பதும் காண்க.

இவ்வாறு மடலேறியபின் தலைவியின் முன்னோரும் சுற்றத்தாரும் மங்கையைத் தலைவனுக்கு மணஞ்செய்ய முற்படுவர். பிறவும் ஆன்றோர் இலக்கியங்களில் காண்க. இத்துறையில் அமைந்தது இச் சுவையுடைய பாடல். (உஉ)

## தோழி, தலைவனை இயற்பழித்தல்

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

விரவாத மன்னரெலாம் விண்ணேற வெள்ளாற்று
வெகுண்டோன் தொண்டைக்கு
இரவாத பரிசெல்லாம் இரந்தேற்றும் பாவைமீர்
எல்லீர் வாடை
வரவாதை உற்றிருந்து வருந்துவார் பலர்என்றும்
வாழி வாழி
பரவாதை நந்திசெங்கோல் இதுவாகில் அதுபார்க்கும்
பரிசு நன்றே.

---

1. 2. திருக்குறள்: ககநக; ககநரு.
3. திருக்கோவையார்: எசு.

(இ - ள்.) பாவைமீர் - தோழிமார்களே! விரவாத மன்னர் எல்லாம் - தன்னோடு சேராத பகையரசர்களை யெல்லாம், விண் ஏற - வீரசுவர்க்கம் செல்லும்படி, வெள்ளாற்று வெகுண்டோன் - வெள்ளாறென்னுமிடத்தில் சினந்தழித்தவனாகிய நந்திவர்மனுடைய, தொண்டைக்கு - ஆதொண்டை மாலையை, இரவாத பரிசு எல்லாம் - இரத்தற்கொவ்வாத தன்மைகளில் எல்லாம், இரந்து ஏற்றும் - இரப்புரைகூறி வேண்டியும் (தாராது), பரவாதை - பிறருக்குத் துன்பம் கொடுக்கின்ற தன்மையையுடைய, நந்தி செங்கோல் இதுவாகில் - நந்திமன்னனின் செங்கோல் மாண்பு இத்தகையதாக இருக்குமானால், அது பார்க்கும் பரிசு நன்று - அச்செங்கோல் முறையை எதிர்பார்த்திருக்கும் நிலை மிக நல்லது, எல்ஈர் வாடை வர - (அவன்பாற் காதல்கொண்ட நங்கையர்களில்) இரவுப் பொழுதுகளிலெல்லாம் வருத்துகின்ற வாடைக்காற்றானது வர, வாதை உற்று இருந்து - அதனால் துன்பமடைந்து, வருந்துவார்பலர் - வருத்தப்படும் மங்கையர்கள் பலராவர், என்றும் வாழி வாழி - அம்மங்கைமார் எக்காலமும் வாழ்க! வாழ்க!

(வி - ரை.) நந்திமன்னன்பால் காதல்கொண்ட மங்கையர் பலர்; அவர் யாவரும் நந்திமன்னனை மணக்க விரும்பினர்; அவன்றன் ஆதொண்டை மாலைக்கு ஏக்கற்று நின்றனர்; இந்நிலையை அவர்தம் தோழி கண்டாள். அவள், 'தோழிமீர்! நீங்கள் விரும்பும் இவ்வேந்தன், தனக்கு வேண்டாத பகை மன்னர்களையெல்லாம் வெள்ளாறென்னுமிடத்தில் வெகுண்டு கொன்றவன்; கோல்முறை கோடாக் கொற்றவன் என்று கூறப்படுகின்றான்; இத்தகையோன் குறையிரந்து கேட்போர்க்கு அக்குறையை நீக்கி முறைசெய்தலே நன்மையாகும். நீங்கள் அவன் மாலையாகிய ஆதொண்டை மாலையை இரத்தற்கொவ்வாத பல பல தன்மைகளிலெல்லாம் இரந்து வேண்டியும், அவன் ஈந்து அருள்செய்தானில்லை. இதுதான் நந்திமன்னனுடைய செங்கோல் செலுத்தும் அழகுபோலும்! இரவு நேரங்களில் வருத்துகின்ற வாடைக்காற்றினால் வருத்தங்கொண்டு வாடுகின்ற மங்கைமார் இன்னும் பலரிருக்கின்றனர்; அவர் பன்னெடுங்காலம் வாழ்வார்களாக; அவ்வாடையை - தன் நாட்டில் புகுந்து தன்பால் அன்புகொண்ட நங்கையை வருத்துகின்ற வாடையை- வாராது தடுத்தலன்றோ செங்கோல் மாண்பு? பிறருக்குத் துன்பம் தருவதையே முறையெனக் கொண்டிருக்கின்ற நந்தி

மன்னன் செங்கோற் சிறப்பு இந்த நிலையில் இருக்குமானால் இதை நம்பியிருக்கும் தன்மை மிக நல்லது! என்னே! செங்கோல் மாட்சி! ஆட்சி!' எனக் கழறித் தோழி, தலைவனின் இயற்கையைச் சொல்லாது சொல்லிப் பழித்துரைக்கின்றாள்.

[1]'இலங்கும் அருவித் திலங்கும் அருவித்தே
வானின் இலங்கும் அருவித்தே தானுற்ற
சூள்பேணான் பொய்த்தான் மலை'

[2]'இளமழை ஆடும் இளமழை ஆடும்
இளமழை வைகலும் ஆடும்என் முன்கை
வளைநெகிழ வாராதோன் குன்று'

எனப்பிறரும் தலைவனை இயற்பழித்ததாகக் கூறுவனவும் காண்க.

தனக்கு வேண்டாரை ஒறுத்து வேண்டியோர்க்கு நலஞ் செய்வோன் என்னும் குறிப்புத் தோன்ற 'விரவாத மன்னர்...... வெகுண்டோனை' என்று கூறி, இத்தகையோன் நாம் வேண்டியவர்களாக இருந்தும் தன் மாலையைக் கொடுத்துத் தண்ணளி செய்தானில்லையே என்பாளாய்ப் 'பரவாதை நந்தி.........பரிசு நன்றே' என்று கூறி அவன்றன் இயற்கையைப் பழித்துக்கூறும் தோழியின் மதிநலம் கண்டு மகிழ்க.

பாவைமீர்: முன்னிலைப் பன்மை. வாழி வாழி என்னும் அடுக்குமொழி, காதல்கொண்ட நங்கையரின் மனவுறுதிக்கு மகிழ்ந்து வாழ்த்துதலாக அமைந்தது. வாழ்த்து, மகிழ்ச்சியால் வந்த அடுக்குமொழி. நந்தி எவ்வாறு முறை திரிந்தாலும் திரிக. நீவிர் முறைகெடாது வாழ்க. அத்தகைய நங்கையர் யாவரும் பன்னெடுங்காலம் வாழ்வார்களாக என வாழ்த்தினள். பலர் என்னும் தொகைக்குறிப்பு ஒன்றொழி பொதுச்சொல்லாய், ஈண்டு மகளிர்க்கு வந்தது. ஆயிரமக்கள் போர்செய்தார் என்பதுபோல. பரவாதை - பிறரின் துன்பம்: வடசொல் (௨௫)

## தலைவன், இரவுக்குறியிடு இடையீட்டினால் வருந்தல்

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

நன்றும்நெடி தாயவிர் கின்றதிரா
நலிகின்றது மாருத சாலமெனக்கு
என்றின்னில வென்னும் இளம்பிறையும்
எரியேசொரி கின்ற தியாதுசெய்கோ

1, 2. கலித்தொகை: ௪௧.

அன்றிந்நிலம் ஏழும் அளந்தபிரான்
அடலுக்ரம கோபன் அடங்கலர்போல்
இன்றென்னுயிர் அன்னவள் கோங்கைவிட்
டெங்ஙன் துகில் கின்றனன் ஏழையனே.

(இ - ள்.) *ஏழையன் - மனத்திண்மையில்லாத அறிவிலேனான நான், அன்று இந்நிலம் ஏழும் அளந்த பிரான் - முற்காலத்தில் இந்நிலவுலகம் ஏழையும் தன் திருவடிகளால் அளந்த திருமாலை யொத்தவனும், அடல் உக்ரம கோபன் - (பகைவரைக்) கொல்லுகின்ற கொடுமைமிக்க சினத்தை யுடையவனுமாகிய நந்திமன்னனுடைய, அடங்கலர் போல் - பகைவர்கள் கண் தூங்காது வருந்தும் தன்மை போல, இன்று - இன்றைக்கு ஓரிரவுங்கூட, என் உயிர் அன்னவள் - எனது உயிரினைப் போன்றவளின், கொங்கையைவிட்டு - கொங்கையில் துயிலும் நிலையில்லாது, எங்ஙன் துயில்கின்றனன் - இனி எவ்வாறு தூங்கிக் கழிப்பேன், எனக்கு - இத்தன்மையுடைய எனக்கோ, இரா-இவ்விரவுப்பொழுதானது, நன்றும் நெடிதாஆய் அவிர்கின்றது-மிகவும் நீளமாய் விடியாது இருக்கின்றது, மாருதசாலம் நலிகின்றது - தென்றலின் கூட்டம் வந்துவந்து வீசி வருத்துகின்றது, இன் நிலவு என்னும் இளம்பிறை-இன்பந்தரும் நிலவென்னும் பெயர்பெற்ற சிறு பருவச் சந்திரன், என்றும் எரியே சொரிகின்றது - எக்காலத்தும் நெருப்புக் கதிர்களையே பொழிகின்றது, யாது செய்கோ - இனி யான் தன்னந்தனியனாக இருந்து என்ன செய்வேன். (எவ்வாறு இக் காமத்துன்பத்தை ஆற்றுவேன்! என்றபடி)*

(வி - ரை.) *அன்று இந்நிலம் ஏழும் அளந்தபிரான் என்றது, திருமாலை. திருமால் வாமன அவதாரத்தில் மாபலிபால் மூவடி மண்பெற்று நிலவுலகத்தையும் வானுலகத்தையும் தன் திருவடிகளால் அளந்த வரலாறு இதில் குறிக்கப்பெறுகின்றது. அரசர்கட்குத் திருமாலை ஒப்புக் கூறுதல் ஆன்றோர் வழக்காதலின், உவமை ஆகுபெயராக நந்திமன்னனுக்கு ஏற்றங்கொடுத்துக் கூறினர். 'செங்கண்மால் அல்லனேல் தேர்வேந்தர் ஒப்பரோ அங்கண்மா ஞாலத் தவர்க்கு' என்பர், புகழேந்தியாரும்.*

தலைவன், இரவுக்குறியிடையீட்டுக்கு உள்ளாகி வருந்துந் துறையில் அமைந்தது இப்பாட்டு. அவன், 'என்னுயிர் போன்ற அரிய காதலியின் தோள்துணையின்பம் கிட்டுமென ஈங்கு வந்தேன்; இங்கே காவலர் காவலின் கடுமை, நாய் துஞ்சாமை, தாய் துஞ்சாமை முதலிய பல்வகை இடையீடு (இடையூறு) கள் வந்து அவளுடன் கூடித் துய்க்கும் பேரின்பங் கிட்டாது போயிற்று; இனி, இன்றிராப் பொழுதை எவ்வாறு கழிப்பேன்; இரவுப்பொழுதோ என்றும்போல் இன்றில்லை; மிக மிக நீண்டு கொண்டே செல்கின்றது; அது, நீண்டு சென்றாலும் செல்க என எண்ணினாலோ தென்றற்காற்றுப் பல்வகை மலர் மணங்களை அள்ளிக்கொண்டு வந்து என் உடல்மீது வீசி வீசித் துன்புறுத்துகின்றது; இனிமையுடையது நிலவு என்று வழங்குகின்ற குறைவாய் நிறைவாயாத பிறைச சந்திரனும் நிலவை - தண்மை பொருந்திய ஒளியைத் தரவில்லை. கொடிய சுடுகின்ற வெப்பக் கதிர்களை சொரிகின்றது. இத்துணைத் துன்பங்களுக்காளாகி என் காதலியின் கொங்கையில் தூங்கும் இன்பத் துயில் இல்லாமல் அதனை மறந்து எவ்வாறு தூங்குவேன்; இனி என்ன செய்வேன்' என்று ஏங்குகின்றான். இவன் இவ்வாறு ஏங்குதற்குக் காரணம், தலைவியால் பெறும் பேரின்பமே.

[1]"தாம்வீழ்வார் மென்தோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு"

என்று வேறொரு தலைவன் கூற்றானும் அறியப்பெறும்.

இரா - இரவுநேரம்: குறியதன்கீழ் ஆகாரம் குறுகாது நின்றது.

காதலர்கட்கு இரவும், தென்றலும், நிலவும் துன்பந்தருவன ஆதலால் அவைகளின்மேல் வைத்துக்கூறித் தலைவன் வருந்துகின்றான். என்றும் என்பதில் உள்ள உம்மை இசை நோக்கித் தொக்கது.

[2]"கல்லா மதியே கதிர்வாள் நிலவே
செல்லா இரவே சிறுகா இருளே
எல்லா ருமெனை யேமுனிவீர் நினையா
வில்லாளனை யாதும் விளிகதி லீரோ"

என, மிதிலைச் செல்வி வருந்துவதாகக் காட்டும் கம்பர் ஓவியமும் கண்டின்புறுக.

தலைவன், தான் வருந்தும் நிலைக்கு உவமையாக அடல் உக்ரகோபனாகிய நந்திமன்னனின் பகைவர்கள் வருந்துமாறு

1. திருக்குறள்: ௧௧0௩. 2. கம்ப, சுந்தர, உருக்: ௪.

போல நான் வருந்துகின்றேனென்று தலைவன் வாயிலாகப் பாட்டுடைத் தலைவன் வீரப்பெருமித மாண்பையும், பகைவர்கள் நந்தி மன்னன் படைப்பெருக்கம் வந்தால் 'என் செய்வது? என்று வருவானோ? எப்போது வருவானோ? நாம் என்ன செய்யப் போகின்றோம்? என்று அல்லும் பகலும் இடையறாது அச்சங்கொண்டு வருந்தித் தூங்காமல் தம் காலத்தைக் கழித்து வருந்துவதுபோல யானும் வருந்த நேர்ந்ததே' யென்று கூறி வருந்துவதாக அமைத்த ஆசிரியரின் திறப்பாடு அறிந்தின்புறற்பாலது. இவ்வாறே 'துஞ்சாக் கணை வடபுலத் தரசே' எனவும், 'பெருந்தோட் கணவன் வந்தென, பகைமுக ஊரில் துஞ்சலோ இலளே' எனவும் பிற சான்றோர் கூறுவதும் காண்க. 'துயில்கின்றனன்', என்பது, தெளிவு பற்றி எதிர்காலம் நிகழ்காலமாக வந்த கால வழுவமைதி. 'கின்றனன்' என்பதில் படர்க்கை அன்விகுதி தன்மை இடத்துக்கு வந்தது. 'நன்மையம்புவன் எழுத்தே' என, நன்னூலார் கூற்றில, தன்மை இடனானது அறிக. எங்ஙனம் என்பது 'எங்ஙன்' எனக் கடைக் குறைந்துநின்றது. இது, இடப்பொருள் தராது, தன்மையென்னும் பொருள்படநின்றது. (உச)

வாழ்த்து

**வஞ்சித்துறை**

ஏழை மார்துணை
வாழி நந்திதண்
நீழல் வெண்குடை
ஊழி நிற்கவே.

(இ - ள்.) ஏழைமார் துணை - வறிஞர்கட்குத் துணையாகவுள்ளோனாகிய, நந்தி - நந்தி மன்னனுடைய, தண் நீழல் வெண்குடை - குளிர்ந்த நிழலைத் தருகின்ற வெண்கொற்றக்குடையானது, ஊழி நிற்க வாழி - ஊழிகள் தோறும் நிலைபெற்று நின்று வாழ்வதாக.

(வி - ரை.) ஏழை - எளியவர்; வறிஞர். மார்: பலர்பால் விகுதி. நந்திமன்னன் இல்லெனவென இரப்போர்க்கு இல்லையென்னாது கொடுக்கும் கொடைச்சிறப்பினன். ஆதலால் 'ஏழைமார் துணை' என்றார். ஏழை மார், பெண்களெனக்கொண்டு தன்னைக் காதலித்த மங்கையர்கட்குத் துணைவன் என்றலுமாம். அன்றித் தனக்கு இல்வாழ்க்கைத் துணைவியர்களாகிய மனைவியர்

களோடு நந்தி மன்னனும் அவன் வெண்கொற்றக்குடையும் பல்லூழி காலம்வரை நிலைநின்று வாழ்கவென்று பொருள் கூறினுமாம். துணையென்னும் பண்புப் பெயர்ச்சொல், துணையானவன் என்னும் பொருளில் பண்பியாக வந்தது, அரசு அமைச்சு ஒற்று தூது என்பனபோல. வாழிய என்னும் வியங்கோள் வினைமுற்று ஈற்றுயிர் மெய்கெட்டு வாழ்! என நின்றது,

> [1]"வாழிய என்பதன் ஈற்றின் உயிர்மெய்
> ஏகலும் உரித்து"

என்னும் நன்னூல் விதிப்படி யென்க. குடைக்குத் தண்மை யென்பது, குடிகளும் அறமும் நாட்டில் நிலைபெற்று இனபுற்று வாழும் நிலையுடன் செங்கோல் செலுத்துதலின்மேல் நின்ற குறிப்பு மொழி. (உரு)

### தலைமகள் வருத்தங்கண்ட செவிலி கூற்று

**எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்**

நிற்க மன்னவர் நிரந்த வெண்குடை
மிடைந்த நீள்கடை நெடுந்தகை
விற்கோள் நல்நுதல் மடந்தை மார்மிக
முயங்கு தோளவனி நாரணன்
நற்கோள் வார்மதிற் கச்சி நந்தி
நலங்கோள் அன்னவன் அலங்கல்மேல்
ஒற்கம் என்மகள் உரைசெய் தோவுல
களிப்பன் இத்திறன் உரைத்திடே.

(இ - ள்.) (தோழியே!) மன்னவர் நிற்க - பலநாட்டு அரசர்கள் வந்து நிற்பதனால், நிரந்த வெண்குடை - அவர்களின் வரிசையாகவுள்ள வெண்கொற்றக் குடைகள், மிடைந்த நீள்கடை - நெருங்கிய நீண்ட தலைவாசலையுடைய, நெடுந்தகை - உயர்ந்த மேம்பாடுடையவனும், வில்கொள் - வில்லினையொத்த நல்நுதல் மடந்தைமார் - நல்ல நெற்றியையுடைய இளமங்கையர்கள், மிக முயங்குதோள் - மிகவும் தழுவுகின்ற தோள்களையுடைய, அவனி நாரணன் -

1. நன்னூல்: கசுஅ.

மண்ணுலகத் திருமால்போல்பவனும், நல்கொள் வார்மதில்- நன்மையைக்கொண்ட நீண்ட கோட்டைகள் சூழ்ந்த, கச்சி நந்தி அன்னவன் - கச்சி நகர்க்குக் காவலனுமாகிய நந்தி மன்னனுடைய, நலம்கொள அலங்கல்மேல் - உயர்வுமிக்க ஆதொண்டை மாலையின்மீது, என் மகள ஒற்கம - என் மகளுக்குத் தளர்ச்சி உண்டாகியுளது, (அதைக் குறிப் பறிந்து கொடுத்தலே சிறப்பு.) உரைசெய்தோ உலகு அளிப் பன் - ஒருவர் கூறியோ இவ்வுலகையெல்லாம் ஆட்சி செய் கின்றான், இத்திறன் உரைத்திடு - இக்கோட்பாட்டை அவ னுக்கு விளக்கிச் சொல்வாயாக.

(வி - ரை.) நந்திமன்னன் தலைவாயில் முற்றத்தே வேற்று நாட்டு மன்னர்கள் வந்து தம் பழங்கடனை திறைப்பொருள் களைச் செலுத்துதற்கு வந்து காத்தவண்ணமாக நிற்கின்றனர்; வேந்தனைக்கண்டு தம் குறைகூறி நிறைபெறுதற்குச் செவ்வி கிட்டவில்லை; அதனால் அவர்கள் பிடித்துவந்த வெண்கொற்றக் குடைகள் வரிசை வரிசையாக நெருக்கத்துடன் கிடக்கின்றன; இதனால் பாட்டுடைத்தலைவன் வீரமும் விரிந்த நாடுகள் தனக்குக் கீழ் அடங்கிக்கிடக்கும் ஆட்சிமாண்பும் குறித்தவாறும். இத் தகைய கச்சிநகரில் வாழுகின்ற நந்திமன்னனுடைய மாலையை விரும்பித் தளர்ச்சியுற்று என்மகள் ஏங்கிக்கிடக்கின்றாள்; அவள் குறிப்பறிந்து தன் மாலையை ஈந்து அவளைக் காத்தலே முறைமை யாகும்; இதை அவனிடம் அவள் கேட்கவேண்டுமா? வேண்டிய தில்லையன்றோ? குறிப்பறிந்து ஈதலன்றோ கொடையின் தன்மை யாகும். அவ்வாறின்றிக் கேட்டபின் வழங்குதல் ஈகையின் அறமாகாது; சிறந்ததும் ஆகாது; அக்கொடை இரத்தலினும் இழிவுடையதாகும் இம்மன்னன் யாரும் சொல்லியா இந்நாடு களையெல்லாம் இவ்வளவு சிறப்புற ஆள்கின்றான். இத் தன்மையை அவனுக்கு எடுத்துக்கூறு; அல்லது நீயே எண்ணிப் பார்த்து நடுநின்று அறிந்து சொல்' எனத் தன் அரிய தோழி யோடு செவிலி கூறுகின்றாள்.

இப்பாட்டில் வளர்ப்புத்தாயின் அரிய அன்புப்பெருக்கும் உள்ளத்துடிப்பும் உணர்ச்சியோடு பொருந்தியின்பந்தருதலை அறிக.

என்மகள் - என் மகளினது தளர்ச்சி: தளர்ச்சியாவது மாலை யில் விருப்பம் கொள்ளக்கொள்ள வேறொன்றினும் நாட்டங் கொள்ளாது இதிலேயே தன் கருத்துக்கொண்டு, பாலும் உண் ணாள், பந்தும் ஆடாளாய், ஒப்பனை கொள்ளாளாய் இருத்தலி

ஞல் உடல் மெலிந்துள்ள நிலை. இக்கருத்துக்களையெல்லாம் உள்ளடக்கி 'ஒற்கம் என் மகள்' என்றாள். நெடுந்தகை - நீண்ட தகுதியையுடையவன் என விரிதலால், வினைத்தொகை நிலைக் களத்துப் பிறந்த அன்மொழித்தொகை, ஈண்டுத் தலைவனைக் குறித்தது. (உசு)

பாண் : கண்டோர் கூற்று

இணைக்குறள் ஆசிரியப்பா

உரைவரம் பிகந்த உயர்புகழ்ப் பல்லவன்
அரசர் கோமான் அடுபோர் நந்தி
மாவெள் ளாற்று மேவலர்க் கடந்த
செருவேல் உயர்வு பாடினன் கொல்லோ
ரு. நெருநல் துணியரைச் சுற்றிப்
பரடு திறப்பத் தன்ஞல் பல்கடைத்
திரிந்த பாணன் நறுந்தார் பெற்றுக்
காஅர் தளிர்த்த கானக் கொன்றையின்
புதுப்பூப் பொலன்கலன் அணிந்து
கo. விளங்கொளி ஆனனன் இப்போது
இளங்களி யானை எருத்தமிசை யன்னே.

(இ - ள்.) துணி அரை சுற்றி - கந்தல் துணியை இடுப்பில் உடுத்தது, பரடு திறப்ப - புறங்கால் தோன்றும்படி, தன்ஞல் - தான் ஒருவஞகவே, நெருநல் - நேற்று, பல் கடை திரிந்த பாணன் - பல வீடுகளின் வாசல்தோறும் (இரந்து பொருள் பெறுதற்கு) அலைந்துகொண்டிருந்த பாணஞனவன், இப்போது - இற்றைநாளில், நறும் தார் பெற்று - மணம்பொருந்திய மாலையையணிந்து, காஅர் தளிர்த்த - மழை பெய்தலிஞல் தழைத்துள்ள, கானக் கொன்றையின் புதுபூ - காட்டிலுள்ள கொன்றையினது புது மலரையொத்த, பொலன்கலன் அணிந்து-பொன்ஞற் செய்த அணிகளைப் புனைந்து, விளங்கு ஒளி ஆனனன் - மிக மலர்ந்த முகத்தையுடையஞய், இளங்களியானை - இளமையுடன் களிப்புமிக்க ஆண் யானையினது, எருத்தம்

மிசையன் - பிடரியின்மீது வீற்றிருக்கின்றான், (அதனால்) உரை வரம்பு இகந்த - புகழ்மொழிகளின் அளவையும் கடந்த, உயர்புகழ்ப் பல்லவன் - பரந்த புகழுக்குரிய பல்லவர் மரபினனும், அரசர் கோமான் - மன்னர் மன்னனுமாகிய, அடுபோர் நந்தி - கொல்லும் போரினையுடைய நந்திவர்மனது, மா வெள்ளாற்று - பெரிய வெள்ளாறென்னுமிடத்தில நிகழ்ந்த போரில், மேவலர்க் கடந்த - பகைவர்களை வென்ற, செருவேல் - போர்புரிந்த வேலினது, உயர்வு பாடினன் கொல்லோ - வெற்றிமேன்மையைப் புகழ்ந்து பாடினான்போலும்! (இல்லையேல் இவனுக்கு மணமாலையும், பொன்னாலான பல அணிகளும் யானையும் ஏது என்றபடி.)

(வி -ரை.) மக்கள் செல்கின்ற பெருந்தெருவில் ஒருவன் யானைமீதேறி உலாவந்தான்; அவன் மணமுள்ள மலர்மாலை சூடியிருந்தான்; கொன்றையின் புதுப் பூப்போன்ற பொன்னாலான பலவகை அணிகளையும் பூண்டிருந்தான்; பொன்னுடை போர்த்திருந்தான்; அவன் முகம் பொலிவுற்று இன்ப மலர்ச்சியுடன் தோன்றியது. இவன் யார்? அரசனோ? வென ஐயங்கொண்டனர்; நெருங்கிப் பார்த்தபோது, அவன் தமக்கு அறிமுகமானவனாகத் தோன்றிற்று; உடனே அவர்கட்கு வியப்பும் தோன்றிற்று. 'ஓ! இவன்தானோ? இவன் பாணனன்றோ? இவ்விடத்து வீடுதோறும், வாசல்களிலெல்லாம் குதிகால் பளிச்சுப்பளிச்சென்று தோன்றும்படி கந்தல் துணியொன்றை அரையில் சுற்றிக்கொண்டு, யாசகம் வாங்குதற்கு அலைந்துகொண்டிருந்தான் நேற்று; இன்றோ இத்தகைய காட்சி. இவனுக்குத் திடீரென இவ்வளவு அணியும் ஆடையும் யானையும் பொன்னும் பொருளும் எங்கிருந்து கிடைத்தன. இவன் வேறெங்கும் இவைகளைப் பெற்றிருக்க முடியாது; புகழ்ச்சியுரைகளின் அளவு எல்லையைக் கடந்தவனும், பல்லவர் மரபில் பிறந்தவனும், அரசர்க்கரசனுமாகிய போரில் வெல்லும் நந்தி மன்னன் அண்மையில் வெள்ளாறென்னும் இடத்தில் நிகழ்ந்த போரில் வென்று மேம்பட்ட அவன் வேலின் வெற்றிச் சிறப்பைப் புகழ்ந்து பாடியிருத்தல் வேண்டும்; அதற்கு மகிழ்ந்து நந்தி மன்னனால் இவனுக்குப் பரிசில்களாக இவைகளை வழங்கியிருத்தல் வேண்டும்; வேறு யாரும் இவ்வளவு பொருள்களையும் ஒருங்கே கொடுக்கும் வள்ளன்மையுடையார் அல்லர்; நந்தி மன்னனாலேயே இவன் இன்று செல்வமேம்பாடுற்றான்' என மக்கள் வியப்புடன் கூறியதாக அமைந்தது இப்பாடல்.

கலம்பக உறுப்புக்களுள் பாண் என்பதும் ஒன்றும். பாண் - பண்கள் இசைக்கும் தன்மை. பண் - இசை; இது பாண் என நீண்டது. பாண் என்பது, அதைப் பாடுவோனைக் குறிக்கும் பண்பாகுபெயராக அமைந்தது; அதை, அகப்பொருள், புறப்பொருட் கருத்துக்கொண்டு, கலம்பக உறுப்பாக அமைத்து நல்லிசைப் புலவர் கூறுவர். இங்கே புறப்பொருள் குறித்து வந்தது. பாணர்களின் இசை மேம்பாடு கிளத்தற்கே **சிறுபாண் ஆற்றுப்படையும், பெரும்பாண் ஆற்றுப்படையும்** தமிழகத்தில் தோன்றின. இவை, பாணர் சிறப்புக்கு எடுத்துக்காட்டாக இலகுதல் காண்க. இதில் நந்தி மன்னன், இரவலர்கட்கும், பாணர்க்கும் கூத்தர்க்கும் வரையாது வழங்கும் கொடையைச் சிறப்பிக்கு முகத்தால் இவ்வாறு பாணனுக்கு அணியும் ஆடையும் யானையும் வழங்கியதாகக் குறித்தார்.

அகப்பொருள் துறையில் தலைவி பாணனை வெகுளுவதாக அமைத்து மதுரைக் கலம்பகத்தில்,

[1]'கொங்குறை யாற்றில் இட்டுக் குளத்தினில் தேட நீடு
மங்குல்தோய் முதுகுன் றையர் மதுரையோ மதியில் பாணா
எங்கையர் மனைக்கண் வைத்தாங் கெம்மிடைத் தேர்தி மற்றும்
மங்கையர் மனம்போல அன்றே மகிழ்நர்தம் வாழ்க்கை தானே.'

என வருவது காண்க.

செருவேல் - போரில் வெல்லும் வேற்படை. வீரன் சிறப்பை வேலின்மேல் ஏற்றிக் கூறப்பட்டது. 'கொன்றையின் புதுப்பூப் பொலன்கலன்' உவமைத் தொகையாக்கிப் பொருள் கொள்க. காஅர் - இசை நிறைக்கவந்த அளபெடை. அளபெடை அகரம், ஈண்டு அலகு பெற்றது. விளங்கு ஒளி : ஒருபொருட்பன்மொழி. ஆனனம் - முகம் நந்தி மன்னன்பால் பரிசுபெற்று மீண்ட பாணன் முகம், மகிழ்ச்சியால் மிக மலர்ச்சிப் பொலிவுற்றுத் தோன்றிற்று. இதனைப் பாணன் முகத்தைச் சுட்டிக் கூறினர். களியானை யென்றமையால் களிற்று யானையைக் குறித்தது. (உஎ)

இயலிடம் கூறல் : தலைவன் கூற்று

**அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்**

அன்ன மடமயிலை ஆளி மதயானை
நந்தி வறியோர்
சொன்ன பொருள்நல்கு வள்ளல் தொகுநீர
தொண்டை வளநாட்டு

1. **மதுரைக் கலம்பகம் : எச.**

அன்ன நடையாளை அல்குல் பெரியாளை
அங்கை அகல்வான்
மின்னை மெலிவாளை நூலின் இடையாளை
நேர்வ மயிலே.

(இ-ள்.) (பாங்கனே!) அன்ன மடம் மயிலை ஆளி - அறவுணவு விடுதிகள் நிறைந்த மயிலாப்பூரை ஆள்பவனும், மதயானை நந்தி - மதம் பொருந்திய ஆண் யானைகளையுடைய நந்தி என்னும் பெயரோனும், வறியோர் சொன்ன - ஏழை மக்கள் வேண்டிய, பொருள் தரு வள்ளல் - பொருள்கள் யாவும் கொடுக்கின்ற வள்ளன்மையாளனுமான நந்திக்குரிய, தொகுநீர - வற்றாத நீரினையுடைய, தொண்டை வளநாட்டு - வளப்பம் பொருந்திய தொண்டை நாட்டினிடத்துள்ள, அன்னம் நடையாளை - அன்னம் நடக்கின்றதுபோல் நடக்கும் நடையினை யுடையாளை, அல்குல் பெரியாளை - பெருத்த அல்குலுடையாளை, அகல்வான - விரிந்த வானிடத்துள்ள, அம் கை - மேகத்தில் தோன்றும் இயற்கையுள்ள, மின்னை மெலிவாளை - மின்னலையும் மெலிய வைக்கும் தோற்றப் பொலிவினளை, நூலின் இடையாளை - நூலினையொத்த நுட்பம் பொருந்திய சிற்றிடையாளை, மயிலே நேர்வ - மயில்களைச் சாயலினால் ஒத்திருப்பவள். (அவளாவன்றோ? அவள் பல்வகை அழகினும் சிறந்தவள் என்றபடி)

(வி-ரை.) இயற்கைப் புணர்ச்சிக்கண் புணர்ந்து தலைவியோடு இன்புற்றொழுகும் தலைவனை அவன் பாங்கன் கண்டான்; அவன் இயற்கைத் தன்மை குன்றி, மெலிந்து காணப்பட்டான்; பாங்கன் அந்நிலையை வினவினான்; தலைவன் நிகழ்ந்த உண்மையைக் கூறி, அவளின் இயற்கையழகையும், அவள் வாழும் இடத்தையும் கூறுகின்றான். இது பாங்கற் கூட்டத்து 'இயலிடங்கூறல்' என்னும் துறையில் அமைந்தது.

இதில் தொண்டைவளநாட்டு 'அன்ன நடையாளை' என்பதனால் அவள் வாழும் இடமும், 'அல்குல்பெரியாளை......மின்னை மெலிவாளை நூலின் இடையாளை' என்பனவற்றால் அவளின் உறுப்பும் மேனியும் நடையும் சாயலும் கூறி, அவள் அழகினை உணர்த்தியவாறும்.

அன்னமடம் - ஏழைகட்கும் கல்வி பயில்வார்க்கும் அறுவகைச சமயத்தார்க்கும் உணவு அளித்துப் பாதுகாக்கும் அன்ன சத்திரம். எனவே, இவைகளைக் கொண்டது மயிலாப்பூர்; இதை ஆள்பவன் நந்தி மன்னன்; ஆதலின் இவன் அறத்தை வளர்ப்பவன் என்பதை விளக்கினான்; இது நகரின் சிறப்பு நாட்டுச் சிறப்புக் கூறுபவன், 'தொகுநீர தொண்டை வளநாடு' என்றான். தொகுதல் - நிறைதல்: நீர தேங்கி நிற்றல். அஃதாவது நீர் குறையாது மேலும் மேலும் பெருகுதல். எனவே, நீர்வளனும் நிலவளனும் மிக்க வளப்பம் பொருந்திய தொண்டை நாடு. அந்த நாட்டில் வாழும் இயற்கையாள் என நாட்டின் சிறப்பைக் கூறினான். இத்தகைய நாட்டில் வாழும் தலைவிக்கு வாழ்க்கையில் குறையில்லை. அழகிலும் சிறந்தாள் எனத் தன் பாங்கனுக்குத் தன் காதற்கிழத்தியின் அழகும வாழிடமும் விளக்கிக் காட்டித் தான் அவளை யெய்திய நல்லூழிற்கு மகிழ்ந்து நின்றான்.

இவ்வாறே திருக்கோவையார்க் காதலனும் தன் பாங்கனிடத்து,

[1] 'விழியால் பிணையாம் விளங்கிய லான்மயி லாம்மிழற்று
மொழியாற் கிளியாம் முதுவா னவர்தம் முடிதொகைகள்
கழியாக் கழல்தில்லைக் கூத்தன் கயிலைமுத் தம்மலைத்தேன்
கொழியாத் திகழும் பொழிற்கெழி லாமெம் குலதெய்வமே.'

என்று கூறுவதும் இதனோடு ஒப்புக்கண்டு மகிழ்க.

'மின்னை மெலிவாள்' என்பது மின்னலைத் தன்மேனி ஒளியினால் மெலிவிப்பவள்: மின்னலையும் தன் இயற்கை யழகின் நிறச் செம்மையினால் வெல்பவள் என்பதாம். மெலிவாள்: முன்வினை, ஈண்டுப் பிறவினைப் பொருளில் வந்தது.

மயிலே நேர்வ: மயில்களோ ஒத்திருப்பவை என்று தன் தலைவியின் நலத்தைப் பாராட்டிக் கூறுகின்றான். அவளின் ஒவ்வோருறுப்பும் தன் தன் அழகால் மிகச் சிறந்துள்ளன. மயிலின் சாயலை - அதன் இயற்கையை - இவட்கு ஒப்புமைத்தல் கூடாது. மயிலினும் சிறந்த மாணபுமிக்காள் என்று தலைவன் தலைவியைப் பாராட்டுகின்றான். மயிலே என்பதில் ஏகாரம் வினாப் பொருளிலும் எதிர்மறையிலும் வந்தது. நேர்வ - ஒப்பன: ஒருமைப் பன்மை மயக்கம். இரண்டு கணணும் சிவந்தது என்பது போலக் கொள்க. (௨௮)

---

1. திருக்கோவையார்: ௨௯.

## தலைவன், தன் நெஞ்சொடு கிளத்தல்

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

மயில்கண்டால் மயிலுக்கே வருந்தி ஆங்கே
மான்கண்டால் மானுக்கே வாடி மாதர்
குயில்கண்டால் குயிலுக்கே குழைதி ஆகின்
கொடுஞ்சுரம்போக் கொழிநெஞ்சே! கூடா மன்னர்
எயில்கொண்டான் மல்லையங்கோன் நந்தி வேந்தன்
இகல்கொண்டார் இருங்கடம்பூர் விசும்புக் கேற்றி
அயில்கொண்டான் காவிரிநாட் டன்னப் பேடை
அதிசயிக்கும் நடையாரை அகலன் நூற்றேன்.

(இ - ள்.) நெஞ்சே - என் மனமே! (நாம் செல்கின்ற காட்டின் வழிகளில்), மயில் கண்டால் - நீ மயிலினங்களைப் பார்த்தால், மயிலுக்கே வருந்தி - அவைகளின் சாயலை யொத்த காதலிக்காகவே வருத்தங்கொண்டு, ஆங்கே - பின்னும் அவ்விடத்தில் மான் கண்டால் மானுக்கே வாடி - மான்களைப் பார்த்தால் பிணைமான் போன்ற காதலிக்கே மெலிவடைந்து, மாதர் குயில் கண்டால் - அழகிய குயிற் பறவைகளைப் பார்க்கநேரின், குயிலுக்கே குழைதி ஆகின் - குயில்போன்ற மெல்லிய குரலுடையாளுக்கே நீ கரைந் துருகுவாயானால், கொடுஞ்சுரம் போக்கு ஒழி - பொருளீட் டக்கருதிக் கொடிய பாலைநிலப் பெருவழியிற் செல்வதை இனி விட்டுவிடு, (சென்றால் நீ அவள் பிரிவுக்கு ஆற்றாய்.) கூடாமன்னர் - பகையரசர்களின், எயில் கொண்டான் - எதிரிகளின் கோட்டைகளைத் தனக்கு உரிமை கொண்டவ னும், மல்லை அம் கோன் - அழகிய மாமல்லைக்கதிபான வேந் தனுமாகிய, நந்திவேந்தன் - நந்திமன்னனானவன், இருங் கடம்பூர் - பெரிய கடம்பூரில், (பகைவராக வந்து எதிர்த் தோர்களை) விசும்புக்கு ஏற்றி - கொன்று விண்ணுலகத்திற் குக் குடியேறவைத்து, அயில் கொண்டான் - (இத்தகைய சிறப்புமிக்க) வேற்படையைத் தன் கையில் தாங்கியிருக் கின்றவனை நந்திப் போத்தரையனுக்குரிய, காவிரிநாட்டு

அன்னப்பேடை - காவிரியாறு சூழ்ந்த நாட்டின்கண் வாழ்கின்ற பெண் அன்னங்களானவை, அதிசயிக்கும் நடையாரை - (தம் நடையிலும் விஞ்சியிருப்பதுகண்டு) வியப்புக்கொள்ளுகின்ற நடையையுடைய என் காதலியாரை, அகலேன் - இனிப் பிரியேன், நூற்றேன் - இதனை உனக்குக் கூறுகின்றேன். (அறிந்துகொள், இனி வீணாக மயங்காதே.)

(வி - ரை.) காவிரி நாட்டின்கண் வாழும் தலைவியைக் களவிற் புணர்ந்த தலைவன் மணஞ்செய்தற்பொருட்டாகப் பொருள்வயிற் பிரிய எண்ணினான்; அவன் மனம் தலைவியை விட்டுப் பிரிய ஒவ்வவில்லை; ஒருகால் போகவேண்டுமென்று கருதுகின்றது; மற்றொருகால் போகவேண்டாவெனத் தளர்கின்றது; அறிவுக்கும் மனத்துக்கும் போராட்டம் நிகழ்கின்றது. காதல் மிகுந்தால் புள்ளொடும் விலங்கொடும் புலம்பலும், கடலையும் கழிக்கரைகளையும் பிறவற்றையும் முன்னிலைப்படுத்திப் பேசுதலும் காதலர்கள் இயற்கை. அம்முறையில் பொருள்வயிற் பிரியக் கருதிய தலைவன், தன் நெஞ்சொடு பேசுகின்றான்: 'நெஞ்சே! நீ பொருளீட்டற்குத் தலைவியைப் பிரிந்து துணிவாக எங்கே போகத் துணிவாய்; மயில்களைக் கண்டால், இம்மயில் போல் வாளை நினைந்து வருந்துவாய்; மானைக் கண்டால் இப்பெண் மானையொத்தவட்கே வாட்டங்கொள்வாய்; அழகிய குயில்களைக் கண்டால் அக்குயிலைக் கருதிக் குழைவடைவாய்; ஆகவே, இந்நிலையில் உன்னை ஒருமுகப்படுத்தி என்னோடு அழைத்துச் செல்லல் யாங்ஙனம்! ஆகவே நீ பாலைநிலவழியாக வேற்றுநாடடிக்குப் பொருளீட்டச் செலவுதலை விட்டு இனி மறந்துவிடு; நானும் இனி நந்தி மன்னனின் காவிரி நாட்டு அன்னப் பேடைகள் அதிசயிக்கின்ற நடையுடைய என் காதலியாரை விட்டுவிட்டுப் பிரிந்து போகேன்; இதனை உனக்குக் கூறிவிட்டேன். ஆகவே, இனி இது குறித்து வருந்தாதே' என்று தன் நெஞ்சிற்குக் கூறியதாக அமைந்தது இப்பாடல்.

மயில் கண்டால் மயிலுக்கே எனவரும் சொற்றொடர்களில் **சொற்பின்வரு நிலையணி** அமைந்து இப்புறத்தலை அறிக. அகலேன், அகலேன், பிரியேன் என்னும் பொருளது. எதிர்மறைப் பொருளில் வந்த தன்மை இடம். நூற்றேன்: நுவன்றேன் என்னுஞ் சொல் முதனிலை திரிந்தது. (உக)

## நந்திமன்னன் வீரச்சிறப்பு

### கலி விருத்தம்

நூற்க டற்புல வன்னுரை வெண்திரை
நாற்க டற்கொரு நாயகன் நந்திதன்
கோற்க டைப்புரு வந்துடிக் குந்துணை
வேற்க டற்படை வேந்தர்தம் வீரமே.

(இ - ள்) வேல் - வேற்படை முதலிய படைகளைத் தாங்கிய, கடல்படை வேந்தர் தம் வீரம் - கடல்போல் விரிந்த படைப் பெருக்கத்தையுடைய பகைமன்னர்களின் வீரமானது, நூல்கடல் புலவன் - கடலனைய பரந்த அறிவு நூல்களைக் கற்றுத் தெளிந்த அறிஞனும், நுரை வெண்திரை - வெள்ளிய நுரைகள் பொருந்திய அலைகளையுடைய, நால் கடற்கு ஒரு நாயகன் - நாலு திசைகளிலுமுள்ள கடல்களுக்கெல்லாம் ஒப்பற்ற தலைவனும் ஆகிய, நந்திதன் - நந்தி மன்னனுடைய, கோல் கடைப்புருவம் - அழகிய கடைக் கண்களின் புருவங்கள், துடிக்கும் துணை - சினங்கொண்டு துள்ளுகின்ற அளவுவரைதான் இருக்கும். (அவன் சினந்து கடைப் புருவங்கள் துடித்தால் உடனே அப்பகை மன்னர்கள் அழிவர் என்றபடி.)

(வி - ரை.) கடல் அளவற்ற நீளமும் அகலமும் பெருக்கமும் உடையதாகலான், கடலை அறிவு நூல்களுக்கு உவமையாக்கிக் கூறினார். யானை தேர் குதிரை காலாள் ஆகிய படைகளை உள்ளடக்கி வேலின்மேல் வைத்து வேற்படையென்றார். நால் : நான்கு திசைகளை உணர்த்திற்று : அளவை ஆகுபெயர். கோல் : கோலம் என்ற சொல்லின் கடைக்குறை. கோல் - அழகு. அல்லது நந்தி என்னும் பெயருக்கு அடையாக்கி முதற் குறையாக்கிச் செங்கோல் என்று கூறினுமாம். இது ஒரு படைவீரன் தன் வேந்தனின் வெற்றியையும் வீரத்தையும் ஆற்றலையும் குறித்துத் தனக்குள் வியந்து கூறியதாக அமைந்தது. அவன், தன் மன்னன் நந்தியின் வீரத்தை நினைந்து வியந்து பேசுகின்றான். எல்லா வகை அறிவு நூல்களையும் கரை கண்ட புலமையாளன்; நான்கு திக்குமுள்ள கடல் சூழ்ந்த நாடுகளையெல்லாம் ஆள்வோன்; நந்தி யென்னும் பெயரமைந்தோன்; வேலைத்தாங்கிய பகை மன்னர்கள் படைவீரர்கள் பொங்கியெழுந்து வந்தாலென்ன? எம்வேந்தனை

இவர்களால் வெல்ல இயலுமோ? தன் கண்புருவங்கள் மேலேறச் சினந்து பார்த்தாலே போதும்; அவ்வளவில் படைதிரண்டு எதிரிப் படைகளை ஒரு நொடியில் அழித்தொழிக்கும். இப்படைகளின் பெருக்கமெல்லாம் நந்தி மன்னனின் புருவக்கடை துடிக்கும் அளவுதான்; எதற்காகப் பகைப்புல மன்னர்கள் வந்தார்களோ? வீணே மாண்டொழியவேயன்றோ!' என்று வியந்து தனக்குள் பகர்கின்றான். இக்கருத்து,

[1]"ஒலித்தக்கால் என்னும் உவரி எலிப்பகை
நாகம் உயிர்ப்பக் கெடும்'

என்னும் வள்ளுவர் வாய்மொழியோடு ஒத்திருத்தல் கண்டு மகிழற்பாலது.

நூலைக் கடலெனப் புகலலும் படைகளைக் கடலெனப் புகலலும் கம்பர் காட்டும் ஓவியத்தோடு பொருந்தியிருத்தல் ஒப்பு நோக்கி இன்புறற்பாலதாகலின் அப்பாடலை ஈங்குக் காண்பாம்.

[2]"ஈய்ந்தே கடந்தான் இரப்போர்கடல்; எண்ணில் நுண்ணூல்
ஆய்ந்தே கடந்தான் அறிவென்னும் அளக்கர்; வாளால்
காய்ந்தே கடந்தான் பகையென்னும் வேலை; கருத்து முற்றத்
தோய்ந்தே கடந்தான் திருவின்தொடர் போக வௌவம்'

என்பது. இச்சுவையோடு அசசுவை ஒன்றாக அமைந்தமை அறிக. (௩0)

## இதுவும் அது

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

வீர தீரன்நல் விறலவிர் கஞ்சுகன்
வெறியலூர்ச் செருவென்றோன்
ஆர்வ மாவுளம் நின்றவர் அன்பன்மற்
றவன்பெருங் கடைநின்ற
சேர சோழரும் தென்னரும் வடபுலத்
தரசரும் திறைதந்த
வீர மாமத கரியிவை பரியிவை
இரவலர் கவர்வாரே.

---

1. திருக்குறள் : எசாரு.
2. கம்பரா, பாலகாண், அரசியற் படலம் : ௫.

(இ - ள்.) வீரதீரன் - வீரத்தில் ஊக்கங்கொண்டவனும், விறல் அவிர் கஞ்சுகன் - வெற்றியுடன் விளங்குகின்ற கவசம் பூண்டோனும், வெறியலூர் செருவென்றோன் - வெறியலூரின் நிகழ்ந்த போரில் வெற்றிகொண்டவனும், ஆர்வம் ஆ - இடையறா அன்புடன், உளம் நின்றவர் அன்பன் - தன் உள்ளத்தில் மாறாது நினைக்கும் நிலையுடையவர்கட்கு நண்பனும் ஆகிய, அவன் - மேற்கூறிய அந் நந்தி மன்னனின், பெருநகடை நின்ற - பெரிய தன் தலைவாசற் கடையிலே வந்து காத்து நின்ற, சேர சோழரும் தென்னரும் - சேர சோழ பாண்டியர்களாகிய தமிழ்நாட்டு மூவேந்தர்களும், வடபுலத்து அரசரும்-வடநாட்டு மன்னர்களும், திறை தந்த - கப்பப் பொருள்களாகக் கொடுத்த, வீர மாமத கரி இவை - வீரம் பொருந்திய கரிய மத நீரையுடைய கடாயானைகள் இவைகள், பரி இவை - குதிரைகள் இவைகள், (இனி இவைகளையெல்லாம) இரவலர் கவர்வாரே - ஏற்றலையுடைய யாசகர்களே பெற்றுக்கொள்வர். (எனவே, இவ்யானை குதிரைகளை இரவலர்கட்கே கொடுத்து மகிழ்வன் நம் வேந்தன் என்றபடி.)

(வி - ரை.) நந்திமன்னனின் ஆட்சிக்கு உட்பட்ட சேர சோழ பாண்டியர்களாகிய தமிழக வேந்தர்களும் வடபுலத்தரசர்களும் தாம் தாம் செலுத்தவேண்டிய திறைகளுக்கு ஈடாகக் கொடுத்த யானைகளும் குதிரைகளும் எண்ணிறந்தன; இவைகளை இனி நம் மன்னன், தன்பால் இல்லையென்று வந்து இரந்த இரவலர்களுக்கு இவைகளைக் கொடுத்து மகிழ்வான். இதுவும் வீரன் கூற்றாக அமைந்தது. அரசர்களிடம் தன் வீரத்தால் கவர்ந்த பொருள்களை, இரவலர் எளிதில் கவர்ந்து கொள்வர். எளிதில் வந்தது எளிதில் போகின்றது என்னும் நயம் தோன்ற நின்றது.

தீரன் - ஊக்கமுடையவன்; கஞ்சுகம் - வீரர்கள் அணியும் கவசமாகிய மெய்ப்பை, அதனை யணிந்தோன் கஞ்சுகன்: காரணப் பெயர். ஆர்வம் - மாறாது வளரும் அன்பு. தன்பால் அன்புடையார்க்கு நண்பனாக இருக்கும் மன்னனின் சிறந்த குண நலம். இதனானே புகழேந்தியாரும் நளமன்னன் மேன்மையை முதலில் நூல் துவக்கத்தே கூறுங்கால் [1]"நேசரிதங் கூர நிலவலயம் தாங்கு நளன்" என்றது காண்க.

---

1. நளவெண்பா: க.

தென்னாட்டு மன்னர்களும் வடநாட்டு மன்னர்களும் திறைப் பொருள் தந்து, தன் தலைக்கடையில் காத்துக் கிடக்கும் வேந்தன் முற்றச சிறப்பும், வீரமும், செங்கோல் மாட்சியும், கொடைச் சிறப்பும் இதனாற் கூறியவாறும். (௩க)

உடன்போக் கறிந்து செவிலி வருந்தல்

**அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்**

கவரிச் செந்நெற் காடணி சோலைக்
 காவிரி வளநாடன்
குமரிக் கொண்கன் கங்கை மணாளன்
 குரைகழல் விறல்நந்தி
அமரில் தெள்ளாற் றஞ்சிய நெஞ்சத்
 தரசர்கள் திரள்போகும்
இவரிக் கானத் தேகிய வாறென்
 எழில்நகை இவளோடே.

(இ - ள்.) எழில்நகை - அழகு பொருந்திய பற்களையுடையளாகிய என் மகளானவள், இவளோடு - இந்த விடலையுடன், கவரிச் செந்நெல் காடு - கவரிகளின் திரள் போன்ற கதிர்களையுடைய செந்நெல்லின் திரள்களும், அணிசோலை - அழகுள்ள சோலைகளும் சூழ்ந்த, காவிரி வளநாடன் - காவிரியாற்றின் வளம் பொருந்திய சோழநாட்டுக்குரியோனும், குமரிக் கொண்கன் - குமரியம் பெருந்துறை யாற்றுக்குத் தலைவனும், கங்கை மணாளன் - கங்கையாற்றைத் தன் உரிமையாகக் கொண்டோனும் ஆகிய, குரைகழல் - ஒலிக்கின்ற வீரகண்டையணிந்த, விறல் நந்தி - வெற்றியுடைய நந்திமன்னன், தெள்ளாற்று அமரில் - தெள்ளாறு என்னுமி த்தில் நடந்த போரில், அஞ்சிய நெஞ்சத்து அரசர்கள் திரள் - அச்சங்கொண்ட நெஞ்சத்தினராய் ஓட்டம் பிடித்த பகைவேந்தரின் கூட்டங்கள், போகும் - மறைந்து செல்கின்ற, இ அரிக் கானத்து - இந்தப் பருக்கைக் கற்கள் நிறைந்த காட்டின்கண், ஏகிய ஆறு என் - (எம்மையெல்லாம மறந்து) சென்ற காரணம் என்னவோ? (அறியேனே!

இனி எக்கால் காண்பேன்! என்ன செய்வேன்! இதுதான் காதற்காமத்தின் தன்மை போலும்!)

(வி - ரை.) நந்திமன்னனுக்குரிய காவிரி வளநாட்டில் ஒரு தலைவனும் தலைவியும் காதலால் மனம் ஒன்றுபட்டனர்; கூடினர்; குணன் உண்ணப்பட்டனர்; ஊரார் அறிந்தனர்; அலர் தூற்றினர். இதனைத் தோழியறிந்து இனி இவள் இங்கிருத்தல் நன்றன்று எனக் கருதினாள். தலைவன் தலைவியுடன் சூழ்ந்து முடிபு செய்து இவ்விருவரையும் தலைவன் நகர்க்குச் செல்லுமாறு பணித்தாள்; அவ்வாறே தலைவன் தலைவியை உடன் கூட்டிச் சென்றான். இவர்கள் சென்ற செய்தி ஊரெல்லாம் பரந்து அலராயிற்று; பலரும் பற்பலவாறு கூறிப் பழித்துரைத்தனர். வளர்ப்புத் தாயாகிய செவிலிக்கு மானமும் நாணமும் வந்து வருத்தத்தை மேலிடச் செய்தன. அவள் அவர்கள் சென்ற அடிச்சுவட்டைப் பின்பற்றிக் காடு நோக்கிக் கடுகி நடந்தாள்; காடோ பெருங்காடு; நீரும் நிழலுமற்ற பாலைப் பெருவழி; பருக்கைக் கற்களும் முள்ளும் சிறு புதர்களும் இவளை வழிசெல்லாவாறு கால்களில் உறுத்தியும் தைத்தும் கீறியும் துன்புறுத்தின; பெருங்கவலை கொண்டாள்; அவட்கு முன்பு நிகழ்ந்த ஒரு செயல் நினைவுக்கும் வந்தது; அது, நந்திமன்னனோடு போரிட்டுப் போர்செய்யலாற்றாது அஞ்சித் திசைகள் தோறும் தப்பி, இக் காட்டு வழியாக ஓடிய நிலை. அதனைக் கூறி வருந்துவதாக அமைந்தது, இவ்வழகிய செய்யுள்.

'கவரி போன்ற நெற்கதிர்களின் திரளும் அழகிய சோலைகளும் சூழ்ந்த காவிரி யாற்றையுடைய சோழ நாட்டு மன்னனும், குமரியம பெருந்துறை யாற்றுக்குத் தலைவனும் கங்கையாற்றைத் தனக்குரிமையாகக் கொண்டவனுமாகிய வீரக் கழலணிந்த நந்தி மன்னனோடு தெள்ளாறென்னுமிடத்தில் நிகழ்ந்த போரில் நெஞ்சந் துணுக்குற்று அஞ்சிய பகைமன்னர்களின் கூட்டங்கள் திரள் திரளாக நாலுதிசைகளிலும் ஓட்டம் பிடித்து ஓடிய காட்டில் - பருக்கைக் கற்கள் நிறைந்த இப் பாலைவனத்தில் - மனந்துணிந்து, இக் கொடியனாகிய தலைவனுடன் இவள் செல்லக் காரணம் என்னவோ?' என்று கலங்குகின்றாள்.

இதில் தாய்மை அன்பு மேலூர்ந்த அவள் நெஞ்சம் துணுக்குற்று வருந்திய நிலையைக் கற்பார் நெஞ்சமும் படிந்து அவள் கொண்ட அவலநிலை உறைப்ப, 'இவரிக் கானத் தேகிய வாறென் எழில்நகை இவளோடே' என்றமைத்த சொல்லோவியம் கழிபேரோகை தந்தின்புறுத்தலை அறிக.

கவரி - வெண்சாமரை: நெல்லின் கதிர்த் திரள்களுக்கு வடிவ உவமை குமரி: குமரியாறு. கங்கை மணாளன் கங்கை யாற்றுக்குத் தலைவன். இங்கே நந்திமன்னன் ஆளும் நாட்டுக்கு எல்லை கூறிப் பாட்டுடைத் தலைவன் தன் நேரிலலா ஆண்மை யைப் புலப்படுத்தினார். காவிரி வளநாடன், குமரிக்கொண் கன், கங்கை மணாளன் என்பனவற்றால் சோழநாடு, பாண்டி நாடு, வடநாடுவரை கைப்பற்றித் தெற்கே கன்னியாகுமரி யும் வடக்கே கங்கையாறு பாயும் இமயமலையும் கொண்டு நாடு முழுதும் தன் செங்கோல் செல்லத் தனி அரசனாய் ஆண்ட தன்மையைக் குறித்தார். கவரி, குமரி என வந்தவை. இடை யினமும் மெல்லினமும் வந்த இனவெதுகை. இ + அரி = இவரி யெனப் புணர்ந்தது: ஒற்றுமிகாது எதுகைக் கேற்ப நின்றது. அரி—பரற் கற்கள். எழில்நகை என்பது தன் மகளின் பேரிள மையும் கானத்தில் நடக்கலாற்றாத அவள்தன் மென்மைத் தன்மையும் குறிக்க வந்தது. இவன்—இவ்வழிச் செல்வோன் என, பகையரசர் ஓடிய கொடுங் காட்டில் செல்லும் அவன்றன் பெருவலியும், வீரமும் இளமையும் விளக்கி நின்றது. இவன்: இவ்வழிச் செல்லும் திண்மையோன் என அக்காட்டை நோக்கிக் கூறுவதால் அண்மை இடத்து அகச் சுட்டாய் நின்ற சுட்டுச் சொல். ஏகாரம்: ஈற்றசை. (௯௨)

ஊசல்

**எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்**

ஓடரிக்கண் மடநல்லீர் ஆடாமோ ஊசல்
உத்தரியப் பட்டாட ஆடாமோ ஊசல்
ஆடகப்பூண் மின்னாட ஆடாமோ ஊசல்
அம்மென்மலர்க் குழல்சரிய ஆடாமோ ஊசல்
கூடலர்க்குத் தெள்ளாற்றில் விண்ணருளிச் செய்த
கோமுற்றப் படைநந்தி குவலயமார்த் தாண்டன்
காடவற்கு முன்தோன்றல் கைவேலைப் பாடிக்
காஞ்சிபுர மும்பாடி ஆடாமோ ஊசல்.

(இ - ள்.) அரி ஓடு கண் மடநல்லீர்-செவ்வரியோடிய கண்களையுடைய இளம பருவத் தோழிமார்களே! ஊசல் ஆடாமோ - நாம் இவ்வூஞ்சலில் ஆடுவோமாக, பட்டு உத்தரியம் ஆட - பட்டாலான மேலாடை அசைய,

ஆடாமோ ஊசல்—, மின் ஆடகப்பூண் ஆட - ஒளியெறிக்கின்ற பொன்னாலான அணிவகைகள் அசையும்படி, ஆடாமோ ஊசல்—, அம் மென்மலர்க் குழல் சரிய - அழகிய மெல்லிய பூமுடித்த கூந்தல் அவிழ்ந்து தொங்குமாறு, ஆடாமோ ஊசல்—, கூடலர்க்கு—பகைவேந்தர்கட்கு, தெள்ளாற்றில்—தெள்ளாறென்னுமிடத்தில் நடந்த போரில், விண் அருளிச் செய்த—இம் மண்ணுலக வாழ்வை விட்டு வானுலகவாழ்வு வாழும்படி வென்று கொன்ற, கோமுற்றப் படைநந்தி - திசைகள் எங்கும் சுற்றிச் செல்கின்ற சிறந்த படைகளையுடைய நந்திமன்னனும், குவலய மார்த்தாண்டன் - மண்ணுலக ஞாயிற்றை ஒத்தவனும், காடவற்கு முன் தோன்றல் - காடவனென்னும் பெயருடையானுக்கு முன் பிறந்த தமையனுமாகிய நந்திமன்னனுடைய, கைவேலைப்பாடி-கையில் தாங்கிய வேற்படையின் சிறப்பைப் பாடலாக அமைத்துப் பாடிக்கொண்டும், காஞ்சிபுரம் பாடியும் - அவன் ஆளுகின்ற காஞ்சி நகர்ச் சிறப்பைப் பாடிக்கொண்டும், ஊசல் ஆடாமோ—.

(வி - ரை.) நந்திமன்னன்பாற் காதல் கொண்ட நங்கையர் பலர் ஒன்று கூடினர்; அவர்கள் தம் நாட்டு அரசன் சிறப்புக் குறித்துப் பலபடப் புகழ்ந்தனர்; அவருள் இளமைத் துடிப்பும், வாய்மிடுக்கும், சொல்லடுக்கும் வாய்ந்த மங்கையொருத்தி அங்குக் கூடிய தோழிமார்களைப் பார்த்து, 'நாம் இனி இங்குள்ள ஊசலில் ஏறி ஆடி விளையாடுவோம்' என்று அழைத்துக் கூறுகின்றாள். 'அரிபடர்ந்த கண்களையுடைய தோழிமார்களே! ஊசலாடுவோம்; நாம் ஆடுங்கால் நாம் அணிந்துள்ள பட்டு உத்தரீய ஆடை அலையும்படி வேகமாக ஆடுவோம்; நாம் அணிந்துள்ள பொன்நகைகளின் ஒளிவீச ஊசல் ஆடுவோம்; அழகிய மெல்லிதாய பூமுடித்த கூந்தல் நாம் ஆடும் விசையினால் அவிழ்ந்து நம்முடன் அசைந்தாட ஊசல் ஆடுவோம்; பகைமன்னர்களுக்குத் தெள்ளாறென்னுமிடத்தில் நிகழ்ந்த போரில் விண்ணருளிச் செய்தவனும் நந்தியென்னும் பெயருடையவனுமாகிய நம் வேந்தனின் கைவேலின் சிறப்பைக் குறித்துப் பாடலாகப் பாடியும், அவன் ஆள்கின்ற காஞ்சிபுரநகரின் மேன்மையைப் புகழ்ந்து நாம் பாடிக்கொண்டும் ஊசலாடுவோம்' என்று கூறுகின்றாள்.

ஓடு அரி—நீண்ட இரேகைகள்; அழகிய பெண்களின் கண்களில் செவ்வரியோடியிருப்பது சிறப்பு.

[1]"போர்வாய் வடிவேலால் போழப் படாதோரும்
சூர்வாய் மதராரிக்கண் தோகாய்'

என வரும் நளவெண்பாவிலும் அரியோடுவதாகக் கூறியதும் அறிக. நல்லீர்: முன்னிலைமைப் பன்மைவிளி. ஊசலாடுங்கால், மேலாடை அசைதலும், அணிகள் ஒளியெறித்தலும், கூந்தல் அவிழ்தலும் இயற்கையாதலால், அவைகளின் தன்மையைப் பிழையாது தோன்றப் படிமுறைப்படி கூறினள். கூடலர்-ஒன்றுபடாதவா: பகைவர். தெள்ளாறு—தெள்ளாறென்னும் இடத்தில் நிகழ்ந்த போர். அதில் வென்று பகைவர்களைக் கொன்ற சிறப்பை, 'விண் அருளிச் செய்த...படை நந்தி' என்று தன் தலைவன்—அரசன் சிறப்பைக் கூறி, அவன் கைவேற் சிறப்பையும் அவன் வாழும் நகரச்சிறப்பையும் வாழ்த்தி ஆடுவோமென்று கூறினள். இதனால் நந்திமன்னன் வெற்றிமேம்பாடு விளக்கினள்.

கலம்பக உறுப்புள் ஊசல் என்பதும் ஒன்று. அஃது அரசன் புகழைப் பாடிக்கொண்டு ஊசலாடுவதற்கு ஒரு பெண், மற்றைப் பெண்களை அழைப்பதாகக் கொண்டு பாடுவது. அம்முறையில் அமைந்ததிது.

இவ்வாறே சிலப்பதிகாரப் பெருங்காப்பியத்தில் இளங்கோவடிகள் ஊசல்வரி யென ஒன்றமைத்து மூவேந்தர் புகழை விரித்துரைத்ததும், மணிமொழிப்பெருமான் திருப்பொன்னூசல் என்னும் பகுதியைத் தாமருளிய திருவாசகத் திருமறையில் அமைத்தருளியிருப்பதும் இச்சிறப்பை விளக்கும். ஆடுவோம் என்னும் தன்மைப்பன்மை வினைமுற்றின் ஈறுதிரிந்து 'ஆடாம்' என வந்து ஓகாரம் ஏற்றது. இவ்வாறே, [2]"போரார் வேற்கண் மடவீர் பொன்னூச லாடாமோ' என அத்திருவாசகத்து வருதல் காண்க. (௫௫)

செவிலி கூற்று

கலி விருத்தம்

ஊசல் மறந்தாலும் ஒண்கழல் அம்மானை
வீசல் மறந்தாலும் மெல்லியல் என்பேதை
பூசல் இலங்கிலைவேல் பொற்கழல் நந்திநின
பாசிலை அந்தொண்டை அல்லது பாடாளே.

1. நளவெண்பா, சுயம்: ௧௫௫.
2. திருவாசகம், திருப்பொன் : ௧.

(இ - ள்.) பூசல் இலங்கு இலைவேல் - போரில் மேம் பட்டு விளங்குகின்ற தகட்டுவடிவுடைய வேற்படை ஏந்திய, பொன்கழல் நந்தி - பொன்னாலான வீரகண்டை யணிந்த நந்திமன்னா! மெல்லியல் என் பேதை - மெல்லிய இயற்கைத்தன்மையுள்ள என்மகள், ஊசல் மறந்தாலும் - (தான் விளையாடும் விளையாட்டுள் ஒன்றான) ஊசலாடுதலை மறக்க நேரிட்டாலும், ஒண்கழல் - ஒளி யுள்ள கழங்கும், அம்மானை - அம்மானையும், வீசல் மறந் தாலும் - மேலெறிந்து விளையாடுதலை மறக்க நேர்ந்தாலும், நின - உனக்குரியதான, பாசு இலை - பசிய இலைகளை யுடைய, அம் தொண்டை அல்லது பாடாளே - அழகிய தொண்டைமலர் மாலையையன்றி வேறெதையும் பாடமாட் டாள். (அவட்கு உன் தொண்டைமாலையில் அவ்வளவு விருப்பம்; ஆகவே, அதனை அவட்கு ஈந்து அவளைக் காப்பாயாக என்றபடி.)

(வி - ரை.) நந்திமன்னன்பால் காதலால் பிணைப்புண்ட நங்கையொருத்திக்குக் காதல், நெஞ்சை அலைப்ப வருந்தினாள்; அவள் உண்ணலை மறந்தாள்; உறக்கத்தை நீத்தாள்; ஆடலை வெறுத்தாள்; பாடலையும் விட்டாள்; ஊசலாடல், கழங்காடல், அம்மானையாடல் முதலிய களியாடல்களையும் கைக்கொண்டா ளில்லை. இவள்நிலை தோழியறிவாள்; பின்னர்ச் செவிலிக்கும் தெரிந்தது. செவிலி இதேயெண்ணமாக ஏங்கினாள்; 'இவள் தன் தகுதிக்கொவ்வாத - தன்னினும் உயர்நிலையினனான-மன்ன னைக் காதல் கொண்டாளே! இவனை அடைந்து மணத்தல் எவ் வாறு கைகூடும்?' என்றெல்லாம் எண்ண அலைகள் ஒன்றன்பின் ஒன்றாக வந்து அவள் தாய்மையன்பைக் கிண்டிவிட்டன. இவ் வாறு நாட்கள் பல கழிந்தன. ஒருநாள் நந்திமன்னன் மேள தாளங்கள் முழங்கத் தெருவில் உலாப்போந்தான்; அவ்வுலாக் காட்சியைக் கண்டாள் செவிலி; தன் மகளைக் குறித்த கவலை மேலும் வளர்ந்தது; அது காலை மன்னனை நோக்கி,

'நந்திமன்னா! என்னுடைய அறியாப் பருவமகள் ஊஞ்ச லாட மறந்தாலும், கழங்கு அம்மனையாடல்களை வீசி ஆடுதற்கு மறந்தாலும், வேறுபாடல்கள் பாடுதற்கு மறந்தாலும், உன் பச்சை இலைகளையுடைய ஆதொண்டை மலர்மாலையைக் குறித் துப் பாடுதலை மட்டும் மறக்காதவளாய் எந்நேரமும் பாடிக்கொண் டிருக்கின்றாள். நீ அதைக்கொடுத்து அவளைக் காப்பது கட னன்றோ? காத்தருள்க' என வேண்டுகோள் விடுக்கின்றாள்.

இப்பாட்டு செவிலியின் உள்ள ஒருமையன்பைக் காட்டும் ஓவியமாக அமைந்து இன்பந்தருதலை ஓர்க. மறந்தாலும் முதலிய உம்மைகள் மறவாத தன்மையை விளக்கிநின்றன. பூசல்-போர். வேல், போரில் இலங்குவதாவது, பகைவர்களைக் கொன்று மேம்படுதல். மன்னன் வீரச்சிறப்பு, வேலின்மேல் ஏற்றிக்கூறப்பட்டது. பசுமை+இலை - பாசிலை என முதனிலை நீண்டு ஈறு கெட்டு, [1]'ஆதிநீடல்' என்னும் விதியாலும் [2]'ஈறுபோதல்' என்னும் விதியாலும் புணர்ந்தது, பண்புப் பெயராகலான். பாசிலையென்றமையால் நன்கு செழித்துத்தழைத்த தொண்டையென்பது பெற்றும். இதனால் மாலையின் மேன்மை குறித்தாள். செவிலி, 'அல்லது பாடாளே' என்று கூறினாளன்றி மாலையைப் பேதைக்குத் தருக என வேண்டினாளில்லை. குறிப்பு மொழியாகத் தன் எண்ணத்தைப் - பேதைநிலையை - எடுத்துக்கூறினாள். மாலையைத் தந்து காப்பாயாக எனக் குறிப்பெச்சமாகக்கொண்டு பொருள் கூறப்பட்டது.

தலைவனை பாண்டியமன்னன் புகழ்பாடி மகிழ விரும்பிய தலைவி, தனக்குத் தாயின் காவலால் பாடி மகிழ முடியாத நிலையில் வருந்தியதாக அமைத்துள்ள முத்தொள்ளாயிர ஓவியமும் இதனேடொத்துப் படித்தின்புறற்பாலது. தருகின்றும்:

> [3]'கொடிபாடித் தேர்பாடிக் கொய்தண்தார் மாறன்
> முடிபாடி முத்தாரம் பாடித் - தொடிஉலக்கை
> கைம்மனையில் ஓச்சப் பெறுவெனே யானுமோர்
> அம்மனைக் காவல் உளேன்'

என வருதல் காண்க.

கழல் - கழங்கு: உருண்டையாகப் பந்துபோல் மரம், ஈயம் முதலிய பொருள்களில் செய்வது; அதனை மகளிர், மேலே ஒன்றன்பின் ஒன்றாக எறிந்து கையாற் பிடித்து விளையாடுவது; இதனைத் தற்காலம் சர்க்கசு ஆட்டத்தார் ஆடுவர். அம்மானையென்பது மகளிர் மூவர் கூடியிருந்துகொண்டு, தம் நாட்டுத் தலைவனைக் குறித்தோ, தம் காதலரைக் குறித்தோ, ஒருத்தி கேள்வி கேட்ப, மற்றொருத்தி அக் கேள்விக்கு விளக்கங்கூறி நிற்க, பின்னொருத்தி இவ்விருவர்க்கும் விடைகூறி அம்மனைக்காய்களை மேலே வீசிப் பிடித்துக்கொண்டு முடித்தலாக இறுதிச்சீரில் அம்மானை யென்னும் சொல்வரப்பாடுவது. இது, இளநங்கையர்க்கு விளையாட்டுடன் கூடிய மகிழ்ச்சியை ஊட்டுவதாகும். இதுவும் கலம்பக உறுப்புக்களுள் ஒன்று.

---

1, 2. நன்னூல்; ௧௩௬. 3. முத்தொள்ளாயிரம்: ௩௪.

நினது எனற்பாலது பாட்டின் இசைநோக்கித் துவ்விகுதி குறைந்து 'நின' என, நின்றது. அல்லது பாடாளே என்பது, இவள் பாடுவன, நந்திமன்னன் வீரத்தை, செங்கோல் மாண்பை, அவன் திருவோலக்கச் சிறப்பை என்பாளாய், மாலைமேல் வைத்துக் கூறினாள். (ஙஃச)

## நந்திமன்னன் அரண்மனைச்சிறப்பு

### நேரிசை வெண்பா

பாடிய நாவலரோ வேந்தரோ பல்புரவிப்
பீடியல் மாகளிற்றார் பிச்சத்தார்—கூடார்
படையாறு சாயப் பழையாறு வென்றான்
கடையாறு போந்தார் கலந்து.

(இ - ள்.) கூடார் - பகைமன்னர்களுடைய, ஆறு படைசாய - ஆறுவகைப்பட்ட படைகளும் தலைவணங்கிப் பணியும்படி, பழையாறு வென்றான் - பழையாறு என்னுமிடத்தில் வெற்றி கொண்ட நந்தி மன்னனது, கடைஆறு- அரண்மனை முற்றவழியில், கலந்து போந்தார் - ஒன்று கூடி வந்தார்கள்; அவர், பீடுஇயல் - சிறப்புமிக்க, பல் புரவி(யார்) - பல்வகை நிறத்தையுடைய குதிரைகளையுடையாரும, மாகளிற்றார்-பெரிய ஆண் யானைகளையுடையாரும், பிச்சத்தார் - மயிலிறகுக் குஞ்சத்தையுடைய குடையினருமாக உள்ளனர், (இவர் யாவரும்) பாடிய நாவலரோ - மன்னன்மீது பாடல் பாடிவந்த புலவர்களோ? (அன்றி) வேந்தரோ - அரசன்பால் குறைநேர்ந்துவந்த வேற்று நாட்டு மன்னர்களோ? (இவர் யாவரும் எவரோ? அறிகிலோமே!)

(வி - ரை.) இது கண்டோர் கூற்று. நந்திமன்னன் அரண்மனைத் தலைவாயிலிடத்தே பெருங்கூட்டம் ஒருநாள் திரண்டு நின்றது. அவ்விடத்தே குதிரைகள் ஒருபால்; யானைகள் ஒருபால்; தேர்கள் ஒருபால்; குடைகள் ஒருபால்; இவ்வாறு முற்றம் இடம் போதாவாறு நெருங்கியிருந்தது; ஆங்கே வாள் பிடித்த கையரும்; அணிகள் பூண்ட மெய்யரும்; நடையழகும், உடையழகும், நகையழகும் மிக்காருமாக ஆடவர் பலர் நெருக்குண்டு வந்தனர்; ஊர்ப் பொதுமக்கள் இக்காட்சியைக் கண்டனர்;

அவர்கள் என்றுங் காணாத காட்சி; அவர்கட்கு இறும்பூதளித்தது; 'ஆ! எவ்வளவு பெருங்கூட்டம்; இவர்கள் இப்படித் திரண்டு வரக் காரணம் யாது? இவர்கள் யார்? இவர்கட்கு இங்கு என்ன வேலை?' என்றெல்லாம் எண்ணமிட்டனர்; அவ் வெண்ணத்தின்மேல் ஒரு தெளிவு தோன்றிற்று. இவர்கள் வேறு யாருமில்லை; நம் வேந்தனிடம் வந்து அவன் வெற்றிசசிறப்பை பாடிப் பரியும் கரியும் தேரும் பிறவும் பெற்ற நாவீறு பெற்ற புலவர்களாக இருத்தல் கூடும். அல்லது தம் குறை கூறியும் முறைவேண்டியும் வந்து கூடிய வேற்றுநாட்டு வேந்தர்களாக இருத்தல் கூடும்; இல்லையேல் இவ்வளவு கூட்டமிருக்கக் காரண மில்லை' யென்று தமக்குள் உரையாடுவதாக அமைந்தது இச் செய்யுட் கருத்து.

படைஆறு: ஆறுபடை என மாறிக் கூட்டுக. ஆறுவகைப் படை எனப் பொருள்படும். ஆறுவகைப் படையாவது: மூலப் படை, கூலிப்படை, நாட்டுப்படை, காட்டுப்படை, துணைப்படை, பகைப்படை என்பனவாம். அன்றிப 'படையாறு சாய' எனக் கொண்டு பகைவர் படைகள் புறமுதுகிட்டோடி வழிகள் தோறும் சாய்ந்து செல்ல என்றலுமாம். புரவி என்னும் சொல்லோடு ஆர் விகுதி கூட்டிக் குதிரைகளையுடையார் என, செய்யுளின் பொருளியைபு நோக்கிப் பொருள்கூறப்பட்டது: ஆகுபெயர். பிச்சம் - மயிற்பீலிக்குஞ்சம், அதனையுடைய குடைக்கு ஆயிற்று: ஆகுபெயர். கடை - வாசலிடம்: ஈண்டு அரண்மனை முற்றம். ஓகாரங்கள் இரண்டும் ஐயப்பொருளில் வந்தன. கலந்து போந்தாரெனக் கூட்டுக. (௩௫)

## தலைவன், தலைவியின் நலம்புனைந்துரைத்தல்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

கலங்கோள் அலங்கல் வேல்நந்தி
கச்சி நாட்டோன் நவன்கழல்
புலங்கோள் ஒளிய நல்லோர்க்கும்
புகல்கின் றோர்க்கும் பொன்னாரம்
நலங்கோள் முறுவல் முகஞ்சாய்த்து
நாணு நின்று மெல்லவே
விலங்கல் வைத்த மின்னேக்கின்
மேலும் உண்டோ வினையேற்கே.

(இ - ள்.) வினையேற்கு - (இவளைக் காணும்) நல்லூழ் பெற்ற எனக்கு, கலம் அலங்கல் கொள் வேல்நந்தி-பொன் அணிகளும் பூமாலைகளும் கொண்ட வேலையேந்திய நந்தி மன்னனும், கச்சிநாட்டோன் - காஞ்சிபுர நாட்டுக்குரியோனு மானவனுடைய, நவன் கழல் - புதுமையான திருவடிகளை, புலம்கொள் ஒளிய நல்லோர்க்கும் - தமக்குப் புகலிடமாகக் கொண்ட அழகினையுடைய இளமங்கையர்களிலும், புகல்கின்றோர்க்கும் - (அழகெல்லாம் ஒருங்கே அமைந்த நங்கை என்று புகழ்ந்து) பேசப்படுகின்ற நங்கையர்களிலும், பொன் ஆரம் - அழகுள்ள முத்துக்களின், நலம்கொள் - உயர்வைக் கொள்ளைகொண்டுள்ள, முறுவல் முகம் சாய்த்து - பற்களையுடைய முகங்கவிழ்ந்துகொண்டு, நாணு நின்று - நாணி நின்று, மெல்ல - மெல்லிய தன்மையுடையனவாகிய, விலங்கல் வைத்த - மலையை யொத்த கொங்கைகளைத் தன்பாற் கொண்ட, மின் - (என் அன்புக்குரிய என் உயிரினும் சிறந்த) மின்னற்கொடி போன்றவளின் அழகுக்கு ஒத்தவர், மேலும் நோக்கின் உண்டோ-மேலும் மேலும் ஆராய்ந்து பார்த்தால் எங்கேனும் உள்ளார்களோ? இல்லையே.

(வி - ரை.) கச்சிநாட்டிலுள்ள தலைவியை இயற்கைப் புணர்ச்சிக்கண் புணர்ந்த தலைவன், தன் காதலியின் அழகுருவைப் பாராட்டி நலம்புனைந்துரைப்பதாக அமைந்தது இப்பாடல்.

காதலன் தன் காதலியின் உருவ வனப்பை யெல்லாம் தன் உள்ளக்கிழியில் எழுதி எழுதிப் பார்த்து வியக்கின்றான்; மகிழ்கின்றான்; அவள் அழகின் சிறப்பையெல்லாம் அடுக்கி அடுக்கிப் பேசுகின்றான்; அவன் கூறுகின்றான்:

'அணிகளும் பூமாலைகளும் அணிந்து விளங்குகின்ற வேற்படையை ஏந்திய நந்திமன்னனுக்குரிய கச்சிநாட்டில் அவனது புதுமையான திருவடிகளையே தமக்குப் புகலிடமாகக் கொண்டுள்ள மங்கையர்களிலும், அழகின் செவ்வி யாவும் அறியும் அறிவுடையோரால் இந் நங்கையர் எல்லா அழகும் ஒருங்கேயமைந்தார் என்று புகழ்ந்து பேசப்படுகின்ற நங்கையர்களிலும், அழகிய முத்துக்களின் சிறந்த வெண்ணிற ஒளியைக் கவர்ந்து கொண்டுள்ள பற்களையுடைய தன் முகத்தைக் கீழ்நோக்கிக் கவிழ்த்துக் கொண்டு, நாணி நின்று, மெல்லிய தன்மையுடையனவாகிய மலை

போன்று பருத்த கொங்கைகளைக் கொண்டுள்ள, இம் மின்னற் கொடி போன்றவளாகிய என் காதலியைப் போன்றாரை மேலும் மேலும் ஆராய்ந்து பார்க்கின், எங்கேனும் உள்ளார்களோ? இல்லையன்றோ?' என்கின்றான். இவ்வாறே திருக்கோவையார்க் காதலனும்,

> [1] 'கூம்பலங் கைத்தலத் தன்பரென் பூவிரு கக்குனிக்கும்
> பாம்பலங் காரப் பரன்தில்லை அம்பலம் பாடலரின்
> தேம்பலஞ் சிற்றிடை ஈங்கிவள் தீங்கனி வாய்கமழும்
> ஆம்பலம் போதுள வோஅளி காள்! நும் அகன்பணையே.'

என, வண்டுகளை நோக்கி 'வண்டுகளே! நீங்கள் வாழுகின்ற மருதநிலப் பாங்குகளில் இவள் வாய்போல் மணங்கமழ்கின்ற அல்லிமலர்களைக் கண்டது உண்டோ?' என்று வினவித் தன் தலைவியின் உறுப்புநலங்களை வியந்தவாறறிக. அது போன்றே இக்காதலனும், வேறு நாடுகளில் என் காதலி போன்ற அழகுவாய்ந்தவர் இல்லையென்பது உறுதி. ஆனால் கச்சிவள நாட்டில் நந்திமன்னனின் காதற்கிழத்தியர் அழகுருவெல்லாம் ஒருங்கேயமைந்த நன்மாண்பினர் உள்ளனர்; அவர்கட்கும் அழகிருக்கலாம்; பெண்ணின் அக அழகாகிய நாணம் முதலியன இருக்கா; இவட்கோ புறவழகுகளுடன் அக அழகாகிய நாண முதலிய நற்பண்புகளும் குறைவற நிறைந்துளது. ஆகவே, இவள் போன்றாள் எங்குமில்லையென்று பாராட்டிப் பேசுகின்றான்.

பெண்மைக்குரிய பண்புகளில் நாணம் மிகச் சிறந்தது. இதனை ஆசிரியர் தொல்காப்பியனார் நல்லியல்பு வாய்ந்த குலமகளிர்க்கு,

> [2] 'உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்
> செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று'

என்று நாணை முதற்கண்வைத்து உயிரினும் நாணஞ் சிறந்த தென்று கூறுகின்றார். திருக்கோவையார்த் தலைவி தன்னை விட்டு என்றும் நீங்காத நாண், தலைமகன் தனது ஆற்றாமை கூறக் கேட்டு அழல்சேர் மெழுகெனக் கரைந்து தன்னைவிட்டு நீங்கா நிற்பக்கண்டு வருந்திய நிலையில்,

> [3] '...........என் கண்மணி போன்று
> ஒருநாள் பிரியாது உயிரின் பழகி உடன்வளர்ந்த
> அருநாண் அளிய அழல்சேர் மெழுகொத் தழிகின்றதே'

எனவும்,

1. திருக்கோவையார்: கக. 2. தொல். பொருள்: ககரு.
3. திருக்கோவையார்: சச.

[1] '.................என்றோடும்வளர்ந்த
பொற்பார் திருநாண் பொருப்பர் விருப்புப் புகுந்துநுந்த
கற்பார் கடுங்கால் கலக்கிப் பறித்தெறி யக்கழிக
இற்பாற் பிறவற்க ஏழையர் வாழி எழுமையுமே'

எனவும் நாணைக்குறித்து நன்கு விளக்கப்படுதல் கொண்டு தெளிக.

இதனை வள்ளுவரும், [2] 'திருநுதல் நல்லவர் நாண்' எனப் பொன்போற் பொதிந்து தம் மறை நூலில் கூறுவதும் காண்க. அதனால் இங்குத் தலைவன், 'முகஞ்சாய்த்து நாணி நின்று' என, நாணையே மிகப் பாராட்டினான். நவம் - நவன் : இறுதிப் போலி. [3] 'நவன்செயத் தகையவிந் நளின நாட்டத்தான்' என்றார் கம்பரும். நல்லோர் - நன்மையையுடையார். இங்கே பெண்டிரைக் குறித்தது. ஆரம் - முத்து. பொன் - அழகு என்னும் பொருளில் முத்துக்கு அடையாக வந்தது.

[4] 'கோவா மலையாரம் கோத்த கடல் ஆரம்
தேவர்கோன் பூணாரம் தென்னர்கோன் மார்பினவே'

என்னுஞ் சிலப்பதிகார ஆய்ச்சியர் குரவையில் கோத்தமலையாரம் என்பது முத்தினை உணர்த்துதல் அறிக. மெல்ல - மெல்லிய தன்மையையுடையன. இறுதி அகரம், பலவின்பாற் படர்க்கை. விலங்கல் - மலை; மலைபோன்ற கொங்கைகளைக் குறித்தது : ஆகுபெயர். மின் - மின்னற்கொடி போன்றவள் : ஆகுபெயர். நோக்கின் - நோக்கினால், ஆராய்ந்தால் என்னும் பொருளில் வந்த செய்யின் என்னும் வாய்பாட்டு எதிர்காலவினையெச்சம். உண்டோ, என்பதிலுள்ள ஓகாரம், இல்லை யென்னும் பொருளில் வருதலால் எதிர்மறை. வினையேற்கு - வினையையுடைய எனக்கு. வினையென ஈண்டுப் பொதுப்படக் கூறினும் இத்தகைய தலைவியைக் காணும் பேறு பெற்றமையால் 'நல்லூழ்' எனப் பொருள் கூறப்பட்டது. என்னை,

[5] 'சொற்பால் அமுதிவள் யான்சுவை என்னத் துணிந்திங்ஙனே
நற்பால் வினைத்தெய்வம் தந்தின்று'

1. திருக்கோவையார் : உ0அ.
2. திருக்குறள் : க0கக.
3. கம்பராமாயணம். ஆரணிய. சூர்ப்ப : கஅ.
4. சிலப்பதிகாரம். கஎ; உள்வரி : க.
5. திருக்கோவையார் : அ.

எனத் திருக்கோவையார்த் தலைவனும் தலைவியைப் பெற்றமைக்கு வியந்து தன் நல்லூழாகிய 'தெய்வமே தந்தது' என்று பாராட்டியதும் இக்கருத்தோடொத்ததாதல் அறிக. (நடசு)

தலைவன் சிறைப்புறத்தானாகத்
தோழி, தலைவியை இற்செறிப்பறிவுறுத்தல்

கட்டளைக் கலித்துறை

வினையின் சிலம்பன் பரிவும்
இவள்தன் மெலிவுமென்பூந்
தினையும் விளைந்தது வாழிதன்
மீறுதேள் ளாற்றுநள்ளார்
முனையுமன் றேக முனிந்தபி
ரான்முனை யிற்பெருந்தேன்
வனையும் வடவேங் கடத்தார்தண்
சாரலின் வார்புனமே.

(இ - ள்.) தன்மீறு நள்ளார் - தன் கட்டளைகளைக் கடந்துநிற்கின்ற பகைமன்னர்களையும், தெள்ளாற்று முனையும் - தெள்ளாற்றிடத்து நிகழ்ந்த போரையும், அன்று ஏக - அக்காலத்தே ஒழியும்படி, முனிந்தபிரான் - சினங்கொண்டு வென்ற பெருமையுடைய நந்தி மன்னனுக்குரிய, முனையில்-மேலிடத்தே, பெருந்தேன் - பெரிய தேனீக்கள், (பெருங்குளவிகள்), வனையும் - தேன்கூடு கட்டுகின்ற, வட வேங்கடத்து - வடக்குப்பக்கமுள்ள வேங்கடமலையினது, ஆர் தண் சாரலின் - மிக்க குளிர்ச்சியையுடைய அடிவாரத்தில் உள்ள, வார்புனம் - விரிந்த கொல்லையில், வினையின் சிலம்பன் பரிவும் - பொருளீட்டும் முயற்சியுடைய மலைநாட்டுத்தலைவன் உன்பால் வைத்த காதலன்பும், இவள் தன் மெலிவும் - தலைவன்பாற் கொண்ட பேரன்பினால் உனது உடல் வாட்டமும், மென்பூந்தினையும் விளைந்தது - மெல்லிய அழகுடைய தினைக்கதிர்களும் முற்றி விளையலாயின, வாழி - இனி நீவிர் வாழ்வீராக.

(வி - ரை.) தலைவியோடு இயற்கைப் புணர்ச்சிகொண்ட தலைவன், பகற்குறியிடத்துத் தோழியின் உதவியால் புணர்ந்து இன்பந் துய்த்துவந்தான். அவர்கள் கூடிக்களித்தற்குத் துணையாக நின்றது, தினைப் புனங்காவல். இவ்வாறு இடையீடின்றிக் காதலின்பந் துய்த்துவருந் தலைவன், ஒருநாள் சிறைப்புறமாக வந்து நின்றானாக. அதைக் கண்டாள் தோழி, இனி இவ்வாறு களவுப்புணர்ச்சியில் இவரை நீட விடலாகாதென்று கருதினாள்; தலைவனுக்குக் கேட்கும்படியாகத் தலைவியை நோக்கிக் கூறுவாள் போல் கூறுவாள், 'தோழீ! இனி நாம் என்ன செய்வோம்; நாம் இதுவரை தினைப் புனங்காத்துவந்தோம்; அதை இடையீடாகக் கொண்டு நுங்கள் காதலின்பம் நிகழ்ந்துவந்தது; இனி, தினைக்கதிர்கள் முற்றிவிளைந்து விட்டன; அவைகளைக் கொய்தற்கு நம் தாய் தந்தையரும் தமையன்மாரும் இங்கே வந்து குடிகொள்வர்; ஆதலால் பலரறி மணஞ்செய்தலன்றிக் களவு மணம் பொருத்தமில்லை; இப்பால் மலைநாடனாகிய தலைவன் காதலன் பால் உண்டாய வருத்தமும், அதனால் உனக்குண்டாய வருத்தமும், நன்கு முற்றிவிளையும்' என்று கூறி வரைவு கடாவுகின்றாள். இவ்வாறே திருக்கோவையாரில் 'தினையொடு வெறுத்து வரைவு கடாதல்' துறைக்கண் தோழிகூற்றாக,

[1]'...................................... ........

தினைவித்திக் காத்துச் சிறந்துநின் றேமுக்குச் சென்றுசென்று
வினைவித்திக் காத்து விளைவுண்ட தாகி விளைந்ததுவே'

என வருவதும் இதனோடொத்ததாதல் அறிக.

சிறைப்புறம் - வேலிக்குவெளியிடம். இற்செறிப்பு - தலைவியைத் தம் வீட்டிடை வைத்து இருக்கச் செய்தல். இதனை,

[2]'காப்படங்கென் றன்னை கடிமனை இற்செறித்து
யாப்படங்க ஓடி அடைத்தபின்'

எனவரும் முத்தொள்ளாயிரச் செய்யுளானும் அறிக.

நல்லிசைப் புலமைசான்ற நல்லார், தலைவிக்குத் தோழிகளை மதிவன்மை படைத்த மாண்பினராக அமைத்துக் காட்டுவர். அத் தோழிகள், செங்கோல் மாண்பமைந்த அரசர்க்குத் திறலமைந்த அமைச்சர்போன்று எதிர்காலநிலையை முன்னரேயறிந்து அதற்கேற்பத் தலைவியைச் செயற்படுத்துவர். அம்முறையில் இத்தோழி, தலைவனுக்குத் தலைவியை மணஞ்செய்து கொள்ளுமாறு வற்புறுத்தவேண்டியவள், குறிப்பாகத் தலைவ.

1. திருக்கோவையார் : கரு0. 2. முத்தொள்ளாயிரம் : சக.

னுக்கு நேரிற் கூறுது, அவன் சிறப்புறத்தாணுகத் தினைவிளைந்த தன்மேல் வைத்து, 'தினையை அறுத்தற்கு வருவர் தாய்தந்தை முதலியோர்; இனி இத்தினைப் புனங்காவல் வேலை எங்கட்கு இல்லை; வீட்டில்வைத்து எங்களைப் பாதுகாப்பர்' என உணர்த்த வேண்டிய கருத்தை, 'தினையும் விளைந்தது' என்னுஞ் சொற்சித்திரத்தால் கூறிய திறப்பாடு, அறிவு நுட்பங் காண்பார்க்குப் புதுவிருந்தாயமைவதாகும். 'வினையின் சிலம்பன்' என்றது, ஆடவர்க்குத் தாம் குறித்த முயற்சியில் இடைவிடாத செயற்பண்பாட்டைக் கொண்டேயாம் என்க. இதனை, [1]"வினையே ஆடவர்க் குயிரே' என்னும் குறுந்தொகைக் கருத்தும் வலியுறுத்தும். பரிவும் மெலிவும் தினையும் என்னும் எழுவாய்த் தொடர்கள் விளைந்தது என்னும் வினைகொண்டு முடிந்தன. விளைந்தது: சாதியொருமை. இரண்டு கண்ணும் சிவந்தது, இருகையும் நொந்தது என்பன போல. இவள்: முன்னிலைப் படர்க்கை. (நடஎ)

### தோழி, செவிலிக்கு அறத்தொடுநிற்றல்

#### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

புனத்து நின்ற வேங்கைமேல் புகைந்தெ ழுந்த ஆனையின்
சினத்தை அன்றொ ழித்தகைச் சிலைக்கை வீரர் தீரமோ
மனத்துள் நின்ற வெஞ்சினம் மலைத்தல் கண்ட திர்ந்தமான்
வனத்த கன்ற திர்ந்ததோ நந்தி மல்லை ஆர்ப்பதே.

(இ - ள்) (என் அரிய அன்னாய்!) நந்தி மல்லை ஆர்ப்பு அது - நந்தி மன்னனுக்குரிய மாமல்லபுரத்தில் பேரிரைச்சல் கேட்கின்றது, புனத்துநின்ற வேங்கைமேல் - நாங்கள் காவல்கொண்ட தினைப்புனத்தினிடத்து நின்ற தான வேங்கைமரத்தின்மீது, புகைந்து எழுந்த ஆனையின் - சினங்கொண்டுவந்த ஆண்யானையினுடைய, சினத்தை - வெகுளியை, அன்று ஒழித்த - அப்பொழுதே அடக்கி வென்ற, கைச் சிலைக்கை வீரர் தீரமோ - அழகிய வில்லைக் கையிற்கொண்ட அவ்வீரரின் ஊக்கங்கண்டெழுந்த ஒலிதானோ, மனத்துள் நின்ற வெம் சினம் - தன் மனத்துள் மாறுதுநின்ற கொடிய கோபமானது, மலைத்தல் கண்டு - தன்னை இடைவிடாது வருத்துதல்

1. குறுந்தொகை: கந௫.

அறிந்து, அதிர்ந்தமான் - பிளிறிய கடாயானையானது, வனத்து அகன்று அதிர்ந்ததோ - (தான் கட்டியிருந்த கட்டுத்தறியை முறித்துக்கொண்டு வெளியேறிக்) காட்டிடைப் போய்ப் பெருமுழக்கஞ் செய்ததோ? (அறிகிலேம்; இல்லையேல் இவ்வளவு இரைச்சல் கேட்டதில்லையே!)

(வி - ரை.) செவிலியும் தோழியும் தலைவியின் நோய்நிலை காரணமாக உரையாடிக்கொண்டிருந்தனர். நோயின்நிலை இன்னதென்று செவிலிக்குத் தோன்றவில்லை. 'என் அரிய மகள் திருவினும் சிறந்த பேரழகியாக இருந்தாள்; சிலகாலமாக நாளுக்குநாள் தன் மேனியழகு குன்றிக் கட்டழகு குறைந்து எலும்புந் தோலுமாக இளைத்துப்போயுள்ளாள்; வேலனை அழைத்து வினவினுல் அவன், முருகன் குறை என்கின்றான்; வெறிவிலக்க வேண்டுமெனவும் உரைக்கின்றான்; என் செய்வதென்று தோன்றவில்லை' என்று கூறிக்கொண்டிருந்தாள்.

தோழி, தலைவியின் நிலையும், அவள் நோயின் காரணமும் நன்கு தெரிந்தவளாயினும் செவிலியிடம் உண்மையை எவ்வாறு விளம்புவது? அவள் கூறுதலும் வேண்டும்; வெளிப்படையாகக் கூறுதலும் ஆகாது; கூறாவிடின், தலைவியின்நோய் தீராது; கூறின், தலைவியின் தாய்தந்தையர்களாலும் தமையன்மார்களாலும் தலைவிக்கும் தலைவனுக்கும் ஊறு நேரினும் நேரலாமென்று எண்ணமிட்டுக் கொண்டிருந்தாள். அப்போது மாமல்லபுத்தினின்றும் அடியென்றும் பிடியென்றும் வெட்டுக குத்துக என்றும் நான்கு பக்கங்களிலும் பேரிரைச்சல் உண்டாயிற்று. தோழி, அது குறித்துச் சிந்தனை செய்தாள். இவ் விரைச்சலை வைத்தே தலைவியின் நோய்நிலையைக் குறிப்பாக உணர்த்தி, இவளை மணம் புணர்த்த வழி இதுதான் எனக் கருதினாள்.

'அன்னாய், நம் நந்திமன்னனுக்குரிய மாமல்லபுரத்தில் ஏதோ பேரிரைசசல் இதோ கேட்கின்றதே! இஃது என்ன ஒலியாக இருக்கலாம்; நாஙகள் தினைப்புனங் காக்கச் சென்றிருந்தோமன்றோ? அங்கே ஓர வேஙகைமரத்தின் அடியில் பரணமைத்திருந்தோம்; அவ் வேங்கை தளிர்த்துப் பூத்து நின்றது; அபபோது ஓர் மதங்கொண்ட யானை பேரிரைச்சல் இட்டுக்கொண்டு அவவழியாக வந்தது; அது வேங்கைமரத்தையும் எங்களையும எறிட்டுப் பார்த்தது; பிளிறிக்கொண்டு நாங்களிருந்த வேங்கைமரத்தின் அடிக்கண் அமைத்த பரணை நோக்கி விரைந்து ஓடிவந்தது. நாங்கள் அஞ்சி ஒருவர் உடம்பை ஒருவர்

அணைத்துக்கொண்டு ஒடுங்கி அலறிக்கொண்டு நின்றோம். அது காலை முருகவேளனைய இளமையும் கட்டழகும் வாய்ந்த ஓர் இளங்குமரன், ஒரு கையில் வில்லைப் பிடித்துக்கொண்டு மற்றொரு கையால் அம்பைத் தொடுத்துக்கொண்டு அவ்வியானையை நோக்கி எய்தான்; எங்களைப் பார்த்து 'அஞ்சாதீர்' என்று ஆறுதல் மொழி கூறினன். அவ்வியானை அவன் எய்த அம்பினால் புண்பட்டுச் செந்நீர் ஆறுபோல் பாய்ந்தோட வந்த வழிநோக்கி ஓடி மறைந்தது. அவன் அன்று யானையை எய்து எங்களைக் காக்காவிடின், நாங்கள் அன்றே உயிரிழந்திருப்பேம். அத் தோன்றல் வந்த காட்சி இன்னும் எங்கள் நினைவைவிட்டு நீங்கிற்றிலது; அவன் தோளழகும், திருமுகப்பொலிவும், அவன் இனிய தோற்றமும், அவன் கனிந்த மொழியும் கண்ட நம் தோழிக்கு வியப்புத் தோன்றிற்று; 'இவனே தோழி ........ என்றாள்' என்று கூறினள்.

ஃஇவ்வாறு கூறிக் குறிப்பால் உணர்த்தலையே ஆன்றோர் 'அறத்தோடு நிற்றல்' என்பர். தோழியானவள் தலைவிக்கு மண முடிக்க வழி கோலுதலே அறமாகும்: ஆதலான், இது அறத் தோடு நிற்றலாயிற்று.

தோழி, செவிலிக்கு உரைத்ததைக் கேட்டவுடன் முன்னர் நிகழ்ச்சிகொண்டு கூர்த்தறிந்து உண்மையையுணர்ந்து செவிலி நற்றாய்க்குக் கூறுவள்; நற்றாய் தன் கணவற்குரைப்பாள்; அவன் தன் மைந்தர்க்கு அறிவித்துச் சுற்றத்தாரோடு கலந்து குறித்த தலைவனுக்கு மணம்புணர்த்துவன். மணம் புணர்த்த வழி கோலுதலே ஈண்டுக் கூறப்பட்ட அறத்தொடு நிற்றல் துறையாய இப்பாட்டு. இதில், தோழி கூறும் குறிப்புமொழி வியந்தின்புறற் பாலதாக அமைந்துளது. அவள்,

'அன்று வேங்கை மரத்தை நோக்கி வெகுண்டுவந்த யானையை யெய்து வென்ற வீரர் இங்கேவர அவரைக்கண்டு ஊர்மக்கள் இரைச்சலிடுகின்றனரோ? அல்லது, நந்திமன்ன னின் பட்டத்தியானை கட்டுத்தறியை முறித்துக்கொண்டு சங்கிலி யையும் ஒடித்தெறிந்துவிட்டுக் காட்டுக்கு ஓடிவிட்டதோ? அதைப் பிடித்தற்கு வீரர்கள் ஓடி இரைசசலிடுகின்றாரோ? தெரிந் திலது, மாமல்லபுரத்தில் பேரொலி உண்டாகின்றது; காரண மென்னவோ?' என்று செவிலிக்குக்கூறி மறையை வெளிப் படுத்துகின்றாள்.

வேழத்தை எய்து தம்மைக் காத்ததாகக் குறிஞ்சிப் பாட்டினும்,

"மையல் வேழம் மடங்கலின் எதிர்தர
உய்விடம் அறியே மாகி ஒய்யெனத்
திருந்துகோல் எல்வளை தெழிப்ப நாணுமறந்து
விதுப்புறு மனத்தேம் விரைந்தவற் பொருந்திச்
சூருறு மஞ்ஞையின் நடுங்க வார்கோல்
உடுவுறும் பகழி வாங்கிக் கடுவிசை
அண்ணல் யானை அணிமுகத் தழுத்தலின்
புண்ணுமிழ் குருதி முகம்பாய்ந் திழிதரப்
புள்ளி வரிநுதல் சிதைய நில்லாது
அயர்ந்துபுறங் கொடுத்த பின்னர்.........
..........................................
ஈர நன்மொழி தீரக் கூறித்
துணைபுணர் ஏற்றின் எம்மொடு வந்து
துஞ்சா முழவின் மூதூர் வாயில்
உண்டுறை நிறுத்துப் பெயர்ந்தனன்"[1]

எனக் கபிலர் தோழி கூற்றாகக் கூறி உணர்த்திய திறத்தானும் கண்டின்புறுக.

ஆனை: யானை என்பதன்போலி. மான்: ஈண்டு யானை. ஓகாரங்கள் ஐயமும் வியப்பும் தோன்ற நின்றன. ஆர்ப்பதே என்பதில், அது, பகுதிப் பொருள் விகுதி. ஏகாரம் - ஈற்றசை.
(நஅ)

## தலைவி கூற்று

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

ஆர்க்கின்ற கடலோதம் ஆர்க்கும் ஆறும்
அசைகின்ற இளந்தென்றல் அசையும் ஆறும்
கூர்க்கின்ற இளமதியம் கூர்க்கும் ஆறும்
காணலாம் குருக்கோட்டை குறுகா மன்னர்
போர்க்கின்ற புகர்முகத்துக் குளித்த வாளி
பூதலத்து வடிம்பலம்பப் பூண்ட வில்லோன்
பார்க்கோன்று செந்தனிக்கோல் பைந்தார் நந்தி
பல்லவர்கோன் தண்ணருள்யாம் படைத்த ஞான்றே.

---

1. குறிஞ்சிப் பாட்டு; கரு௫ - எச; உநச - எ.

(இ - ள்.) குருக்கோட்டை - குருக்கோட்டையில் நிகழ்ந்த போர்க்களத்தில், குறுகா மன்னர் - தன்னைச் சாராத பகைவேந்தர்களின், போர்க்கின்ற புகர்முகத்துக் குளித்த - முகபடாத்தால் மூடுகின்ற புள்ளிபெற்ற ஆண் யானையின் மத்தகத்தினிடத்துப் பாய்ந்த, வாளி வடிம்பு அலம்ப - அம்புகளின் விளிம்புகளைக்கழுவுமாறு, பூண்ட வில்லோன் - கையிற்கொண்ட வில்லினையுடையோனும், பார்க்கு - இந் நிலவுலகத்திற்கு, ஒன்று - ஒத்ததான, செம் தனிக் கோல் - வளையாத அறமுறையுடைய ஒப்பற்ற செங்கோலாட்சியைக் கொண்ட, பைந்தார் நந்தி - பசுமையுடைய ஆத்தொண்டை மாலையையணிந்த நந்தி யென்னும் பெயருடையானுமாகிய, பல்லவர் கோன் - பல்லவர்குலத்திற்குத் தலைமையானவனது, தண் அருள்-கனிந்த அன்பை, யாம் படைத்த ஞான்றே - நாம் பெற்றபொழுதே, ஆர்க்கின்ற கடல் ஓதம் - முழங்குகின்ற கடலின் அலைகள், ஆர்க்கும் ஆறும் - முழங்கும் நிலைமையும், அசைகின்ற இளந் தென்றல் - மெல்ல அசைந்துகொண்டு வருகின்ற மென்மையான தென்றற் காற்றானது, அசையும் ஆறும் - அசைந்து வருகின்ற நிலையையும், கூர்க்கின்ற இள மதியம் - கதிரொளிமிக்கதான இளம் பிறையானது, கூர்க்கும் ஆறும்- கதிரொளி மிகும் நிலையையும், காணல் ஆம் - இனி அஞ்சாது பார்க்கலாம். (இனிக் கவலையில்லை.)

(வி - ரை.) நந்தி மன்னன்பால் காதலால் அலைப்புண்டு வாடிய நங்கையொருத்தியைத் தானும் காதலித்தான்; இயற்கைப் புணர்ச்சியில் இருவரும் கலந்தனர்; இன்பந்துய்த்தனர். அப்பால் தலைவி மகிழ்ந்து தன் நெஞ்சோடு பேசுவதாக அமைந்தது இப்பாட்டு.

'முன்பு, கடலின் இரைச்சல் கேட்டால் அச்சம்! இளந் தென்றற் காற்று மெல்ல அசைந்தால் பதைபதைப்பு! மாலைப்பொழுது வந்து அந்திவானத்துத் திங்கட் செல்வன் தோன்றுவானானல் ஒரே துன்பம்! இனி இவைகளைக்கண்டு அஞ்சவேண்டுவதில்லை! 'வருக, வருக' என்று அவைகளை வரவேற்கலாம். குருக்கோட்டைப் போர்க்களத்தில் பகைவேந்தர்களின் யானைகளுடைய மத்தகத்துப் பாய்ந்த அம்புகளில் படிந்துள்ள இரத்தக் கறைகளைக் கழுவும்படியான வெற்றிவில்லைக் கைக்கொண்டவனும்,

கோல்முறை கோடாக் கொற்றவனும், நந்தியென்னும் திருப் பெயரையுடையவனுமாகிய பல்லவர்குலத் தலைவனது தண்ணருளைப் பெற்றுவிட்டமையால்' என்று கூறுகின்றாள்.

ஒருதலைக் காமங்கொண்ட மங்கையர்க்கோ ஆடவர்க்கோ கடலின் ஒலியும் இளந்தென்றலும் நிலவின் ஒளியும் காதலுணர்வை மிகுதிப்படுத்தி வாட்டுவன ஆகும். அவர்கள் தம் காதல் முற்றி இருவரும் ஒன்றுபட்டுக் கலந்தபின்னர், துன்பந்தந்த அவைகள் இன்பந்தருவன ஆகும். ஆதலால் இங்கே தலைவி இவ்வாறு தன் மகிழ்ச்சியை வெளிப்படுத்திக் கூறினாள். திருக்கோவையாரில் தோழி கடலிடை வைத்துத் துயரறிவித்தலாக,

[1]'.............. இவள் துவள
ஆர்த்துன் அமிழ்தும் திருவும் மதியும் இழந்தவம் நீ
பேர்த்தும் இரைப்பொழி யாய்பழி நோக்காய் பெருங்கடலே'

எனவும்,

சந்திரவிலாசம் என்னும் தனி நூலில் நிலவின் ஒளி தன்னை வருத்துவதாகக் கட்டுரைக்கும் தலைவி,

[2]'மனத்தில் நினைத்த அனைத்துமரு
மனத்தி னவர்க்கு மிகத்தருசெம்
மதிமா நிதிவே லப்பதிட
மதிமான் மயலால் வருந்தெனது
தனத்தை வளர்த்தாய் நான்பலதெந்
தனத்தை யலர்க்குத் தோற்றசின்னத்
தனத்தை அறியா யந்தோகந்
தனத்தை யொடுதோன் றியுஞ்சசியே

எனவும்,

முத்தொள்ளாயிரக் காதலி வாடையொடு பேசுவதாக,

[3]'வண்டொன்று வந்தது வாரல் பனிவாடாய்
பண்டன்று பட்டினம் காப்பு'

எனவும்,

நம்பியாரூரரைக்கண்டு வருந்திய பரவைநாச்சியார் கூற்றாகத் தொண்டர் புராணத்துள்,

---

1. திருக்கோவையார்: ககஉ. 2. சந்திரவிலாசம்: கூஅ.
3. முத்தொள்ளாயிரம்: ௧0௨.

[1] 'பிறந்த தெங்கள் பிரான்மல யத்திடை
சிறந்த ணைந்தது தெய்வநீர் நாட்டினில்
புறம்ப ணைத்தடம் பொங்கழல் வீசிட
மறம்ப யின்றதெங் கோதமிழ் மாருதம்'

எனவும் வருவனகொண்டு ஒப்பு நோக்கி மகிழ்க.

ஓதம் - கடல். அதன் அலைக்கு வந்தது, ஆகுபெயர். கூர்த்தல் - மிகுதல். கூர் என்னும் உரிச்சொல்லடியாகப் பிறந்த தொழிற்பெயர். அது ஒளிமிகுதல் என்னும் பொருளில் இங்கு வந்தது. போர்த்தல் என்னும் வினையினால் யானையின் முகபடாம் எனக் குறிப்பெச்சச் சொல் வருவித்துரைக்கப்பட்டது. வடிம்பு அலம்ப - விளிம்பைக் கழுவ. பகைவர் யானையின் மத்தகத்தைத் துளைத்துருவிய அம்பு, செந்நீர்க்கறை படிந்திருக்குமாதலால், அதைக் கழுவுவதை எடுத்து இங்குக் கூறப்பட்டது, மன்னன் பெருவலிமை தோன்ற. செம் தனிக்கோல் - செம்மையான ஒப்பற்ற செங்கோலாட்சி. இதனைக் கம்ப நாடரும்,

[2] 'நந்தியம் பதியிடை நாதன் பாதுகம்
செந்தனிக் கோல்முறை செலுத்த'

என்று கூறுவது ஈண்டு நினைவுகூரற் பாலது. தண்ணருள் - களங்கமற்ற உயரிய அன்பு. அஃது[3] 'உயிரொன்று உளம் ஒன்று ஒன்றே சிறப்பிவட்கு என்னோடென்ன' என்னக்கொள்ளும் குறையிலா நிறையன்பு. [4] 'அருளென்றது, அருளான் வரும் ஆனந்தம்' என்பர் பேராசிரியர். ஞான்று என்பது நாளைக் குறிக்காது அந்த நாழிகையைக் குறித்து நின்றது. ஏகாரம் தெளிவுப் பொருளில் வந்தது. (௩௬)

## தலைவன், சிறைப்புறமாகத் தோழி செறிப்பறிவுறுத்தல்

### கலிவிருத்தம்

ஞான்ற வெள்ளருவி இருவி எங்கள்போன்
தோன்றல் வந்திடில் சொல்லுமின் ஒண்சுடர்
போன்ற மன்னவன் நந்திதன் பூதரத்து
ஈன்ற வேங்கை இருங்கணிச் சூழ்ச்சியே.

---

1. பெரியபுராணம்: தடுத்தாட்: கசுஎ.
2. கம்பராமா: அயோ,கிளைகண்டு: கசo.
3. திருக்கோவையார்: கஅ. 4. ஷை உரைக்குறிப்பு.

(இ - ள்.) ஞான்ற வெள் அருவி - மலை முகட்டி லிருந்து கீழிறங்கி வருகின்ற வெண்ணிற அருவிகளே! இருவி-தினைத்தாள்களே! ஒண்சுடர் போன்ற-ஒளிபொருந் திய ஞாயிறு திங்கள் போன்றவனை, நந்தி மன்னவன் பூதரத்து-நந்திவேந்தனுக்குரிய மலைச்சாரலிலுள்ள, இருங் கணி வேங்கை-சிறந்த ஒளி நூற்புலவன் போன்ற வேங்கை மரத்தினது, ஈன்ற சூழ்ச்சி - மலர் பூத்து நிற்கின்ற முன் னறிவிப்புத் தன்மையாகிய வஞ்சத்தை, எங்கள் பொன் தோன்றல் வந்திடில் சொல்லுமின் - எங்களுக்குரிய பொன் போன்று மதித்தற்குரிய தலைவர் எங்களைக் காண்பதற்கு இங்கே வந்தால் சொல்வீர்களாக. ஏகாரம் : ஈற்றசை.

(வி - ரை.) இயற்கைப்புணர்ச்சி இன்பத்தில் ஈடுபட்ட தலைவ னும் தலைவியும் தோழியின் உதவிகொண்டு தலைவியும் தோழி யும் தினைப்புனங்காத்து வருகின்ற மலைச்சாரலின்கண் குறித்த ஓரிடத்துப் பகற்குறியில் இன்பந்துய்த்தாராக; அவ்வாறே காலங் கள் சென்றன; தினையும் கதிர்முற்றி விளைந்தது; வேங்கை மரங் களும் தழைத்துப் பூத்து நின்றன; அக்காலநிலையை - கதிர்கள் விளைவு முற்றியதை-அறிந்த தலைவியின் தாய் தந்தை முதலியோர் தினைக்கதிர் அறுக்க முற்பட்டனர்; சில இடங்களில் கதிர்களை நாளுக்குநாள் ஒப்படி செய்துகொண்டு வந்தனர்; இனித் தினைப் புனங் காவல் இல்லை; செவிலி, வீட்டிற்கு நம்மை அழைத்துப் போய்க் காவல்கொள்வாள்; தலைவரைக் காண்பதும் இனி அரிதா கும் என்று எண்ணமிட்டாள் தோழி; கலங்கினாள்; தலைவியும் வருத்தங் கொண்டாள். இவர் இவ்வாறாக, ஒருநாள் இவ் விருவரையும் நோக்கி 'இன்று நீவிர் இருவரும் வீட்டுக்குச் செல்க' என்றாள் செவிலி. தோழிக்கு வெந்த புண்ணில் வேலெறிந்தாற் போன்று கொண்ட வருத்தத்தைக் கிளறிவிட்டது. வருந்திக் கொண்டிருந்தாள். அதுகாலைத் தலைவன், வேலிக்கப்புறம் வந்து மறைவாக நின்றான். தோழியும் தலைவியும் கண்டனர். அப் போது மலையிலிருந்து ஓடிவருகின்ற அருவிகளையும் அறுபட்ட தினையின் தட்டைகளையும் நோக்கித் தலைவனுக்கு அறிவுறுத்து மாறு தலைவன் கேட்டுணரும்படி கூறுவதாக அமைந்தது இது.

'ஏ! அருவிகளே! கதிரறுபட்ட தினைத் தட்டைகளே! பொன்போல் உயர்வாக எல்லோராலும் மதித்தற்குரியரான எங்கள் தலைவர், எங்களைத் தேடி இவண் வருவார்; வந்தால், ஞாயிறு திங்கள் போன்று தீயோரை ஒறுத்தும், நல்லோரைக் காத்தும் வருகின்ற நந்தி மன்னனுக் குரிமையான இம் மலைச்

சாரலில் வளர்ந்திருக்கின்ற சோதிடன்போல வருங்காலத்தின் நிகழ்ச்சியை அறிவிக்கின்ற வேங்கைமரத்தின் முன்னறிவிப் பாகிப் பூக்கள் மலர்ந்து மணங்கமழ்ந்து கொண்டிருக்கின்ற வஞ்சநிலையை மறவாது கூறுவீராக' என்கின்றாள்.

உலகிலுள்ள மரங்கள் செடிகொடிகள் முதலிய இயற்கை உயிர்கள், குளிர்காலங்களில் தழைகள் அடர்ந்து செழித்திருப்ப தும், வேனிற்காலமாகிய கோடை பிறந்தவுடன் பழைய தழை களை உதிர்த்து மென்தளிர் ஈன்று, கிளைவெடித்து, இலைகொண்டு அரும்பிப் போதாகி மலர்வதும் நாம் இயற்கையாகக் காண்டு மன்றோ? அதுபோன்றே, பின்பனிக்காலத்திறுதியில் தினை விளை தலும் வேங்கை மரங்கள் பூத்தலும் தவறாது நிகழும் நிகழ்ச்சி யாகும். மலைவாணர்களாகிய குறவர், தூறலாக மழைபெய்யுங் கால், சந்தனக்காடுகளை வெட்டி நிலத்தைத் திருத்தித் தினை விதைப்பர். அவை பயிராகி வளர்ந்து கதிர்கள் பறியுங்கால் தினைப் புனத்தில் கிளி முதலிய பறவைகள் வந்து அக் கதிர்களைக் கொய்துகொண்டு போதற்கு வாராவண்ணம் ஓட்டிப் பாது காத்தற்குத் தம் பருவம் வந்த இளமகளிரை அவண் இருத் துவர். மலைவாணர் தினை விளையுங்காலம், வேங்கை மரங்கள் பூத்து நிற்கும் காலமே என வுணர்வர். வேங்கை பூத்தால் தினை விளை வுக்கு வந்ததெனஉணர்ந்து கதிரறுக்க முற்படுவர். காலத்தைத் தவறாது இவ்வாறு உணர்த்துவதால் வேங்கை மரத்திற்கு நம் தமிழ்ச் சான்றோர், 'கணி' எனப் பெயர் சூட்டி அதன் உண் மையை உணர்த்துவாராயினர்.

ஆதலால் இங்கே வேங்கை பூத்தலால் தினைவிளைந்ததெனக் கருதிவந்து தினைக்கதிர்களைக் கொய்வாராயினர். தோழி, இதைக் கண்டு, 'நம்மைத் தலைவரிடமிருந்து பிரிக்கச் செய்தது, இவ் வேங்கையன்றோ? இல்லையேல் என்னைமார் தினையறுக்க வரமாட் டாரன்றோ?' என்னுங் கருத்தினளாய், அருவிகளையும் தினைத் தாள்களையும் நோக்கி, 'எம் தலைவர் வந்தால் இந்த வேங்கையின் வஞ்சச் சூழ்ச்சியைக் கூறுங்கள்; இவ்வேங்கை பூத்தன்றோ காலத் தைச் சொல்லி எம் தாய் தந்தை முதலியோரைவரச் செய்தன' என்ற கருத்துச் செறிந்ததாய், உள்ளக் கருத்தைக் குறிப்பால் உணரவைப்பதாய், 'ஈன்ற வேய்ங்கை இருங்கணிச் சூழ்ச்சியே' என்றாள்.

என்னே! மதிநுட்பம் நூலோடுடைய ஆசிரியரின் நுண் மாண் நுழைபுலத்திறன்!

ஞான்ற - தொங்கிய. தொங்குதல் மலையினின்றும் கீழ் நோக்கி வருதல்: அருவிக்கு அடை. இருவி - தினைத்தட்டை. கதிரறுத்தபின் தினைத்தாளின் அடிப்பகுதி. தோன்றல் - சிறந்த

வன், ஈண்டுத்தலைவன். ஒண்சுடர் - ஒளியுள்ள விளக்கம்: ஈங்கே சூரியன், சந்திரன். அரசர்கள் தீயோரைத்தண்டித்தலும் நல்லோரைக் காத்தலும் இயற்கைநெறியாதலால் ஞாயிறு போன்ற வெப்ப நிலையை அவன் ஒறுத்தல் தன்மைக்கும், திங்கள்போன்ற குளிர்ந்தநிலையை அவன் அருள்செய்தலுக்கும் உவமையாக்கிக் கூறினார். பூதரம் - மலை. கணி - வேங்கைமரம். (௬0)

மன்னன் உலாக்கண்ட தலைவி கூற்று

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

சூழி வன்மத யானையின்
பிடர்படு சுவடிவை சுவட்டின்கீழ்
வாழி இந்நில மன்னர்வந்
தனுதினம் இறைஞ்சிய வடுக்கண்டோம்
ஆழி மன்னவ அன்னையர்
ஆய்ச்சியர் அடுங்கயிற் றடிபட்ட
பாழி மன்னெடும் தோள்வடுக்
கண்டிலம் பல்லவ பகர்வாயே.

(இ - ள்.) ஆழி மன்னவ - ஆணை உருளையால் உலகை யாள்வோய்! பல்லவ - பல்லவர்மரபில் தோன்றிய நந்தி மன்னு! சூழி - முகப்பட்டமணிந்த, வன்மத யானையின் - வலிய மதத்தையுடைய களிற்றியானையினது, பிடர்படு சுவடு இவை - பிடரி அழுத்துதலால் (உன் கால்களில்) உண்டாகிய அடையாளத் தழும்பு இவைகளாகும், சுவட்டின்கீழ் - அத்தழும்புகளுக்குக் கீழிடத்தில், வாழி-இன்ப வாழ்வினையுடைய, இந்நில மன்னர் - இவ்வுலகத்திலுள்ள மன்னர்கள், அனுதினம் வந்து இறைஞ்சிய - நாள்தோறும் வந்து வணங்குதலால் (உன் கால்களில் உண்டாகிய), வடு கண்டோம் - தழும்புகளையும் பார்த்தோம், அன்னையர் ஆய்ச்சியர் - உன் அன்னையாரும் ஆயர்குல மங்கையர்களும், அடும் கயிறு - தயிர்கடைகயிற்றினால், அடிபட்ட - உன்னை அடித்தலால் உண்டாகிய, பாழி மன் நெடும் தோள்வடு கண்டிலம் பகர்வாய் - பெருமையுடைய வலிமையுடைய

நீண்ட தோள்களில் மறுவினைக் கண்டோமில்லை, என்ன காரணம்? அதை எங்களுக்குக் கூறுவாயாக.

(வி - ரை.) நந்திமன்னன் ஒருநாள் உலாவந்தான்; மக்கட் கூட்டம் வழியெங்கும் தொடர்ந்து சென்றது; அக் கூட்டத்தில் மன்னனிடம் மாறாக்காதல் கொண்ட நங்கையர்பலரும் தொடர்ந்து சென்றனர்; அவர்கள் நெருங்கிநின்று மன்னன் அழகை அடிமுதல் முடியீறாகப் பார்த்தவண்ணமாக நின்றனர்; அவருள் காதல் மிக்க நங்கையின் தோழி ஒருத்தி, மன்னனை நன்கு கூர்ந்து நோக்கினாள். அவள், 'மன்ன நீ நாள்தோறும் யானை மீதேறி உலாவருதலால் யானையின் பிடரி அழுத்தி, அதனால் உண்டான தழும்புகள் உன் கால்களில் நன்கு புலப்படும்படி இதோ இருக்கின்றன; அதற்குக்கீழ் நாள்தோறும் உன்பால் வந்து குறை கூறி, முறை வேண்டிய வேற்றுப்புலத்து வேந்தர்கள் வணங்குதலால் அவர் முடிபட்ட தழும்புகள் தெற்றெனப்புலனாகின்றன; அத்தழும்புகள் மறையவில்லை; ஆனால், தோள்களில் எந்தவடுவும் இல்லையே! அன்று ஆயர்பாடியில் யசோதையாகிய உன் தாய் தயிர்கடை கயிற்றால் கட்டிவைத்து அடித்த தழும்பும், ஆயர் குலப் பெண்கள் வெண்ணெய் திருடியுண்டதற்காகக் கயிற்றால் கட்டி அடித்தார்களே, அத்தழும்புகளும் காணப்படவில்லையே? என்னகாரணம் எங்கட்கு விளங்கக் கூறுக?' என்று மன்னனை வினவுகின்றாள். இம்முறையில் அமைந்தபாட்டு இது.

அரசர்கள் திருமால் சாயலென ஆன்றோர் கொள்வது மரபு. என்னை?

[1]'முறை செய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறையென்று வைக்கப் படும்'

என்று வள்ளுவரும்

[2]'செங்கண்மால் அல்லனேல் தேர்வேந்தர் ஒப்பரோ
அங்கண்மா ஞாலத் தவர்க்கு'

என்று புகழேந்தியாரும்,

[3]'திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே என்னும்' என்று ஆழ்வாரும், இன்னும் பிறரும் கூறுமாற்றால் அறியப் பெறும்.

---

1. திருக்குறள்: ருஅஅ. 2. நளவெண்பா:
3. திருவாய்மொழி:

இம்முறையில் ஈண்டுத் தோழி வேந்தனைத் திருமால் பிறப்பினனாகக் கொண்டு, திருமால் கண்ணனாக ஆயர்பாடியில் அவதரித்த காலையில் குழந்தைப்பருவத்தில் ஆங்கே உறியிலுள்ள தயிரையும் வெண்ணெய்யையும் திருடியுண்டு அவர் அடியுண்ட வரலாற்றை மன்னனுக்கு ஏற்றி யுரைத்தாள்.

இதனால் மன்னன் கால்களில் யானையேற்றத்தால் உண்டான தழும்பும், வேற்றுவேந்தர் தம்முடி படியப் பணிதலால் உண்டாய தழும்பும் காணப்பெறுகின்றன; தோள்களில் போருக்குப் பன்முறை போயும் வேற்றுப் பகைமன்னர் யாவரும போரில் எதிர்த்துப் போரிட ஆற்றாது புறமுதுகிட் டோடினமையால் எவர் அம்பும் வேலும் படாது வீறுபெற்று விளங்குகின்ற தோள்களாகவே இருக்கின்றன. இவைகளில் வடுவில்லையே என்னகாரணம் என வினவித் தோளின் மேம்பாட்டின் சிறப்பையும் விளக்கிக் கூறியதறிக. [1]'கை வண்ணம் அங்கு கண்டேன், கால் வண்ணம்இங்குகண்டேன்'என்னும்கம்பர் கருத்தோவியமும் ஈண்டு நினைவுகூர்தற்குரியது.

இக்கருத்தோ டொப்ப மன்னன் காலின் சிறப்பை, விளக்குவதாக முத்தொள்ளாயிர நூலில் அமைத்து வாயில்காவலன், 'மன்னர்களே! எம் வேந்தர்பெருமானை இப்போதுபோய்க் காண்டற்கு ஏற்ற செவ்வியில்லை; திறைப்பொருள் செலுத்தற்கு வந்த மன்னர்கள், தம் முடிகள் தாக்கும்படி வணங்குவதால் எம் மன்னர் திருவடி புண்ணாகி இருககிறது; அஃது ஆறுந் துணையும் வாராதீர்கள்' என்று விலககுகின்றான; அஃது இஙகே காண்க.

[2]'நின்றீமின் தெவ்விர் நெருநல் திறைகொணர்ந்து
முன்தந்த மன்னர் முடிதாக்க—இன்றும்
திருந்தடி புண்ணாகிச் செவ்வி இலனே
பெருந்தண் உறந்தையார் கோ.'

[3]'எந்தை கழலிணையில் எம்மருங்கும் காணலாம்
கந்து சுளியும் கடாக்களிற்றின்—வந்து
பணிமுடியில் பார்காக்கும் பார்வேந்தர் தங்கள்
மணிமுடியில் தேய்ந்த வடு.'

இவ்வாறே மன்னன்றன் மறுவைக் குறித்து,

---

1. கம்பராம, பாலகாண்டம், அகலிகை: அஉ.
2, 3. முத்தொள்ளாயிரம்: கூஎ.

[1]'கூந்தன்மா கொன்று குடமாடிக் கோவலனாய்ப்
பூந்தொடியைப் புல்லிய ஞான்றுண்டால்—யாங்கொளித்தாய்
தென்னவனே தேர்வேந்தே தேறுநீர்க் கூடலார்
மன்னவனே மார்பின் மறு.'

என்று கூறுவதாக அமைந்த முத்தொள்ளாயிர ஓவியங்களும் ஒப்புநோக்கிச் சுவைத்து இன்புறற்பாலன.

சூழி-யானை முகப்பட்டம். சுவடு-தழும்பு. வாழி: வாழ்+இ எனப் பிரித்து வாழ் என்னும் பகுதியும் இ என்னும் விகுதியும் பெற்ற தொழிற் பெயர், வியங்கோள் வினை முற்றன்று. (சக)

## தோழி கூற்று

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

பகரங்கோள் நெடுந்திவலை பனிவிசும்பில்
பறித்தெறியப் பண்டு முந்நீர்
மகரங்கோள் நெடுங்கூல வரைதிரித்த
மாலென்பர் மன்னர் யானை
சிகரங்கள் போல்மடியத் தெள்ளாற்றுக்
கண்சிவந்தான் தென்னன் தொண்டி
நகரங்கைப் படுத்தபிரான் நந்திநர
பதிபணிகோன் நங்கள் கோவே.

(இ - ள்.) மன்னர் யானை - பகை வேந்தர்களின் யானைகள், சிகரங்கள்போல் மடிய - மலையின் மேல்முடி போல் கீழே வீழ்ந்து இறக்கும்படியாக, தெள்ளாற்றுக் கண்-தெள்ளாறென்னுமிடத்தில் நிகழ்ந்த போரில், சிவந்தான் - சினங்கொண்டு கொன்றவனும், தென்னன் தொண்டிநகர் - பாண்டிய மன்னனுக்குரிய தொண்டியென்னும் ஊரினை, அங்கை படுத்த பிரான்-தன் ஆளுக்கைக்கு உரிமையாக வென்ற பெருமையையுடையானும், நந்தி - நந்தியென்னும் பெயருடையவனும், நரபதி பணிகோன் - மக்களின் தலைவர்களாகிய வேந்தர்கள் வணங்கும் வேந்

1. முத்தொள்ளாயிரம்.

தனுமாகிய, நங்கள் கோ - எங்கள் வேந்தனை, பகரங்கொள் நெடும் திவலை - ஒளிபொருந்திய நீண்ட நீர்த்துளிகளை, பனி விசும்பில் - குளிர்மையுள்ள வானிடத்தில், பறித்து எறிய - பிரித்து எறியும்படி, மகரம் கொள் நெடும் கூல முந்நீர் - மகர மீன்களையுடைய மிகுந்த நீரினையுடைய கடலை, பண்டு - முற்காலத்தில், வரைதிரித்த மால் என்பர் - மந்தர மலையைச் சுழற்றியெறிந்து கடல் கடைந்த திருமால் பிறப்பென்று யாவரும் கூறுவார்கள்.

(வி - ரை.) முற்பாட்டில் கூறியவாறே இப்பாட்டிலும் நந்தி மன்னனைத் திருமால் அவதாரமாகக் கூறி வியக்கின்றார். இதில், நரை திரை மூப்பு சாக்காடு அணுகா மருந்தாகிய அமிழ்தத்தைத் தேவர்கட்குக் கொடுக்கும் பொருட்டுப் பாற்கடலைத் தயிராக கொண்டு, அதற்கு மந்தரமலையை மத்தாக நாட்டி, வாசுகி யென்னும் பெரும்பாம்பைத் தயிர்கடை கயிறாகக் கொண்டு, தேவர்களையும் அவுணர்களையும் தயிர் கடையுமாறு ஏவிக் கடைந்து, அதிலுண்டாகிய அமிழ்தத்தைத் திருமால் பங்கிட்டுக் கொடுத்தாரென்று புராணங்கள் விரித்துக் கூறும். அக் கதையைக்கொண்டு வேந்தன் திருமால் பிறப்பினனாக ஆன்றோர்களால் கொள்ளப்படுவதால் 'முந்நீர்' .....நெடுக்கூல வரைதிரித்தமா லென்பர்' என்றார்.

இதனை இளங்கோவடிகள் தாம் அருளிய சிலப்பதிகார ஆய்ச்சியார் குரவையுள், முன்னிலைப் பரவலாக,

[1]'கடல்வண்ணன் பண்டொருநாள் கடல்வயிறு கலக்கினையே
கலக்கியகை அசோதையார் கடைகயிற்றால் கட்டுண்கை
மடற்கமல உந்தியாய் மாயமோ மருட்கைத்தே.'

என்றருள்வதும் காண்க.

அரசர்களைத் திருமால்பிறப்பினராகக் கொள்ளுதல் பண்டைய இலக்கியங்களிலும் பிற்கால இலக்கியங்களிலும் பரந்து வருதல் அவ்வவ் நூல்களிற் காண்க.

அரசர்களைத் திருமால் பிறப்பினராகக் கொள்ளுதலால் பெருமையாது? என வினவின், திருமால் காத்தற் கடவுளாதலானும், அழகிற் சிறந்தானாதலானும் திருமகளைத் தன் மார்பினிடத்து வைத்திருப்பதனால் செல்வமிக்கானாதலானும் இவ்வியைபு நோக்கியே அறிஞர்கள் கொண்டார் எனக் கொள்க.

---

1. சிலப்பதி, ஆய்ச்சியர், முன்னிலை:

அன்றியும் இறைவன் கருத்தால் எல்லாவகை உயிர்களும் காக்கப் படுதல் போல, அரசன் கருத்தால் அவன் எங்கிருப்பினும் உலக இயல் நிகழ்ச்சிகள் அறத்துக்கு மாறின்றி நடப்பதால் அரசனைத் திருமால் பிறப்பாகக் கொண்டாரென்றும் கொள்ளலாம். இக்கருத் தொப்ப,

> [1]"உறங்கும் ஆயினும் மன்னவன் தன்னொளி
> கறங்கு வெண்திரை வையகங் காக்குமால்

எனத் திருத்தக்க தேவர் கூறுமாற்றானும் அறிக.

பகரம் - ஒளி, அல்லது அழகு என்னும் பொருளது. திவலை- துளி. சிறுசிறு துளிகளாக நீர் சிதறப்படும்போது கருமை பொன்மை செம்மை முதலிய ஏழுவகை நிறமும் காணப்பெறுவதால் ஒளி யென்று கூறினார். மகரம் - மகரமென்னும் ஒருவகை மீன்; அதுவே, சுறா என்னும் பெயரால் வழங்கப்படுவது. சிவந்தான் என்றது, மன்னன் வென்றதைக் குறித்தது. கண் என்பதை இடப் பொருள் உருவாகக் கொள்ளாது, கண்ணென்றே கொள்வதும் பொருந்தும் 'நீ சினக்குங்கால் எரிதவழ' என்னும் கருத்தையும் நோக்குக. தென்னன்-பாண்டி மன்னன். தொண்டி- தொண்டி யென்னும் கடற்கரைப் பட்டினம் இது காலே இராமநாதபுர மாவட்டத்தில் இன்றும் இப் பெயரானே வழங்குதல் காண்க. உரிமைபாராட்டி நந்தி மன்னனைத் தோழி 'நங்கள்கோ' என்றாள். (சுஉ)

## இதுவும் அது

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

> நங்கள்கோத் தொண்டை வேந்தன்
> நாமவேல் மன்னர்க் கெல்லாம்
> தங்கள்கோன் அங்க நாடன்
> சந்திர குலப்ர காசன்
> திங்கள்போல் குடையின் நீழல்
> செய்யகோல் செலுத்தும் என்பர்
> எங்கள்கோல் வளைகள் நில்லா
> விபரிதம் இருந்த வாறே.

(இ - ள்.) நங்கள் கோ - எங்கள் மன்னனும், தொண்டை வேந்தன் - தொண்டை மண்டிலத்துக்குத்

---

1. சீவகசிந் :

தலைவனும், நாமவேல் மன்னர்க்கு எல்லாம் - யாருக்கும் அச்சத்தைத் தருகின்ற வேற்படையேந்திய அரசர்கள் யாவருக்கும், தங்கள் கோன் - சிறந்த மன்னனும், அங்க நாடன் - அங்கதேசத்தை யாள்வோனும, சந்திரகுல ப்ரகாசன் - திங்கள்மரபை விளங்கச்செய்வோனுமாகிய நந்திமன்னன், திங்கள்போல் - நிறைநிலாவை ஒத்து விளங்குகின்ற, குடையின் நீழல் - வெண்கொற்றக்குடை நிழலின்கண்ணேயிருந்து, செய்யகோல் - நேர்மையான அரசாட்சி, செலுத்தும் என்பர் - செய்கின்றானென்ன யாவரும் எங்கும் கூறுகின்றனர், எங்கள் கோல்வளைகள் நில்லா - (ஆனல் நாங்கள் கைகளில் அணிந்துள்ள) எங்களின் அழகிய வளையல்கள நில்லாதனவாய்க் கழன்று கீழே வீழ்கின்றன, விபரீதம் இருந்த ஆறே - இச் செங்கோலுக்கு மாறுபட்டிருக்கும் தன்மை என்னவோ? (செங்கோல் மாண்பு, தன்பால் அன்புடையார்க்கு அருளுதல் அன்றோ? அதற்குமாறாக வருத்தங் கொடுப்பது தான் செங்கோற் சிறப்போ? மக்கள் யாவரும் இதனை எவ்வாறு அறமென வழங்குகின்றனரோ? என்றபடி)

(வி - ரை.) காதல்கொண்ட மங்கையர்க்கெல்லாம், உடலும் தோள்களும் காதல் எண்ணத்தால் மெலிவதால், அரையில் உடுத்த உடையும் கையிலணிந்த வளையல்களும் கழன்று நழுவுவது இயல்பாகும். இங்கே தோழியும் காதல் நங்கையும் நந்திமன்னன் உலாவருங் காட்சியைக் காணப்போந்தாராக, கண்டதும் காதல் மனத்தைக் கவற்றத் தோள் மெலிந்து, தம் வளையல் கழன்று கீழ்விழ, உணாவிழந்து நின்றனர். இதனைக்கண்ட தோழி, 'எங்கள் மன்னனும், தொண்டை மண்டலத்துக்குத் தலைவனும், கண்டார்க்கெல்லாம் அச்சத்தைத் தருகின்ற வேந்தர்கட்கெல்லாம் வேந்தனும், அஙக நாட்டை ஆள்பவனும், தான் பிறந்த திங்கள் மரபை விளக்குவோனுமாகிய நந்தி மன்னன், நிறை நிலாப் போன்ற வெண்கொற்றக்குடை நிழற் கீழிருந்து அறமுறை திறம்பாது செஙகோல் செலுத்துகின்றானென்று நாடெங்கும் சொல்கின்றார்கள். ஆனல், இவன் செங்கோல் மாண்பை உற்று எண்ணினல், அது பொய்யென்றே விளங்குகின்றது. ஏனெனின், யாங்கள் யாவரும் அரசன்பால் உள்ளமொருமித்த அன்பினேம்; எங்கட்கு ஆதரவுதந்து காத்தலன்றோ கடனும் முறைமையுமாகும்? அவ்வாறின்றி எங்கள் கைவளையல்கள் கழன்றுவிழ நாங்கள்

மெலிந்துவாடும்படி செய்வதுதான் முறையா? செங்கோல் மாண்பா? இது விபரீதமாக இருக்கின்றது! இதைச் செங்கோல் முறைமையென உலகத்தார் பேசுகின்றார்கள்; உலகமக்கள் மிக அறியாமையுடையார் போலும்!' எனத் தன் குறையை எடுத்து முறையோடு பேசிக் கேட்கின்றாள்.

இக் கருத்தோடொப்பத் தென்னவர் பெருமானாகிய பாண்டி வேந்தன் உலாவைக் காணவந்த நங்கையொருத்தி காதலால் கட்டுண்டு தன் நிறையிழந்து நாணமும் போக்கி வளை கழன்று நின்றபோது பேசியதாகவுள்ள முத்தொள்ளாயிர ஓவியங்களும் படித்து இன்புறற்பாலன.

[1] 'மன்னுயிர் காவல் தனதாக அவ்வுயிருள்
என்னுயிரும் எண்ணப் படுமாயின்—என்னுயிர்க்கே
சீரொழுகு செங்கோல் செழியர்க்கே தக்கதோ
நீரொழுகப் பாலொழுகா ஆறு'

[2] 'தானே தனிக்குடைக் காவலனால் காப்பதுவும்
வானேற்ற வையகம் எல்லாமால்—யானோ
எளியேனோர் பெண்பாலேன் ஈர்ந்தண்தார் மாறன்
அளியானேல் அன்றென்பார் ஆர்.'

சந்திரகுல ப்ரகாசன்: வடசொற்றொடர். திங்கள் மரபை விளக்குவோன் என்பது பொருள். திங்கள் - கலைநிறைந்த நிலவு. அதைப்போல் வட்ட வடிவாகவும் ஒளியாகவும் இருப்பதால் வெண்கொற்றக்குடைக்கு உவமை கூறினாள். [3]'திங்கள்மூன் றடுக்கிய திருமுக்குடை' என, அருகதேவன் குடைகட்கு இளங்கோ ஒப்புரைத்ததும் அறிக. கோல் - கோலம் என்பதன் கடைக்குறை விபரிதம் - வேறுபாடு. விபரீதம் எனற்பாலது, இசைநோக்கிக் குறுகிற்று. இருந்தவாறு - இருந்த தன்மை; மாறுபட்ட தன்மை. (சரு)

## இதுவும் அது

### கட்டளைக் கலித்துறை

ஆறு விறலடு போர்வன்மை யாலமர் ஆடியப்பால்
பாறூர் களிற்றுயர் பல்லவர் கோனந்தி மல்லையன்றிக்
கூறுள் இவளிளங் கொங்கை அவன்வளர் தொண்டையல்லால்
நாறு திவள்திரு மேனியும் நாமேன்கொல் நாணுவதே.

1. 2. முத்தொள்ளாயிரம்: ருசு, ருஎ. 3. சிலப்பதி, காடுகாண் :

(இ - ள்.) ஆறா - இடையறாத, விறல் - வெற்றிக்காக, அடுபோர் வன்மையால் - கொல்கின்ற போரின் ஆற்றலினால், பாறு ஆர் அமர் ஆடி - பருந்துகள் நிறைந்த போர்க்களத்தில் போர்செய்து பகைவர்களைக் கொன்று, அப்பால் - அதன்பின், களிற்று உயர் - ஆண்யானையின்மேல் ஏறி உலாவருகின்ற, பல்லவர்கோன் நந்தி - பல்லவர்குலத் தலைவனை நந்திமன்னனுக்குரிய, மல்லை அன்றி - மாமல்லபுர நகரையல்லாமல், கூறாள் - வேறெதையுமே பேசாதிருக்கின்றாள், இவள் இளங் கொங்கை திருமேனியும் - இத் தலைவியின் இளமை பொருந்திய கொங்கைகளும் அழகிய உடம்பும், அவன் - அந் நந்தி மன்னன் அணிந்துள்ள, வளர் தொண்டை அல்லால் - நீண்ட தொண்டைமாலையை யல்லாமல், நாறாது - ஏற்காது, நாம் என்கொல் நாணுவது - (இவள் நிலை இவ்வாறு வெளிப்படையாயிருக்க) நாம் (இதைச் சொல்வதற்குக் கூட) வெட்கமடைதல் ஏனோ? (நாம் இதை மன்னனிடம் கூறுவோம்.)

(வி - ரை.) தோழி, மன்னன் உலாவருதலைக் கண்டாள்; தலைவியின் கரையில்லாக் காதல்துன்பத்தை உணர்ந்தாள்; 'இவள் பேசுவதெல்லாம் நந்திமன்னன் மாமல்லபுரத்துச் செய்திகளையே; இவள் தலையில் சூடிக்கொள்ள - தன் கொங்கைகளில் அணைத்துக்கொள்ள - தன் உடலெங்கும் அணிந்துகொள்ள - விரும்புவதெல்லாம், அவன்றன் ஆதொண்டை மலர் மாலையையே; இஃதிவ்வாறிருக்க நாம்தான் வெளியிற்சொல்ல அஞ்சுகின்றோம்! வெட்கங்கொள்கின்றோம்! அவட்கு இது குறித்து நாணமென்பதே இல்லை! இதை மன்னனிடம் எடுத்துச் சொல்லி அவன் மாலையை இவட்குக் கொடுக்குமாறு கூறுவோம்' என்கின்றாள், தோழி தன்னோடு உலாக்காணவந்த மங்கையர்களை நோக்கி.

ஆறுதல் -அமைதிபெறல், அடங்குதல்: உடன்பாடு. ஆறா - அடங்காத, நீங்காத என்னும் எதிர்மறைப் பொருளில் வருதலால், இடையறாத என்று பொருள் கூறப்பட்டது. பாறு - பருந்து. போர்க்களத்தில் மடிந்து கிடக்கும் பிணங்களைத் தின்பதற்குப் பருந்துகள் நிறைய வந்து குந்தியிருப்பதால், 'பாறார்' என்றாள். பாறார் என்பது களிறு என்னும் பெயரைத் தொடராத தழாத் தொடராதலால், அமராடி என்னும் சொல்லோடு தொடர்புபடுத்திக் கொண்டுகூட்டிப் பொருளுரைக்கப்பட்டது. தலைவி, தலைவனுக்குரிய பொருள்கள் யாவற்றையும் நிலத்திலும் பெரிதாய் வானி

னும் உயர்ந்ததாய் மதிப்பவளாதலால், அவள் தன் காதற்கிழவனு ஙிய நந்திமன்னன் ஊரின் சிறப்பையும் அதில் வாழும் மன்னன் உயரிய குணப் பண்பையும் நாள்தோறும் எக்காலமும் எடுத்துப் பேசிக்கொண்டு அதே எண்ணமாய் - அதே விருப்பாய்-வேறொன் றையும் எண்ணாளாய் இருப்பதைத் தோழி 'மல்லையன்றிக் கூறாள்' என்றாள். பேச்சு இவ்வாறிருக்க இவள் அணிய விரும்புவது அணியா ஆடையா சாந்தா எனின் அன்று! அன்று! இவள் கொங் கைகளில் ஒற்றி இன்பங்காண எண்ணுவது நந்தி மன்னன் தொண்டைமாலையே, மேனிகளில் - காது கழுத்து கை முதலிய உறுப்புக்களிலெல்லாம்-அணியாக அணிந்து அழகுபடுத்தி மகிழ்வ தற்குக் கருதுவதும் அம்மாலையேயாகும். 'இம்மாலையை எக்கால் பெறுவேன்! இம்மாலையை எக்கால் என் மேனி தீண்டம்பெற்றுப் பூரிக்குமோ! மெலிந்த தோள்கள் இம்மாலையை யேற்று எக்கால் தன் வாட்டம் நீங்குமோ! அவனைத் தழுவுதற்கு வீறுகொண்டு அண்ணாந்து நிற்கும் என் கொங்கைகள் அம்மாலையை ஒற்றிஒற்றி எக்கால் தம் வெப்பந் தீருமோ!' என்று ஏங்கிஏங்கி கூறிக் கொண்டே இருக்கின்றாள்; தன் உயிரிற் பழகி உடன் வளர்ந்த நாணமும் இவள்பால் இல்லை. ஏடி தோழீ, எல்லே! தோழிமார் களே! நமக்கென்ன வெட்கம்; நாம் இதை மன்னனிடம் போய் எடுத்துக்கூறி, மாலையைக் கொடுத்து இவளைக் காக்குமாறு வேண்டுவோம், வாருங்கள்' என்கின்றாள் என்பனவற்றை உள் ளடக்கியே, 'இவளிளங் கொங்கை...........மேனியும்' என்றாள். கொல்: ஐயப்பொருளில் வந்த இடைச்சொல். 'நாணுவதே' என்பதில் தோழியின் இரக்கவுணர்வும், பேரன்பின் உயரிய நிலையும் புலனாதல் காண்க. (சச)

## இதுவும் அது

### எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

நாணு தித்திரு மடவார் முன்புநின்
நன்பொற் கழலிணை தொழுதாரில்
பூணு கத்தோளிர் போலனைச் செய்த
புதுமென் தொண்டைய தருளாயே
வாணு ளைச்சுளி களியா னைப்படை
வயவேல் அடையலர் குலகாலா
கோணு மைக்கொரு குறையுண் டோஉரை
கொங்கா நின்னது செங்கோலே.

(இ - ள்.) வாழ்நாளைச் சுளி - பகைவர்களுடைய வாழ்கின்ற கால எல்லையைச் சினந்து கொல்கின்ற, களி யானைப்படை - மதத்தால் செருக்குக்கொண்ட யானைப் படையையும், வயவேல் - வெற்றிவேற் படையையுமுடைய, அடையலர் குலகாலா - பகைவரை அவர் குலத்துடன் அழிக்கின்ற கூற்றுவன் போன்றவனே! கொங்கா - கொங்கு நாட்டுக்கு வேந்தனாகிய நந்திமன்னா! முன்பு - இதற்கு முன்பாக, நின் நன் பொன் கழல் இணை தொழுதாரில் - உன்னுடைய நல்ல பொன்னையொத்த திருவடிகள் இரண்டையும் (நீ உலா வருங்கால் கண்டு) வணங்கிய இளமங்கையர் கூட்டத்தில், இத்திருமடவார் - இவ்வழகிய இளமையையுடையாள், நாணாது - நாணங்கொள்ளாது (உன்பாற் காதல் கொண்டு உன் மாலையை விரும்பினாள் அது) பூண் ஆகத்து - அணிகள்கொண்ட இவள் கொங்கைகளில், ஒளிர் பொலன் ஆக செய்த - ஒளி விடுகின்ற பொன்போற் பசலை பூக்கச் செய்தது, அது புது மென் தொண்டை - அந்த அன்று மலர்ந்த மெல்லிய உன் தொண்டை மலர் மாலையை, அருளாய் - ஈந்தருள்வாயாக, நின்னது செங்கோல் கோணாமைக்கு - உனது செங்கோல் திறம்பாத தன்மைக்கு, ஒரு குறை உண்டோ - இதனால் ஏதேனும் குறை நேருமோ? உரை - சொல்வாயாக.

(வி-ரை.) மேற்பாட்டில் கூறியவாறு தோழியானவள் தன் தோழிமாரைகளை நந்திமன்னன் உலாவரும் பக்கத்தே அழைத்துக்கொண்டு சென்றாள். சென்றவள் கூறுகின்றாள்.

'பகைவர்களின் வாழ்நாளைச் சினந்து அழிக்கின்ற யானைப் படையையும் வெற்றிவேற் படையையும் உடைய பகைவர்களை அவர் குலத்தோடு வேரறுக்கின்ற கூற்றுவன் போன்றவனே! கொங்கு நாட்டுக்கு வேந்தனாகிய நந்திமன்னா! முன்பு ஒருகால் நீ இவ்வாறே உலாவந்தபோது மங்கையர் கூட்டம் தொடர்ந்து வந்தது; அக் கூட்டத்தினர் நின் திருவடியைக்கண்டு தொழுதனர்; அவருள் ஒருத்தியாகிய இம்மடமங்கை நாணங்கொள்ளாது உன்னை விரும்பினாள்; காதல் கொண்டாள்; உன் மலர்மாலைக்கு ஏக்கற்றாள்; அம்மாலைக் காதல் இவள் கொங்கைகளில் பொன்போன்ற தேமல்படாச் செய்தது! அந்தப் புதிய மெல்லிய மலர்களால் ஆய தொண்டைமாலையைக் கொடுத்தருள்வாயாக! இதைக் கொடுப்ப

தனால் உன் செங்கோல் திறம்பாத ஆட்சிக்கு ஏதேனும் ஒரு குறைபாடு உண்டாகுமோ? கூறுவாயாக! உன் மாலையால் ஓர் உயிரைக் காப்பதாக இருக்குமானால் அதுதான் செங்கோல் முறையாகும். ஆகவே, இம்மாலைதந்து இவளைக் காத்தருள்க' என்று வேண்டுகின்றாள்.

திருமடவார்: என்றது ஒருமைச்சொல், தலைவி நாணினைத் துறந்து மன்னனைக் காதலித்து அவன் மாலையை விரும்பின நிலையினால் ஈண்டுச் சினந்து பலர்பாற் சொல்லால் கூறினாள். அக்காதல் நிலையினால் மனக்கவலை அதனால் இவள் மேனியெங்கும் பசலை நிறம் கொண்டது. ஆயினும் சிறப்பாக இவள் மார்பிடமெங்கும் அது படர்ந்து ஊர்வதாயிற்று; இதற்குக் காரணம் தொண்டைமாலையே. அதைப்பெற்றால் இப்பசலை நோய் தானே போயொழியும். ஆகவே, தலைவியின் நிலையைத் தோழி, 'பூணாகத் தொளிர்.........தொண்டைய தருளாயே' என்றாள். தொண்டை என்றாலே சாலுமன்றோ? புது, மெல் என ஈரடை கொடுத்துக் கூறினாள். எவருக்குமே வாடல் மலரினும் மென்மையில்லாத பொருளினும் மனக்கவர்ச்சி கொள்வதில்லை. ஆகலான், மன்ன உன் மாலையுள்ளும் வாடிப் போய்க் கழற்றிப் போடப்பட்ட மாலையைத் தாராதே. வாடினால் அது மென்மைகெட்டு முள் மாலைபோல் இவள் மெல்லிய ஆகத்தில் அழுத்தும்; தைக்கும்; ஆகவே, அன்றலர்ந்த மெல்லிய இனிய புதிய நன் மாலையைக் கொடுத்துக் காத்தருள்க என்பவளாய்ப் 'புதுமென் தொண்டைய தருளாயே' என்றாள். வாணாள் - வாழ்+நாள். சோணாடு போல வந்தது. நந்திமன்னன் வெற்றிசசிறப்பைப் - பகைவர்களை வெல்லும் அவன் வீர மாண்பை - யானைமீதும் வேலின் மீதும் ஏற்றிக் கூறப்பட்டது. அடையலர் - பகைவர். தன்னைச் சாராதவர் என்பது பொருளாகும். பகைவரை யழிப்பதல்லாது, அவர் குலத்தையும் வேரோடு அறுத்துப் பகை யென்பதே நாட்டில் தலையெடுக்க விடாது செய்த மேன்மையன் என்பாளாய்க் 'குல காலா' என்றாள். பகைவரைத்தான் வேரோடு அறுக்கும் தன்மையன் என்றால், உன்பால் அன்பு கொண்டாரை - ஆதரவு பெற விரும்புவாரை - இளநங்கையரையுமா? வேரறுக்க எண்ணுவது! என்ற குறிப்புணர நின்றது, 'அடையவர் குலகாலா' என்பது. செங்கோல் என்பது ஒருபாற் சாராது தமவும் பிறவும ஒப்ப நாடி நேர்மையாகச் செலுத்துவதன்றோ? இது உலக மன்னர்க்கெல்லாம் பொதுமையான அறம். ஆனால் உன் செங்கோலில் அத்தகைய நிலையைக் காண்கிலேம்; அதிலும் இவ்வாறான அன்புடையாரையும் ஒறுக்கும் தன்மையான குறைஇருத்தல் வேண்டுமென்று கொண்டாய் போலும்! இல்லையேல் இவ்வாறு செய்யாய் என்பாளாய்க், 'கோனமைக் கொரு குறையுண்டோ உரை'

என்றாள். கொங்கன் - கொங்குநாடுடையன் என்பதொரு பொரு ளுடன், அறியாமையுடையான் என்னும் இருகவர்படுபொருளில் கூறியிருப்பது மகிழ்ந்தின்புறற்பாலது. (சுரு)

இதுவும் அது

**எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்**

செங்கோல் வளைக்கை இவளும் துவண்டு
 செறிமாமை வாட எழிலார்
அங்கோல் வளைக்கை இளையார் இழப்ப
 அரசாள்வ தென்ன வகையோ
தங்கோல் வளைத்த திகழ்சேரர் சோழர்
 தமிழ்மன்னர் நின்ற நிலமேல்
வெங்கோல் நிமிர்த்த வரையும் சிவந்த
 விறல்நந்தி மேன்மொழி வையே.

(இ - ள்.) திகழ் - புகழால் விளங்கிய, சேரர் சோழர் தமிழ் மன்னர் - சேரசோழ பாண்டியர்களாகிய தமிழ் முடியுடை வேந்தர் மூவரும், நின்ற நிலம் மேல் - இருந்த நாடுகளில், தம்கோல்-தத்தமது ஆட்சிமுறையை, வளைத்த- பற்றிக்கொண்டிருந்து ஆட்சி செய்த, வெம்கோல் நிமிர்த்து - முறைதிறம்பிய மன்னர்களின் ஆட்சியை நேர்மையாக்கி, அவரையும் - அச் சிற்றரசர்களையும் அவ ரைச் சார்ந்த கொடியர்களையும், சிவந்த - சினங்கொண்டு கொன்ற, விறல்நந்தி - வெற்றி பொருந்திய நந்திமன்னா! செம்கோல் வளை கை - சிறந்த அழகுள்ள வளையல்களை அணிந்த கைகளையுடைய, இவளும் - இந் நங்கையும், துவண்டு - வாட்டமுற்று, செறிமாமைவாட - நிறைந்த அழகு கெடவும், எழில்ஆர் - அழகு பொருந்திய, அம் கோல் கைவளை - அழகிய வரிகளையுடைய கைவளையல்களை, இளையார் இழப்ப - மற்ற இளமங்கையர்களும் இழக்கவும், அரசு ஆள்வது என்ன வகையோ-நீ அரசாட்சி செய்வது என்ன வகையில் சேர்ந்ததோ, மேல் மொழிவை - மேலும் எனக்கு விளக்கிச் சொல்வாயாக.

(வி - ரை.) தோழி, மீண்டும் மீண்டும் மன்னனிடம் பேசுகின்றாள். 'நந்தி மன்னா! நீ சேர சோழ பாண்டி மன்னர்கள் அரசாண்ட நாடுகளிலே குறும்பர்களாகிய சிற்றரசர்களும், அவர்களைச் சார்ந்தோர்களும் கொடுமையாக ஆண்டுவந்ததை விலக்கி, அவர்கள் கொடுங்கோன்மையைச் செம்மையாக்கி அவர்களைக் கொன்று நன்னிலைப்படுத்தியவன். அத்தகைய அறவாழி செலுத்தும் ஆண்டகையாகிய நீ, செவ்விய அழகிய வளையலணிந்த இந்நங்கை காதலால் மெலிந்து தன் கவின் வாடவும், அழகிய வரிகளையுடைய கைவளையல்களை, ஏனைய மங்கையர்களும் இழந்து வருந்தவும் நீ ஆட்சி செய்வது என்ன முறை? இதனை மேலும் எனக்கு விளக்கிச் சொல்வாயாக' என, மன்னனை வினவுகின்றாள்.

செம் - செம்மையான; சிறந்ததான. கோல் - அழகு. இவள்: அண்மைச சுட்டு. இங்கே தலைவியைக் குறித்தது. துவளல்-மெலிதல். மாமை - அழகு. இளையார்: ஈண்டு மகளிர்: ஒன்றொழி பொதுச்சொல். வளைத்த - அடக்கிய, உட்கொண்ட. சேரமன்னரையும், சோழ மன்னரையும் 'திகழ்' என்ற அடை கொடுத்தும், பாண்டி மன்னர்க்கு மட்டும் 'தமிழ் மன்னர்' என்றாள். மதுரையில் தலை இடை கடையென முச்சங்கங்கள் நிறுவித் தமிழ்மொழியைச் செம்மை பெற வளர்த்த பெருமை பாண்டியர்க்கே உரியது. இதனைத்,

[1]'தெரிமாண் தமிழ்மும்மைத் தென்னம் பொருப்பன்'
எனவும்,

[2]'வண்டார் கமழ்தாமம் அன்றே மலையாத
தண்தாரான் கூடல் தமிழ்'

எனவும்,

[3]'பொருப்பிலே பிறந்து தென்னன் புகழிலே கிடந்து சங்கத்து
இருப்பிலே இருந்து வையை ஏட்டிலே தவழ்ந்த பாவை
நெருப்பிலே நின்று கற்றோர் நினைவிலே நடந்தோர் என
மருப்பிலே பயின்ற பாவை மருங்கிலே வளருகின்றாள்'

எனவும்,

[4]'தென்னன் தமிழின் உடன்பிறந்த சிறுகால்'
எனவும்,

---

1. பரிபாடல்.
2. மதுரைக் காஞ்சி இறுதி வெண்பா:
3. வில்லி பாரதம்: ந.
4. மீனாட்சியம்மை பிள்ளை: உச.

[1]'தண்ணார் தமிழளிக்கும் தண்பாண்டி நாட்டானை'

எனவும்,

[2]'பாண்டியன் நாட்டுடைத்து நல்ல தமிழ்'

எனவும்,

[3]'எத்தி றத்தினும் ஏழுல கும்புகழ்
முத்தும் முத்தமி ழும்தந்து முற்றும்'

எனவும், பிறபிற ஆன்றோர்களின் வாக்குகளாலும் பாண்டியரே தமிழை வளர்த்தனராதலால் அவர் 'தமிழ் மன்னர்' என வழங்கப்படலாயினர். அன்றி, மும்மன்னர்க்கும் கடையில் விளக்காக வந்த தென்றலுமாம். வெம்கோல் - கொடுங்கோல். இதனை,

[4]'வெருவந்த செய்தொழுகும் வெங்கோலன் ஆயின்
ஒருவந்தம் ஒல்லைக் கெடும்'

என்றார் வள்ளுவப் பெரியாரும். நிமிர்த்தல் - நேராக்கல். நேர்மையாக நடக்குமாறு ஒறுத்தலைக் குறித்தது. அவரையும் என்றது, கொடுங்கோற் குறும்பர்க்குத் துணையாக இருக்கும் கொடியர்களை. உம்மை : இறந்தது தழீஇய எச்சவும்மை. ஆதலால் உம்மைக் கேற்பப் பொருள் கூறப்பட்டது. சினந்து - கோபித்து. விறல் - வெற்றி. நந்தி - நந்தி மன்னு என விளியாகக் கொள்க. அண்மை விளியாதலால் ஈறு திரியாது இயல்பாக நின்றது. [5]'அண்மையின் இயல்பும்' என்பது நன்னூல் விதி. மொழிவை : முன்னிலை ஏவல் ஒருமை எதிர்கால வினைமுற்று. (௯௬)

தலைவன், கார்கண்டு பாகனொடு கிளத்தல்

கலிநிலைத்துறை

மொழியார் தொண்டைப் பன்மலர் முற்றும் தெருவந்து
விழியாள் என்றும் மேனி வெளுத்துற மெலிவாளே
ஒழியா வண்கைத் தண்ணருள் நந்திதன் ஊர்மட்டோ
வழியாம் தமரக் கடல்வட் டத்தொரு வண்கோவே.

---

1. திருவாசகம், திரு அம்மானை : ௧0.
2. தனிப்பாடல் :
3. கம்பராமா. கிட்கிந். ஆறுசெல் : ௫௩.
4. திருக்குறள் : ௫௬௩.  5. நன்னூல் : ௩௧௩.

(இ - ள்.) (பாக!), ஒழியா வண்கை-மாறாக் கொடையையுடைய கையையும், தண் அருள்-பேரிரக்கப் பண்பையும் உடைய, நந்திதன் ஊர்மட்டோ - நந்தி மன்னனுக்குரிய மாமல்லபுர நகரில் மட்டுந்தானா, வழிஆம் - நாம் செல்லும் வழிகளான, தமரக் கடல் வட்டத்து - கரிய கடல் சூழ்ந்த பகுதிகளிலெல்லாம், ஒரு வண்கோ - உவமையில்லாத மழையைப் பொழிகின்ற மேகங்கள் சூழ்ந்துள்ளன, (நாம் குறித்த கால எல்லை வந்துவிட்டது) விழியாள் - என் கண்ணனையாளாகிய காதலி, (இதை அறிந்து) மொழிஆர் - புகழ்ச்சிமிக்க, தொண்டைப் பல்மலர் முற்றும் - ஆதொண்டை மலர்களும வேறு பல்வகை மலர்களும் சிதறிக்கிடக்கின்ற, தெரு வந்து - மாமல்லபுரத் தெருவிடத்து வந்து நின்று (இம்மேகங்களைப் பார்த்து), மேனி வெளுத்து உற - தன் உடல் வேறுபாடுகொள்ள, என்றும் மெலிவாளே - இனிமேல் எக்காலமும் மெலிவடைவாளே. (ஆகவே, நீ குதிரையைத் தூண்டி விரைவில் செலுத்துக; தலைவியை விரைவில் காணவேண்டும்!)

(வி - ரை.) தன் வேந்தற்கு உற்றுழிப் போர்குறித்துத் தலைவன் சென்றான்; செல்லுங்கால் தான் கார்காலத்தில் மீண்டு வருவதாகக் கூறிச் சென்றான்; போரும் முடிந்தது; குறித்த கார் காலமும் போந்தது; தலைவன் விரைபரித் தேரூர்ந்து வழிக்கொண்டான்; வழிநெடுக முல்லைகள் பூத்துக் குலுங்கி நின்றன; அவை தலைவன் தலைவியைக் கண்டு களிகொள்ளச் செல்கின்றானென்பதை அறிந்து சிரிப்பன போல் தோன்றின; காயாவும் கொன்றையும் பிடவும் பிறவும் வழிநெடுகப் பூத்து நின்று தலையசைத்துத் தலைவனை வரவேற்று மகிழ்வனபோற் காட்சியளித்தன; வண்டின் முரற்சியும், பறவைகளின் பாட்டொலியும் காதுக்கு இன்ப விருந்தளித்தன. குதிரைகள் நல்ல இலக்கணம் வாய்ந்தன; அவை, பால் திரண்டன்ன வெண்ணிற உருவின; பயந்திரண்டன்ன நெஞ்சினையுடையன; காற்றுத் திரண்டன்ன கால்களையுடையன; அவைகள் மனவேகத்தில் பறந்து சென்று கொண்டிருந்தன. தலைவன் நாற்புறமும் இக் காட்சிகளையெல்லாம் கண்டு கண்டு மகிழ்கூரச் சென்று கொண்டிருந்தான்; வானத்தை ஏறிட்டுப் பார்த்தான்; வானிடமெங்கும சூல் கொண்ட மேகங்கள் சுற்றி வளைந்து சென்று கொண்டிருந்தன; மேகங்களிடத்து மின்னற் கொடிகள் பளிச்சுப் பளிசெனத் தோன்றித் தோன்றிக் கண்ணைப் பறித்தன. தலைவனுக்கு அது

காலைத் தன் காதலியைப்பற்றிய எண்ண அலை வந்து வந்து அலைக்கலாயிற்று; இயற்கைக்காட்சியில் ஈடுபட்டு வந்த நெஞ்சில் துன்பம் முகிழ்க்கலாயிற்று.

'நாம் குறித்த கால எல்லை வந்து விட்டது போலும்! என்செய்வது! தேர்ப்பாகனே! தேரை விரைந்து செலுத்துக! கொடைக் கடன் பூண்ட தண்ணருளையுடைய நம் நந்தி மன்னன் ஊராகிய மாமல்லபுர நகரில் மட்டும் இந்த மேகங்கள் பரவி நிற்கவில்லை! நாம் இதுகாலைச் செல்லும் வழியாகிய கருங்கடல் சூழ்ந்து கிடக்கின்ற இப்பகுதியெங்கும் நீர்கொண்ட மேகங்கள் வளைந்து கொண்டிருக்கின்றன! இதை என் கண்ணினின்றும் நீங்கா என் காதலி காண்பாள்; அவள் தொண்டை மலர்களும் வேறு பன்னிற மலர்களும் நிறைந்து கிடக்கின்ற தெருவில் வந்து எட்டி எட்டிப் பார்த்து நாம் குறித்த காலம் வந்தும் நம் தேர் வாராமை கண்டு கண்ணீர் வார மேனி வெளுத்து நலங்குன்ற மெலிந்து போவாளே! நாம் இவ்வளவு மெல்லத் தேரூர்ந்தால் எந்தக் காலம் மாமல்லபுரம் போய்ச் சேரும்! செலுத்து! செலுத்து! விரைந்து செலுத்து! மாலை முப்பது நாழிகைக்குள் நமக்கு விருந்து நிகழும். என் கண்ணிற் கருமணிபோன்ற என் காதலி கைகளால் தொட்ட உண்பொருள் வானோர் அமிழ்தம் புரையும்! அவள் ஊட்ட உண்ணல் வேண்டும் விரைவு! விரைவு!' என்று கட்டளையிடுகின்றான்.

இவைகளை உள்ளடக்கிய கருத்தைக் கொண்டது இப்பாட்டு.

மொழி - ஈண்டுப் புகழ்ச்சியுரை. அப் புகழ்ச்சி, [1]'உரைப்பார் உரைப்பவை எல்லாம் இரப்பார்க் கொன்று, ஈவார்மேல் நிற்கும்' ஆதலால், அக் கருத்தாகப் பின், 'வண்கைத் தண்ணருள் நந்தி' என்றான். விழியாள் - விழியினிடத்துள்ளாள். தலைவன், [2]'கருமணியிற் பாவாய்நீ போதாய் யாம்வீழும், திருநுதற் கில்லை யிடம்' என்பான். ஆகலான், இவனும் விழியாள் என்றான் குறிப்பு வினையாலணையும் பெயர். அன்றி, பார்க்காதவளாய் என்றும் விழியினையுடையாள் என்றலுமாம். தலைவன் வருகையை எதிர்பார்த்து எதிர்பார்த்து வழிமேல் விழிவைத்திருந்த நிலை தோன்றக் கூறினன் எனக் கொள்ளலுமாம். 'வாராமை கண்டு இனிமேல் மேனி அழகு குன்றி, தன் பொன்னிறம் மாறி, வெளுப்படைய வாடுவாளே! என்ன செய்வது! விரைந்து தேரைச் செலுத்து' எனச் சொல்லாமல், குறிப்பால் உணர வைத்தான். இதனால் தேர்ப்பாகனின் குறிப்பறியும் நுண்ணிய மதிவன்மை தோன்றக் கூறினன் தலைவன். 'விழியாள் என்றும் மேனி வெளுத்துற மெலிவாளே' என்றும் கூறுவதில் தலைவன்

1, 2. திருக்குறள் : ௨௩௨, ௧௧௨௩.

தலைவியாற் கொண்ட காதலன்பும் உள்ளத்துடிப்பும் விளக்க முறுதல் காண்க.

இக் கருத்தோடொப்பத் தலைவன் தேர்ப்பாகற்குக் கூறுவதாக,

"கல்சுடர் சேருங் கதிர்மாய் மாலைப்
புல்லென் வறுமனை நோக்கி மெல்ல
வருந்துங் கொல்லோ திருந்திழை அரிவை
வல்லை கடவுமதி தேரே சென்றிக
குருந்தவிழ் குறும்பொறை பயிற்றப்
பெருங்கலி மூதூர் மரம்தோன் றும்மே"[1]

என, நற்றிணையினும் வருதல் காண்க.

"மனைகலந்து மாலை அயர்கம் விருந்து"[2]

என, வள்ளுவர் தந்த காதலன் பாகனிடம் கூறுவதும் ஒப்புரைக்கத் தக்கது.

'பன்மலர் முற்றும் தெருவந்து' என்பதற்குப் பலவகை மலர்களையுடைய செடி கொடிகள் வளருகின்ற என்றலுமாம்.

கோ - வானம் : அதனிடமுள்ள மேகத்துக்கு ஆகுபெயர்.

(௬௭)

## தலைவி இரங்கல்: நிலவை வெறுத்துரைத்தல்

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

ஒருகோமகன் நந்தி உறந்தையர்கோன்
உயர்நீள்வல யத்துயர் வாளைவளை
குருகோடு வயற்படர் காவிரியில்
குலவும்புயல் கண்டு புகார்மணலில்
பெருகோடு நெடுங்கழி சூழ்மயிலைப்
பெருமானது பேரணி நீள்முடிமேல்
தருகோதை நினைந்தயர் வேன்மெலியத்
தழல்வீசுவ தோகுளிர் மாமதியே.

---

1. நற்றிணை : ௩௨௧. 2. திருக்குறள் : ௧௨௬௮.

(இ - ள்.) குளிர் மாமதியே - குளிர்ச்சியுள்ள நிறை நிலாவே! ஒரு கோமகன் - ஒப்பற்ற வேந்தனும், உறந்தையர் கோன் - உறையூரில் வாழும் மக்கட்கு அரசனுமாகிய, நந்தி - நந்தியென்னும் பெயருடையானுக்குரிய, உயர்நீள் வலயத்து - சிறந்த நீண்ட நாடுகளில், காவிரியில் - காவிரி யாற்றிடத்தில், குலவும் - விளங்குகின்ற, புயல் கண்டு - நீர்ப்பெருக்கை யறிந்து, வாளை - வாளை மீன்களும், வளை - சங்குகளும், குருகோடு - நீர்வாழ் பறவைகளுடன், வயல் படர் - மருதநிலப் பாங்குகள் நிறைகின்றதான, புகார் மணலில்-காவிரிப்பூம் பட்டினத்து மணலில் ஓடுவதுபோல, பெருக ஓடு - மிகவும் நீர் செல்கின்ற, நெடுங்கழி - நீண்ட உப்பங்கழிகள், சூழ் மயிலைப் பெருமானது - வளைந்து கொண்டிருக்கிற மயிலாப்பூரில் வாழ்கின்ற பெருமையுடைய நந்திமன்னனது, பேர் அணி நீள்முடிமேல் - மிக்க அழகு வாய்ந்த தலையின் நீண்ட முடிமீது, தருகோதை - அணிந்துள்ள மலர்மாலையை, நினைந்து அயர்வேன்-எண்ணி வருந்துகின்றவளாகிய நான், மெலியத் தழல் வீசுவதோ - வாட்டமடையுமாறு நெருப்புக்கதிர்களை அள்ளியிறைப்பதா? (இதுதான் உன் குளிர்ந்த நிலவொளியா? கூறுவாயாக.)

(வி - ரை.) நந்திமன்னன்பால் காதல்கொண்ட மடந்தையொருத்திக்கு மாலைப்போது வந்துபோய் இரவு இருண்டது; நிலவெழுந்தது; நிறைநிலா தன் கதிர்களை வெள்ளி வெண்குடத்திருந்து பால் சொரிவதுபோல் நிலாக்கதிர்களை யெறித்துக் கொண்டிருந்தது. அக்கதிர்கள் இவள் மேனிமீது படர்ந்து நெருப்பாகக் கொளுத்திற்று. அவள் அக்கொடுமையைத் தாங்கலாற்றாது நிலவொடு பேசுகின்றாள்:

'ஏ குளிர்ந்த நிறைநிலாவே! ஒப்பற்ற அரசனும் உறையூர் மன்னனுமாகிய நந்தியென்னும் பெயருடையவனுக்கு உரிமையான நாடுகளில் சிறந்ததான காவிரியாற்றில் விளங்குகின்ற நீர்ப்பெருக்கத்தை யறிந்து வாளைமீன்களும் சங்குகளும் நீர்வாழ் பறவைகளும் மருதநிலப்பகுதிகளில் நிறைந்திருக்கின்றதான காவிரிப்பூம்பட்டினத்து மணலில் ஓடுவதுபோல, மிகவும் நீர் செல்கின்ற நீண்ட உப்பங்கழிகள் சூழ்ந்துள்ள மயிலாப்பூரில் வாழ்கின்ற நந்திமன்னனது மிக்க அழகுவாய்ந்த தலையின் நீண்ட முடிமீது அணிந்துள்ள மலர்மாலையை நினைந்து மெலி

இன்ற நான் மேலும் வருந்தி வாட்டமுறும்படி உன் நெருப்புக் கதிர்களை அள்ளியிறைத்து வருத்துவதா? இதுதான் உனது குளிர்ந்த நிலவொளியோ? கூறுக' என்கின்றாள்.

'ஒரு கோமகன், உறந்தையர்கோன், காவிரி' என்றமையால், பாட்டுடைத் தலைவன் ஆட்சி செலுத்தும் நிலப்பெரும் பரப்பும், சோறுடைத்தாகிய சோழநாட்டு நிலவளனும், காவிரியின் வற்றா நீர்வண்மையும் குறித்தாள். நீரின் பெருக்கைக் கண்டு ஆங்கே சென்றால் என்றும் நீரும் இரையும் கிடைக்குமென்று கருதி வாளைமீன்களும் சங்குகளும் நாரை கொக்கு உள்ளான் சிறகி முதலிய பறவைகளும் வந்தடைந்ததாகக் குறித்தாள். இதனால் யாவரும் இந்த நாட்டையடைந்து பயன்பெறும் குறிப்பாக உள்ளுறை காண்க.

ஒரு நாட்டுக்குச் சிறப்பு வற்றாத நீர் உடைமையேயாகும். இதனை வள்ளுவரும்,

[1]"இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
வல்லரணும் நாட்டிற் குறுப்பு'

என்று விளக்குவர்.

புயல் - மேகம். அதனால் பொழிந்த நீருக்காயிற்று: ஆகுபெயர். காவிரிப்பூம்பட்டினம் நீர்வளனும் நிலவளனும் சிறந்தது. அதில் உள்ள மணலில் ஓடுவதுபோல் உப்பங்கழிகளில் நீரோடுகின்றதாகக் குறித்தாள். இல் : ஐந்தாம் வேற்றுமையுருபு. இங்கு ஒப்புப் பொருளில் வந்தது. இது, தலைவனை நினைந்து நிலவொளியால் வருந்துந் துறையாதலால் இரங்கற் பொருட்கு முதற்பொருளாகிய நெய்தல் நிலமாகிய உப்பங்கழியைக் கூறினாள். கோதை - தொண்டைமாலை.

தலைவி தலைவனது மாலையை விரும்பி வருந்துங்கால் நிலவொளிதோன்றி வருத்தி மேலும் துன்பத்தை மிகைப்படுத்துவதை, 'தழல் வீசுவதோ குளிர் மாமதியே!' என்று கூறினாள். குளிர் மாமதி யென்பது இகழ்ச்சிபற்றிக் கூறியது. 'குளிர்மையில்லாது வெப்பந்தருதலால் தழல் வீசுகின்ற நீ குளிர் மாமதியாகப் பெயர் வழங்கப்படுகின்றாய்', என்று இகழ்ந்தவாறு காண்க.

[2]"............கதிர்மதியே!
தமரத் தரங்கத் துடனேமெத்
தநிரந் தரங்கத் தியதவள

1. திருக்குறள் : எ௩௭. 2. சந்திரவிலாசம் : ௯க.

சங்கவாரி இடைத் தோன்றித்
தழலை வாரி இறைத்திறைத்துப்

பமர முயங்கும் புரிகுழலார்
பலரு முயங்கும் படிக்கொடுமை
பண்ணு முனையோர் தண்ணவனென்
பதுவு முனையோர் படிற்றுரையே.'

எனச் சந்திரவிலாசத் தலைவி வருந்திக் கூறிய கருத்தும் இதனோடு ஒத்தநிலை கண்டு மகிழ்க. (௪அ)

### தோழி கூற்று: தன் நெஞ்சொடு கூறியது

**எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்**

மதியம் எரிசோரியும் மாலையம் மாலை
மறந்தும் புலராது கங்குலெலாம் கங்குல்
கதிர்செய் அணிவண்டு காந்தாரம் பாடக்
களிவண்டு புகுந்துலவும் காலமாம் காலம்
பதியின் வளர்ந்தநறும் தொண்டையங்கோன் நந்தி
பல்லவற்கு நேராத பாவையர்தம் பாவை
விதியின் விளைவுகண்டு யாமிருப்ப தல்லால்
வினைமற்றும் உண்டோநம் மேல்லோதி மாட்டே.

(இ - ள்.) மதியம் எரி சொரியும் - நிறைநிலா சுடுகின்ற கதிரொளியைக் கொட்டுகின்ற, மாலை - மாலைப் பொழுதும், அம்மாலை-அதைப்போல மயக்கந்தருவதாகும், கங்குல் எலாம் - இரவுப் பொழுதுகள் ஒவ்வொரு நாளும், மறந்தும் புலராது - தவறிக்கூட விடிபொழுதாகாது, கங்குல்-கங்குலாகவே (இருள்மயக்கமாகவே) இருக்கும், கதிர் செய் அணி வண்டு-கருநிற ஒளியையுடைய அழகிய பெண் வண்டுகள், காந்தாரம்பாட-காந்தாரம் என்னும் பண்ணைப் பாடிக் கொண்டிருப்ப, களிவண்டு - களிப்பினையுடைய ஆண் வண்டுகள் அப் பண்ணைக் கேட்டு, புகுந்து உலவும் - அங்கே வந்து பறந்து திரிகின்ற, காலம் - வேனிற்காலமும்,

காலமாம் - இறுதிக் காலம்போன்று துன்பந்தருவதாம், பதியின் வளர்ந்த - நாடுகளில் உயர்ந்த, தொண்டையர் கோன் - தொண்டை நாட்டினர்க்குத் தலைவனான, நந்தி பல்லவற்கு - நந்தியாகிய பல்லவ வேந்தனுக்கு, நேராத - ஒவ்வாத (வேண்டாத), பாவையர்தம் பாவை - மங்கையர் கட்கு முதல்வியும் பாவைபோல்வாளுமாகிய, நம் மெல் ஓதி மாட்டு-நம் மெல்லிய கூந்தலையுடையாளாகிய இவளிடத்தே, விதியின் விளைவுகண்டு - ஊழின் வலிமையைப்பார்த்து, யாம் இருப்பது அல்லால் - நாம் சும்மா இருப்பதன்றி, மற்றும் வினை உண்டோ - அப்பால் நாம் செய்யக்கூடிய செயல் ஏதேனும் இருக்கின்றதோ? இல்லையே.

(வி - ரை.) நந்திமன்னன் பேரழகில் ஈடுபெற்றுக் காதல் கொண்ட மங்கையொருத்திக்கு மாலைப்பொழுது வரும்போ தெல்லாம் மயக்கந்தரு பொழுதாகவே இருக்கும்; இரவு முழுதும் மன்னனையே கருதிக்கொண்டிருப்பதால் இரவே துணையன்றி வேறு துணையில்லாது வருந்தும் பொழுதாகவேயிருக்கும்; இவ் வாறே ஒவ்வொருநாளும் ஆக, காரொளி விரிந்த மேனியை யுடைய பெண்வண்டுகள் காந்தாரமென்னும் பண்ணை இசைத் துப்பாட, அதைக்கேட்டுக் களிப்புக்கொண்ட ஆண்வண்டுகள் அவ்வவ் விடங்கள் தோறும் வந்து பறந்து அங்கும் இங்குமாக உலவிக்கொண்டிருக்கும் வேனிற்காலம் வந்தால், அது, இவட்கு இறுதிக்காலம்போல் பெருந்துன்பமாகவே இருக்கும்.

இவ்வாறான நிலையில் இம்மங்கை வாடினாள்; வருந்தினாள். அவள் கொண்ட துன்பநிலை கட்டுரைக்கும் தன்மையதன்று; இவட்கு மன்னனை அணைந்து மகிழ வாய்ப்பில்லாது போயினும்; அவன் அணிந்துள்ள தொண்டை மாலையையாவது பெற்று அணிந்து மகிழ்ந்தாவது தன் காதலன்பைக் கழிக்க வேண்டு மென்று கருதிக்கொண்டிருந்தாள்; இதனால் நாளுக்குநாள் இவள் உடல் மெலிவடைந்தது; என் செய்வாள் பாவம்! காதலால் கவரப்பெற்றார்நிலை இஃதன்றோ? பின்னர் ஒருநாள் வேனிற் காலம் வந்த புதிய நாள்; அன்று மாலைப்பொழுது வந்தது; அது மற்றக்காலத்தினும் இவ்வேனிற் காலமாதலால் காதல் மலர்ந்து வாட்டிற்று; அம்மாலை மெல்ல மெல்லச் செல்ல இரவு வந்தது; அதுவும் அன்று புதுத் துன்பத்தைத் தந்தது; போதாக்குறைக்கு அன்று நிறைநிலா தோன்றிற்று! அது வெண்ணிறக கதிர்களை இவள்மீது அள்ளி வீசிற்று; இவள் நெருப்பிலிடு வெண்ணெயென

நெஞ்சுருகினாள்; கதிரின் வெப்பந் தாங்கலாற்றாது வெயிலிடைப் பட்ட புழுவெனத் துடித்து வெம்பினாள்.

இந்நிலையை நாள்தோறும் கண்டு வருகின்ற தோழி தன் நெஞ்சொடு கூறுவதைக் காட்டும் ஓவியமே இச் செய்யுள்.

'நெஞ்சே! இந்த மெல்லிய கூந்தலுடையாளின் ஊழை நினைந்து நாம் வருந்துவதல்லாது, நம்மால் வேறென்ன செய்ய ஒல்லும்! இவட்கு எந்தக்காலமும் துன்பமான காலமாகவே இருக்கின்றன. நிலவு கதிர்விட்டெறிக்கின்ற மாலைக்காலமும், இரவு நேரமும், வேனிற்காலமும் துன்பந்தருவனவாகவே இருக் கின்றன! பல்லவ வேந்தனாகிய நந்திமன்னனுக்கு ஒவ்வாத நிலையினளாக இவளும் இருக்கின்றாள்! என்ன செய்வது?' என்று தன் நெஞ்சொடு கூறி வருந்துகின்றாள்.

மதியம் - நிறைந்த நிலவு. மாலை - மாலைப்பொழுது; மயக்கம், மறந்தும் புலராது என்பது இருள் போகாது நீண்டு செல்லும் தன்மையை உணர்த்திற்று. கங்குல் - இருள்; இருள்போன்று ஒன்றும் தெரியாநிலை. அணிவண்டு - அழகுள்ள வண்டென்றமை யால், பெடைவண்டெனக் கொண்டு பொருள் கூறப்பட்டது. களிவண்டு புகுந்துலவும் என்றமையால், ஆண்வண்டெனக் கொள்ளப் பெற்றது. காலம் பொதுமையாக இருப்பினும் ஈண்டுக் காந்தாரம்பாடப் புகுந்துலவும் என்றமையால் வேனிற் காலம் எனக் கொள்ளப்பட்டது. காலம் - வேனிற்காலம்; இறுதிக்காலம்போல் துன்பந்தரும்நிலை. நேராத - பொருந்தாத, தீயூழினால் சேர இயலாத. பாவையர்தம் பாவை, பாவைபோன்ற அழகுள்ள மகளிர்க்கெல்லாம் பாவைபோற் சிறந்தவள் என்னும் குறிப்பில் வந்தது. யாம்: நெஞ்சோடடைவு படுத்திய தன்மைப் பன்மை.

இரவுப்பொழுது கழியக் கழியாது நீண்டு தருவதாகக் காதலர்க்கிருக்கும் தன்மையை வள்ளுவர் தந்த தலைவி,

"[1]'கொடியார் கொடுமையில் தாம்கொடிய இந்நாள்
நெடிய கழியும் இரா'

எனவும்,

"[2]'மன்னுயிர் எல்லாம் துயிற்றி அளித்திரா
என்னல்லது இல்லை துணை'

எனவும் கூறுமாற்றால் தெளியப்பெறும். (௪௧)

---

1, 2. திருக்குறள்: ௧௧௬௯, ௧௧௬௮.

*தலைவி கூற்று : வெறிவிலக்கல் பற்றி விளம்புதல்*

**தரவு கொச்சகக் கலிப்பா**

மாட்டாதே இத்தனைநாள் மால்நந்தி வான்வரைத்தோள்
பாட்டாதே மல்லையர்கோன் பரியானைப் பருச்சுவடு
காட்டாதே கைதைப் பொழிலுலவும் காவிரிநீர்
ஆட்டாதே வைத்தென்னை ஆயிரமும் செய்தீரே.

(இ - ள்.) (அன்னைமீர்! கட்டுவிச்சியம்மாவோ!) இத்தனை நாள் - இவ்வளவு நாட்கள் வரையினும், மால் நந்தி - பெருமைமிக்க நந்திமன்னனுடைய, வான்வரைத்தோள் - உயர்ந்த மலைபோன்ற தோள்களில், மாட்டாது - அணையச் செய்யாமலும், பாட்டாது - அவன் புகழைப் பாடச் செய்யாமலும், மல்லையர்கோன் - மாமல்லபுர மக்களின் தலைவனை நந்தியின், பரிய ஆனை பருசுவடு காட்டாது - (அவன் உலாவந்த) பெரிய யானையின் காலடித் தடத்தை எனக்குக் காண்பியாமலும், கைதைபொழில் உலவும் - (அம் மன்னனுக்குரியதான) தாழையஞ் சோலையினும் பாய்ந்தோடுகின்ற, காவிரிநீர் ஆட்டாது - காவிரிநீரைக் கொணர்ந்து என்னை முழுக்காட்டாமலும், வைத்து - (இங்கே வேலன் குறையெனக்கொண்டு வீணாக) இருத்தி, ஆயிரமும் செய்தீரே - ஒன்றல்ல இரண்டல்ல எண்ணிலடங்காத (வெறி விலக்குதலாகிய கழுவாய்களைச்) செய்கின்றீர்களே! (என்ன பயன்? மேற்கூறியவைகளில் ஒன்றைச் செய்திருப்பீரேல் என் நோய் தீர்ந்து இன்புற்றிருப்பேனே! என்னே நும் அறியாமை!)

(வி - ரை.) தலைவி, தலைவனுடன் இயற்கைப் புணர்ச்சியில் ஈடுபட்டுக் கலந்தொழுகினளாக, பின்னர்ச் சிலநாள் தலைவன் வாராதிருப்ப அவனை நினைந்து நினைந்து நைந்தாள்; இதை, அவள் நற்றாயும் செவிலியும் அறிந்து, செவிலி இது ஏதோ தனி நோயாக இருக்கின்றதே! ஒருகால் முருகன் குறைபாடாக இருக்கலாமோ எனக் கருதித் தேவராட்டியாகிய கட்டுவிச்சியை அழைத்துக்கேட்ப, அவள் பார்த்து நம் நிலக்கடவுளாகிய முருகப்பெருமானால் வந்த குறையென்று கூற, அவள் சாமியாடுவோனாகிய பூசாரியை யழைத்துக் கேட்ப, அவனும் முருகனை

நினைந்து ஆட, முருகன் அவன்மேல் வந்து தன் குறையென்று கூற, அதற்குக் கழுவாயாக ஆட்டுக்கடா வறுத்துப் பலிகொடுத்துத் தலைவியை நீராட்டிக் கழிப்புக் கழிப்பர். இதனை வேண்டா வென விலக்கிக் கூறுதலையே அகப்பொருள் நூலார் **வெறிவிலக்கல்** என்பர். இதனை வேலனை யழைத்தல் என்னும் துறையில் தலைப்புக்கு விளக்கம் கூறப்புகுந்த பேராசிரியர் திருக்கோவையார் நூலில்,

[1]‘**கட்டுவித்தி (சாமியாடுவோள்) முருகணங்கென்று கூறக் கேட்டு இப்பாலன் இக்குடியின்கட் பிறந்து நம்மை இவ்வாறு நிற்பித்த பண்பினுக்கு வேலன்புகுந்து வெறியும் ஆடுக; அதன்மேல் மறியும் அறுக்கவெனத் தாயர் வேலனை அழையாநிற்றல்**’ என்று கூறலான் அறிக.

சாமியாடுவோனாகிய பூசாரி கையில் வேல்தாங்கி ஆடுவதால் வேலன் எனப்பட்டான்.

இம் முறையில் இங்குவரும் தலைவிக்கு வேலனைக்கொண்டு வெறிவிலக்குச் செய்தாராக. அது பொறாத தலைவி வருத்தங் கொண்டு கூறுகின்றாள். ‘அன்னைமீர்! கட்டுவிச்சி அம்மாவோ! நீவிர் எனக்குற்ற நோய் இன்னதென அறியீராய் என்னென்னவோ செயல் செய்கின்றீர். எனக்குற்ற நோய் எனக்குத் தெரியும். அது தீர வழி எளிதில் இருக்கின்றது! அதையறியாது இத்தனை நாட்கள் கழியவிட்டீர்; பெருமைமிக்க நந்திமன்னனின் தோளைச் சேர்ந்துவாழ நீவிர் ஏற்பாடு செய்திருத்தல் வேண்டும்; அல்லது அவன் புகழைப் பாடுதற்கு எனக்கு உரிமை தந்திருத்தல்வேண்டும்; அன்றி, மல்லையர்மன்னன் உலாவந்தபோது, அவன் உலாவைக் காண்பதற்கு என்னை விட்டிலீராயினும் அவன் உலாப்போந்த யானை சென்ற அடிச்சுவட்டினையேனும் யான் கண்டுகளிக்க விட்டிருத்தல் வேண்டும்; இவைகட்கு என்னை விட்டிலீராயினும், கைதைச் சோலைகளிலும் பாய்ந்தோடுகின்ற காவிரிநீரிலாவது ஒரு குடம்நீர் கொண்டுவந்து என்னை முழுக்காட்டியிருத்தல் வேண்டும்; இவைகளில் ஏதேனும் ஒன்றைச் செய்திருப்பீராயின், என் நோய் என்றோ பறந்தோடியிருக்கும்; இவைகளில் நீர் ஒன்றுஞ் செய்யாது, வேலனையழைத்து வெறியாட்டுவித்தும், வெள்ளாடு வெட்டிப் பலிகொடுத்தும், ஒன்றல்ல இரண்டல்ல ஆயிரக்கணக்கில் என்னென்னவோ உம் மனம்போன போக்கில் கழுவாய் செய்கின்றீர்கள்? இவைகளால் என் நோய் நீங்கப் போவதில்லை’ என வெறுப்புடனும் வருத்தத்

---

1. திருக்கோவையார் ௨௮௯-ஆம் பாட்டின் தலைப்புத் துறை விளக்கம்.

துடனும் கூறி, இனி இது செய்தல் வேண்டாவெனத் தடுக்கின்றாள்.

இக்கருத்தோடொப்ப முத்தொள்ளாயிரத் தலைவியும்,

[1]'காராட் டுதிரந்தூஉய் அன்னை களன்இழைத்து
நீராட்டி நீங்கென்றால் நீங்குமோ—போராட்டு
வென்று களம்கொண்ட வெஞ்சினவேற் கோதைக்கென்
நெஞ்சம் களம்கொண்ட நோய்'

என்று கூறுதல் காண்க. நற்றிணையில் வரும் தோழியும் வேலன் மேல் வந்த முருகனைக் கடிந்து கூறுவதாக,

[2]'..................சூர்மகள்
அருவி இன்னியத் தாடு நாடன்
மார்புதர வந்த படர்மலி அருநோய்
நின் அணங் கன்மை அறிந்தும் அண்ணாந்து
கார்நறுங் கடம்பின் கண்ணி சூடி
வேலன் வேண்ட வெறிமனை வந்தோய்
கடவுள் ஆயினும் ஆக
மடவை மன்ற வாழிய முருகே.'

என்று அமைந்த பாட்டினையும் அறிந்தின்புறுக.

மாட்டாது, பாட்டாது, நாட்டாது, ஆட்டாது என்பன எதிர்மறை வினையெச்சங்கள். மாட்டுதல் - பொருத்துதல்: ஒன்று சேர்த்தல். ஏகாரங்கள் நான்கும் அசைநிலை. பாடாது எனற்பாலது எதுகைநோக்கி வன்மை டகரம் மிகுந்தது. பரிய ஆனை என்பதில் அகரம் தொக்குப் பரியானையெனப் புணர்ந்தது. பரிய - பெரியது என்னும் பொருளது. [3]'பரியது கூர்ங்கோட்டதாயினும் யானை' என்பதில் இவ்வாறு வருதல் அறிக. பருச்சுவடு - பெரிய காலடி பதிந்த தடம். பரி, யானை என உம்மைத் தொகையாக்கி குதிரை யானைக்கால்களின் சுவடு என்றலுமாம். நீர் ஆட்டுதல் - நீரில் தலைமுழுக் காட்டுதல். நட்பினர்களினும் மிக்க அன்பினால் அவரிடமுள்ள பொருள்களோ அவர்கட்கு உரிமையான நாடோ நகரோ மிக்க இன்பந்தருவதாகும். அம்முறையில் காதலர்களின்நிலை கூறவேண்டுவதில்லை. இத்தலைவி, தன் தலைவனுக்குரிய பொருள்களையும் அவனோடு தொடர்புள்ளவைகளையும் காண்பதற்கோ சேர்வதற்கோ மிக்க விருப்பங்

1. முத்தொள்ளாயிரம்: 2. நற்றிணை: கூச.
3. திருக்குறள்:ருககூ.

கொண்டுள்ளாள்; ஆதலால் அவள், 'இத்தனைநாள் சும்மா இருந்து விட்டு இப்போது என்னென்னவோ செய்கின்றீர்கள் எனக்கு, என் ஏந்தலுக்குரிய காவிரிநீரையாவது கொணர்ந்து என்னை நீராட்டலாகாதா?' என வினவுவதில் அவள் நெஞ்சக் காதலுணர்ச்சி அவலமாக வெளிப்படுதல் காண்க.

உடன்போய் மீண்ட தலைமகளை 'நீ சென்ற நாட்டிலுள்ள நீர் இனிமையுடைய தல்ல; நீ எவ்வாறு அந்நீரினை உண்டாய்?' என்ற தோழிக்குத் தலைவி கூறியதாக ஐங்குறு நூற்றில்,

[1]'அன்னாய் வாழிவேண் டன்னைநம் படப்பைத்
தேன்மயங்கு பாலினும் இனிய அவர்நாட்டு
உவலைக் கூவல் கீழ
மானுண் டெஞ்சிய கலிழி நீரே'

என வருங் கருத்து ஒப்புநோக்கற்பாலது.

ஆயிரம்: அளவில்லாததைக் குறிக்கும் குறிப்புச்சொல். மிகுதியென்னும் பொருளது. இவ்வாறு மணிமொழிப் பெருமானும் திருவாசகத்தில் [2]'ஒருநாமம் ஓருருவம் ஒன்றுமிலாற்கு ஆயிரம் திருநாமம் பாடி' என்பதும் காண்க. (௫௦)

## பாங்கன், தலைவனை வியத்தல்

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

செய்ய வாய்மிகக் கரியகண் வனமுலை
செறிந்திறு மருங்குற்கொம்பு
ஐய சாலவும் அவிரிழை அல்குலம்
மதுமலர்க் குழல்என்றல்
வெய்ய வெப்பவி யாதகுஞ் சரநந்தி
வீரவன் இவனைப்போய்
நைய நாமிவன் நகரிகை தொழுதிலம்
நம்முயிர் அளவன்றே.

(இ - ள்.) வெப்பு அவியாத-சினம் நீங்காத, குஞ்சர நந்தி நகரி - யானையையுடைய நந்திமன்னனுக்குரிய

---

1. ஐங்குறுநூறு: ௨0௩. 2. திருவாசகம், திருத்தெள்: க.

கச்சிவளநாட்டுக் காரிகையாகிய இவளுடைய, வாய் - வாயானது, செய்ய - சிவந்த நிறமுடையது, கண் - கண்களானவை, மிகக் கரிய - மிகவும் கருநிறமுடையன, வனமுலை - அழகிய கொங்கைகள், செறிந்து - பெருத்து வளர்தலால், இறுமருங்குல் கொம்பு - ஒடியும் தன்மையுடைய இடை கொடிபோல்வதாகும், அல்குல் - கடிதடஇடம், சாலவும் ஐய - மிகவும் அழகுடையதான, அவிர் இழை - விளங்குகின்ற மேகலையையுடையதாகும், மதுமலர்க்குழல் அம் என்றால்-இன்னும் தேன் ஒழுகும் மலரணிந்த கூந்தல் மேகம் என்று கூறப்பெறுமானால், வெய்ய - இவை யாவராலும விரும்பப்படுவனவன்றோ?, (இத்தகையாளைக் கண்டு இவளின் உறுப்பினழகைப் பார்த்தும் இவன் அவளைவிட்டு ஆங்குப் போந்தானன்றோ ?) இவன் ஐ - ஆகலான் இவனே சிறந்த தலைவனுவன், போய் - இவன்பாற் சென்று, நைய - மனங்கசிய, நாம் இவன் கைதொழுதிலம் - நாம் இவனைக் கைகூப்பி வணங்கினோமில்லை, நம் உயிர் அளவு அன்றே - இவன் நட்பு நம் உயிரையொத்த நட்பன்றோ ? (இவனைக் கண்டு மகிழ்வோம்.)

(வி - ரை.) இப்பாடல் பாங்கற் கூட்டத்தின்பாற்பட்ட தலைவனை வியத்தல் என்னும் துறையில் அமைந்ததாகும். தலைவன், தன் தோழனை (பாங்கனை) விட்டுப் பிரிந்துசென்று தலைவியை ஒரு பொழிலகத்துக் கண்டான்; அவளுடன் மனங் கலந்தது; இருவரும் மாறிப் புக்கு இதயம் எய்தினர். புணர்ந்தான்; பின்பு, 'விரைந்து வருவேன்' என்று, தலைவியிடம் கூறி விட்டுப் பிரிந்தான்; வந்தான்; தன் உயிரினும் இனிய நண்பனைக் கண்டான்; அவன் தலைவனை நோக்கி, 'அன்ப ! நீ எப்போதும் போலின்றி, இன்று முகம்வாடி, தோள்கள் சூம்பத் தோற்றப் பொலிவற்றுக் காணப்படுகின்றாய் ! என்ன காரண ?' மென்று வினவினன்; தலைவன் தான், [1]"தெளிவளர் வான்சிலை செங்கனி வெண்முத்தம் திங்களின் வாய்ந்து, அளிவளர் வல்லியன்னா"ளைக் கண்டதுமுதல், தான் காதலித்துப் புணர்ந்து மீண்டதுவரை எடுத்துக் கூறினன்; அவ்வாறாயின் அவளைக் காண்டல் வேண்டும் என்று பாங்கன் கூறினன். அவள் இயலிடத்தைத் தலைவன் கூறினன். அதை அடையாளமாகக்கொண்டு தலைவியிருக்கும் இடத்திற்குச் சென்றான்; கண்டான்; அவள் அழகு சொல்லுந்

1. திருக்கோவையார் : கசு.

திறத்ததன்றாய், 'விழியாற் பிணையாய், விளங்கியலால் மயிலாய், மிழற்றும் மொழியால் கிளியாய்' விளங்கினமை அறிந்து தலைவனை வியந்து புகழ்கின்றான்.

'சினம் மாறாத யானையையுடைய நந்திமன்னனுக்குரிய கச்சி வளநாட்டுக் காரிகையாகிய இவளின் வாயானது சிவந்த நிறமுடையது; கண்களானவை மிகவும் கருநிற முடையன; கொங்கைகள் பெருத்து வளர்வதால் அவைகளின் பாரத்தால் ஒடியுந் தன்மையுடைய இடை கொடிபோல்வதாகும்; கடிதட இடம் விளங்குகின்ற மணிமேகலை யுடையதாகும்; இன்னும் தேனெழுகும் மலரணிந்த கூந்தல், மேகமென்று கூறப்பெறுமானால், இவை யாவரானும் விரும்பப்படுவனவன்றோ? இத்தகையாளைக் கண்டு, இவளின் ஒவ்வோர் உறுப்பின் அழகைப் பார்த்தும், இவன் இவளைவிட்டு ஆங்குப் போந்தனனன்றோ? இவனே சிறந்த தலைவனாவான். இவன்பால் நாம் சென்று, மனங்கசிய நாம் இவனைக் கைகூப்பி வணங்கினோமில்லை; இவன் நட்பு, நம் உயிரொத்த நட்பன்றோ? இவனைக்கண்டு மகிழ்வோம்' என்றான்.

தலைவியை நேரிற்கண்ட பாங்கன், வாயின் செந்நிறத்தையும், கண்ணின் கருநிறத்தையும், கொங்கைகளின் பருமையையும், இடையின் சிறுமையையும், அல்குல் கடிதட அழகையும், கூந்தலின் கருநிறத்தையும் புகழ்ந்தான். இவளைக்கண்டும் நாம் இருக்குமிடத்துக்கு வந்து இவளின் தன்மையை நம்மிடம் கூறினானன்றோ? இவன் உயர்ந்த பண்பை நோக்கினால் இவனே சிறந்த தலைமைப் பண்பாட்டுக்குரியனாவன். இவன் பெருமை யறியாது நாம் வாளா இருந்துவிட்டேம்; ஒருநாளும் அவனைத் தொழுததில்லை; இவன் நட்பு நம் உயிரினும் உயர்ந்ததன்றோ என வியந்தவாறறிக.

செய்ய - செந்நிறமுடையது. செய்யுள் தொடைநோக்கி ஒருமை விகுதியாகிய 'து' தொக்கது. கொம்பு-கொடி. இழை-அணி: இங்கு மணிமேகலை அணியை இடநோக்கிக் குறித்தது. வெய்ய - விரும்பத்தக்கன. அசரம்: பன்மைவிகுதி. வெம்மையென்னும் பண்படியாகப் பிறந்த பலவின்பாற் படர்க்கைக் குறிப்புவினை. வெப்பு - சூடு. இங்கே சினத்தைக் குறித்தது. வீரவன் - வீரன், வீரம என்னும் பண்புச்சொல்லடியாகப் பிறந்த படர்க்கை ஒருமை ஆண்பால் குறிப்பு வினையாலணையும் பெயர். வீரம்+அன் : மரம+அடி. மரவடியென வந்தாற்போன்று [1]'மவ்வீ றொற்றழிந் துயிரீ றொப்பவும்' என்னும் நன்னூல் விதிப்படி புணர்ந்தது. இப்பாட்டில் பொருள்இயைபின்றி அங்கும் இங்கும் சொற்கள் கிடந்தமையால் பொருள்இயைபுக் கேற்பக்

1. நன்னூல்: உ௧௯.

கொண்டு கூட்டிக் குறிப்பெச்ச, இசையெச்சச் சொற்கள் வருவித்துப் பொருள் கூறப்பட்டன. (ருக)

தலைவன், தலைவியின் கண்ணயத்துரைத்தல்

கட்டளைக் கலித்துறை

அளவுகண் டாற்குடங் கைத்துணை போலும் அரசர்புகும்
வளவுகண் டான்நந்தி மானோ தயன்வையம் தன்னின்மகிழ்
தளவுகண் டாலன்ன வெண்ணகை யால்தமி யேனதுள்ளம்
களவுகண் டார்முகத் துக்கண்க ளாய கயற்குலமே.

(இ - ள்.) அரசர் புகும் வளவு கண்டான் - பல தேசத்து மன்னர்களும் வந்து தங்குதற்கேற்ற அரண் மனையைச் செய்தோனும், நந்தி - நந்தியென்னும் திருப் பெயரையுடையவனுமாகிய, மான உதயன் - மானத்தை உலகில் காட்டுவோனுக்குரிய, வையம் தன்னில் - நாட்டினிடத்தே, மகிழ்-மகிழ்ச்சியைத் தரத்தக்க, தளவுகண்டால் அன்ன - முல்லையரும்பைப் பார்த்தாற்போன்ற, வெள் நகையால்-வெண்ணிறமுள்ள தன் பற்களின் காட்சியினால், தமியேனது உள்ளம் - எளியேனுடைய நெஞ்சகத்தை, களவு கண்டார் - தன்னிடம் இழுத்துக்கொண்ட என் காதலியாரின், முகத்து - முகத்தினிடத்துள்ள, கண்கள் ஆய கயல் குலம் - கண்களென்று கூறும் கெண்டை மீன் கள் இரண்டும், அளவு கண்டால் - அதன் வடிவ அளவைக் கூர்ந்து நோக்கினால், குடங்கைத் துணைபோலும் - உள்ளங் கையின் உள்ளடங்கும் அளவினவாகவே அடங்கும் போலும்! (ஆனால் அதன் செயலும் குணமும் அளவிட் டுரைக்கும் தரத்ததன்று!)

(வி - ரை.) காதலின்பத்தில் திளைத்து இன்புற்ற தலைவன், தன் காதலியின் கண்களின் சிறப்பை வியந்து கூறியதுறையாகும் இப்பாட்டு.

உடலிலுள்ள உறுப்புக்கள் எல்லாவற்றினுஞ் சிறந்தன கண் களே. இதனானே ஆன்றோர் [1]'கண்ணிற் சிறந்த உறுப்பில்லை'

1. நான்மணிக்கடிகை :

எனவும், [1]'கண்ணிற் சிறந்த உறுப்பில்லை யாவதும் காட்டியதே' எனவும், [2]'மின்னுமணி, பூணும் பிறவுறுப்புப் பொன்னே அது புனையாக், காணுங்கண் ஒக்குமோ காண்' எனவும், பிறவாறும் அதன் சிறப்பை வியந்துரைப்பர்.

உலகிற் பிறந்த எவ்வுயிர்க்கும் கண்ணின்றேல் யாதொரு பயனுமின்றி வாழ்நாள் வீழ்நாளாகவே கழியும். கல்வி கற்றோர் களையே கண்ணுடையரென்று போற்றிக் கூறுதற்குக் கண்களே முதற்காரணமாக இருத்தலை நாம் நாள்தோறும் கண்டுவரும் உண்மையன்றே! கண்ணின்றேல் நூல்களைக் கற்கவோ எழுதவோ எழுத்தையறியவோ வாய்ப்பில்லையன்றோ! இதனுனே வள்ளுவர் பெருமான் தம் அறப்பெருநூலில் கற்றோர் பெருமையையும் கல்லாதார் இழிவையும் கூறுமுகத்தால் எடுத்துக் காட்டாக,

[3] கண்ணுடையர் என்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.

என்று கூறிக் கண்ணுடையார் என்று சிறப்பித்துக் கூறப் பெறு வோர் கற்றோரே; ஏனையோர் கண்களைப் பெற்றிருப்பினும் அக் கண்கள் தமக்குரிய சிறந்த பொருள்களாகிய நூல்களைப் பார்த் தற்கியலாத தன்மையில்லாதிருப்பதால் அவை பெயரளவில் கண்களாக இருப்பதன்றி, அவை, கண்களன்று; புண்களே! என்று இழித்துரைத்து கண்களின் பெருமையை - ஏற்றத்தை - நன்கு விளக்குகின்றனரன்றோ!

காதலர்க்குக் கண்களே தம் ஒன்றுபட்ட காதலுணர்வைத் தாம்தாம் அறிந்து உள்ளம் ஒருமைகொண்டு களித்தற்கு முதற் கண் வாய்ப்பளிப்பன. கண்ணின் களவினுல் காதலர் ஒன்று கூட்டப்பெறுகின்றனர். இத் தலைவனையும் பிற காதலர்களையும் ஒன்றுபடுத்தியவை கண்களே! இதனுல் காதலர்கள் முதற்கண் தத்தம் காதலர்களைக் கண்டபோது உடன் ஒன்றுபெறுத பொதுப்பார்வையைத் தமக்குத் துன்பந்தருதலால் 'நோய்' என்றும், மனம் ஒருப்பட்டு தாம் காதலிக்கும் நிலையைக் காட்டு கின்ற சிறப்புப்பார்வையை அதற்கு 'மருந்து' என்றும் பாராட்டி மகிழ்வதைக் காதலர் கூற்றுகளாகப் பரந்து பட்டுவரும் பேரிலக் கியங்களில் காணலாம்.

[4]'பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை
தன்னேய்க்குத் தானே மருந்து'

எனவும்,

---

1. தஞ்சைவாணன் கோவை : 2. நன்னெறி :
3. திருக்குறள் : ருகரு. 4. திருக்குறள் : கக0உ.

[1] 'பிணியும் அதற்கு மருந்தும் பிறழப் பிறழுமின்னும்
பணியும் புரைமருங் குற்பெருந் தோளி படைக்கண்களே'

எனவும், பிறவாறும் எடுத்துரைப்பர்.

இத் தலைவன், இங்கே தன் உள்ளத்தைக் கொள்ளைகொண்ட முல்லைமுகை முறுவலைப் பாராட்டிக் கண்களையும் மிக வியக்கின்றான். அவன் மனத்தை ஈர்த்த கெண்டை மீன்போன்ற பிறழ்ச்சியையுடைய கண்களோ உள்ளங்கையிலடங்கும் அளவே சிற்றளவினவாக, அவைகளின் ஆற்றலோ சொல்லின் அளவினடங்காதனவாய், எண்ணியது முடிக்கும் திண்ணியனவாய், வாளினும் கூரிய மாண்புடையனவாய் இருத்தலை மகிழ்ந்து மகிழ்ந்து வியந்துவியந்து பாராட்டுகின்றான். 'கண்களாய கயற்குலம் அளவு கண்டால் குடங்கைத் துணைபோலும்' என்கின்றான்.

இந் நூலாசிரியரும் பிறரும் கண்கட்கு வாளையும் அம்பையும் கெண்டையையும் மாவடுவையும் பிறவற்றையும் உவமைகொண்டு பாராட்டிக் கூற, மணிமொழிவேந்தர் தலைவன் வாயிலாகத் தலைவியின் கண்களை வியந்து கூறுமிடத்து இவ்வாறு கூறினாரில்லை. தாம்கண்ட இறைவன் திருவடையாளங்களையே விதந்தெடுத்துக் கூறித் தம் அளப்பிலா இறையன்பை உலக மக்கட்கு எடுத்துக்காட்டி, மலவயத்தால் கட்டுண்டு உலகமேநிலை, உடலாம் பெறும் இன்பமே இன்பம், [2] 'மணிநகை யாரே தெய்வம்'; வாக்குபதேசம; கொங்கைத், துணைகுரு பீடம்; அன்னார்த் தோய்தலே முத்தியாகும்' என, மருண்டு கிடக்கும் மாக்கட்கு அறிவுதெருட்டி, இறைவனைத்தொழுது [3] 'காலமுண் டாகவே காதல் செய்துய்ம்மின் கருதரிய,...ஆலமுண்டான் எங்கள் பாண்டிப்பிரான் தன்அடியவர்க்கு, மூலபண்டாரம் வழங்குகின்றான்வந்து முந்துமினே' என, அழைக்கும் குரலாக உள்ளதாதலால் அன்பர் அசசுவையில் திளைக்க ஈண்டெடுத்தருகின்றாம்:

[4] 'ஈசற்கு யான்வைத்த அன்பின் அகன்று,அவன் வாங்கியஎன்
பாசத்தில் காரென்று, அவன்தில்லை யின்ஒளிபோன்று, அவன்
பூசத் திருநீறு எனவெளுத்து, ஆங்கவன் பூங்கழல்யாம் [தோள்
பேசத் திருவார்த்தை யிற்பெருநீளம் பெருங் கண்களே'

இத் திருப்பாடலில் கண்ணின் முழு வனப்பெல்லாங் கட்டுரைக்கப்படுகின்றது. கண்ணின் அகலம், அதன் கருநிறம்,

---

1. திருக்கோவையார்: ௫.
2. திருக்குற்றால தலபுராணம்:
3. திருவாசகம், திருப்: ௪. 4. திருக்கோவையார்: ௧0௧.

ஒளி, வெண்ணிறம், நீளம் இவைகள் கூறப்பெற்றுள்ளன; கண்ணின் அகலத்துக்குத் தாம் அழுதுஅழுது தொழுது இறைபால் கனிந்த அன்பையே கூறுகின்றார்.

[1] 'நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆரள வின்றே சாரல்
கருங்கோல் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே'

எனப் பிறர் கூறுமாற்றால் அன்பின் நீளத்தைக் காண்க. ஆகவே, தம் அன்பின் அகலத்தையே கூறியதறிக. அடுத்து அக்கண்ணின் நிறத்தைத் தாம் உலகியலிற் கட்டுண்டு கிடப்பதற்குக் காரணமாக நின்ற பாசத்தின் நிறத்தை உவமம் காட்டுகின்றார். கடவுள் உயிர் உலகம் என்னும் முப்பொருள்களைச் சைவசித்தாந்த நூலார் பதி பசு பாசம் என்பா. இறுதியில் நின்றபாசம், உயிரைப் பிணித்துநின்று அறிவை விளங்கச்செய்யாது மறைக்கும் நீர்மையது. அது, செம்பிற் களிம்பும் நீரில் பாசியும்போல் உயிரோடு நீங்காத தொடர்புடையது. களிம்பை விளக்கினால் போகும்; பாசியைக் கையால் விலக்கினால்போகும்; பின் விட்டு விட்டால் மீண்டும் பற்றிக்கொள்ளும் நீர்மையன. அதுபோல், தம்மை விட்டு நீங்காத பாசத்தை இறைவன் திருவார் பெருந்துறைச் செழித்த குருந்தமர நீழலிலே, சித்தமல மறுவித்துச் சிவமாக்கின தன்மையைச் சுட்டிப் பாசத்தின் கருமையைப் போன்று கருநிறமெனக் கண்களின் கரியநிறத்திற்கு உவமை கூறினார். தீமையைத் தரும் பொருள்களைக் கருமை நிறமாகக் கொள்வதும், நன்மை தருபவைகளை ஒளியாகக் கொள்வதும் நம் தமிழர்கொண்ட மரபு. உயிர்கொள்ளும் கூற்றுவனையும், வறுமை தரும் மூத்தாளையும், காமனையும், பேய்களையும், அஞ்ஞானத்தையும் கரிய நிறமாகக் கொள்வதை அறிக. கண்ணின் ஒளியினது நீளத்துக்கு கண்களின் உள்ளொளிக்கு இறைவன் கூத்தியற்றும் பேரவையை உவமையாகக் கூறினார். இறைவன் ஒளிவடிவினன்; அவன் அணுவினும் அணுவாய் அமைந்த உருவினன்; அத்தகையான் படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என்னும் ஐவகைத் தொழிலையும் மாறிமாறிச் செய்து, உயிர்கள் அறியாமை இருளைப் போக்கி, அறிவொளியை நல்குவோன்; அவ்வொளி வட்ட இடமே தில்லையம்பலம்; எனவே, தில்லையம்பல ஒளிபோன்று மாறாத ஒளியையுடையவெனக் கண்களின் ஒளிக்குக் குறித்துரைத்தார். இனிக் கண்களின் வெண்மை நிறத்துக்கு இறைவன் திருநீற்றை உவமை கூறினார்.

1. **குறுந்தொகை:** ௩.

அது, ' சுண்ணவெண் சந்தனச் சாந்'தெனவும் ' பூசுவதும் வெண்ணீறு ' எனவும் அப்பரடிகள் மறையினும், அடிகளே திருவாசகத்தும் கூறுதலாலறிக. ஆகவே, இங்கே வெண்மையைக் கூறினார். இனிக் கண்ணின் நீட்சிக்கு, இறைவன் பெரும்புகழைப் பேசும் வார்த்தையினும் நீளமெனக்கூறி வியந்தார். இறைவன் புகழ் பொருள்சேர் புகழ், எனப் போற்றியுரைப்பர், வள்ளுவனார். பிறர் புகழெல்லாம், மாசாக - முடிவு எல்லை யுள்ளனவாக-இருப்ப, இறைவன் புகழ், மாசுமறுவின்றி வரம்பிகந்ததாய்ச் சொல்லச் சொல்லச் சொல்லின் அளவு வரைகடந்ததாய் இருப்பதால் மறைகளுங்கூட அல்லை ஈதல்லை ஈதென அன்மைச் சொல்லாற் சொல்லி வாழ்த்தியும் அவன்புகழ் வரம்புமீறிப் போய்க் கொண்டே இருத்தலைப்போன்று, இத்தலைவி கண்களும் காதளவும் ஓடி நீண்டும் காதலன் நெஞ்சிற் பாய்ந்தும் மேலும்மேலும் பாய்ந்து நெஞ்சைக்கிழித்து உயிரைக் கொள்ளைகொள்ள நீண்டு உருண்டு கொண்டேயிருப்பதால் நீளத்திற்கு இவ்வாறு உவமை கூறினார். உலகியலில் மகளிர் கண்களுக்குத் தாமரை குவளை செங்கழுநீர் மலர்களையும் அம்பையும் வாளையும் புலவன்மார் உவமைகூற நிற்ப, அடிகள், தாம்கண்ட இறைவன் திருவுருவ அடையாளங்களையே அடைவுபடக் கூறியிருப்பது அடிகளார் [1]' கண்ணிற் காண்பதுன் காட்சி ' என்று கூறும் பெரியார் மொழிக்கு இலக்காக இருத்தலை யறிந்தின்புறுக. என்னே அடிகளின் இறைவன் பேரன்பு.

குடங்கை : குடம்+கை. குடம்போல் குவிந்தகை. அது உள்ளங்கை. [2]' குடங்கை நீரும் பச்சிலையும் ' என்றவிடத்து இப்பொருள் தருதல் அறிக. வளவு - வளைவு என்பதன் போலி. வளைக்கப்பட்டது என்னும் பொருளாய் அரண்மனையை உணர்த்திற்று. மான+உதயன் : மானோதயன் என வடமொழிச் சந்தி நிலைமொழி ஈறும் வருமொழி முதலும் கெட வந்து ஓகாரம் தோன்றிநின்ற சொற்றொடர். தளவு - முல்லையரும்பு : ஈண்டு ஆகுபெயர். உள்ளம் களவுகண்டார் என்பது, தன் உள்ளத்தைத் தன்பால் ஈர்த்துத் தன்னை வயப்படுத்திய நிலையை. [3]' எனது உள்ளம் கவர்கள்வன் ' என்பர் ஆளுடைப்பிள்ளையார். கண்களாய கயற்குலம் : இருபெயரொட்டுப் பண்புத் தொகைநிலைத் தொடர். கயற்குலம் - கெண்டைமீன்கள். இனம் : ஈண்டு இரண்டினைக் குறித்தது. (௫௨)

---

1. தாயுமானவர் பாடல் :
2. திருவிளையாடற்புராணம், இசைவாது : ௩௪.
3. திருஞானசம், தேவாரம் : க.

பாட்டுடைத் தலைவன் பெருமைகூறல்

**எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்**

குலமரபும் ஒவ்வாது பயின்று வந்த
குடித்தொழிலும் கோள்படையின் குறையும் கொற்றச்
சிலஅளவும் சிந்தியாத் தெவ்வர் தேயத்
தெள்ளாற்றில் செருவென்ற செங்கோல் நந்தி
புலஅரசைப் புறங்கண்ட புகழ்சேர் கோவே
பூவலயம் தனிற்கரியாய் நின்ற மன்னா
சொலஅரிய திருநாமம் உனக்கே அல்லால்
சொல்ஒருவர்க் கிசையுமோ தொண்டைக் கோவே.

(இ - ள்.) *தொண்டைக் கோவே - தொண்டை மண்டில நாட்டுக்கு அரசே! குலமரபும் ஒவ்வாது - உயர்குடிப் பிறப்பு மாண்பில்லாமலும், பயின்று வந்த - தாம் பழக்கப் பட்டு வந்த, குடித்தொழிலும் - தம் மரபுக்கொத்த தொழில்முறையும், கொள்படையின் குறையும் - தாம் கொண்ட படைகளின் குறைந்த அளவும், கொற்ற சில அளவும்-சிறிதளவாகவே வென்ற தம் வெற்றியும், சிந்தியா தெவ்வர் தேய-எண்ணிப்பாராத பகைமன்னர்கள் நாளுக்கு நாள் குறைந்து கெட, தெள்ளாற்றில் - தெள்ளாறென்னு மிடத்தில் நிகழ்ந்த, செருவென்ற - போரில் வெற்றிபெற்ற, செங்கோல் நந்தி - செங்கோற் சிறப்புடைய நந்திமன்னா! புலஅரசை - எட்டுத் திசைகளிலுமுள்ள அரசர்களை, புறம் கண்ட - புறமுதுகிட்டோடச் செய்த, புகழ்சேர் கோவே - புகழ்பொருந்திய வேந்தே! பூவலயம் தனில் - இம் மண்ணுலக வட்டத்தில், கரிஆய்நின்ற மன்னா - (வெற்றி, புகழ் முதலியவைகட்கு) எடுத்துக்காட்டாக நிலைபெற்ற மன்னனே! சொல அரிய - எடுத்துக் கூற இயலாத, திருநாமம் - சிறந்த புகழ்ச்சிப் பெயர், உனக்கே அல்லால் - உன் ஒருவனுக்கேயல்லாமல், சொல் ஒருவர்க்கு இசையுமோ - பிறர் எவருக்கேனும் இப்பெரும் புகழ்ச்சியுரைகள் பொருந்துமோ? (பொருந்ாது; நீ ஒருவனே எல்லா ஆற்றலினும் சிறந்தவன்.)*

(வி - ரை.) இதில், நந்திமன்னனை எதிர்த்துப் போரிட்ட மன்னர்கள் தன்மையும், அவர்களையெல்லாம் வென்ற நந்தி மன்னன் வீரமாண்பும், அதனால் மன்னனுக்கு உண்டான புகழும் கூறப்படுகின்றது.

'தொண்டைமண்டில நாட்டுக்கு அரசே! குலத்தையும் தாம் பிறந்த குடிப்பண்புக்கேற்ற தொழில்முறையையும் தமக்கு உதவியாகக் கொண்டுவந்த படையின் பெருக்கமின்மையையும், தாம் பல போர்களில் தோற்றநிலையையும் நன்கு எண்ணிப்பாராமல் போருக்குவந்த பகைமன்னர்கள், நாளுக்குநாள் குறைந்து கெட்டொழியத் தெள்ளாறென்னுமிடத்தில் நிகழ்ந்த போரில் வெற்றிகொண்ட செங்கோற் சிறப்புடைய நந்திமன்னா! எட்டுத் திசைகளிலுமுள்ள அரசர்களைப் புறமுதுகிட்டோடத் துரத்திய புகழ்பொருந்திய வேந்தே! இம்மண்ணுலக வட்டத்தில் வெற்றி, புகழ் முதலியவைகட்கு எடுத்துக்காட்டாக நிலைபெற்ற மன்னவ! எடுத்துக்கூற இயலாத சிறந்த புகழுள்ள பெயர், உனக்கே யல்லாமல் பிறர் யாருக்கேனும் இப்பெயரும் புகழ்ச்சியுரைகளும் பொருந்துமோ? பொருந்தாது, வாராதன்றோ! நீ ஒருவனே எல்லா ஆற்றல்களினும் சிறந்தவனாக இருக்கின்றனை; உன் பெருமையை யாம் எவ்வாறு அளவிட்டுரைக்க வல்லேம்' என்பதாம்.

உலகில் பிறந்த மக்கள் யாவரினும் உரையும் பாட்டும் உடையோர் சிலர்; மரையிலைபோல மாய்ந்தோரே பலராவர். உலகில் தம் பெயர் நிலைநிற்க, நல்லனசெய்து வருவோரே சிறந்தோராவர். படைப்பெருமையிற் சிறந்தாராய்க் கொடையில் தன்னிகரில்லாராய்க் கல்வியிற் சிறந்தாராய், கடுங்கண் மறவராய் வாழ்வாராய் இருப்பவர் பெயரே என்றும் நிலைபெற்று நிற்கும். பூத்தலை அறாப் புனைகொடிமுல்லை நாத்தழும்பிருப்பப் பாடாதாயினும் அதன் கொடிபடர்தற்குத் தேரைநிறுவிய பாரி மன்னனும், கலிங்கப்பட்டாடையை மயிலுக்குப் போர்வையாகப் போர்த்து மகிழ்ந்த பேகனும், ஊருஞ் சொல்லான் பேருங் கூறானாய்த் தான் அணிந்திருந்த தோள்வளை, கைக்கடகம், முத்துமாலை முதலியவற்றையும் ஈந்து இரவலரை மகிழ்வித்த நள்ளி வேந்தனும், தன் தலையைத் தமித்துத் தம்பியிடங்காட்டிப் பொன்பெற்று வறுமை களைந்துகொள்ளும்படி புலவரிடம் வாள் கொடுத்த வள்ளல் குமணனும் என்றிருந்தனர்? இன்றும் அவர் பெயர் கூறப்படுகின்றதன்றோ? புகழப்படுகின்றதன்றோ? ஏன்? தம்புகழ் நிறுவித் தாம் உயிர்விட்ட காரணத்தினால்.

இத்தகைய நிலைபுகழை நட்டோன் நந்திமன்னன்; போர் வீரரைப் புறங்கண்டான்; தன்னையெதிர்த்த கொடுங்கோல் மன்னரைக்கொன்று, தன் புகழ் நிறுவிக் கொடுங்கோல் ஆட்சியை

மாற்றி உலகம் முழுதும் செங்கோல்மாட்சியை நிறுவினன்; இல்லையென்றிரப்போர்க்கு இல்லையென்னுது, பொன்னும் பொருளும் கரியும் பரியும் ஆடையும் பிறவும் கொடுத்து மகிழ்ந்தான்; நீர்நாண நெய்வழங்கி விருந்தினரைப் போற்றினன்; எண் நாணப் புகழ் வேட்டான். ஆனதால், இவன் புகழ்சேர் கோவாகப் போற்றப்பட்டான்.

குலமரபு : வழிவழியாக மேம்பட்டுவந்த தலைமுறைகள். குடித்தொழில் - தம்தம் குடும்பத்துக்கேற்ற தொழில் முறைகள். படைக்குறை - படைகளின் பெருக்கக்குறை; அல்லது போர் செய்யும் ஆற்றலில்லாமை. கொற்றச் சில அளவு - வெற்றிபெற்ற தன்மை ஒன்றிரண்டாகிய சிறிது அளவு. பகைமன்னர்கள் தம் குடிநிலைமை, தொழில்தன்மை, தம் படைப்பெருக்கம், போர் செய்யும் திறமையில்லாமை, போரிட வந்த மன்னர்கள் தம் செல்வ நிலை, பெருக்கம், போர்செய்யும் திறம் இவைகளை முன்னரே எண்ணியறிந்தே வரல்வேண்டும்; இவைகளில் ஒன்றையேனும் எண்ணிப்பாராமல் வந்து ஆழம் தெரியாமல் காலையிட்டதுபோல் போரிட்டுத் தம் படைவலி துணைவலி தம்வலி யெல்லாம் காற்றிடைப்பட்ட பஞ்செனப் பறக்க, அவர் புறமுதுகிட்டோடவென்ற பெருமிதந்தோன்றத் ‘தெவ்வர்.........தேய வென்ற’ என்றார். வென்ற பின்னர் நாட்டில் மறங்கடிந்து அறத்தை நிலைநிறுத்தினன் என்பாராய்ச் ‘செங்கோல் நந்தி’ என்றார். புலம் - இடம்: இங்கே எட்டுத்திக்கிடங்களைக் குறித்தது. எட்டுத் திக்குகளினும் வாழும் அரசர்களை யெல்லாம் அவர்தம் குறும்பை யடக்கித் தன் அடிக்கீழ்ப் பணியவைத்த தன்மையைத் தன் நாட்டுமக்களும், வேற்றுநாட்டு மக்களும் வியந்து பாராட்டிப் பேசப்பெறுவதால் ‘புகழ்சேர் கோவே’ என்றார். கரி - சான்று; எடுத்துக்காட்டு. உலக மக்கள் ஒரு அரும்பெருஞ் செயலைப் பேசும்போது, ‘இன்னார் அச் செயலைச் செய்தார்’ என்று ஒருவரைக் குறிப்பிட்டுப் பேசுவர். காட்டாக, திருவள்ளுவர் எந்நாட்டிலும் யாரும் செய்தற்கியலாத அரிய பெரிய அறநூலைச் செய்தார் என்றால், அவர் போல் பிறந்த எவரும் செய்யவில்லை, செய்தற்கு இயலவும் இல்லை யென்பது பெறப்படுகின்றது. அதுபோல் நந்திமன்னன் தன் தோள்வலியாலும் வாள்வலியாலும் எண்ணித் துணியும் அறிவாற்றலாலும் சிறந்தோனென்று இவனைச் சுட்டிக்காட்டி உலகத்தில் பேசுவதால் ‘கரியாய் நின்றமன்னா’ என்றார். திருநாமம் - சிறந்த பெயரென்றும், உயர்ந்த புகழென்றும் கொள்ளலுமாம். இப் புகழ்ச்சி உனக்கு ஒருவனுக்கே அல்லாமல் பிறருக்கு இல்லையெனப் பிரிநிலை ஏகாரம் கொடுத்துக் கூறினார். இதனால் நந்திமன்னன் பல்வகைப் பெருமைகளும் விளங்குதலறிக. (ருடு)

## தோழி, தலைவியின்நிலை கிளத்தல்

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

கோவே மாலை மாலையர்க்கோ
கோவே வேண்டும் நிலவோகண்
கோவே மாலை மாலையது
கொண்டார் குறுகு மாறறியேன்
கோவே மாலை நீள்முடியார்
கொற்ற நந்தி கச்சியுளார்
கோவே மாலை உள்ளும்எங்கள்
கோவே கம்பர் ஆனாரே.

(இ - ள்.) கோவே - அரசே! மாலை நீள்முடிஆர் கொற்ற நந்தி - நீண்ட தொண்டைமாலை நிறைந்த திருமுடியையுடைய வெற்றி பொருந்திய நந்திமன்னா! கச்சியுளார் கோவே - கச்சி வளநாட்டார் காவலனே! எங்கள் கோவே - எங்களின் தலைவா! மாலை கோவேம் - நாங்கள் மாலைகள் தொடுத்தணிவேமல்லேம், மாலை உள்ளும் மாலையர்க்கு - உன் தொண்டை மாலையை நினைந்து வருந்தும் மயக்கத்தையுடைய எம் தலைவியார்க்கு, கண் கோ - கண்கள் இரண்டும் அம்புகள், நிலவோ வேண்டும் - நிலவொளியோ விருப்பந்தருவது? மாலை மாலைஅது கொண்டார் - மாலைப்பொழுதில் மயக்கங்கொண்டார், அதனால், ஓகோ கம்பர் ஆனாரே - ஆ! ஆ! அவர் தூண்போல் அசைவற்று நின்றுவிட்டாரே! குறுகும் ஆறு அறியேன் - அம்மாலை பெறும் வழியறிந்தேனில்லையே, (என் செய்வேன்! அதனால் உன் மாலைதந்து அவருயிரைக் காப்பாயாக.)

(வி - ரை.) 'கோவே மாலை நீள்முடியார் கொற்ற நந்தி! கச்சியுளார் கோவே! எங்கள் கோவே! மாலை கோவேம்; மாலை உள்ளும் மாலையர்க்குக் கண்கோ! நிலவோ வேண்டும்; மாலை மாலையது கொண்டார்; ஓகோ கம்பர் ஆனாரே! குறுகும் ஆறு அறியேன்!' என்று சொற்களைக் கொண்டுகூட்டிப் பொருள் கொள்க.

இச் செய்யுளில் பொருண்முடிபு கொள்ளற்கு யாற்றொழுக்காகச் சொற்கள் அமையாமல் மேலும் கீழும் நடுவும் கிடப்பதால் அச் சொற்களைப் பொருள்கொள்ளற் கேற்றவாறு சேர்த்துப் பொருள் கூறப்பெற்றது.

இதில் தோழி, நந்திமன்னனாகிய தலைவனை நோக்கித் ‘ தன் பாங்கியாகிய தலைவி, மன்னன் தொண்டைமாலையை விழைந்து மனம்மயங்கி அம்மனமயக்கத்தால் உணர்வற்றுத் தூண்போல் அசைவற்று நிற்கின்றாள்; அவட்கு உன் மாலையைப்பெறும் வழியறியேன் ’ என்று குறிப்பாக மாலையை வழங்குமாறு கூறுகின்றாள். இச் செய்யுளில் பல பொருள்குறித்த ஒருசொல்லாகிய கோவே என்பது பல்லிடங்களில் **சொற்பின் வருநிலையணி**யாக **அடிமடக்**காக அமைந்து சொல்லின்பந் தருதலையறிக.

கோ என்னும் ஓரெழுத்தொருசொல், அரசன், தலைவன், அம்பு என்னும் பொருளில் ஈண்டு வந்துளது. என்னை?

[1]‘ அந்தரம் குலிசம் பாரிளே டத்திரம்
வந்த நீர்திசை மலைவேல் மன்னவன்
விழிபசு கோவென வேண்டினர் புலவர் ’

என்பது சேந்தன் திவாகரம். இங்கே பதினொரு பொருள்களைக் குறிக்கின்றாராதலின், கோவென்ற சொற்கு மேற்குறித்தவாறு பொருள் கூறப்பெற்றது.

ஓகோ : இரக்கக் குறிப்புச்சொல். கம்பர் : கம்பம் + அர் - கம்பம் போன்றவர். கம்பம் - தூண் : கம்பம்போன்றவரை கம்பர் என்றது ஆகுபெயர். ‘ தலைவி, நந்திப் போத்தரையனாகிய உனது ஆதொண்டை மாலையைக் காதலித்தமையால், உணர் விழந்தாள்; நெஞ்சறை போனாள்! அம்புபோன்ற கண்கள் பார்வை நிலையின்றிப் பஞ்சடைத்து நின்றுவிட்டன; நிலவொளி இந்நிலையில் எதற்கு? கம்பம்போல் நிற்கின்றாள்;’ என்று தலைவியின் நிலையை விளக்கிக்கூறி, இம்மாலை கிட்டும் வழியும் அறியேன், நீதான் அதைக் கிட்டுதற்கு வழிசெய்ய வேண்டும்; கொடுத்தருள்க ’ என வேண்டும் தோழியின் மதிநலம் வியக்கத்தக்கதாக அமைந்துள்ளது காண்க. ஆர் விகுதி, இகழ்ச்சி குறித்தது கம்பம்போல் நிற்கும் தன்மையைக்கண்ட வெறுப்பினால்.

இவ்வாறே மதுரைக் கலம்பகத்தும் இறைவன் மாலையைக் காதலித்த தலைவியின் நிலைக்கு இரங்கி இறைவனிடம் தோழி முறையிடுவதாக அமைந்த பாடலும் ஒப்புநோக்கி மகிழற்பாலது.

---

1. சேந்தன் திவாகரம், அந்தத்துப் பொருள்கோள் :

[1]'தேனரு தசிலைக்கரும்பு கொலைக்கரும்பொரு வேம்பெனும்
தேம்புயத்தணி வேம்பினைக்கனி தீங்கரும்பெனும் இவ்வணம்
மானருத மழைக்கண்நங்கையும் மாறியாடத் தொடங்குமால்
மாறியாடுநின் வல்லபந்தொழ வந்தபேர்க்கும் வருங்கொலோ'

என்று கூறுவதறிக. (நிச)

இதுவும் அது

[1]எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

ஆகிடுக மாமை அணிகெடுக மேனி
அலரிடுக ஆரும் அயலோர்
போகிடுக சங்கு புறகிடுக சேரி
பொருபுணரி சங்கு வளைமென்
நாகிடறு கானல் வளமயிலை யாளி
நயபரனும் எங்கள் அளவே
யேகொடியன் ஆக இவையியையும் வஞ்சி
இனிஉலகில் வாழ்வ துளதோ.

(இ - ள்.) வஞ்சி - வஞ்சிக்கொடி போல்வாளாகிய இவட்கு, மாமை ஆகிடுக - உடலெங்கும் தேமல் படர்வதாக, மேனி அணிகெடுக - அதனால் உடலின் அழகு கெடுவதாக, அயலோர் ஆரும் அலர்இடுக - பக்கத்திலுள்ளோர் யாவரும் பழி தூற்றுவாராக, சங்கு போகிடுக - சங்கு வளையல்கள் கையினின்றும் நீங்குவதாக, சேரி புறகிடுக - நம் சேரியிலுள்ளோர் புறங்கூறித் தூற்றுவாராக, பொருபுணரி - அலைமோதுகின்ற கடலில் வாழ்கின்ற, சங்கு - சங்குகளும், வளை - குவளைக் கொடிகளும், மெல் நாகு இடறு - இளம் பசுக்கன்றுகள் இடறிவிழச் செய்கின்றதான, கானல் - கடற்கரையையுடைய, வளமயிலை ஆளி - வளப்பம் பொருந்திய மயிலாப்பூரை ஆள்கின்றவனை, நயபரனும் - சிறந்த அருளுடைய நந்திமன்னனும், எங்கள் அளவேயே கொடியன் ஆக - எங்களுடைய முறை

1. மதுரைக்கலம்பகம் : ௫௦.

மையிலேயே கொடுமை செய்வோனாக இருக்க, இவை இவையும் - இத்தன்மையாவும் வருவனவாக ஆதலால், இனி உலகில் வாழ்வது உளதோ-(இவைகள் வரினும் வாரா தொழியினும் என்ன?) இனிமேல் இவ்வுலகில் வாழ்தற்கு இடனுண்டோ? இல்லையே!

(வி - ரை.) தோழியானவள், தன்நெஞ்சொடு பகர்கின்றாள். இனி என்ன? 'வஞ்சிக் கொடிபோன்ற இவள் உயிர்வாழப் போவதில்லை! நந்திமன்னனையே நினைந்துநினைந்து வாடுகின்றாள். அதனால் உணவுகொண்டாளில்லை! உறக்கமுற்றாளில்லை! நாளுக்கு நாள் உடலிளைத்து மெலிந்து போயுள்ளாள்! இனி உடலெங்கும் தேமல் படர்ந்தாலென்ன? அதனால் இவள் அழகு குன்றினாலென்ன? எல்லோரும் பழிதூற்றிப் பேசினாலென்ன? கையிலணிந்திருக்கின்ற சங்காலான வளையல்கள் கழன்று கீழே விழுந்தாலென்ன? பக்கத்துச் சேரியிலுள்ளோர் புறங்கூறிப் பழிதூற்றினாலென்ன? அருளாளனான நம் நந்திமன்னனும் எங்களளவில் கொடியனாக இருந்தாலென்ன? அன்றி அவன் அருள்செய்தால்தான் என்ன? இனி இவைகள் எல்லாம் ஒன்றாகவே சேர்ந்து வருவதாக! இனி நன்மைவரினும் தீமை வரினும் ஒன்றும் பயனில்லை! 'தலைக்குமேல் வெள்ளம் போனால் சாண்போனால் என்ன? முழம் போனாலென்ன?' என்றபடி ஆகிவிட்டது; தலைவி இனி உயிர்வாழாள்! செய்கை முற்றி விட்டதே! இனி என்ன செய்வேன்! ஊழின்வலிமை இதுவோ! ஆ! ஆ!' எனக்கூறி அழுகின்றாள்.

ஆகிடுக - ஆக : வியங்கோள் வினைமுற்று, இடு பகுதிப் பொருள் விகுதிகளாக மூன்றிடத்தும் வந்தன. இரங்கல் துறையாக அமைந்த பாட்டாதலான், அதைத் தோற்றுவிக்கும் நெய்தல் நிலக் கருப்பொருள்களாகிய சங்கும் குவளைக் கொடியும் கூறப் பட்டன. இவைகள் இளங்கன்றுகள் துள்ளி விளையாடற்கியலா வாறு தடுத்து இடறிவிழச் செய்கின்றன என்பது அவைகளின் மிகுதி தோன்றக் கூறியவாறு. இதனால் மயிலாப்பூர் நாட்டுக் கடலின் சிறப்பும் நெய்தல்நிலப் பண்பும் விளக்கிப் பாட்டுடைத் தலைவன், தன்னைச் சார்ந்தோர்க்கு நலஞ்செய்திலனாயினும் தீமையே செய்கின்றானென உள்ளுறைதோன்ற நின்றது. தலைவியின்நிலை இனிப் பாதுகாக்க இயலாத தொன்றாய்க் காதற்கடுமை முற்றிநின்றது. எது எப்படியானாலும் அதனாற் பயன்விளையப் போவதில்லையென நினைந்து தோழி தன்னொடுகூறிக் கவலை கொள்கின்றாள். நந்திநாயகன் பிறருக்கெல்லாம் நன்மைசெய்து பாதுகாப்பவனானாலும் எங்கள் அளவில் அஃதில்லை! எங்கள்பால்

வன்கண்மையாகவே இருக்கின்றான்! இனி வன்கண் நீங்கி மென் கண்ணனாய் அருள் செய்தாலும் பயனில்லை என்பதை விளக்க, 'எங்கள் அளவே கொடியன் ஆக', என்றாள்! நன்மை செய்யாத இவன் நயபரனா? இல்லையே என்பதை அறிவிக்க, அப்பெயரால் கூறி உம்மையும் கொடுத்தாள், இறந்தது தழுவிய எச்சவும்மை யாக. வஞ்சிக்கொடி போல்வாளாகிய தலைவியை வஞ்சியென்றது, உவமைத் தொகைநிலைக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகை. உளதோ என்பதிலுள்ள ஓகாரம் இல்லையென எதிர்மறைப் பொருள் குறிக்க வந்ததோடு அவலமும் தோன்றநின்றது. (௫௫)

## தலைவன், தலைவியின் இடைச்சிறுமையை வியத்தல்

### நேரிசை வெண்பா

உளமே கொடிமருங் குண்டில்லை என்னில்
இளமுலைகள் எவ்வா றிருக்கும்—கிளரொளிய
தெள்ளிலைவேற் கண்ணினாள் தெள்ளாற்றில் வென்றகோன்
தன்மயிலை அன்னாள் தனக்கு.

(இ - ள்.) உளமே - (நம் காதலிக்கு இடை உண்டோ இல்லையோ என்று மயங்காநிற்கின்ற என்) நெஞ்சே! கிளர் ஒளிய - மேலெழுந்தோங்குகின்ற ஒளியையுடைய, தெள் இலைவேல் - அழகுள்ள இலை வடிவமைந்த வேல் போன்ற, கண்ணினாள் - கண்களையுடையாளும், தெள்ளாற் றில் வென்றகோன் - தெள்ளாற்றுப் போரில் பகைமன்னர் களை வெற்றிகொண்ட நந்திமன்னனுக்குரிய, மயிலை அன் னாட்கு - மயிலாப்பூரையொத்த சிறப்புடையாளுமாகிய நம் காதலிக்கு, கொடி மருங்கு உண்டு - பூங்கொடிபோன்ற சிறிய இடை இருக்கின்றதே, இல்லை என்னில் - அஃதில்லா திருக்குமானால், இளமுலைகள் எவ்வாறு இருக்கும் - இளமை பொருந்திய கொங்கைகள் எப்படி இருக்கமுடியும்? (ஆத லால் நீ மயங்காது இடை உண்டென்று தெளிவடைவாயாக.)

(வி - ரை.) தலைவியின் இயற்கைப்புணர்ச்சி இன்பில் திளைத்த தலைவனுக்கு தலைவியின் ஒவ்வோர் உறுப்பையும் காண் டொறும் காண்டொறும் ஒவ்வோர் உறுப்பும் புதுப்புது அழகு தந்து இவன் உள்ளத்தைக் கவற்ற, ஆரா அன்பினனாய் அவள்

இடையின் நூலொத்த நுண்மைகண்டு வியந்து தன் நெஞ்சொடு பேசுகின்றான்.

ஒளிவிளங்கும் அழகுடைய இலைவடிவமைந்த வேற்படை யொத்த கூரிய கண்ணையுடையாளும், தெள்ளாற்றுப் போரில் பகை மன்னர்களைக் கொன்று வென்ற வெற்றிவேந்தனாகிய நந்திமன்னனுக்குரிய மயிலையையொத்த இயற்கையழகு வாய்ந்த வளுமாகிய நம் காதலிக்கு இடை இருக்கின்றது! அஃதில்லை யேல் இவளின் இளங்கொங்கைகள் எதைப் பற்றுக்கோடாகக் கொண்டு நிற்கும்; நெஞ்சே! நீ இல்லையென்று மயங்குகின்றாய்! உன் அறியாமைத்தன்மை யென்னே! என்னே!' என்றான். இது, தலைவன் தன் காதலியின் இடையின் நுட்பத்தை வியந்த வாறாம். இவ்வாறே திருக்கோவையார்க் காதலனும் நயப்புத் துறையில் தன் காதலிக்கு இடையுண்டென்று தன் நெஞ்சுக்குக் கூறுவதாக அமைநத கருத்தும், வண்டோச்சி மருங்கணைதல் என்னும் துறையில் அமைந்த கருத்தும் இதனோடொப்ப இருத்தலை அறிக.

[1] 'அகல்கின்ற அல்குல் தடமது கொங்கை அவைஅவம்நீ
புகல்கின்ற தென்னைநெஞ் சுண்டே இடை'

எனவும்,

[2] '....................தில்லையன்னாள்
நூலொத்த நேரிடை நொய்ம்மையெண் ணாது நுண் தேனசையால்
சாலத் தகாதுகண் டீர்வண்டு காள்கொண்டை சார்வதுவே'

எனவும், காரைக்குடி திரு. ராய. சொக்கலிங்கனவர்கள் காந்தி யடிகள்மீது அன்புகனிய யாத்த காந்தி கலித்துறையந்தாதி என்னும் நூலில் காதலியின் இடைநுண்மையைக் கண்டு வண்டை விலக்குவதாக அமைந்த துறையில், தலைவன் தன் காதலி, நாடு விடுதலை இயக்கத்தில் ஈடுபாடுற்று அதன் அறிகுறி யாகத் தடித்த நூலாலான கதராடை புனைந்து அதனால் மேலும் வாடி இளைத்து மெலிந்துள்ளமை அறிந்தும் மேலும் அதை மெலியவைப்பது நுமக்கு ஏற்றதல்லவென வண்டுகளை நோக்கி,

[3] 'நாடு செழித்திட நண்ணும் முரட்டுக் கதர்சுமந்து
வாடிய சிற்றிடை நொந்தரும் என்கண் மணிவருந்த
கூடிய வண்டினம் கூந்தல் மலர்மொய்த்துக் கொல்லுகின்றீர்'

என்று கூறுவதும் பிறவும் கண்டு மகிழ்க.

---

1, 2. திருக்கோவையார்: ௪; ௪௫.
3. காந்தி கலித்துறை யந்தாதி:

கொடிமருங்குல் கொடிபோன்ற இடை: உவமத்தொகை. இதில், நுண்மையென்னும் பொதுத்தன்மையும் தொக்குநிற்ப தறிக. என்னில்: எதிர்கால இல் ஈற்று வினையெச்சம். தெள்ளாறு, போர்நிகழ்ந்த இடம். மயிலை - மயிலாப்பூர். தலைவனுகிய நந்திமன்னனுக்கு உரிமையான ஊர், தவஞ்செய்வார்க்கும் இடமாய் அறஞ்செய்வார்க்கும் இடமாய் மலர்ப் பூங்காக்களும், குளிர்மைமிக்க நீர்த்தடாகங்களும் தன்னகத்துக் கொண்டதாய், ஆடலும் பாடலும் இடையரு தியலுவதாய், ஒருநாள் உறைந்திசினோர்க்கும் வழிநாள் தம்பதி மறக்கும் தன்மைத்தாய், இன்பந் தரும் சிறப்புடைமையால் இத்தகைய மயிலையைத் தலைவியின் தன்மைக்கு ஒப்புக்கூறித் தலைவியின் உயரிய அழகையும் பண்பையும் பாராட்டினுன். இவ்வாறே பிற சான்றேர்களும் தலைவியின் தன்மைக்கு அவ்வந் நாட்டு அரசர்கள் ஆட்சி கொண்டுள்ள ஊர்களையே உவமையாகக் கூறுதலைப் பண்டைய நூல்களில் பரக்கக் காணலாம்.

[1]'நன்னன் ஆஅய்பிரம் பன்ன மின்னீர் ஓதி'

எனவும்,

[2]'குரங்குளைப் புரவிக் குட்டுவன்
மரந்தை யன்னவென் நலம்' ,

எனவும், தோழி கூற்ருகவும், பரத்தை கூற்ருகவும் பிறவாறும் வருவதறிக. இதனுல் தலைவி, பெண்களுக்குரிய நல்லியல்புகளெல்லாம் ஒருங்கே வாய்ந்தவள் என்பது பெறப்பட்டதறிக.

## தலைவன் புறத்தொழுக்கத்தைத் தலைவி கூறி வருந்தல்

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

தனக்குரிய என்கொங்கை தான்பயந்த
மழகளிற்றுக் காக்கித் தன்பால்
எனக்குரிய வரைமார்பம் எங்கையர்க்கே
ஆக்கினுன் இகல்வேல் மன்னர்
சினக்கரியும் பாய்மாவும் தெள்ளாற்றில்
சிந்துவித்த செங்கோல் நந்தி
மனக்கினியான் அவனிட்ட வழக்கன்றே
வழக்கிந்த வையத் தார்க்கே.

1, 2. அகம்: கடுசு; கஎசு.

(இ - ள்.) இகல்வேல் மன்னர் - பகைமைகொண்ட வேற்படையேந்திய அரசர்களின், சினக்கரியும் - சினம் பொருந்திய யானைகளையும், பாய்மாவும்-பாய்ந்தோடுகின்ற குதிரைகளையும், தெள்ளாற்றில் சிந்துவித்த - தெள்ளா றென்னுமிடத்தில் நடந்த போர்க்களத்தில் சிதறியோடும் படி கொன்று வென்ற, மனக்கு இனியான் - என் மனத் துக்கு உகந்தவனும், செங்கோல் நந்தி-செங்கோன் முறை கொண்ட நந்தியென்னும் பெயருடையவனுமாகிய மன்ன வன், தனக்கு உரிய-தான் ஒருவனுக்கே உரிமையையுடைய, என் கொங்கை - என்னுடைய கொங்கைகளின் சிறப்பை, தான்பயந்த - தான் பெற்றுள்ள, மழகளிற்றுக்கு ஆக்கி - இளயானையினிடத்தில் உண்டாகச் செய்து, தன்பால் - தன்னிடமுள்ள, எனக்கு உரிய வரைமார்பம் - என் ஒருத் திக்கே உரிமையுடையதான மலைபோன்று படர்ந்த தன் மார்பிடத்தை, எங்கையர்க்கே ஆக்கினான் - என் தங்கை யர்களாகிய பரத்தையர்களுக்கே உரிமைப்படுத்தினான், இந்த வையத்தார்க்கு - இந்நிலவுலகில் வாழும் மக்களுக் கெல்லாம், அவன் இட்ட வழக்கு அன்றோ - அம்மன்னன் வைத்த முறையன்றோ? வழக்கு - முறையாகும். (நாம் என்ன செய்யலாம்! வருந்துவதன்றி வேறில்லையே!)

(வி - ரை.) மனையுறை மகளிர்க்கு ஆடவரே உயிர். அம் மகளிர் தங்கள் நாயகரில் தெய்வம் தவம் பிறிதில வென்றெண் ணும் மாசுமறுவற்ற தூய பளிங்குபோன்ற ஒள்ளிய நெஞ்சினர். அவர் எண்ணுவன யாவும் தம் கணவன் குணஞ்செயல்களன்றிப் பிறிதில்லை. அத்தகைய கணவரைப் பிரிந்துறையும் நாள் நெருப் பினுங் கொடிதாய்ச் சுடும்; துன்ப நாட்களாகக் கழியும். ஆதலால் தலைவன் தன் மனைக்கிழத்தியைப் பிரிந்து பரத்தையரில் பிரிந்து தன் கிழத்தி யில்லத்துக்கு வாராது காலங்கழித்து வருவானாயி னன். அது பொறாத தலைவி, [1]"எங்கொங்கை நின்னன்பா அல்லார்தோள் சேரற்க' என்பதுபோலக் கொள்கையும் உறுதியும் உடையளாகலான், தன்னை வெறுத்துப் பரத்தையரையே நசசி யொழுகும் நிலைபொறாது வருந்துவாளாய் 'என் கொங்கை என் காதலராகிய அவருககே உரிமையுடையது; அதை வெறுத்தார்; அதன் மதர்த்த தன்மை, அண்ணாந்தேந்திய சிறப்பு, இளமை

1. திருவாசகம், திருவெம்பாவை: கக.

இவை யாவும் தன் பட்டத்து யானையின் முகத்திடத்தும், தோம் பிடத்தும் படைத்துக் கொண்டான்; ஆதலால் அதில் பெரு விருப்புக் கொண்டு மகிழ்கின்றான்; எனவே, இதை மறந்ததில் வியப்பொன்றுமில்லை. ஆனால், அவன் மலைபோன்று படர்ந்து உயர்ந்த மார்பு, எனக்கன்றிப் பிறர் யாருக்கும் உரியதன்று; முறைப்படி நோக்கினால், பிற பெண்டிர் யாரும் விரும்புதலும் கூடாது; இவனும் அதை யாருக்கும் உரிமையாக்குவதும் கூடாதது. ஆனால், நம் நந்திமன்னன் பகைவர்களையெல்லாம் வேரறுத்து வென்ற பெருந்தகை; தமவும் பிறவும் ஒப்பநோக்கும் நடுநிலை திறம்பா நல்லோன்; எதையும் தேர்ந்து முறை செலுத்தும் செங்கோல் மாண்பினன்; அவனுக்கு முறை இது வென்றும் இது முறையல்லவென்றும் தெரியும். அவன் இட்டதே சட்டம்; அதை மறுத்தற்கு உலகில் எவருள்ளனர்? ஒருவருமில்லை. அவன் எதை இதுதான் முறை; செய்யததகுந்தது என்று கூறி நிலை நாட்டுகின்றானோ? அதையே உலகமககள் எவரும கடைப்பிடித் தொழுகுவர்; இஃது உலக இயல்பு. இதனாலேயே, 'அரசன் எப்படி? குடிகள் அப்படி' என்னும் பழமொழியும் வழங்குகின்றது! நாம் என்செய்வது! வருந்துவதன்றி வேறு வழியில்லை' யென்று தன் மனத்தோடு நொந்துகொள்கின்றாள்.

'தனக்குரிய', 'எனக்குரிய' என்னுஞ் சொற்களில் பிரிவுத் துன்பமும், உள்ள உரிமைப் பண்பும் ஒருங்கே புலனாதல் காண்க.

களிறு - பட்டத்து ஆண் யானை. ஆக்குதல் - தான் கருதிக் கொள்ளல் என்னும் பொருளது. எங்கை - எம் தங்கை. இங்கே தன் கணவனுடைய காதற் பரத்தையர்களை தன் தங்கையர் என, உரிமைபெறக் கூறுகின்றாள். இதில் தன் உயரிய குடிப்பிறப்பின் மேன்மையும் கணவனைக் கடவுளெனக் கருதும் கற்பின் பொற்பும் புலப்படுதல் அறிக. என்னை?

[1] 'நிலத்திற் கிடந்தமை கால்காட்டும் காட்டும்
குலத்திற் பிறந்தார்வாய்ச சொல்'

[2] 'நலம்வேண்டின் நாணுடைமை வேண்டும் குலம்வேண்டின்
வேண்டுக யார்க்கும் பணிவு'

என அறநூல் முழங்குதலானும் அறிக.

[3] 'எங்கையர்க் குரையென இரத்தற் கண்ணும்' எனத் தொல்காப்பியர் கூறும் கற்பியல் நூற்பாவானும்,

---

1, 2. திருக்குறள்: கூ௫௯-கூ௦. 3. தொல். பொருள்: கசஎ.

[1] 'திறமலி சின்மொழிச் செந்துவர் வாயினை எங்கையர்க்கே
மறமலி வேலோன் அருளுக'

எனச் சேரமான் பெருமாள் ஆக்கிய திருவாரூர் மும்மணிக்கோவை உரையானும் 'எங்கையர்' என்று கூறுதலான் அறியப்பெறும்.

சினக்கரி - போரில் கோபங்கொள்ளும் யானை. பாய்மா - பாய்ந்தோடுகின்ற குதிரை. இவை யானை குதிரைகளின் சிறப்பு. சிந்துவித்தல் - சிதறியோடும்படி கொல்வித்தல்: பிறவினை. மனக்கு - மனத்துக்கு எனற்பாலது, அத்துச்சாரியை குறைந்து நின்றது; [2]'மாடக்குச் சித்திரமும் மாநகர்க்குக் கோபுரமும்' என்பதில் அத்துக் குறைந்தது காண்க. வழக்கு - முறை; நீதி. வையத்தார் - உலகில் வாழும் மக்கள். (நிஎ)

பாங்கி கூற்று

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

தார்வட் டக்கிளி மருவும் சோற்பகர்
தளரிடை தையல் வஞ்சிக்கின்று
ஏர்வட் டத்தனி மதிவெள் ளிக்குடை
கோடிதேன் றலது பழுதன்றே
போர்வட் டச்சிலை உடைவாள் பற்றிய
பொருகடல் மல்லைப் புரவலனே!
பார்வட் டத்தனி மதயா னைப்படை
உடையாய்! பல்லவர் அடலேறே!

(இ - ள்.) போர்வட்டச்சிலை - போர்க்களத்திற்குரிய வில்லையும், உடைவாள் - குற்றுடை வாளையும், பற்றிய - கைக்கொண்ட, பொருகடல் - அலைமோதுகின்ற கடலினை யுடைய, மல்லைப் புரவலனே - மாமல்லபுரத்தைக் காப்பவனே! பார்வட்டத்தனி மதயானைப்படை உடையாய் - பூமண்டிலத்திலேயே ஒப்பற்ற மதங்கொண்ட யானைப் படையை யுடையவனே! பல்லவர் அடல்ஏறே - பல்லவர் குலத்தின் ஆண்சிங்கம்போன்ற நந்திமன்னா! வட்ட தார்க்

---

1. திருவாரூர் மும்மணிக் கோவை: உச.
2. நன்னூல், பொதுப்பாயிரம்: நிநி.

கிளி - வட்டவடிவுடைய மாலைக்கீற்றினையுடைய, மருவும் கிளி சொல்பகர் - தன்னிடமுள்ள கிளியின் இன்சொல்லைப் போல் பேசுகின்ற, தளர்இடை-நடுங்குகின்ற சிற்றிடையை யுடைய, தையல் வஞ்சிக்கு - அழகுள்ள வஞ்சிக்கொடி போன்ற இவளுக்கு, இன்று - இற்றைநாளில், ஏர் - அழகு பொருந்திய, தனிமதி வெள்ளிக்குடை - தனக்கு ஒப்பற்ற நிறை நிலவையொத்த உனது வெண்கொற்றக் குடை யானது, கொடிது என்றால் - கொடுமையைத் தருவதாக இருக்குமானால், அது பழுது அன்றோ - அச்செயல் உன் செங்கோல் மாண்புக்கு இழுக்குத் தருவதாகுமல்லவா? (ஆகவே, இவளை ஆதரித்துக் காத்தருள்க.)

(வி - ரை.) நந்திப் போத்தரையன் ஒருகால் உலாவந்தான்; அவ்வுலாவைத் தொடர்ந்து பல இளமங்கையர் போந்தனர்; அவருள் ஒரு மங்கை, மன்னன் முகத்தையும் தோளையும் மார்பையும் நோக்கிய வண்ணமாக இருந்தாள்; உணர்விழந்த நிலையில் நின்றாள்; ஏக்கற்றாள். 'இவனே என் மன்னன்' என்று வாய் புலம்பினாள். அவளுடன் வந்த அன்புடைப் பாங்கி இவள் நிலையை அறிந்தாள். மன்னனிடம் முறை வேண்டுகின்றாள்.

'மன்னா! பல்லவர் குலத்து ஆண்சிங்கம் போன்றவனே! வட்டமாலை போன்ற கழுத்துவரியையுடைய கிளிபோன்று சொற்களைப் பேசுகின்ற இவ் இளமங்கைக்கு எல்லோர்க்கும் தன் இனிய குளிர்ந்த நிழலைத்தந்து பாதுகாக்கின்ற நிறைமதியை யொத்த உனது வெண்கொற்றக்குடை வெப்பந்தருவது (அவளைமட்டும் பாதுகாவாமல் இருப்பது) உன் செங்கோல் முறைக்குப் பொருத்தமாகுமா? அவ்வாறு நீ ஒழுகுவது முறைப்படி குற்றமாகுமன்றோ? இது நீரொழுகப் பாலொழுகாத தன்மையாகவன்றோ இருக்கின்றது! பாதுகாத்தருள்வது உனது கடமை'யென்று மன்னன்பால விளம்பி வேண்டுகின்றாள்.

தார்வட்டம் - வட்டத்தார் என மாற்றுக. வட்டத்தார் - கிளிகளின் கழுத்தில் கபில நிறத்தில் மாலைபோன்று இருக்கும் வட்டவடிவு. இது ஒருசில கிளிகளின் கழுத்திடத்தில் மாலை தொங்குவதுபோல் காணப்படும். மாலைபோன்று அது தோன்றுவதால் அதனை ஆன்றோர் 'தார்' என்றனர். சீவக சிந்தாமணி குணமாலையார் இலம்பகத்தில், குணமாலையார் தம் காதலனாகிய சீவக மன்னன்பால் ஒரு கிளியைத் தூதனுப்பினாராக; அது விரைந்து வாராமை கண்டு வருந்தியதாக வரும் பாடலில்,

[1]'செந்தார்ப் பசுங்கிளியார் சென்றார்க்கோர் இன்னுயிரைத்
தந்தாரே தந்தார்'

என்றவிடத்துத் தார் என்று கூறியதைக் காண்க. சொல் பகர் - சொல்போல் பேசுகின்ற என விரிதலால் உவமைத்தொகை. அன்றி 'மருவும் கிளி சொல்பகர்' எனக்கொண்டு தன்னிடமுள்ள கிளியுடன் பேசுகின்ற என்றலுமாம். வஞ்சி: வஞ்சிக்கொடி போன்றவளாகிய மங்கை: உவமைத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகை. வெள்ளி - ஈண்டு வெண்ணிறத்தைச் சுட்டியது. அரசர்கட்குச் செங்கோல் முறைக்கு அடையாளப் பொருள்களாகக் கொள்ளப்பெறுவன, கொடியும் முரசும் குடையும் ஆம். இவைகளால் நாட்டைப் பாதுகாத்துத் தன் குடைநிழலின்கண் வைத்துக் காக்கின்றான் என்பது குறிப்பு. இதனைத் தொல்காப்பிய மரபியலில்,

[2]'படையும் கொடியும் குடையும் முரசும்
நடைநவில் புரவியும் களிறும் தேரும்
தாரும் முடியும் நேர்வன பிறவும்
தெரிவுகொள் செங்கோல் அரசர்க் குரிய'

எனக் கூறுவதும்,

[3]'சீத மதிக்குடைக்கீழ்ச் செம்மை அறங்கிடப்பத்
தாதவிழ் பூந்தாரான் தனிக்காத்தான்'

என, நளமன்னன் செங்கோல்முறையோடு ஆட்சி செய்ததைப் புகழேந்தியார் கூறுமாற்றானும் அறிக.

முத்தமிழ் வளர்ந்த கூடல்நகரில் கோவலன் பாண்டி மன்னன் ஏவலால் வெட்டுண்டு இறந்தகாலை, கோவலன் மனையாள், கண்ணகி சினங்கொண்டு பாண்டிமன்னன் அவை நோக்கி விரித்த கருங்குழலும் மாறாத கண்ணீருமாக வீதிகளில் செல்லக்கண்ட ஊர்மக்கள் மன்னன்நிலை குறித்தும் கண்ணகியின் கரைகாணாத் துன்பநிலை குறித்தும் பேசும்போது இக் குடையின் மேலேற்றி,

[4]'மண்குளிரச் செய்யும் மறவேல் நெடுந்தகை
வெண்குடை வெம்மை விளைத்த திதுவென்கொல்'

எனக் கூறுவதாக இளங்கோ வேந்தர் அருளியிருப்பதும் கண்டு மகிழ்தற்கொத்ததாக இருத்தலை அறிக. இவைபோன்றே பாங்கி

1. சீவகசிந், குணமாலை. 2. தொல். மரபியல்: எக.
3. நளவெண்பா. 4. சிலப். கக: உக - உ.

யும் உன் 'ஏர் வட்டத்தனி மதிவெள் ளிக்குடை கொடிதென்றூ லது பழுதன்றோ?' என்று பணிவோடு கேட்கின்றாள்.

சிலை - வில். உடைவாள் - தன்னிடம் எப்போதுமுள்ள சிறுவாள். இவை போருக்காக அரசர்கள் கொள்வன. ஆத லால் வில்லையும் வாளையும் உடன் கூறினாள். அடல் - கொல்லு தல். ஏறு - விலங்குகளின் ஆண்பால் குறிக்கும் மரபுசசொல். இங்கே ஆண் சிங்கத்தைக் குறித்து ஆகுபெயராக மன்னனைக் குறித்தது. (௫அ)

இதுவும் அது

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

அடலேறு வலத்துயர் வைத்தபிரான்
அடலுக்ரம கோபன் அடங்கலர்தாம்
மடலேறிட வாகை புனைந்தபிரான்
வடவேங்கட நாடுடை மன்னர்பிரான்
பெடையேறு நெடுங்கழி சூழ்மயிலைப்
பெருமானது பேரருள் நீள்முடிமேல்
மிடலேறிய கோதை நினைந்தயர்வாள்
மேலியத்தழல் வீசும்இம் மாமதியே.

(இ - ள்.) இம் மாமதி - இதோ தோன்றிவருகின்ற நிறை நிலவானது, அடல் ஏறு - வெல்லுகின்ற எருது தெழுதிய கொடியினை, வலத்து உயர் - தன் வலது பக்கத் தில் மேலெழுந்தோங்கும்படி, வைத்தபிரான்-வைத்துள்ள பெருமையோனும், அடல் உக்ரம கோபன்-(பகைவரைக்) கொல்லுகின்ற கொடுமைமிக்க சினமுடையோனும், அடங்கலர் தாம் மடல் ஏறிட-பகை மன்னர்கள் தாமாகவே பனங்கருக்கு மடலில் ஏறி உயிர்விடும்படி, வாகை புனைந்த பிரான் - வெற்றிமாலை சூடிய பெருமையுடையோன், வடவேங்கடநாடு உடை மனனர் பிரான் - வடபாலுள்ள வேங்கட மலையைச் சார்ந்த நாடுகளைத் தனக்கு உரிமையாக ஆட்சிகொண்ட வேந்தர் வேந்தனும், பெடை ஏறு-பெண் நண்டு மீன் முதலியன மேலேறி வருகின்ற, நெடுங்கழி சூழ் - நீண்ட உப்பங்கழிகள் சுற்றியிருக்கின்ற, மயிலைப்

பெருமானது - மயிலாப்பூர் மன்னனாகிய நந்திமன்னனது, பேரருள் நீள்முடிமேல் - மிக்க அருளுடைய நீண்ட திரு முடிமீது சூடியுள்ள, மிடல் ஏறிய கோதை - பெருமை பொருந்திய தொண்டை மாலையை, நினைந்து அயர்வாள் - நினைத்து வருந்துகின்றவள், மெலியத்தழல் வீசும் - வாட் டங்கொள்ளத் தன் நெருப்புக்கதிரை அள்ளி யெறி கின்றதே! (என் செய்வேன்! இவ்விரவு இவட்கு இனி எவ்வாறு கழியுமோ அறியேனே!)

(வி - ரை.) தலைவியின் நிலைக்கு இரங்கிப் பாங்கி வருந்து கின்றாள். கொல்லும் எருதுக் கொடியையுடையவனும், கொல்லுகின்ற கொடுமை பொருந்திய சினத்தையுடையவனும், பகை மன்னர்கள் மடலேறித்தாமே இறந்துபோமாறு வெற்றி மாலை சூடிய பெருமையுடையோனும், வடவேங்கட நாட்டையும் ஆட்சிகொண்டிருக்கின்ற வேந்தர் வேந்தனும், பெண் நண்டு மீன் இப்பி பறவை முதலியவைகள் மேலேறி இருக்கின்ற நீண்ட உப்பங்கழிகள் சூழ்ந்துள்ள மயிலாப்பூரை ஆள்கின்ற தலைவனாகிய நந்திமன்னனது அருள்வாய்ந்த, நீண்ட திருமுடிமீது அணிந் துள்ள தொண்டைமாலையை நினைந்து வருந்துகின்ற தலைவி மேலும் மெலிவடைய இந் நிறைநிலாவானது நெருப்பையொத்த கதிர்களை அள்ளிச் சொரிகின்றதே என்செய்வேன்! இவ்விரவுப் பொழுது இவட்கு இனி எவ்வாறு கழியுமோ! மன்னன் இவட்கு மாலை தந்து காப்பதுவே நன்று! தாரினைத்தாரான் போலும்' என்று பெரிதும் கவலையோடு பேசித் துன்புறுகின்றான்.

ஏறு - ஆண் விலங்கு. இங்கே வலத்துயர் என்ற குறிப்பால் நந்திமன்னனுக்குரிய காளையுருவெழுதிய கொடியை உணர்த் திற்று. மடலேறுதல்: காமமிக்க ஆடவர், தாம் காதலித்த தலைவியின் உருவெழுதி அதைக்கையிற் பிடித்துக்கொண்டு, எருக்கு ஆவிரை பூளை இவற்றின் பூக்களால் தொடுத்த மாலை யைக் கழுத்திலணிந்து பனங்கருக்கால் செய்த குதிரை வடிவமைந்த மடலில் தலைவியின் உருவைப் பார்த்தவண்ணமா யிருந்து தலைவியைப்பெறுவது. இது குறித்து நம் தமிழ் அகப் பொருள் இலக்கியங்கள் திறம்பட எடுத்தியம்புதல் காணலாம். பிற்கால இலக்கியங்களிலும் அவை இடம்பெற்று வழங்குதலையும் அறிக. ஆனால், ஆடவரன்றிப் பெண்கள் மடலூர்தல் வழக் கின்று. இதனை வள்ளுவர் பெருமான், தாம் அருளிய திருக் குறள் அறநூலில் தலைவன் தலைவியைப்பெற விழைந்து கூறும் கூற்றாக,

[1]"காமம் உழந்து வருந்தினார்க் கேமம்
மடலல்ல தில்லை வலி"

என்று கூறுவோர், [2]"மடலேறாப் பெண்ணிற் பெருந்தக்கதில்" எனக் கட்டுரைத்து எவ்வளவு காமம் காழ்க்கொண்டாலும் நாணோடுடன் பிறந்த நல்லியலார் ஆகலான், மடலேற நாணினர் என்றார். அதனால் ஆன்றோர் பெண்டிர்க்கு விலககளித்தனர். ஆனால், திருமங்கை ஆழ்வார், தம்மைப் பெண்பாலாகக் கொண்டு ஆண்டவனை அடைதற்கு அவன அருளா தொழியினும், மடலேறியாவது அவனை அடைவேன் என மொழிந்து 'பெரிய திருமடல்', 'சிறிய திருமடல்' எனத் தனித்தனியாக அருளியிருப்பதும் இதனை விளக்கும். இங்கே கூறப்பெறும் 'மடல்' இதுபோன்று காதலுணர்வால் உந்தப்படும் மடலன்று. நந்தி மன்னன்பால் எதிர்த்துப் போரிட்ட பகைமன்னர் ஆற்றல், இவ் வேநதன் வலிமுன்பு நாகப்பாம்பின் முன்பட்ட எலித்திரள் போல் மாய்ந்தொழிய, அதில் புறமுதுகிட்டோடித் தப்பி உயிருய்ந்த மன்னர்களிற் சிலர், மீண்டு தம் ஊர்போதற்கு வெட்கினராய் மடலூர்தல் போன்ற செயலால் உட்கி உண்ணா நோன்பிருந்து உயிர்விடுவாராயினர். இதனையே இங்கே 'மடலேறிட' என்றார் வேந்தன் பேராற்றலையும் அவன் வெற்றிச் சிறப்பையும் கூறியவாறாம். வாகை - வெற்றிமாலை. இதனை, [3]"வாகை வனமாலை சூடி அரசுறையும், ஓகை உயர்மாடம்" என்பர் முத்தொள்ளாயிர நூலார்.

வடவேங்கடநாடு - வடபால் வேங்கட மலைவரை தன்னுரிமையாகக் கொண்டு வேந்தன் ஆட்சிசெலுத்திய எல்லையைக் குறித்தது. பெடை - பெட்டை. பெண்ணினம். ஏறு - ஏறுகின்ற: இது முக்கால வினைதொகை. நெய்தனிலக் கழிக் கரைசசிறப்பு. உப்புங்கழிகளில் கடலில் வாழும் உயிரினங்களில் நண்டு மீன் இப்பி முதலிய கருக்கொண்ட, பெண்ணினங்கள், கருவுயிர்த்தற்காகத் தாம் வாழும் கடலைவிட்டு வெளிவந்து மேட்டுப் பாங்காகிய கரையின்மீது தாவிக்குதித்து உப்பங்கழி ஓரங்களில் கருவுயிர்த்துச் செல்லும் தன்மையைக் குறிக்கப் 'பெடை ஏறு' என்றாள். அன்றி உம்மைத் தொகையாக்கிப் பெண்ணும் ஆணுமெனப் பொருள்கொண்டு அவைகள் வாழ்கின்ற 'நெடுங்கழிசூழ் மயிலை' என்றலுமாம். இதனால் நந்திமன்னன் தன்புற்றுரைத் துன்பக்கடலினின்றும் கரையேற்றி அவர் உய்தற்குரிய வழியைச் செய்து காப்பவன் என, உள்ளுறை தோன்ற நின்றதறிந்து மகிழற்பாலது.

---

1, 2. திருக்குறள்: ககங௬; ககங௭.
3. முத்தொள்: ௨0.

நீள்முடி - நீண்ட கிரீடம். அதன்மீது அரசர்கள் தம் மாலையைச் சூட்டி அரசு வீற்றிருப்பது இயல்பு. அம்மாலையைப் பெற நினைந்து நினைந்து வருந்துகின்றாள் இத்தலைவி. அவள்மீது உன் அழற்கதிரைச் சொரிந்து துன்புறுத்துவது தகுமா? அவள் விரும்பும் மாலை எளிய ஒருவனிடமுள்ளதன்று; எல்லா நாட்டினையும் ஆள்கின்றவன்; பகைவரைப் புறங்கண்ட பார்வேந்தன்; அவன் நாடே பெடை உயிரினங்களுக்கு ஆதரவு தருவது; நாடே அவ்வாறானால் இவளை இம்மன்னன் காவாதொழிவானோ? மாமதி - மா - கருமையெனக்கொண்டு களங்கமுள்ள மதியே! உன் களங்கத் தன்மையை நீ காட்டாதொழிவாயல்லை! ஆனால் அழற்கதிரை இனி இவள்மேல் சொரியாதே! சொரியின் மேற்கூறிய வேந்தன் உன்னை ஒறுப்பன்காண் என்று மாமதியை நோக்கிப் பாங்கி கனன்று, 'கோதை நினைந்தயர்வாள், மெலியத்தழல் வீசும் இம்மாமதியே' என்கின்றாள். வீசுகின்ற இந்த மாமதியே என முன்னிலையாக்கி இப்பொருள் கொள்ளற்கு. இக்கருத்தோடொப்பச் சந்திரவிலாசத் தலைவி நிலவை நோக்கிக் கூறும் கருத்தும் அறியற்பாலது.

[1]'கலையாய் அறிவைக் கலைத்தாய்மாடல்
　　காணாய் தணந்தார்க் கண்டாய்வெங்
கனலாய் மிகவுங் கனன்றாய்சீர்
　　கல்லாய் அல்ல கற்றாயுள்
மலையாய் கமல மலைத்தாய்தேன்
　　மணவா யாம்பல் மணந்தாய்போர்
மறவாய் பசுந்தே மறந்தாய்சொல்
　　மதியாய் செலத்தா மதித்தாயே'

என்பது காண்க. (டுக)

காலம்

## தலைவி, வேனிற் பருவங்கண்டு வருந்துதல்

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

மலர்ச்சூழல் அமர்ந்தினிய வண்டார்க்கும் காலம்
　வரிக்குயில்கள் மாவிலிளந் தளிர்கோதும் காலம்
சிலர்க்கெல்லாம் செழுந்தென்றல் அமுதளிக்கும் காலம்
　தீவினையேற் கத்தென்றல் தீவீசும் காலம்

---

1. சந்திரவிலாசம்: எ௩.

பலர்க்கெல்லாம் கோன்நந்தி பன்மாடக் கச்சிப்
பனிக்கண்ணார் பருமுத்தம் பார்த்தாடும் காலம்
அலர்க்கெல்லாம் ஐங்கணைவேள் அலர்தூற்றும் காலம்
அகன்றுபோ னவர்நம்மை அயர்த்துவிட்ட காலம்.

(இ - ள்.) (தோழீ!) இனிய வண்டு - (கண்ணுக்கும் காதுக்கும்) இன்பந்தரும் வண்டுகளானவை, மலர்ச் சூழல் அமர்ந்து - எல்லாவகை மலர்களினும் போயிருந்து, ஆர்க்கும் காலம்-பாடல்பாடுகின்ற வேனிற் காலம் இதுவாகும், வரிக் குயில்கள் - பொறிக் குயில்களானவை, மாவில் இளந்தளிர்-மாமரத்தில் தளிர்த்துள்ள மெல்லிய தளிர்களை, கோதும் காலம் - தம் வாயால் கௌவுகின்ற காலமுமாகும், சிலர்க்கு எல்லாம் - (கணவர்களோடு பிரியாது வாழுகின்ற) சில மங்கையர்கள் யாவருக்கும், செழுந் தென்றல் - குளிர்மையுள்ள தென்றற்காற்று, அமுது அளிக்கும் காலம் - நல்லின்பத்தைத் தரும் காலமுமாகும், தீவினையேன்கு - (கணவனோடு உடனுறைந்து இன்பந் துய்க்கும) நற் பேறிழந்த எனக்கு, அத் தென்றல் - நல்லின்பந் தரும் அத் தென்றற் காற்றே, தீ வீசும் காலம்- நெருப்பைப்போல் சுட்டுத் துன்பந்தரும காலமுமாகும், பலர்க்கு எல்லாம் கோன்நந்தி - பல நாட்டு வேந்தர்களுக்கெல்லாம் வேந்தனாக விளங்குகின்ற நந்தி மன்னனுக்குரிய, பல் மாடக்கச்சி - பலவகையான மாட மாளிகைகளையுடைய காஞ்சி மாநகரத்தில் வாழ்கின்ற, பனிக் கண்ணார்-குளிர்ச்சி யுடைய கண்களையுடைய இள மகளிர்கள், பரு முத்தம் பார்த்து ஆடும்காலம் - ஆணி முத்துக்களைப் பார்த்துப் பொறுக்கியெடுத்து விளையாடுகின்ற காலமுமாகும், வேள் ஐங்கணை அலர்க்கு எல்லாம் - மன்மத வேளுக்குரிய ஐவகை மலரம்புகட்கு எலலாம், அலர் தூற்றும் காலம் - அதனால் நலிவுற்ற மஙகையர்கள் பழிச்சொல் தூற்றிப் பேசுகின்ற காலமுமாகும், அகன்று போனவர் - பிரிந்து வேற்றுநாடு சென்ற நம் தலைவர், நம்மை அயர்த்துவிட்ட காலம்- நம்மை மறந்துவிட்டுச் சென்றநாட்டிலேயே தங்கியிருக்கும் காலமும் இதுவேயாக வந்துள்ளது! (என் செய்வேன்!)

(வி - ரை.) அறுவகைப் பருவத்துள் இன்பந்தருவது வேனிற்காலம் ஒன்றே. அக்காலத்து, மரங்கள் முதிர்ந்த இலைகளை உதிர்த்துப் புதிய தளிர்விட்டுத் தழைக்குங்காலமு மாகும். செடி கொடிகள் தளிர்த்து மெல்லரும் பீன்று முகிழ்த்து மலர்ந்து மணம் பரப்பும் காலமும் இதுவேயாகும்; இக்காலத் துக் கணவனோடு பிரிவின்றி இணைந்து வாழும் மடந்தையர்க்கு இன்பமும் பிரிந்து வாழும் நங்கையர்க்குத் துன்பமும் தருங் காலமும் ஆகும்; இந் நிலையில் இங்கு வாழுகின்ற காதல் தலைவியின் கணவன் பொருளீட்டும் நிமித்தமாக வேறு நாடு சென்றான்; குறித்துச் சென்ற காலம் வந்தும் அவன் வந் தானில்லை. வேனிற் பருவமும் வந்தது; முல்லைகள் சிரித்தன; வண்டுகள் இன்னிசை யெழுப்பிப் பாடலாயின; வரிக் குயில்கள் மாந்தளிர் கோதிக் கூவிப் பெண்குயில்களை உருக்கலாயின; தென்றல் பல்வகை மலர்களில் படிந்து தடவி அவைகளின் மணத்தைக் கவர்ந்துகொண்டு வந்து தெருக்கள் தோறும் உலாக் கொண்டது; இக் காலத்தே—எல்லோரும் இன்பங் கொள்கின்ற காலத்தே—இத் தீவினையாட்டியாகிய எனக்கு இத் தென்றலும் மற்றையனவும் துன்பந்தருகின்றனவே! இக காலத்து மன்மத வேள் தன் ஐந்துவகை மலர் அம்புகளைத் தன் கரும்பு வில்லில் வைத்துத் தொடுத்து எய்கின்றான்! என்போல் தம் காதலரைப் பிரிந்து வாழும் மகளிர்கள் யாவரும் இம மன்மதனைப் பழிதூற்றி வைத வண்ணமாகவே இருக்கின்றனர்! யானும் அந்நிலையளே! நம்மைவிட்டுப் பிரிந்து சென்ற நம் காதலர் நம்மை அறவே மறந் தனர் போலும்! இன்னும் வந்திலரே! என் செய்வேன்!' என்று, தன் தோழியோடு கூறி வருந்துகின்றாள், தலைவி.

மலர்ச்சூழல் - மலர்க் கூட்டம்; மிகுதி. இனியவண்டு - கண்ணுக்குத் தம் நிறங்களானும் காதுக்குத் தம் பாட்டானும் இன்பந்தரும் வண்டினங்கள். வரிக்குயில் - தன் உடலிறகுகளில் புள்ளிகளையுடைய குயிற்பறவை. கருங்குயில் என மற்றொரு வகையிருப்பினும் கண்ணுக்கு இன்பந்தரும் அழகுடையது வரிக்குயில் ஆதலால், அதனைக் கூறினாள். குயில்கள் தேமாந் தளிரைக் கௌவிக் கொத்தித் தின்பனவாதலால், 'தளிர் கோதும் காலம்' என்றாள். தளிர் கோதுவதனை,

[1]" நாறிய தண்ணந் தேமா நறுந்தளிர் கோதிக் கூவி
ஊறிய காமப் பேட்டை உருக்குவ குயில்மென் சேவல்'

எனத் திருவிளையாடற் புராணத்தும் வருதலறிக.

---

1. திருவிளையாடற் புராணம்: தருமிக்கு: கஅ.

சிலர் - சில பேர்கள் எனப் பொருள்படும். இங்கே ஒன்றொழி பொதுச்சொல்லாகக் கணவரைப் பிரியாது இன்புற்று வாழும் மங்கையர்களைக் குறித்தது. அமுது: அமுதம் போல் இன்பஞ்செய்தலைக் குறித்தது. தீவினையேன்: தன்மையொருமை. தான் கணவனைப் பிரிந்து தனித்துவாழ நேர்வதால் தன்னை நொந்துகொண்ட நிலையில் கூறினள். பலர்: பல நாட்டு வேந்தர்களைக் குறித்த குறிப்புச சொல். பனி - குளிர்சசி. கண்ணுக்கு அடைமொழி. பருமுத்தம் - நன்கு விளைந்த முத்து: இதனை ஆணி முத்தென்பர். [1]"நகாஅர் அன்ன நளிநீர் முத்தம்," என்றார் சிறுபாணாற்றுப்படையினும். ஐயகணை - ஐவகையான அம்பு. மன்மதனுக்கு தாமரை, மா, அசோகு, முல்லை, குவளை இவைகளின் மலர்களே அம்பு என ஆன்றோர் வகுத்தனர். இவை மலர்களாயினும் காதலர்களுக்குத் துன்பஞ்செய்வனவாம். அகன்று போனவர்: இங்கே தலைவன். அயர்த்தல் - மறத்தல். இன்பத்துக்குரிய வேனிற்காலம் வந்ததறிந்து தலைவி வருந்தியது.

தோழி கூற்று

கலிவிருத்தம்

காலவினை வாணர்பயில் காவிரிநல் நாடா
ஞாலமொரு கோலின் நடாவுபுகழ் நந்தி
நீலமயில் கோதையிவள் நின்னருள்பெ றாளேல்
கோலவளை கோடல்இது மன்னர்புகழ் அன்றே.

(இ - ள்.) காலவினை வாணர்பயில் - பருவத்தே பயிர் செய்கின்ற உழவர்கள் வாழ்கின்ற, காவிரி நல் நாடா - காவிரியாறு நீர்வளம் பெருக்கும் நல்ல சோழநாட்டுக்கு வேந்தே! ஞாலம் - உலகம் முழுதையும், ஒரு கோலின் - ஒரே (ஒப்பற்ற) செங்கோலினால், நடாவு - நடத்துகின்ற, புகழ் நந்தி - சீர்த்திவாய்ந்த நந்தி மன்னா! நீல மயில் - நீல நிற மயிலையொத்த சாயலையுடைய, கோதை இவள் - கூந்தலாளாகிய இந் நங்கை, நின் அருள் பெறாளேல் - நின் கடைக்கண் அருட் பார்வையைப் பெறாளாலும், கோல வளை கோடல்இது - இவளின் அழகிய வளையல்களை நீ பறித்துச் செல்லும் இச் செயலானது, மன்னர் புகழ் அன்று - அரசர்களுக்குப் புகழைத் தரும் செயலல்லவே?

---

[1] சிறுபாணாற்றுப்படை—அடி: ருஎ.

(வி - ரை.) தோழி, நந்திமன்னனிடம் தலைவியின் நிலை குறித்து வருந்தி முறையிடுகின்றாள். இதில் 'நந்தி மன்னா! இவள் உன் கடைக்கண் அருட் பார்வையைப் பெறாதவளானாலும், அவளின் வளையலைக் கவர்ந்து செல்வது அரசர்களின் நீதி முறைக்கு ஏற்றதாகுமா? கூறு' என்று கேட்கின்றாள். இக் கருத்தோடொப்ப,

> [1]"அறைபறை யானை அலங்குதார்க் கிள்ளி
> முறைசெயும் என்பரால் தோழி—இறை இறந்த
> அங்கோல் அணிவளையே சொல்லாதோ மற்றவன்
> செங்கோன்மை செந்நின்ற ஆறு."

என, முத்தொள்ளாயிரத்தும் வருதலறிக.

காலவினை - காலத்தில் செய்யும் தொழில் என்பது பொருளாகும். மற்றத் தொழில்கள் காலங்கடந்தும் செய்யலாம். அதனால் கெடுதல் வாராது. உழவுத்தொழில் அத்தகையதன்று. மழைபெய்யுங் காலத்தில், அவ்வத் தருணங்கட்கு ஒத்தவைகளையே பயிர்செய்தல் வேண்டும். ஈரம் மிகுதியும் கூடாது. உலர்ந்து போதலும் ஒவ்வாது. அதன் செவ்விபாராததே செய்தல் வேண்டும் இதனானே, ஔவை மூதாட்டியாரும், [2]'பருவத்தே பயிர்செய்' என்றார். 'ஓரேருழவன் போல' என்று சங்கப் புலவரும் உவமை கூறினர், இக்கருத்தானே. ஆதலால் காலவினை - இங்கே உழவுத் தொழிலென்று பொருள் கூறப்பட்டது. வாணர் - வாழ்நர் என்பதன் திரிபு. வாழுவோர் என உழவரைக் குறித்தது. காவிரி - காவிரியாற்றின் நீர். ஒருகோல்-ஒரே ஆளுகையாக ஆளுதல், பிறருடைய ஆட்சியில்லை றென்றபடி. நீல மயில்: உவமைத்தொகை கோலவளை - வரிவளை யென்றலுமாம். காதலால் உடல் மெலிந்த பெண்டிர்க்குக் கைவளை கழன்றோடுதலும, ஆடை நெகிழ்ந்து விழுதலும் இயற்கை. ஆகலான், இங்கே நந்திமன்னனைக் காதலித்த இந்நங்கை வளைய விழந்து நின்ற நிலைக்கு, 'ஏ மன்னா! உன்னா லன்றோ வளையல் கழன்றோடியது; நீயோ இவட்கு அருளசெய்தாயில்லை; அப்படிப்பட்ட நீ, இவள் வளையலைக் கொள்ளுதல் உனது செங்கோல் முறையாகுமா! உனது புகழுக்கும் இகழ்வுமன்றோ? என வினவுகின்றாள்.

இவ்வாறு காதல் கைம்மிக்க மங்கையர்க்கு வளையல்களும் உடையும் கழலுமென்பதை, உக்கிர குமார பாண்டியன் உலாக் காண வந்த மங்கையர் வளையும் உடையும் நிறையும் நீங்கிநின்ற நிலையைத் திருவிளையாடற் புராண ஆசிரியர்,

---

1. முத்தொள்ளாயிரம்: கக. 2. ஆத்திசூடி.

"சுருங்கும் இடையார் தன்பவனி
 தொழுதுவருவார் தமக்கிரங்கி
மருங்குற் பாரம் கழிப்பான்போல்
 கலையைக் கவர்ந்தும் வளைத்தோள்மேல்
ஒருங்கு பாரம் கழிப்பான்போல்
 வளையைக் கவர்ந்தும் உள்ளத்துள்
நெருங்கு பாரம் கழிப்பான்போல்
 நிறையைக் கவர்ந்தும் நெறிச்செல்வான்'[1]

என்று முறையே கூறியதறிக. (சுக)

தலைவன், கையுறைமலரை ஏற்பித்தல்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

புரவலன் நந்தி எங்கள் பொன்னிநல் நாட்டு மன்னன்
வரமயில் பொற்று சாயல் வாள்நுதற் சேடி காணும்
குரவலர் பொழிலிற் கோலக் கோட்டிடை இல்லை ஆகில்
இரவலர் மலர்கள் எங்கும் இல்லையோ நல்கு வேனே.

(இ - ள்.) புரவலன் - நாடு பாதுகாவலனும், நந்தி - நந்தியென்னும் திருப்பெயருடையானுமாகிய, எங்கள் - எங்கட்குரிமையான, பொன்னி நல்நாட்டு மன்னன் - காவிரி யாற்றையுடைய நல்ல சோழநாட்டு மன்னனின், வரமயில் பொற்றுசாயல் - சிறந்த மயிலினது புகழ்தற்குரிய சாயலைக்கொண்ட, வாள்நுதல் சேடி - ஒளிபொருந்திய நெற்றியையுடைய தலைவியின் தோழியே! காணும்-யாவருக்கும் தோன்றுகின்ற, குரவு பொழிலில் - குரவ மரங்கள் நிறைந்த சோலையிலுள்ள மரங்களின், கோலகோடு இடை- அழகிய கொம்புகளிடத்து, அலர் இல்லை ஆகின் - மலர்கள் இல்லாவிட்டால் (வேறிடத்து உள்ளனவாதல்), இரவு அலர் மலர்கள்-இராக்காலத்தில் மலருகின்ற பூக்கள், இல்லையோ- இல்லாது போய்விட்டனவா? (எல்லா இடங்களிலும் உள்ளன, ஆகவே) நல்குவேனே - (அவைகளில் பல்வகை மலர்களைப் பறித்துக் கொணர்ந்துவந்து) கொடுப்பேன். (ஏற்றுக் கொள்க.)

---

1. திருவிளையாடல், உக்கிர........வேல்வளை : கஎ.

(வி - ரை.) தலைவன், தோழியிடம் தன் நாட்டிலுள்ள மலர்களையும் தளிர்களையும் தான் கொணர்ந்துதர அதைத் தலைவிக்குச் சூட்டுமாறு தோழியை வேண்டுகின்றான்.

தலைவன், தலைவியை இயற்கைப் புணர்ச்சியில் புணர்ந்து காதலின்பந் துய்த்து வந்தானாக, இதனைத் தினைப்புனங்காவலில் உடனுறைந்து தலைவிக்கு வேண்டும் பணிகள் புரியும் தோழி அறியாதிருந்தனள். பின்னர்த் தலைவியின் தோற்றத்தானும், நாற்றத்தானும் வேறுபாடு கண்டு ஐங்கொண்டாள்; ஆனால், அங்கே எந்த ஆடவனையும் அவள் கண்டாளில்லை; இவ்வாறு நாட்கள் சில கடந்தன. ஒருநாள் ஓர் ஆடவன், வில்லும் அம்பும் கைக்கொண்டவனாய், மயிர் முடிகட்டி, மீசை முறுக்கினவனாய், மலர்ந்த முகத்தோடு நெடுங்கண் பார்வையும் உடையவனாய்த் தோன்றினான். அவன் தலைவியும் தோழியும் தினைக்கதிர்களைக் கொய்யும் கிளிகளை ஓட்டுகின்ற இடனனை, பாணிடம் வந்து நின்று, 'இங்கோர் மதயானை நுங்கள் பார்வைக்குமுன் வந்ததுண்டோ?' என்றும், 'கலைமான் வந்ததுண்டோ?' என்றும் வினவினானாக, அதற்குத் தோழி, 'நாங்கள் யாதும் வரக்கண்டதில்லை; எங்கள் கருத்தும் எது எங்கே என்பதுமின்று' என்று விடையிறுத்தாளாக. மறுநாளும் அத்தோன்றல் தோன்றி 'நும் ஊரேது? பெயரென்ன? நும் ஊருக்கு வழியாது?' என்றெல்லாம் வினவினானாக. அப்போது தலைவியின் கண்களும் இவன் கண்களும் அடிக்கடி சென்று சென்று உறவாடுதலையும் கண்டாள், ஐயந்தீர்ந்தாள். அவள்,

[1] 'ஏனல் காவல் இவளும் அல்லள்
மான்வழி வருகுவன் இவனும் அல்லன்
நரந்தங் கண்ணி இவனோ டிவளிடைக்
கரந்த உள்ளமொடு கருதியது பிறிதே
எம்முன் நாணுநர் போலத் தம்முன்
மதுமறைந் துண்டோர் மகிழ்ச்சி போல
உள்ளத் துள்ளே மகிழ்ப
சொல்லும் ஆடுப கண்ணி னானே'

எனத் தன்மனத்துள் தெளிவுபெறக் கருதினாள். பின்னர் இருவர் மதியும் ஒன்றுபட்டுக் காதலாற் கட்டுண்டு பிணைந்திருத்தலையும் நன்கு அறிந்தாள். அப்பால் தலைவனுக்குத் தோழியும் நன்கு அறிமுகம் பெற்றவளாக, இவளைக்கொண்டே தலைவியை நாம் இன்பந்துய்த்தல் வேண்டுமென்னுங் கருத்தினனாகத் தோழிபால் வந்து, 'அம்மே! நான் நீவிர் சொல்கின்ற குற்றேவல் யாவும்

1. தொல். பொருள், ககச. நூற்பா மேற்கோள்.

செய்வேன்; எனக்கோர் குறைபாடுள' தென்று கூறிச் சந்தனத் தளிரும். மா, அசோகு முதலிய தழைகளும், சில்வகை மலர்களும் கொண்டுவந்து அவைகளை ஏற்றுக்கொள்ளுமாறு கூறுவன். அதற்குத் தோழி இவைகளை யாங்கள் ஏற்று முடித்தால் அதைக் கண்ட என் தாயும்தந்தையும் தமையன்மாரும்பிறருங்கண்டு இவை நம் நாட்டகத்தில்லாதனவாயிற்றே; இவை நுங்கட்கு ஏது? என்று வினவுவர்; உண்மையை நாம் மறைததுக்கூறின் அதனல் ஏதம் நேரும் என்று கருதினளாய்த் தோழி மறுத்துரைப்பாள். இதுவே, தழைகொண்டுசேறல் முதலிய பல துறைகளாகக் கோவை நூல்களில் விரித்துக் கூறப்பெறும். இத்துறைபற்றித் தலைவன் கூறும் கூற்றே இங்கே வருவது. இவன், 'கச்சி நாட்டுக் காவலனுகிய நந்தி மன்னன் நாட்டில் இவைபோன்ற தழைகட்கும் பூவுக்குந்தாஞ பஞ்சம்; பகலில் மலரும் மலர்கள், கோட்டுப்பூக்கள் கிடைப்பதருமையாயினும், நீர்நிலைகளில் கிடைக்கும் பூக்களா இல்லை? அவைகளில் சில பறித்துத் தருவேன்; ஏற்றுக் கொள்க' என்கின்றான். இக் கருத்தே இப்பாடல் நுவல்கின்றது

இவ்வாறே திருக்கோவையார்த் தலைவன் சந்தனத் தழையும் மலர்களும் கொண்டு சென்று வேண்டுகின்றான்; அதனையும் கண்டு மகிழ்க. தருகின்றாம்:

[1] 'தேமென் கிளவிதன் பங்கத் திறையுறை தில்லையன்னீர்
பூமென் தழையுமம் போதுங்கொள் ளீர்தமி யேன்புலம்ப
ஆமென் றருங்கொடும் பாடுகள் செய்துநும் கண்மலராம்
காமன் கணைகொண் டலைகொள்ள வோமுற்றக் கற்றதுவே.'

என்பதறிக.

புரவலன் - புரத்தலில் (காத்தலில்) வல்லவன். இரவலன் - இரத்தலில் வல்லவன் என்பதும் அது. பொன்னி - காவிரியாறு. வரமயில் - சிறந்த மயில். வரம் - உயர்ந்தது; சிறந்தது. குரவு - குராவென்னும் ஒருவகை மரம். இது, பாவை போன்ற வடிவுடைய மலர்களையுடையதென்பர் ஆன்றோர். [2]'குரவம் பாவை முருகலர் சோலை' என்பது காண்க. இரவு + அலர்-இரவலர். இரவு நேரங்களில் மலருகின்ற என்றும், இரவலர் - ஏற்போர், விரும்புவோர். என்றும்கூறி, அவர் வேண்டும் மலர் எங்கும் இல்லையோஎன இருபொருள் நயந்தோன்ற அமைந்திருத்தல் கண்டு இன்புறுக. இத்தலைவன் குறிப்பு, இரவலர் மலர்களெங்குமில்லையோ என்றது, பகலில் ஏற்க நீவிர் அஞ்சினும் இரவுப்பொழுதில் கொணர்ந்து தருவேன் என்றதையும் குறிப்பாக விளக்குவதாம்.

1. திருக்கோவையார்: கூ0. 2. ஞானசம். தேவாரம்.

## தலைவி இரங்கல்

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

நல்கும் நந்தியிந் நானிலங் காவலன்
    மாரவேள் நளிர்முத்தம்
மல்கு வெண்குடைப் பல்லவர்
    கோளரி மல்லலம் திண்தோள்மேல்
மெல்கு தொண்டையுந் தந்தருள்
    கிலன்விடை மணியோடும் விடியாத
அல்லி னோடும்வெண் திங்களி னோடுமுளன்
    உய்வகை அறியேனே.

(இ - ள்.) *நல்கும் நந்தி* - இரப்போர்க்கு இல்லையென்னுமல் கொடை வழங்குகின்ற நந்தி மன்னனும், *இந்நால் நிலம் காவலன்* - இம்மண்ணுலகத்தை காக்கின்றவனும், *மாரவேள்* - மன்மதனையொத்த அழகனும் ஆகிய, *நளிர் முத்தம் மல்கு* - குளிர்ச்சியுள்ள முத்துக்கள் கோத்து நிறைந்துள்ள, *வெண்குடை* - வெண்கொற்றக் குடையையுடைய, *பல்லவர் கோளரி* - பல்லவர் குலத்தின் கொல்கின்ற ஆண் சிங்கம் போன்றவனுமுடைய, *மல்லல் அம் திண் தோள்மேல்* - செழிப்புமிக்க அழகுடைய வலிமையுடைய தோள்களின்மீது அணிந்துள்ள, *மெல்கு தொண்டையும்* - மென்மையுடைய ஆதொண்டை மலர்மாலையையும், *தந்து அருள்கிலன்* - எனக்குக் கொடுத்து அருள்செய்தானில்லையே, *விடைமணியோடும்* - (மாலைப்போதில் மேய்புலத்தில் நின்றும் தொழுவங்கட்கு வருகின்ற) எருதுகளின் கழுத்திலணிந்துள்ள மணியோசைகளினுடனும், *விடியாத அல்லினோடும்* - தொலைதலில்லாது நீடித்திருக்கின்ற இராப்பொழுதினோடும், *வெண் திங்களினோடும்* - வெண்ணிறக் கதிர்களையுடைய நிலவினோடும், *உளன்* - நான் நீங்காது இருக்கின்றவளானேன், *உய்வகை அறியேனே* - நான் இனி என் உயிரைக் காக்கும் வழி தெரிந்திலேனே! (என் செய்வேன்! இம்மன்னர் மாலைதந்து எந்நாள் என்னை மணப்பாரோ! அறிகின்றிலேனே, அந்தோ!)

(வி - ரை.) தலைவி தன் நிலைகுறித்து வருந்துகின்றாள். அவள் நந்தி மன்னனை உலாக்கண்ட காலமுதல் அவனை தன் உள்ளத்தனாய், அவன் மாலையே கருத்தினளாகித் துன்புற்றாள்; அவட்கு இரவில் தூக்கம் வருவதில்லை; கன்றினை நினைந்து மன்றுபுகுதரும் பசுத்திரளும், கொல்லேறுகளும் தெண்மணி கறங்கவரும் மாலைப்பொழுது வந்ததும் 'மாலை வந்ததே இனி என் செய்வேன்! இரவு வருமே! வந்தால் போகாதே! எவ்வாறு இனி இரவைக் கழிப்பேன்! பற்றாக்குறைக்குத் திங்களும் வருமே! தன் நெருப்புக்கதிரை அள்ளி அள்ளி என்மேல் வீசுமே! அதையும் எவ்வாறு பொறுப்பேன்! இனி உய்யும்வகை ஏது!' என்று கூறித் தன் நெஞ்சை முன்னிலைப்படுத்திப் பேசுகின்றாள், காதல் மிக்க இக்காரிகை.

காதல்தலைக்கொண்ட மங்கையர்க்கு மாலையும் இரவு நேரமும், திங்களும் துன்பந்தருவனவாம். மாலையை,

[1]'காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலரும்இந் நோய்'

எனவும்,

[2]'மாலையோ அல்லை மணந்தார் உயிருண்ணும்
வேலை நீ'

எனவும்,

[3]'காலைக்குச் செய்தநன் றென்கொல் எவன்கொல்யான்
மாலைக்குச் செய்த பகை'

எனவும், திருக்குறள் தலைவி வருந்துவள். சங்ககாலத் தலைவி ஒருத்தியும்,

[4]'குடுமிக் கோழி நெடுநகர் இயம்பும்
காலையும் மாலை துணையில் லோர்க்கே'

எனவும்,

[5]'உயிர்பொதி அவிழ்க்கும் காலை யென்னார்
மாலை என்மனார் மயங்கி யோரே'

எனவும்,

1. 2. 3. திருக்குறள்: கஉஉஎ, கஉஉக, கஉஉரு.
4. 5. சங்க இலக்கியம், சமாசப் பதிப்பு:

[1]"மாலைநீ, உள்ளங்கொண் டகன்றவர்
துணைதாராப் பொழுதின்கண்
வெள்ளமான் நிறனேக்கிக்
கணைதொடுக்கும் கொடியான்போல்
அல்லற்பட் டிருந்தாரை அயர்ப்பிய வந்தாயோ'

எனவும் பலவாறு புலம்புவதாகக் கூறும் பரந்துபட்ட இலக்கியங்களில் காண்க.

இரவுப்பொழுது காதலர்க்குக் கழியாது துன்பந்தருதலை,

[2]"மன்னுயிர் எல்லாம் துயிற்றி அளித்திரா
என்னல்ல தில்லை துணை'

எனவும்,

[3]"செல்லா இரவே சிறுகா இருளே
எல்லாரும் எனையே முனிவீர்'

எனவும், பிறவாறும் உரைப்பர்.

திங்களின் தண்ணிய கதிர் காதலர்க்குத் துன்பந்தருதலை,

[4]"ஆர்த்தி கண்டுமென் மேல்நின்று அழற்கதிர்
தூர்ப்ப தேயெனைத் தொண்டுகொண் டாண்டவர்
நீர்த்த ரங்க நெடுங்கங்கை நீள்முடிச்
சாத்தும் வெண்மதி போன்றிலை தண்மதி'

என, நம்பியாரூரர் தாம் பரவை நாச்சியாரைக் கண்ட ஞான்று அன்றிரவு மதியை நோக்கி வருந்திக் கூறியதும் அறியற்பாலது.

நல்குதல் - ஈதல். மக்களாய்ப் பிறந்தோர் எய்தும் உயர் பயன், ஈதலும் இசைபட வாழ்தலும் ஆம் என்பது தமிழ்மறை. அதனால் நந்திமன்னன் கொடையிற் சிறந்தான் என்பதற்கு 'நல்கும் நந்தி' என்றாள். நால்+நிலம்—நானிலம். அவை: முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல். இந் நால்வகையுள் மண்ணுலகம் அடங்குதலால், மன்னன் ஆளுகை எங்கும் பரந்தது என்பாளாய் 'நானிலம் காவலன்' என்றாள். மாரவேள் - மன்மதன். அவன் போன்ற அழகுடையானென மன்னனுக்கு வருதலால் உவமையாகுபெயர். நளிர் - குளிர்ச்சி. முத்தம் - முத்து, அம் முச்சாரியை

1. கலித்தொகை : 2. திருக்குறள் : ககசுஅ.
3. கம்பரா, சுந்தர, உருக் : ச 4. பெ. புரா. தடுத் : கசுடு.

பெற்றது. பல்லவர்கோள்அரி - பல்லவர் குலத்தில் ஆண் சிங்கத்தை யொத்த கொல்கின்ற ஆற்றலுடையவன். இதனால் நந்திமன்னன் கொடைத் திறன், ஆளும் வன்மை, அழகுச் சிறப்பு, செங்கோல் முறைமை, வீரச் சிறப்பு இவைகளை விளக்கினாள், காதலித்த தலைவன் தன்னிகரில்லாத் தலைவன் என்பதைக் கருதி. இவ்வளவு கொடையாலும் முறையாலும் சிறந்த வேந்தன் என்பது உட்கருத்து. மெல்கு - மென்மை. மெல்லிய தன்மை. நன்கு என்பதுபோல், குவ்விகுதி பெற்ற பண்புப் பெயர். தான் விரும்பிய தொண்டை மாலையைத் தருகிலன், அருள்செய்து என்னை மணவாவிடினும் என்பாளாய்த் 'தொண்டையும் தந்தருள் கிலன்' என்றாள். உம்மை எதிரது தழீஇய எச்சப் பொருள் தாநின்றது. அது மேல்வரும் துன்பத்தைக் குறித்தது.

காதலர்க்குக் கொல்லேற்றின் மணியோசையும், இரவுப் பொழுதும், திங்களின் ஒளியும் துன்பந்தருவனவாதலால், படி முறையாக இவைகளைக் கூறி, இனி நான் பிழைக்க வழியறியாது திகைக்கின்றேன் என்பாளாய், 'உய்வகை அறியேனே' என்றாள். இதனால் தலைவியின் கையற்ற வருத்தம் புலனாதல் காண்க. (கூடம்)

தலைவன், தலைவியின் உறுப்புநலம் புனைந்துரைத்தல்

**எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்**

அறம்பெருகும் தனிச்செங்கோல் மாயன் தொண்டை
அம்கனிபோல் சிவந்துதிரு முகத்துப் பூத்து
மறிந்துளதே பவளவாய் மருங்கில் ஆகும்
வல்லிஇடை மணிமுறுவல் முத்துச் சால
நெறிந்துளதே கருங்குழலம் குவளை கண்கள்
நெடியவேய் தோடியதோள் நேர்ந்து வெம்மை
செறிந்துளவே முலைசிலையே புருவம் ஆகி
அவர்நம்மைச் சிந்தைநோய் திருத்தி னாரே.

(இ - ள்.) அறம் பெருகும்-அறத்துடன் வளர்கின்ற, தனி செங்கோல் மாயன் - ஒப்பற்ற செங்கோல் ஆட்சி கொண்ட திருமாலையொத்த நந்திமன்னனுக்குரிய, தொண்டை அம்கனிபோல் - கோவையினது அழகிய பழத்தின் நிறத்தைப்போல, சிவந்து-செந்நிறமுடையதாகி, திரு முகத்து பூத்து - அழகிய முகத்தினிடத்துத் தோன்றி,

பவள வாய் மறிந்து உளது - பவளம் போன்ற சிவந்தவாய் அமைந்திருக்கின்றது, இடை-இடுப்பானது, மருங்கில் ஆடும் வல்லி-பக்கத்துத் துவள்கின்ற கொடியை ஒத்துளது, மணி முறுவல் முத்து - அழகிய பற்கள் முத்தைதயொத்துள்ளன, கருங்குழல் - இவளின் கரிய கூந்தலானது, சால நெறிந்து உளது - மிகவும் அடர்ந்துளது, நெடிய கண்கள் குவளை - நீண்ட கண்கள் கருங்குவளை மலர்களையொத்துள்ளன, தொடிய தோள் வேய் - கைவளையல்களையுடையனவாகிய தோள்கள் மூங்கிலையொத்துள்ளன. முலை - கொங்கைகளானவை, நேர்ந்து - இரண்டும் ஒன்றாக நெருங்கி, வெம்மை செறிந்து உள - எமக்கு விருப்பந்தருதலைக் கொண்டுள்ளன வாகும், பருவம் - புருவங்களானவை, சிலை ஆகி - வில்லை யொத்தனவாகி, நமமை - எம்மை, அவர் - அந்த மங்கை யர், சிந்தை நோய் திருத்திஞரே - காதலால் உண்டாகும் மனத் துன்பத்தை மிகுதப்படுத்திவிட்டாரே! (இனி, எவ்வாறு பொறுத்து நான் காலங் கழிப்பேனே! அறிகி லேனே!)

(வி - ரை.) நந்திமன்னன் நாட்டில் வாழும் காரிகையாகிய தலைவியின் உறுப்பினழகைப் புகழ்ந்து கூறி, இத்தகைய பண் னலங்கனிந்த பாவையைப் பிரிந்து எவ்வாறு காலத்தைக் கழிப் பேன் என்று தன் நெஞ்சோடு தலைவன் கூறுகின்முன்.

அறம் பெருகும் தனிச் செங்கோல் என்பது, நந்திமன்னன் கோல்முறை கோடாது குடிகட்கு நலஞ்செய்து பாதுகாத்து வையக வேந்தனக மிளிர்தலைக் குறித்தான். மாயன் - திருமால்: திருமால் போன்ற மன்னனை ஆகுபெயராக்கிக் கூறிஞன். தொண்டை - கோவை. அது மன்னனுக்குரிய மாலையாதலால் அம் மலர் தோன்றிய செடியின் கனியை வாயின் செந்நிறத்துக்கு உவமையாக்கிஞன், அதனேடு அமையாது பவளத்தையும் குறித் தான். இடைகருக் கொடியையும், பற்களுக்கு முத்தினையும், உவமை கூறிக் கரிய கூந்தலின் நெருக்கத்தையும் வியந்து, கண் களையும் நீண்ட தோள்களையும் கொங்கைகளையும் கண் புருவங் களையும் பாராட்டித், தனக்கு அவைகள் காதல் துன்பந் தருவ தைக் கூறி வியந்து தன் நெஞ்சோடு பேசி ஆற்றுகின்முன்.

இவ்வாறே திருவள்ளுவரின் செல்வத் தலைவனும் தன் காதலியின் அள்ளிக் கொள்வன்ன உறுப்புக்களின் அழகு நலத்தை,

[1]'முறிமேனி முத்தம் முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோள் அவட்கு'

என்று வாயாரப் புகழ்ந்து கூறுதலும், தலைவியின் இளவியை. வேட்டலாகத் திருக்கோவையார்த் தலைவன்,

[2]'அளவியை யார்க்கும் அறிவரியோன் தில்லை அம்பலம்போல்
வளவிய வான்கொங்கை வாள்தடங் கண்நுதல் மாமதியின்
பிளவியல் மின்னிடை பேரமை தோளிது பெற்றியென்றால்
இளவியை என்னோ இனிக்கிள்ளை யார்வாயில் கேட்கின்றதே'

என்று தலைவியின் உறுப்புநலங்களை எடுத்தோதியமையும் அறிக. (கஈ௪)

## பாட்டுடைத் தலைவன் வீரச்சிறப்பு

### இணைக்குறள் ஆசிரியப்பா

திருவின் செம்மையும் நிலமகள் உரிமையும்
பொதுவின்றி ஆண்ட பொலம்பூண் பல்லவ !
தோள்துணை ஆக மாவேள் ளாற்று
மேவலர்க் கடந்த அண்ணல் ! நந்திநின்
ரு. திருவரு நெடுங்கண் சிவக்கும் ஆகின்
செருநர் சேரும் பதிசிவக் கும்மே
நிறங்கிளர் புருவம் துடிக்கின் நின்கழல்
இறைஞ்சா மன்னர்க் கிடந்துடிக் கும்மே
மையில் வாள்உறை கழிக்கும் ஆகின்
கo. அடங்கார் பெண்டிர்
பூண்முலை முத்தப் பூண்கழிக் கும்மே
கடுவாய் போல்வளை அதிர நின்னோடு
மருவா மன்னர் மனம்துடிக் கும்மே
மாமத யானை பண்ணின்
கரு. உதிரம் மன்னுநின் எதிர்மலைந் தோர்க்கே.

1. திருக்குறள் : கககரு. 2. திருக்கோவையார் : கo.

(இ - ள்.) திருவின் செம்மையும் - (எண்வகைத்) திருமகளின் அருட்சிறப்பும், நிலமகள் உரிமையும் - மண் மாதின் நீங்காத உரிமைப்பாடும், பொதுஇன்றி - வேற்றரசர்கட்கு இடஞ் சிறிதும் இல்லாமல், ஆண்ட - தனக்கே தனியுரிமையாகக் கொண்டு ஆட்சி செய்கின்ற, பொலம் பூண் பல்லவ - பொன்னாலான அணிகளை அணிந்த பல்லவ வேந்தே! மா வெள்ளாறு-பெரிய வெள்ளாற்றில் நிகழ்ந்த போரில், தோள் துணை ஆக - தன்னுடைய தோள் வலிமையொன்றையே உற்ற உதவியாகக் கொண்டு, மேவலர்க் கடந்த அண்ணல் - பகை வேந்தர்களை வென்ற பெருமை மிக்கவனே! நந்தி-நந்தி என்னும் திருப்பெயருடையோய்! நின் - உன்னுடைய, திருவரு நெடுங்கண் - அருட் செல்வம் வருகின்ற நீண்ட கண்கள், சிவக்கும் ஆகின் - சினத்தால் செந்நிறமடையுமானால், செருநர் சேரும் - பகை மன்னர்கள் வாழ்கின்ற, பதி சிவக்கும்-நகரம் நெருப்புப் பட்டழியுமன்றே, நிறம் கிளர் புருவம் துடிக்கின்-அழகுபொலிகின்ற உன் கண்புருவங்கள் சினத்தால் மேலும் கீழும் துடிக்கப் பெற்றால், நின் கழல் இறைஞ்சா-உன்னுடைய திருவடிகளை வணங்காத, மன்னர்க்கு - வேந்தர்கட்கு, இடம் துடிக்கும்-இடப்பக்கத் (தோளும் கண்களும்) துடிக்குமன்றே, மைஇல் வாள் - ஒளி பொருந்திய உன் வாட்படை, உறை கழிக்கும் ஆகின் - அதன் கிடக்கையான உறையை விட்டு வெளியே வருமானால், அடங்கார் பெண்டிர் - பகை மன்னர்களுடைய மனைவிகளின், பூண்முலை முத்தப் பூண் கழிக்கும் - அணிகளணிந்த கொங்கைகளின் முத்துமாலை முதலிய அணிகள் கழிக்கப்படுமன்றே, கடுவாய் போல் - (இடைவிடாது முழங்குகின்ற) உன் வெற்றி முரசைப்போல, வளை அதிர-சங்கொலியும் சேர்ந்து முழங்கப்பெறுமானால், நின்னொடு மருவா மன்னர்-உன்னுடன் பகைகொண்ட வேந்தர்களின், மனம் துடிக்கும்-மனம் அச்சத்தால் கலக்கமடையுமன்றே, மாமத யானை பண்ணின் - உன்னுடைய பெரிய மதங் கொண்ட யானைகள் அழகுபடுத்தப் பெறுமானால், நின் எதிர் மலைந்தோர்க்கு - உன்னோடு எதிர்த்துப் போரிடும் மன்னர்கட்கு, உதிரம் மன்னும்-(உன் படைகளால் குத்தி

யும் கிழித்தும் அவர் உடல் சிதைவுபட்டு) செந்நீர் பெருகி ஓடாநிற்குமன்றே! (நந்தி மன்னா! உன் ஆற்றலே ஆற்றல்! உன் பெருமையே பெருமை!)

(வி - ரை.) நந்திமன்னன் வீரமும், வெற்றியும் இப்பாட்டால் விளக்கப்படுகின்றன.

திரு என்பதற்குக் கண்டோரால் விரும்பப்படும் தன்மை நோக்கம என்பர், பேராசிரியர்.[1] திருவின் செம்மை, எட்டுவகையாகக் கூறப்படும் பெருஞ் செல்வங்கள். நிலமகள் உரிமை, எல்லா நாடும் தனக்கே உரிமையாகப் பெற்ற தன்மை. பொது இன்றி ஆளுதல் என்பது, பிற எந்த மன்னரும் எந்த உரிமையும் கொண்டாடாதவாறு தன்னுரிமையாக ஆட்சி கொள்ளுதல். தோள் துணை - தன் தோளின் வலிமையன்றி வேறு வீரர்கள் அரசர்கள் முதலியவர்களின் துணையை நாடாது கொண்ட போராற்றல் மிக்க பேராற்றல். மேவலர் - தன்னோடு சேராதவர், இங்கே பகைவர். அண்ணல் - பெருமை பொருந்தியவன்: இங்கே விளியேற்றமையால் ஈற்றயல் அகரம் நீண்டது. கண் சிவத்தல்-கோபத்தால் கண்கள் சிவப்புநிறம் பெறுதல். பதி சிவத்தலாவது - பகைவர்கள் நாடும் நகரும் தீக்கொளுத்தப்பெற்று எங்கும் நெருப்பு மயமாக மாறுதல். நந்திமன்னன் கண்புருவம் சினத்தால் துடிக்கப்பெற்றால் பகைமன்னர்களுக்கு இடம் துடிககுமென்றது, அவர்கட்கு மேல்வருகின்ற கேடுதலை முன்னமே யறிவிக்கும் தீ நிமித்தங்கள். அஃதாவது, ஆடவர்க்கு நன்மை நிகழுதற்கு வாய்ப்பிருக்குமானால் அவர்க்கு வலக் கண்ணும் தோளும் துடிக்கும். மகளிர்க்காயின் இடக்கண்ணும் இடத்தோளும் துடிப்புறும். இது சோதிட நூலார் கண்ட முடிபு. நாமும் தம்தம் அனுபவத்தால் அறியும் நிலைமையுமாகும். நந்தி மன்னன் சினத்துக்கு ஆளாகும் பகைவேந்தர்க்கு நன்னிமித்தமின்றித் தீ நிமித்தம் காட்டுமென்பதற்கு, 'இடம் துடிக்கும்' என்றார். இடம் என்பது இடத்தைக் குறிக்காது வலம், இடம் ஆகிய பக்கஙகள் இரணடின் இடப்பாகக் கண், தோள்களைக் குறித்தது. நந்திமன்னன் உடைவாள், அவன் இடுப்பின் உறையில் செருகப்பட்டுக் கிடக்கும். அதை உறையினின்று கழித்தெடுக்கப்படுவது தன்னோடு மாறுபட்டோரைக் கொல்லுதற்கே. அவ்வாறு எடுத்தாலே பகையரசர் மனைவிகள் மங்கலத் தாலியும் முத்தமாலை முதலிய அணிகலன்களும் களையப்பெற்றுக் கைம்மையராவர் என்பதைக் குறிக்கப் 'பெண்டிர்.........பூண் கழிக்கும்' என்றார். கடுவாய் - முரசு. வளை - சங்கு. இவை

1. திருக்கோவையார் முதற்பாட்டு உரை காண்க.

இரண்டும் ஒன்றுபட்டு முழங்குவது வெற்றிக்கும் வேற்று நாட்டின்மீது படையெடுக்கும்போது செல்லும ஆரவாரத் துக்குமேயாம். இவ்வாறான இருவகை முழக்கமும் முழங்கக் கேட்ட பகைவேந்தர்கட்கு அச்சத்தால் 'எங்கே நம்மீது நந்தி பாய்வானோ? என்ன செய்வோம்?' என்ற எண்ணம் மேலிட, அவர் மனம் துடிக்கப்பெறலாயிற்று. அதனால் 'மனம் துடிக்கும்மே' என்றார். உன் யானைகள் அழகுபடுத்தப் பெறுவ தானால் அதைக்கண்டு முன் போர்செய்து தோல்விகொண்ட அரசர்களானவர் 'மீண்டும் நம்மீது போர் தொடுப்பானோ?' என்று கலக்கங்கொள்வதை, 'உதிரம் மன்னும்' என்றார்.

ஏகாரங்கள் வினைப்பொருளில் வந்தன; பாட்டின் இசையை நிறைக்க மகரங்கள் இரட்டித்து வந்தன: விரித்தல் விகாரம்.

கண் சிவக்கும் ஆகின், பதி சிவக்கும் என்றும், புருவம் துடிக்கின், இடம் துடிக்கும் என்றும், வாள் உறை கழிக்கும் ஆகின், பூண் கழிக்கும் என்றும், வளை அதிர, மனந்துடிக்கும் என்றும், பண்ணின், உதிரம் மன்னும் என்றும் அவ்வவ் வாய் பாடுகளானும் பொருள் ஒத்த நிலையும் காண அமைந்துள்ள **சொற் பின்வரு நிலையணி** அழகு படித்துப் படித்து இன்புறற் கேற்றதாக இருத்தல் அறிந்து மகிழ்க. (கூரு)

செவிலித்தாய் கூற்று

## நேரிசை வெண்பா

ஓராதே என்மகளைச் சொன்னீரே தொண்டைமேல்
பேராசை வைக்கும் பிராயமோ—நேராதார்
ஆள்வலியால் கொண்ட அகன்ஞாலம் அத்தனையும்
தோள்வலியால் கொண்ட துயக்கு.

(இ - ள்.) (ஊர்ப் பெண்களே!) நேராதார் - பகை யரசர்கள், ஆள்வலியால் - தம் படைவன்மையினால், கொண்ட - தம் ஆட்சியாகக் கொண்டிருந்த, அகல் ஞாலம் அத்தனையும் - விரிந்த இடத்தையுடைய இம் மண்ணுலக நாடுகள் எல்லாவற்றையும், தோள்வலியால் - தன்னுடைய தோளின்வலிமை ஒன்றாலேயே, கொண்ட துயக்கு ஓராது - வென்று தனக்குரிமைப்படுத்திய நந்திமன்னனது குற் றத்தை யெடுத்து ஆராய்ந்து பார்க்காமல், என் மகளைச்

சொன்னீரே - என் மகள்மீது குற்றத்தைச் சுமத்திக் கூறினீர்களே, தொண்டைமேல் - இந் நந்திமன்னனின் தொண்டை மலர்மாலைமீது, பேராசை வைக்கும் பிராயமோ - இவள் மிக்க ஆசை கொள்கின்ற பருவமடைந்தவளா? சொல்லுமின்!

(வி - ரை.) 'உன் மகள் காதலால் வருந்துகின்றாள்; அவள், நந்திமன்னன் அணிந்துள்ள தொண்டை மாலையையே விரும்பி இரவும் பகலும் நந்தியையே நினைந்து அவனை மணம்புரியக் காதல் கொண்டுள்ளாள்' என்று அலர்தூற்றும் ஊரப் பெண்களிடம், செவிலி பேசுவதாக அமைந்தது இப்பாட்டு.

'ஏடி! என் மகளைக் குறித்தே பழிதூற்றிப் பேசுகின்றீர்களே! ஆராய்ந்து பார்த்துப் பேசுங்கள். என் மகள் நம் நந்திமன்னன் மீது காதல் கொண்டுள்ளாள் என்றும், அவன் அணிந்துள்ள தொண்டையந் தொடையலையே நினைந்து நினைந்து வருந்துகின்றாள் என்றும் சொல்லிச் சொல்லிப் பழிதூற்றுகின்றீர்களே! அவளுக்கு அத்தகைய பருவமா வந்துவிட்டது? அவள் இன்னுஞ் சிறுமி! அவள் பற்கள் இன்னும் நன்கு முளைக்கப்பெறவில்லை; அவள் கண்கள் வெள்ளை நோக்கமன்றிக் கள்ள நோக்கம் கற்றில; குழல் கோதிமுடிக்க அறியாள்; பின்னலிட்டுப் பூ முடிதது் பொட்டிடவும் நன்கு பயின்றிலள்; இவ்வாறான பச்சிளம்பருவ என் பெண்ணைப் பார்த்துப் பலவாறாக நந்திமன்னனைக் காதலிக்கிறாள்; இரவும் பகலும் அதே எண்ணம்; மாலை மாலையென்று மாலையே கொண்டுள்ளாள்; அவன் மாலையே என் மாலை யென்கிறாள்; அம் மாலையன்றி எம்மாலையும் வேண்டாள் என்கிறீர்களே! என் மகளைத்தான் உங்கட்குப் பேச வாயிருக்கிறது! இவ் வேந்தனைக் குறித்துப் பேச நுங்கட்கு வாயில்லை! நம் வேந்தன் மிக்க ஆற்றல்படைத்தவன்; வேற்றரசர் தம் படைப்பெருக்க வலிமையினால் ஆள்கின்ற நாடுகளையெல்லாம் வேறு துணையும் படையும் வேண்டாது தன் தோளாற்றல் ஒன்றாலேயே வென்று மேம்பெற்ற மேதகையோன்! இத்தகையனுறனும் அறத்தைக் கருதினனா? அறங் கருதாது நாடுகளையெல்லாம் அழித்து வேற்றரசர் நாடுபிடித்த குற்றத்தைக் குறித்துப் பேசுகின்றீர்களா? இத்தகையோனைத்தானா? என் மகள் காதலிப்பவள்! ஏதேனும் பேசுவதே நுங்கள் வழக்கமாக இருக்கின்றதே' என்று பேசி ஏசுகின்றாள். இதில் செவிலியின் பிள்ளைமைப் பாசமும், தாய்மை உள்ளத் துடிப்பும், அன்பும், தன் மகளின் குறைகாணுத் தன்மையும் ஒருங்கே புலனாதல் கண்டின்புறுக. இவ்வாறே பருவம் வாராநிலையைச் செவ்வியிலள்

என்று தலைவனிடம் பாங்கி மறுக்கும் துறையில் திருக்கோவை யார் நூலில்,

[1]"கற்றில கண்டன்னம் மென்னடை கண்மலர் நோக்கருளப்
பெற்றில மென்பிணை பேச்சுப் பெருகிள்ளை பிள்ளையின்றென்று
உற்றிலள் உற்ற தறிந்திலள் ஆகத் தொளிமிளிரும்
புற்றில வாளர வன்புலி யூரன்ன பூங்கொடியே!"
என்று கூறுவது காண்க.

செவிலி - வளர்ப்புத்தாய். இவளைத் திருவள்ளுவப்பெருமான் அறநூல் செய்த தம் அருள்வாயால் "செல்வச செவிலி" என்பர். தொண்டைமேல் என்பது, தொண்டைமலர்க்காய், அதனுலான மாலைக் காதலால் இருமடி யாகுபெயர். பிராயம் - பருவம்: மங்கைப்பருவம். ஓகாரம் எதிர்மறை. ஆள்வலி - ஆட்களினது வலியென விரிதலால் ஆறன்தொகை. வேற்றரசர் துணைவலி ஒன்றன்றித் தன்வலி இல்லாத் தன்மையார். நந்தி மன்னனே கூட்டொருவரை வேண்டாக் கொற்றவன்; தன் கையே தனக்கு உதவியெனக்கொள்ளும் தகையவன்; ஆள் வலியால் பகையரசாகள் ஆண்ட நாடுகளைத் தன் தோள்வலி ஒன்றுகொண்டே தொலைத்துக் கைப்பற்றிய பெருமையான். இத்தகையோனைத் தன் மகளின்மீது குற்றமில்லாததுபோற் கற்பித்து, இவன் வேற்றுமன்னர் நாடுகளைப் படையெடுத்து வென்றுகொண்ட திறத்தை குற்றமாக ஏற்றிக் கூறித் தாயுள்ளம் தன் பிள்ளைமீது குற்றங்காணு உண்மை நிலையையும் விளக்கினர். துயக்கு - குற்றம்.

இப்பாட்டு, துயக்கு, ஓராதே எனக் கடைச்சீரும் முதற் சீரும் ஒன்றுபடுத்திப் பொருள் காணகிடப்பதால் '**பூட்டுவிற் பொருள்கோள்.**' இவ்வாறே முத்தொள்ளாயிரத்தும்,

[3]"திறந்திடுமின் தீயவை பிற்காண்டும் மாதர்
இறந்து படின்பெரிதாம் ஏதம்—உறந்தையர்கோன்
தண்ணார மார்பின் தமிழ்நர் பெருமானைக்
கண்ணாரக் காணக் கதவு."

என, இச்செய்யுளில் 'கதவு திறந்திடுமின்' எனக் கடையும் முதலும் ஒன்றுபட்டுப் பொருள் தருதலை அறிக. (கசு)

1. திருக்கோவையார்: கூஎ. 2. திருக்குறள்: எருஎ.
3. முத்தொள்ளாயிரம்: அரு.

### பாங்கி, செவிலிக்கு அறத்தொடுநிற்றல்

**கட்டளைக் கலித்துறை**

துயக்குவித் தான்துயில் வாங்குவித் தான்துயில் வித்திவளை
வயக்குவித் தானுள்ளம் வஞ்சனை யான்மலர்க் காவகத்து
முயக்குவித் தான்துகில் வாங்குவித் தான்முனம் நின்றிவளை
மயக்குவித் தானந்தி மானோ தயனென்று வட்டிப்பனே.

(இ - ள்.) (என் அருமை அன்னாய்!) நந்திமான உதயன் - நந்தியென்னும் பெயருடைய மானமிக்கவன், துயக்குவித்தான் - நம் தோழியைச் சோர்வுபடுத்தினான், துயில் வாங்குவித்தான் - அவள் உறக்கத்தையும் நீக்கச் செய்தான், தான் துயில்வித்து - தானே இவளைத் தூங்கும்படி செய்து, இவளை உள்ளம் வஞ்சனையால் - இவளைத தன் நெஞ்சக் கரவினால், வயக்குவித்தான் - தன்னிடம் வசப்படுத்தினான், மலர்கா அகத்து-மலர்களையுடைய பூங்காவினிடத்து, முயக்குவித்தான் - தன்னைத் தழுவுமாறு செய்தான், துகில் வாங்குவித்தான் - இவளின் மெல்லிய ஆடையை நெகிழ்வுபடுததினான், முனம் நின்று - இவளுக்கு முன்னிடத்தில் நின்றுகொண்டு, இவளை மயக்குவித்தான் - இவட்கு மயக்கத்தை உண்டாக்கினான், என்று வட்டிப்பன்- என்று நான் ஆணையிட்டு உறுதியாகக் கூறுவேன். (ஆகவே, இவளை நந்திமன்னனுக்கே மணஞ்செய்தல் அறமாகும்; இன்றேல் இவள் உயிர் வாழாள்.)

(வி - ரை.) செவிலித்தாய் தன் மகளிடத்தும், தோழியிடத்தும் ஐயங்கொண்டாள்; தலைவி நாளுக்குநாள் சோறும் உண்ணாள், பாலும் பருகாளாய், ஏதோ கருத்துக்கொண்டாளாய் இருத்தலைக் கண்டு பலப்பல எண்ணங்கொள்ளலானாள். இது குறித்துத் தோழியை வினவினாள். அவள், 'நந்திமன்னன் இவள் நெஞ்சில் குடிகொண்டான்; இவட்குச சோர்வை ஆக்குவித்தான்; தூக்கத்தை விலக்குவித்தான், தூங்கச்செய்து கனவில் தோன்றி இவளைத் தன்வச மாக்குவித்தான்; தன் கள்ள உள்ளத்தால் இவளைத் தன் அன்புக்குரியவளாக ஆக்குவித்தான்; மலர்ப் பூங்காவில் தன்னைத் தழுவுமாறு இவளைச் செய்வித்தான்; இவள் மெல்லிய பூங்கரை ஆடைகளை நெகிழச்செய்தான்; இவைக

என்றி இவள்முன் நேரில் தோன்றி இவளைத் தன் உணர்விழந்து மயக்கங்கொள்ளுமாறு செய்தான் என்று நான் ஆணையிட்டு உறுதியோடு கூறுவேன். ஆகையால் அவனுக்கு இவளை மணம் புணர்த்துவதே அறமாகும். இல்லையேல் இவள் இனி நெடு நாட்கள் உயிர்வாழ்தல் அரிதாகும்' என்றாள்.

இக் கருத்தோடொப்பத் திருக்கோவையார்த் தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்றல்துறைக்கண்,

[1]"....................இருந் தண்கயிலைச்
சினக்களி யானை கடிந்தார் ஒருவர்செவ் வாய்ப்பசிய
புனக்கிளி யாம்கடி யும்வரைச் சாரற் பொருப்பிடத்தே'

என்று கூறுவதும், பெருங்குறிஞ்சியாகிய குறிஞ்சிப்பாட்டில் தோழி, செவிலிக்கு அறத்தொடு நிற்றலாக [2]"அன்னாய் வாழிவேண் டன்னை' என்று தாம் தினைப்புனங் காவலில் நிகழ்ந்த நிகழ்ச்சி யையும், அங்கு யானையால் கொல்லவிருந்த தங்களைத் தலைவன் வந்து காத்த திறத்தையும், பிறவற்றையும் கூறி நிற்றலும் இக் கருத்துக்கு அரணாதலையறிக. இங்கே பாங்கி, செவிலிக்கு உண் மையைக் கூறினால் தலைவிக்கு மணம் விரைந்து நிகழுமென உட் கொண்டு உண்மையைக் கூறினாள்.

துயக்குவித்தான், வாங்குவித்தான் முதலியன தெரிநிலை வினையாலணையும் பெயர்கள். பிறவினையாகத் தலைவனால் தலை விக்கு நிகழ்ந்த காதலை எடுத்துரைத்தாள். மான + உதயன்–மானோ தயனெனப் புணர்ந்தது. வடமொழிச் சொற்றொடர் ஆதலான் குணசந்தியாக அகரமும் உகரமும் ஓட, ஓகாரம் தோன்றியது காண்க. தலைவனால் நேரடியாக இச்செயல்கள நிகழாமல் இவளின் மனநிலை அவளைத் துன்புறுத்தலால் தன்வினையாகக் கூறாது பிறவினை வாய்பாடுகளால் கூறினாள். வேந்தன்மீது யாதொரு குற்றமும் இதிற் கூறற்கில்லை. இவளே அவனை நினைந்து அழுங்குகின்றாள் என்பதைக் குறிப்பால் உணர 'மானோதயன்' என்று பாராட்டிக் கூறினாள். மானம் என்ற சொற்கு. [3]'எஞ்ஞான்றும் தன்னிலையில் தாழாமையும் தெய்வத் தால் தாழ்வு வந்துழி வாழாமையும்' என்பர், ஆசிரியர் பரிமே லழகியார். இதில் தோழியின் மதிநுட்பம கற்பார்க்குக் கழிபேரூகை பயத்தல் அறிக. வட்டித்தல் - சூளுரைத்துக் கூறல். (கஎ)

---

1. திருக்கோவையார் : உகரு. 2. குறிஞ்சிப்பாட்டு : க.
3. திருக்குறள் : கஎ ஆம், அதிகாரத் தலைப்புரை.

## சம்பிரதம்

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

வட்டன்றே நீர்இதனை மிகவும் காண்மின்
மற்றைக்கை கொட்டினேன் மாவின் வித்தொன்று
இட்டன்றே பழம்பழுப்பித் துண்ணக் காண்மின்
இவையல்ல சம்பிரதம் இகலில் தெள்ளாற்று
அட்டன்றே பொன்றும்வகை முனிந்த நந்தி
அவனிநா ராயணன்பா ராளுங் கோமான்
குட்டன்றே மழைநீரைக் குடங்கை கொண்டு
குரைகடலைக் குடிக்கின்றேன் குடிக்கின் றேனே.

(இ - ள்.) (ஐயன்மீர்! தாய்மார்களே!) நீர் இதனை மிகவும் காண்மின் - நீவிர் இதை நன்றாக உற்றுப்பாருங்கள், வட்டு அன்றே-இஃதோர் மண்ணுருண்டையல்லவா? மற்றைக் கை கொட்டினேன் - ஒரு கையிலிருந்து மற்றொரு கையில் போட்டுள்ளேன், மாவின் வித்து ஒன்று இட்டு - மாங்கொட்டையொன்றை அம்மண்ணுள் வைத்து மறைத்து, அன்றே பழுப்பித்து - (செடியாக முளைக்கச் செய்து அதில்) அப்பொழுதே பழம் பழுக்குமாறுஞ்செய்து, உண்ணக் காண்மின் - நீங்கள் உண்பதற்குத் தருவேன் பாருங்கள், இவையல்ல சம்பிரதம் - இச்செயல்கள் இந்திர சால வித்தையல்ல, தெள்ளாற்று இகலில் - தெள்ளாற்றில் நிகழ்ந்த போரின்கண், அட்டு அன்றே பொன்றும் வகை- கொன்று அந் நேரத்திலேயே அப்படைகள் அழியும்படி, முனிந்த நந்தி - சினங்கொண்ட நந்திமன்னனும், அவனி நாராயணன்-மண்ணுலகத் திருமால்போன்றவனும் ஆகிய, பார் ஆளும் கோமான் - உலக முழுதும் ஆளுகின்ற மன்னர் மன்னனுக்குரிமையான, குட்டு அன்றே -(நாடுகளிலுள்ள) ஊருணிகள் மட்டுமல்லாமல், மழை நீரை - மேகம் பொழிகின்ற நீரையெல்லாம், குடங்கைகொண்டு - உள்ளங்கையில் அடக்கிக்கொண்டு, குரைகடலை - ஒலிக்கின்ற கடல்நீர் முழுதையும், குடிக்கின்றேன் குடிக்கின்றேனே - குடித்து

விடுவேன், குடித்துவிடுவேன்! (பார்மின், இஃதொரு பெரிய செயலன்று எனக்கு!)

(வி - ரை.) கலம்பக உறுப்புக்களுள், 'சம்பிரதம்' என்பதொன்று. சம்பிரதம் - மாயம். அஃதாவது இந்திரசாலவித்தை; உலக வழக்கில் கண்கட்டு வித்தையென வழங்குவர். ஒரு மாய வித்தைக்காரன், மண்ணை அள்ளிக்காட்டி, பொற்காசு உண்டாக்கிக் காட்டுதலும், மாங்கொட்டையை மண்ணுள் புதைத்து வைத்து, உடனே அதில் மாங்கன்று உண்டாகச் செய்து, அது மரமாகி, பழம் பழுத்துக் கொத்துக்கொத்தாகக் காய்கள் காய்த்துத் தொங்குமாறு காட்டுவதையும் நாம் இன்றும் காண்டு மன்றே. அந்த வித்தையாளன் செயலையே சம்பிரதம் என்பது. எல்லாநாடுகளிலும் வாழ்கின்ற மாயவித்தைக்காரர்கள் மேற் கூறிய இச் செயல்களையே செய்து காட்டுவர். ஆனால் நந்திவர்மன் நாட்டில் வாழ்கின்ற மாயவித்தைக்காரன், 'இஃதொரு பெரிய செயலா? இதினும் சிறந்த—யாராலும் செய்தற்கரிய - செயலைச் செய்தலன்றோ சிறந்த செயலாகும்' என்று பெருமிதத்தோடு பேசுகின்றான். அவன் பேசுவதைக் கேண்மின்:

ஐயன்மீர்களே! தாய்மார்களே! நீங்கள் இதனை நன்றாக உற்று நோக்குங்கள்! நான் என் கையில் வைத்துக்கொண்டுள்ளது ஓர் மண்ணுருண்டை; அவ்வுருண்டையை ஒரு கையிலிருந்து மற்றொரு கையில் போட்டுள்ளேன்; மாங்கொட்டை ஒன்றெடுத்து அம்மண்ணுருண்டையில் மறைத்துவைத்து நீர் ஊற்றி அதைச் செடியாக முளைக்கச்செய்து, அது மரமாகி, அதில் இப்பொழுதே பழம்பழுக்குமாறு செய்து, நீங்கள் அதை உண்பதற்குத் தருவேன் பாருங்கள்! இச்செயல்கள்கூட ஒரு மாயவித்தையல்ல! வெள்ளாறென்னுமிடத்தில் நிகழ்ந்த போரில் அந்நேரத்திலேயே அப்படைகள் யாவும் அழிந்தொழியும்படி சினங்கொண்ட நந்தியென்னும் பெயருடையோனும், மண்ணுலகத் திருமாலையொத்தவனும் ஆகிய பெருநில முழுதாளும் மன்னர் மன்னனுக்குரிமையான நாடுகளிலுள்ள நீர்நிலைகளான ஊருணிகள் மட்டுமன்று; அந்நாட்டில் மேகங்கள் பொழிகின்ற நீரையெல்லாம், என் உள்ளங்கைக்குள் அடக்கிவிடுவேன்; ஒலிக்கின்ற கடல்நீரையெல்லாம் குடித்துவிடுவேன்! குடித்துவிடுவேன்! எனக்கு இஃதொரு அருஞ்செயலன்று பார்மின்' என்று பெருமிதங்கொண்டு வீறு பேசுகின்றான். இச் சம்பிரதம் என்னும் துறையில் நந்திமன்னன் வீரமும், அவன் ஆளுகின்ற நாட்டின் நீர்வளநிலவளச் சிறப்பும் கூறியதறிக.

இவ்வாறே மதுரைக் கலம்பக மாயவித்தையாளனும்,

[16]'மட்டறுக டற்புவிய னைத்துமொரி மைப்பினின்ம
றைத்துடன்வி டுத்தி டுவனேற்
றெட்டுவரை யைக்கடலை மூட்டியுள டக்கிடுவன்
இத்தனையும் வித்தை அலவால்
துட்டமத னைப்பொடிப டுத்திமது ரைக்குளுறை
சொக்கர்குணம் எட்டி னொடுமா
சிட்டர்கள்து தித்திடும கத்துவம னைத்துமொரு
செப்பினுள் அடக்கி டுவனே.'

என்று வீறுடன் கூறுவதும், பிற கலம்பகங்களுள் பரந்துகிடப் பனவும் இதனோடொப்பக் கண்டுவைத்து மகிழுக.

வட்டு - உருண்டை, இங்கே மண் உருண்டை. நீர் : முன்னிலைப்பன்மை. மிகவும் - நன்றாக, செவ்வையாக. கொட்டுதல் - இடுதல், சேர்த்தல். மாவின் வித்து - மாவின் விதை. அதை வழங்கும் மரபுச்சொல், மாங்கொட்டையென்பது. அன்று ஏ, என்பன நான்கில், அல்லவா, அப்பொழுதே, அல்லாமல் என்னும் பொருள்களில் மூன்றும் அப்பொழுதே என்னும் பொருளில் ஒன்றும் வந்தன. பழுப்பித்தல் - பழுக்கும்படி செய்வித்தல்: பிறவினை. நந்தி மன்னன் சினந்தால் ஒரு நாடு அழிவும், அவன் அருள்கூர்ந்தால் ஒருநாடு மேம்படுதலும் இயல்பு என, நந்தியின் ஏற்றங்கூறினன். குட்டம் - குள்ளம் என்றசொல், திரிந்தது. இங்கே அம் கெட்டு 'குட்டு' என வந்தது. குட்டம் - குளம், ஊருணி, நீர்நிலைகள் என, இவை ஒரு பொருள் குறிக்குஞ் சொற்கள். நந்தி மன்னன் நாடு, நீர்வளத்தானும் நிலவளத் தானும் சிறந்ததென்பதைக் குறிக்க இவ்வாறு கூறினன். நீர் நிலைகளன்றி மழையும் பொய்யாது பெய்தலால் இடையறா வெள் ளப் பெருக்குமுடையது. இந்நீரையெல்லாம் தன் குடங்கையில் அடக்குதலோடு அவன ஆட்சிக்குட்பட்ட கடல்நீரையும் உண்பே னென்று தன் ஆற்றலை மக்கட்கு எடுத்துக் கூறினன். (௬அ)

## தலைவி இரங்கல்

### கட்டளைக் கலித்துறை

குடக்குடை வேந்தன்தென் னாடுடை
மன்னன் குணக்கினோடு
வடக்குடை யான்நந்தி மானோ
தயனிந்த வையம் எல்லாம்

படக்குடை ஏந்திய பல்லவன்
தன்னோடும் பாரறியத்
துடக்குடை யாரையல் லால்சுடு
மோவிச் சுடர்ப்பிறையே.

(இ - ள்.) குடக்கு உடை வேந்தன் - மேற்கு நாட்டுக்குரியவன், தெனாடு உடை மன்னன் - தெற்கு நாட்டுக்குரிமையானவன, குணக்கொடு வடக்கு உடையான் - கீழ் நாடுகளோடு வடக்கு நாடுகளையும் தனக்குரிமையாகக் கொண்டோன். நந்தி - நந்தியென்னும் பெயருடையவன், மான உதயன் - மான ஞாயிறானவன் ஆன, இந்த வையம் எல்லாம் பட - மற்ற இந்த உலகமெல்லாம் தனக்குள் அமையும்படி, குடை ஏந்திய பல்லவன் - வெண்கொற்றக் குடையை மேற்கொண்ட பல்லவர்குலத் தோனறல், தன்னொடும் - தன்னுடனேயும், பார் அறிய - உலகினர் யாவரும் அறியும்படி, துடக்கு உடையாரை அல்லால் - தொடர்பு கொண்டுள்ள மங்கையர்களையன்றி, இச் சுடர்ப்பிறை சுடுமோ - இந்தக் கதிர்களைக்கொண்ட பிறை நிலவு வெப்பத்தைக் கொடுக்குமோ? (கொடாதன்றே! நான் மன்னன்பால் அன்பு கொண்டதனாலன்றோ இது சுடுகின்றது! என் செய்வேன்!)

(வி - ரை.) நந்திமன்னனிடம் காதல்கொண்ட நங்கையொருத்தி, நிலவின் சுடரொளிக்காற்றாது வருந்துகின்றாள். அவள் கூறுகின்றாள். 'மன்னன்பால் தொடர்பு கொண்டவர்கட்கெல்லாம் துன்பம் நீங்கி இன்பம் கிடைக்கின்றது; எந்தப் பகைமையும் அவர்களை நாடுவதில்லை; வருத்துதற்கு முடிவதுமில்லை. ஆனால், என்னைமட்டும் என்னவோ இந்நிலவு வருத்துகின்றது; இது வியப்பாகவே இருககின்றது; இதுவும் நந்தி மன்னன் அருளே போலும்! அவன் அருள் எனக்கொன்றும் பிறர்க்கொன்றுமாக மாறுபட்டே இருக்கும் போலும்! இன்றேல் இவனுக்கு—எட்டுத்திக்கும் பதினாறு கோணங்களும் வானும் நிலனும் மறிகடலும் ஆட்சிகொண்ட இவனுக்கு—பகைவர்கள் செருக்கை அடக்கிய எந்தலுக்கு—இந்நிலவின் செருக்கை—கொடுமையை—அடக்க இயலாதா? ஆனால் இம்மதியின் மதியில்லாமதி அவன்பால் துடக்குடையாரையே சுடும் இயல்புடையது போலும்;' என்று கூறுகின்றாள்.

குடக்கு - மேற்கு; தென் நாடு - தெற்கு; குணக்கு-கிழக்கு; வடக்கு. இங்கே நான்கு திசைகளும் குறிக்கப்பெற்றன. நந்தி மன்னன் ஆளுகை நான்கு திசைகளிலும் இடையறவில்லாது பரவியுள்ளதைக் குறித்தாள். குடக்குடை வேந்தன் என்றமையால் சேர நாடும், தென்னுடை மன்னன் என்றமையால் பாண்டிநாடும், குணக்கினொடு வடக்குடையான் என்றமையால் கீழ்நாடும் வடநாடும் தனக்குரிமையாகப்பெற்று ஆள்கின்றவன் எனக் குறித்தவாறும். மானம்-தனக்கோர் இழிவு வந்த காலத்தே பொறுககாது தன் உயிர்விடும் உயரிய பண்பு. இதனை,

> [1]' மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
> உயிர்நீப்பர் மானம் வரின்'

என விளக்குவர் வள்ளுவர் பெருந்தகை. வையம் - மண்ணுலகம். பட - அடங்க; தன்னிடம் ஒன்று சேர. குடை யேந்துதல் - குடைப்பிடித்தல். துடக்கு - தொடக்கு· ஒகரத்துக்கு உகரம் ஒத்து வந்த போலி தொடக்கு - தொடர்பு, நட்பு, கிளை, உறவு. சுடர்ப்பிறை - சுடரையுடைய பிறையென விரிதலால், உருபும் பயனும் உடன்தொக்க தொகை. பிறை - இளம்பருவ நிலவைக் குறிக்காது, பொதுவாகச் சந்திரனைக் குறித்தது. ஏகாரம்: ஈற்றசையாக இசை நிறைத்து நின்றது. (சுகூ)

## தோழி கூற்று

### கலிவிருத்தம்

பிறைதவழ் செஞ்சடைப் பிறங்கல் நாரணன்
அறைகழல் முடித்தவன் அவனி நாரணன்
நறைகெழு தோண்டையோன் தோண்டை கண்டபின்
இறைகெழு சங்குயிர் இவளுக் கீந்ததே.

(இ-ள்.) பிறைதவழ் செஞ்சடை-மூன்றாம்பிறை நகர்கின்ற சிவந்த சடைமுடியையுடைய, பிறங்கல் - ஒளி வடிவினனான சிவபெருமான், நாரணன் - திருப்பாற்கடலில் அறிதுயில் கொள்கின்ற திருமால் ஆகிய இவர்களின், அறைகழல் முடித்தவன் - சிலம்பொலியையுடைய திருவடிகளைத் தன் முடிமீது சூடி வணங்குவோனும், அவனிநாரணன் - மண்ணுலகத் திருமாலையொத்தவனும், தொண்டையோன் - தொண்டை நாட்டுக் காவலனுமான நந்தி மன்ன

1. திருக்குறள்: கூகூசுகூ.

னுடைய, நறைகெழு - தேன் நிறைந்துள்ள, தொண்டை கண்ட பின் - தொண்டை மலர் மாலையை அடைந்த பின்பு, இறைகெழு சங்கு-முன்னங் கைகளின் வரைகளைப் பொருந் திய சங்கு வளையல்கள், இவளுக்கு உயிர் ஈந்தது - இவளுக் குப் போன தன்உயிரை மீட்டுக் கொடுத்தது! (என்னே! இம்மாலையின் மாண்பு! சங்கு வளையல்களின சிறப்பு!)

(வி - ரை.) நந்திமன்னனிடம் காதல் கொண்ட நங்கை, அவனது தொண்டைமாலை குறித்து ஏகக்கற்று அதைப் பெறத் தவங்கிடந்தாள்! உணவை வெறுத்தாள்; துயிலை மறந்தாள்; கையைத் தலைமேல் வைத்து, கண்ணீர்வாரத் தனியேயிருந்து தேம்புவாள்; இவள் விருப்பம் நிறைவேற மன்னன் அருளால் தொண்டைமாலையைப் பெற்றாள்; உடல் பூரித்தாள்; உடல் மெலிவாற் கீழே நழுவிவிழ ஏதுவாக இருந்த சங்குவளைகள் கையிறையைக் கடந்து செல்லாது நின்றன; அதனால், உயிர் தளிர்த்தாள்; உள்ளங் குளிர்ந்தாள்; தான் கொண்ட கருத்து நிறைவேறியதால் உண்டான மகிழ்வு சொல்லும் எல்லையைக் கடந்து நின்றது; இனி என்னே குறையெனத் தோழி வியக் கின்றாள்.

பிறை - மூன்றாம் பிறைச் சந்திரன். தவழ்தல் - நகர்தல், உலாவல். இறைவன் திருசசடையின்மீது பிறை சூடப்பெற் றிருத்தலால் 'தவழ்' என்றாள். பிறைசூடி இருத்தலை, [1]'விடையேறி யோர் தூவெண் மதிசூடி' எனச சமபந்தரும், [2]'சுடர்த்திங்கட் சூளாமணியும்' என அப்பரும், [3]'தண்ணார் மதி சூடீ தழல் போலும் திருமேனி' எனச் சுந்தரரும், [4]'துண்டப் பிறையான் மறை யான் பெருந்துறையான்' என வாதவூரரும், [5]'கங்கையும் மதி யும் பாம்பும் கடுக்கையும் முடிமேல் வைத்த, அங்கணர்' எனச் சேக்கிழாரும், பிறரும் தம் அருமறைகளில் குறிக்குமாற்றால் அறி யப்பெறும். பிறங்குதல் - விளங்குதல். பிறங்கல் - ஒளிவிடல்: அதனையுடைய சிவபெருமானைக் குறித்தலால் ஆகுபெயர். எல் லாம் வல்ல இறைவன், அறியாமையாகிய மலத்தை இயற்கை யாகவே தம்மிடத்துக் கொண்ட உயிர்களுக்குத் தன் இயற்கை யறிவாகிய ஒளி விளக்கத்தால் அதைக் கெடுத்து அறிவு விளக்கத் தைக் கொடுப்பவனாதலால், அவனை இங்கே 'பிறங்கல்' என்றார்,

1. திருஞான, தேவாரம், பதி, க : க.
2. திருநாவுக், பதி, உ: க. 3. சுந்தரர், தேவாரம், பதி, க : சு.
4. திருவாசகம், திருவம்மானை: கூ.
5. பெரிய புராணம், தடுத்தாட் : க.

தோழி கூற்ருக. கண், ஒளி பெற்றிருந்தும் இருளில் எப்பொருளை யும் காணும் ஆற்றல் பெறுவதில்லை; விளக்கொளியைக் கொண்டு வந்து காட்டப்பெறின் யாவற்றையும் காணும் இயற்கை பெறு கின்றது. அது போன்றே உயிர்களும் இறைவன் விளக்கவே அறிவு விளக்கம் பெறுகின்றன. இதனாலே ஆண்டவனை, அறி வொளியாகிய அம்பலத்தில் ஆனந்தக் கூத்தாடுகின்ருன் என மறைகள் முழங்குவவாயின. அதனாலேயே 'ஒளிவளர் விளக்கே உலப்பிலா ஒன்றே' எனவும், 'சோதியே சுடரே சூழொளி விளக்கே' எனவும், 'வாலறிவன்' எனவும் ஆன்ருேர்கள் அருளு வதும் அறிக.

நாரணன் - நாரம் - நீர். அதில் உறைபவன் என்னும் பொரு ளது. அது திருப்பாற் கடலைக் குறித்தது. திருமால் திருப்பாற் கடலில் பாம்பணையில அறிதுயில் கொள்கின்ருனென விசிட் டாத்துவிதமறை கூறும். இறைவன் பாற்கடலில் அறிதுயில் கொள்கின்ருனென்பது, நம்போல் அறியாமை இருளில் கட் டுண்டு உறங்காது, அறிவொளிப் பிழம்பிலே அறியாமையாகிய பாம்பைக் கீழமிழ்த்திககொண்டு எல்லாம் அறிந்தவனாய்க் காப்ப வனாய், படைப்பவனாய், அழிபபவனாய் இருக்கின்ருன் என்பதைக் குறிக்கும் நிலையைக குறிக்கவே இங்கே நாரணன் எனப்பட்டது.

இவ்விருபெருங் கடவுளர்களையும் வேறுபாடு கருதாது வழி பாடு செய்வோன் என்பதைக் குறிக்கவே, 'பிறங்கல், நாரணன், கழல் முடித்தவன்' என்ருள். வேறுபாடற்று இறைவழிபாடு செய்வோர்க்கு அவர் நினைந்த வடிவோடு விரைந்து வந்து அருள் சுரப்பன் என்பது ஆன்ருோ கண்ட முடிபு. இதனை,

[1] 'யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வம் ஆகி ஆங்கே
மாதொரு பாகனார்தாம் வருவர்'

என வரும் அருணந்தி சிவாச்சாரியார் திருமொழியும் வலி யுறுத்தும்.

இறைவன் அன்பர்களுக்கு அருள் சுரந்தருளுவன் என்பதை இறைவன் அருள் பெற்ற அடியவர்கள் கூறிய மறைநூல்களால் அறியப் பெறும். இதனை,

[2] 'கல்லாத புல்லறிவிற் கடைப்பட்ட நாயேனை
வல்லாள னாய்வந்து வனப்பெய்தி இருக்கும்வண்ணம்

1. சிவஞான சித்தியார், சுபக்கம்: ௨௫.
2. திருவாசகம், கண்டபத்து: ௪.

பல்லோருங் காணஎன்றன் பசுபாசம் அறுத்தானை
எல்லோரும் இறைஞ்சுதில்லை அம்பலத்தே கண்டேனே'

என, மணிமொழிப் பெருமானும்,

[1] 'பொன்னும் மெய்ப்பொரு ளுந்தரு வானைப்
போக முந்திரு வும்புணர்ப் பானை
பின்னை என்பிழை யைப்பொறுப் பானைப்
பிழையெ லாமறத் தவிர்ப் பானை'

என, நம்பியாரூரரும், பிற ஆன்றோர்களும் அருளுமாற்றால் அறிக.

'நறைகெழு தொண்டையோன் 'தொண்டை' யென்பதில் தொண்டையோன் என்னும் சொல்லைத் தழுவாது தொண்டை யென்ற சொல்லை நடுவிட்டுத் தழுவி நிற்றலால், இது, தவளைப் பாய்த்தாகக் கொள்க. தொண்டை, மாலைக் காதலால் இருமடி யாகுபெயர். கண்ட - கிடைத்த என்னும் பொருளது. 'தேடிக் கண்டுகொண்டேன்' என்பதில், காண்டல் - பெறுதல் என்னும் பொருளில் வருதல்போற் கொள்க. இறை - இரேகை. கோடு, வரை என்னும் பொருளது. முன்னங்கையில் உள்ள வரிகளைக் குறித்தது. அதில் படிந்து வளைகள் கிடப்பனவாதலால், 'இறை கெழு' என்றாள். சங்கு, அதனாலான வளையலைக் குறித்த லால் காரிய ஆகுபெயர். சங்கு உயிரை ஈந்தது என்றாள். சங்கு உயிரை ஈவது யாங்ஙனம்? இதனால் தலைவியின் உள்ளநிலை விளக்கிக் கூறப்பட்டது. என்னை?

[2] 'எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்
திண்ணியர் ஆகப் பெறின்'

என்பது வள்ளுவர் வாய்மொழி. ஒருவர் எதை உறுதிக் கருது கின்றாரோ அவர்க்கு அது தவறாமல் கிட்டுமென்பது அதன் உள்ளுறை பொருள். தலைவி, தான் தொண்டை மாலையை நந்தி மன்னன் தரத் தான் பெறவேண்டுமென்று இரவு பகல் எந்நேர மும் எண்ணி வந்தாள். அவள் எண்ணியவாறு கிட்டிற்று; அதனால் மனம் மகிழ்ந்தாள்; மாலைக்காக, அந்நேரமோ இந்நேரமோ என ஊசலாடிக்கொண்டு தொங்கித் தத்தளித்து நின்ற தலைவியின் உயிர், தளிர்த்து நிலைபெறலாயிற்று. அதை வெளிக்காட்டியது, கீழே நெகிழ்ந்து விழாமல் உடல் பூரிப்பால் கழலாது நின்ற சங்கு வளைகள். இவள் எண்ணத்தைச் சங்கின்மேல் வைத்துக் கூறினாள். (எ0)

---

1. சுந்தரர் தேவாரம், பதி, ரு : க. 2. திருக்குறள் : சுசுசு.

## தலைவன் சிறைப்புறத்தானாகத், தோழி, செறிப்பறிவுறுத்தல்

### கலிவிருத்தம்

ஈகின்றது புனமுந்தினை யாமும்பதி புகுநாள்
ஆகின்றது பருவம்இனி ஆகும்வகை அறியேன்
வாழ்கின்றதோர் புகழ்நந்திதன் வடவேங்கட மலைவாய்த்
தேய்கின்றதோர் உருவத்தொடு திரிவாரது திறமே.

(இ - ள்.) (நங்காய்!) புனமும் - இக்கொல்லையிடத்தி லுள்ள, தினை ஈகின்றது-தினைப் பயிர்கள் கதிர்களை விளைத்துத் தந்துவிட்டது, யாமும் - நாங்களும், பதி புகும் நாள- இப்புனத்தைவிட்டு நம் ஊருக்குச் செல்லும் நாளும், ஆகின்றது - வந்துவிட்டது, வாழ்கின்றதோர் புகழ் - ஈதலும் இசை பெற வாழ்வதுமாகிய ஒப்பற்ற புகழையுடைய, நந்திதன் - நந்தி மன்னனுக்கு உரிமையான, வடவேங்கட மலைவாய் - வடக்கின்கண்ணதான திருவேங்கட மலைச்சாரலின் பக்கத்தே, தேய்கின்றது ஓர் உருவதனொடு-நாளுக்கு நாள் மெலிந்துகொண்டு வருகின்ற வடிவத்துடனே, திரிவாரது திறம் - அலைந்துகொண்டு வருகின்ற நம் தலைவரது பருவத்திறம், (கால நிலை) ஆகும வகை அறியேன் - மேல் நடக்கப்போகின்ற தன்மைகளை யாம் அறிய முடியவில்லையே! என்ன செய்வோம்! (யாம் இங்குவிட்டு நம் பதிக்குப் போய்விட்டால் அவரைக் காண்பதெங்கே? உனக்கு மணமுடிப்பதெவ்வாறு! ஆ!)

(வி - ரை.) தோழியும் தலைவியும் தினைப்புனங் காவல் கொண்டு இருந்தபோது, தலைவன், தினைப்புனத்துக்கு வந்து பகற்குறியில் புணர்ந்து வந்தான். நாள்கள் பல சென்றன. தினைகள் கதிர்கள் முற்றி விளைந்தன. தலைவியின் தாய் தந்தை முதலியோர் தினைக்கதிரறுக்க நாட்குறித்தனர். அதுகாலைத் தலைவன் வேலிக்கு அப்புறம் மறைவாக வந்து நின்றானாக, அதைத் தோழி கண்டாள்; அறியாள் போன்று தலைவன் கேட்க, கீழ்க் கண்டவாறு பேசுகின்றான். இதனையே அகப்பொருள் நூலார் **செறிப்பறிவுறுத்தல்** என்பர். செறிப்பு அறிவுறுத்தலாவது, தம்மை வீட்டிலிருத்திச் செவிலி முதலியோர் பாதுகாத்தலை

அறியுமாறு சொல்லல் என்பதாகும். அம்முறையில் இங்கே தோழி கூறித் தலைவன், தலைவியை மணந்து கொண்டு தன் ஊருக்குத் தலைவியை அழைத்துப் போகுமாறு குறிப்பால் அறிவிக்கவே இவ்வாறு கூறுவள்.

'நங்காய்! நம் காவல் கொண்ட இத்தினைப் புனமும் கதிர்கள் முற்றி விளைந்துவிட்டன; நம் தாய் தந்தை தமையன்மார் முதலியோர் கதிர் கொய்ய நாளும் குறித்துள்ளனர்; நமக்கு இனி இங்கே வேலையில்லை; நாமும் நம் ஊருக்குச் செல்லவேண்டிய நிலை வந்துவிட்டது; ஆனால் ஒருகவலை என் மனத்தை வாட்டுகின்றது. மக்களாய்ப் பிறந்தோர் எய்தும் பயனாகிய ஈதலும் இசைபெற வாழ்தலும் கொண்ட நந்தி மன்னனுக்குரிய வடக்கின் கண்ணதான திருவேங்கட மலைச்சாரலாகிய இவ்விடத்தே நாளுக்கு நாள் தேய்ந்து தேய்ந்து இளைத்து வருகின்ற வடிவத்தோடு திரிகின்ற நம் தலைவரின் காலநிலை எவ்வாறுமோ? அவருக்கு இனி நடக்கின்றவகை என்னவென்றே அறியாதவளாக இருக்கின்றேன்! நாம் இங்குவிட்டு நம் ஊருக்குச் சென்றுவிட்டால், அவரை எக்கால் இனிக் காணபேம்மா! உனக்கு மணஞ்செய்வது எப்படி? என்ன செய்வதென்றே தோன்றவில்லை!' என்கின்றாள்.

ஈகின்றது - கொடுக்கின்றது என்றது, கதிர்கள் முற்றுதலை. புனமும் என்பதில் உம்மை எதிரது தழீஇய எச்சமாகக் கானவர் கதிரறுக்க வருவர் என்பதைக் குறித்தது. ஆகின்றது - ஆகிவிட்டது என இறந்தகாலம். இயல்பாக வந்த காலவழுவமைதி. அன்றி விரைவுபற்றியுமாம். மலைவாய் - மலைச்சாரலாகிய தினைப் புனம். தேய்கின்றதோர் உருவமாவது, தலைவியை அல்லும் பகலும் நினைந்து பகற்குறிகளிலும் இரவுக்குறிகளிலும் வந்துவந்து களவிற்புணர்ந்து செல்வோனாதலால், அவளை இனி, எவ்வாறு மணஞ்செய்துகொள்வது! ஊருக்கு அழைத்தேக முற்பட்டால் இவள் தன்னையரால் என்ன நேருமோ என்ற சிந்தனையால் உடல் மெலிதல்; இதனைத் தோழி தன் அதிமதி நுட்பத்தால் 'தேய்கின்ற......திரிவாரது திறம்' என்றாள். திரிதல் - அலைந்து அலைந்து துன்புறல். இதனோடொப்பத் திருச்சிற்றம்பலக் கோவையாரினும்,

"...................................
தினைவித்திக் காய்த்துச் சிறந்துநின் றேமுக்குச் சென்றுசென்று
வினைவித்திக் காத்து விளைவுண்ட தாகி விளைந்ததுவே."[1]

எனத் தோழி கூறி வருந்துதலும் அறிக. (எக)

---

1. திருக்கோவையார்: கசுo.

மன்னன் வீரத்தைப் படைவீரன் பகர்தல்

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

திறையிடுமின் அன்றி மதில்விடுமின் நுங்கள்
செருவொழிய வெங்கண் முரசம்
அறைவிடுமின் இந்த அவனிதனில் எங்கும்
அவனுடைய தொண்டை அரசே
நிறைவிடுமின் நந்தி கழல்புகுமின் உங்கள்
நெடுமுடிகள் வந்து நிகழத்
துறைவிடுமின் அன்றி உறைபதிய கன்று
தொழுமின்அல துய்ந்தல் அரிதே.

(இ - ள்.) (படை மன்னர்களே! வீரர்களே!) திறைஇடுமின்-நீங்கள் செலுத்தவேண்டிய கப்பப்பொருளைச் செலுத்துங்கள், அன்றி - அஃது நுங்கட்கு இயலாதேல், மதில்விடுமின்-நும் பாதுகாப்புக கோட்டைகளைவிட்டுவிட்டு விலகுங்கள், நுங்கள் செரு ஒழிய - உங்களின்மேல் தொடுத்த போர்விடுதற்கு, வெமகண் முரசம் அறைவிடுமின்-விருப்பந் தரும் முழங்கும் இடத்தையுடைய போர்ப்பறையை முழக்குதலை இனி ஒழியுங்கள், இந்த அவனியில் - இம்மண்ணுலகத்தில், எங்கும் - எல்லாப்பக்கங்களிலும், அவனுடைய தொண்டை அரசே - அவனது தொண்டை நாட்டில் நடக்கும் அரசாட்சி முறையே, நிறைவிடுமின் - நிறுத்தி ஆளச்செய்யுங்கள், நந்தி கழல்புகுமின் - எம் நந்தி மன்னனுடைய திருவடிகளில் அடைக்கலமாகச் செல்லுங்கள், உங்கள் நெடுமுடிகள் - உங்களுடைய நீண்ட மணிமுடிசூடி ஆளுகின்ற ஆட்சி, வந்து நிகழ - எக்காலும் போல் போய் நடக்க, துறைவிடுமின் - வழி கோலுங்கள், அன்றி - அல்லாக்கால், உறைபதி அகன்று - நீங்கள் இருக்கின்ற நகரை விட்டுவிட்டுச்சென்று, தொழுமின் - எம் நந்தி மன்னனை வணங்குங்கள், அல்லது உய்ந்தல் அரிது - இவ்வழிகள் அல்லாமல் நீங்கள் எம்மன்னன் சினத்தினின்றும் விலகிப் பிழைப்பது ஏலாத செயலாகும். தன், ஏ. அசைநிலைகள்.

(வி - ரை.) திறை, மன்னனுக்குச் செலுத்தவேண்டிய இறைப்பொருள்கள். மதில் - கோட்டை, அரண். போர்புரிவோர் நீரரண், காட்டரண், மதிலரண் இவைகளைத் தமக்குப் போர்புரிதற்கு ஏற்றவாறு அமைத்துக்கொண்டு போர்புரிவது இயற்கையாதலால், அதை விட்டுவிட்டுத் தம் அரசனிடம் புகல்புகுமாறு வேண்டினான். வெம்மை - விருப்பம்; அன்றிக் கொடுமையென்றலுமாம். இம் முரசு போர்க்களத்தில் முழங்குவது பகைவர்களை அழித்தற்கேயாதலால், கொடுமையென்று கொள்ளலாம். விருப்பந்தருதலாவது போர் வீரர்கட்குப் பறை முழக்கித் தாம் எதிரிபடைகளைப் போருக்கு அழைத்தலில் பேரவாமிக்கெழுதலான் என்க. இதனைப்

[1]"போரென்னை வீங்கும் பொருப்பன்ன
பொலங்கொள் திண்டோள்,
மாரன் அனையான்"

எனவும்,

[2]"நானிலம் அதனின் உண்டு போரென நவிலின் அச்சொல்
தேனினும் களிப்புச் செய்யும் சிந்தையர்"

எனவும் கம்பநாடர் படைவீரர் பெருமையைச் சிறக்கக் கூறுவர். ஆதலான், விருப்பங் காண்க. கண் - இடம். இங்கே பறை முழக்குகின்ற இடமாகிய அதன் அடிக்கின்ற தோல்மேவிய பகுதியைக் குறித்து நின்றது. தொண்டை அரசு - தொண்டை நாட்டில் நடக்கும் அரசாட்சி முறையே, முறையாக எங்கும் நடக்குமாறு செய்தல். எனவே, இவன் செங்கோல் முறையே முறை. இதனை நடக்குமாறு செய்வதே அறமாகும். அஃதின்றி நுங்கள்போன்ற கொடுங்கோன் மன்னர் அடக்குமுறையால் பயனில்லையென்று தம் அரசன் மாண்பை அவர்கட்குக் குறிப்பால் சுட்டி உணர்த்தியவாறும். மற்ற நாடுகளைக் கூறாது தொண்டைநாட்டை மட்டும் குறித்துக் கூறுவானேன் எனின், [3]"நன்னீர் வயல்தொண்டை நன்னாடு சான்றோர் உடைத்து" என ஆன்றோர்களால் புகழப்பட்டு வருதலான், அந்நாடு சான்றோர் வாழிடமாகப் புகழ்பெற்றதாலென்க. இதனை,

[4]"சான்றோர் இல்லாத் தொல்பதி இருத்தலின்
தேன்தேர் குறவர் தேயம் நன்றே"

---

1. 2. கம்பராமா. பாலகாண்டம் வரைக் காட்சி: சுந்தரகாண்டம், ஊர்தேடு:
3. தனிப்பாடல்: 4. வெற்றிவேற்கை:

என்பர், அதிவீரராமபாண்டியரும். எனவே, சான்றோர் வாழும் நாட்டில் சான்றாண்மையே நிகழும் என்பதை அறிவுறுத்திய வாறாம்.

கழல் - வீரக்கழல்; இதனை வீரதண்டையெனவும் வழங்குப. இது வீரத்தால் மேம்பட்ட ஆடவர், அணிகலனாகத் தம் கால்களில் மாறாதணியப்பெறுவது. இதன் சிறப்பை வள்ளுவர் பெருந்தகை,

> [1]“சுழலும் இசைவேண்டி வேண்டா உயிரார்
> கழல்யாப்புக் காரிகை நீர்த்து.

என, வீரர் அணிவதே அழகென்பர். அவ்வழகிய நந்தி மன்னன் திருவடிகளில் பணியுமாறு வீரன் அறிவுறுத்துகின்றான்.

‘நெடுமுடிகள் வந்து நிகழ’ என்பது, அவர்தம் அரசாட்சி முடிசூடி எந்நாளும் நடக்க என்னும் பொருளது. அவர் தம் ஆட்சி நின்று நிலவுதற்கு மணிமுடி தரித்திருத்தலே அடையாளமாகலான், அவர்தம் முடிமேல் வைத்துக்கூறி விளக்குகின்றான். துறை - வழி. தம் ஆட்சி நிலவுதற்கேற்ற நிலைப்பான தன்மை. இதனை ஆசிரியர் இளங்கோவடிகள் தம் காப்பியத்தில்,

> [2]“மறத்துறை விளங்கிய மன்னவன் கோயில்’

எனப் பொற்பொடு இணைத்துக் கூறுவர். உறைபதி - என்றும் மாறாது இருக்கின்ற ஊர். [3]‘பதியெழு வறியாப் பழங்குடி’ என்பது காண்க. ‘நும் நாடே நிலையென்று நினைத்து இராமல் உடன் எழுந்துவந்து காலமுண்டாகவே எம் வேந்தன் காலில் விழுந்து தொழுமின்கள். இவைகளில் நீங்கள் ஒன்றையேனும் விரைந்து செய்யாதுவிடின், நீவிர் எம் நந்தி மன்னனின் சினத்தினின்றும் தப்பிப் பிழைப்பது இயலாத செயலாகும்’ என்று அழுத்தமும் திருத்தமும்பெற அவர் உளங்கொள்ளுமாறு படைவீரன் மொழிகின்றான். (எஉ)

தலைவன், தலைவியின் பேரழகை வியந்துரைத்தல்

**கலிவிருத்தம்**

அரிபயில் நெடுநாட்டத் தஞ்சனம் முழுதூட்டிப்
புரிகுழல் மடமானைப் போதர விட்டாரால்
நரபதி எனும்நந்தி நன்மயி லாபுரியில்
உருவுடை இவள்தாயர்க் குலகொடு பகைஉண்டோ.

---

1. திருக்குறள் : எஎஎ. 2. 3. சிலப்பதி, கச: கஉ; க : கடு.

(இ - ள்.) நரபதி எனும் நந்தி - மக்களின் தலைவன் என்று புகழப்படுகின்ற நந்தி மன்னனுக்குரிய, நல் மயிலாபுரியில் - நன்மைமிக்க மயிலாப்பூரிடத்து, உருவு உடை இவள் - பிற மங்கையர் அழகெல்லாம் தோற்கடிக்கின்ற அழகுள்ளாளாகிய என் காதலியினுடைய, தாயர்க்கு - அன்னையர்க்கு, உலகொடு பகை உண்டோ - உலகில் இருக்கின்ற ஆடவர்களிடம் பகைமை ஏதேனும் உளதோ, அரிபயில் - செவ்வரியோடுகின்ற, நெடுநாட்டத்து - (இவளுடைய) நீண்ட கண்ணிடத்தில், அஞ்சனம் முழுது ஊட்டி - நிறைவாக மைதீட்டி, (அஃதோடு பிற செயற்கை அழகெல்லாம செய்து) புரிகுழல் மடமானை - சுரித்த கூந்தலையுடைய இளமானையொத்த இவளை, போதரவிட்டார்-இங்கெல்லாம் வரவிட்டுவிட்டார்களே! (இவள் அழகை என்னென்பது! ஆடவர்கள்பால் இவள தாயர்க்குப் பகை இல்லாவிட்டால் இங்கே வரவிடமாட்டாரன்றோ!)

(வி - ரை.) தலைவன், தலைவியின் கண்கொள்ளாக் காட்சிப் பேரழகை உற்று நோக்கினான்; அவளின் எழுதுபாவையின் இயற்கையெழில் அவன் கண்ணையும் கருத்தையும் ஈர்த்து ஈர்த்தது என்பையும் உருக்கியது. அவள் அழகை வியந்தான்; களித்தான்; அவள் அழகின் சிறப்பும், இளமைத் தோற்றமும் இவன் மகிழ்ச்சியெல்லையையும் தாண்டச் செய்தன. அவன் வியந்து பாராட்டிக் கூறுகின்றான்.

"யாழும் எழுதி எழில்முத் தெழுதி இருளின்மென்பூச
சூழும் எழுதியொர் தொண்டையும் தீட்டி......
மாம் போழும் எழுதிற்றோர் கொம்பர்'[1]

எனத் திருக்கோவையார்த் தலைவன், தன் தலைவியின் உறுப்பழகெல்லாம் ஒருங்கே புகழ்ந்து கூறிவாறு,

'என்ன! இவளின் அன்னையார்க்கு இவ்வுலகில் வாழும் எம் போன்ற இளமைச்செவ்விமிக்க ஆடவரிடத்துக் காரணமில்லாத பகை ஏதேனும் உண்டாகியுளதோ! இல்லையேல் இவட்குக் கூந்தல்வாரிச, சடைப்பின்னிப், பூமுடித்து, நெற்றியில் பொட்டிட்டுக், கண்களுக்கு மையெழுதி இராரன்றோ? அஃதோடு விட்டார்களா! இளமான் போன்ற இவளை வெளிவந்து உலவுமாறு

1. திருக்கோவையார் : எக.

மன்றோ விட்டுவிட்டனர்! கொடுமை! கொடுமை! நானே இவளைக் கண்டதும் திகைத்துப் போனேன்! மதிநலமும் திரிந்தேன்! அறிவு திருந்தாத இளமை மிக்க ஆடவர்கள் கண்டால், இவளை விட்டு அகறலும் உண்டோ! அகன்று போவரேல் அவர் பேடியரில் வைத்து எண்ணப்படுவரன்றோ! ஆகவே, இவளை வெளிவர விட்ட இவள் தாயர் கொடியர்! அவரினும் கொடியர் இவள் தந்தை! தமையன்மார்! இவளைப் பாதுகாவாதுவிடச் செய்த ஆட்சிமுறை மாறிய அரசனுமன்றோ கொடியன் என்று கருத இடனுண்டாகின்றது. இந் நாட்டு மன்னன் நந்தியோ நரபதியென்று புகழ்ப் பெற்றோன்! கோல்முறை கோடாக் கொற்றவன்! இவனது நாட்டிற் சிறந்தது மயிலாப்பூர் என்னும் மாணகர்! இதிலா இக்கொடுமை நிகழ்வது! ஆடவர் உயிரை அழித்தொழிப்பது! ஆ! ஆ!' என்று கூறித் தலைவன் இரங்கி ஏங்குவதாக அமைந்தது இப்பாடல்.

இது குறிஞ்சித் திணைப்பகுதியில் தலைவியின் உறுப்பு நலனையும், அவளின் கவர்ச்சித் தன்மையையும் வியந்து பாராட்டுந் துறையாக இருப்பினும் நச்சினார்க்கினியர் இன்னன போன்றவற்றைக் கைக்கிளைத் திணையின்பாற் படுத்துவர்.

[1] 'காமஞ் சாலா இளமை யோள்வயின்
ஏமஞ் சாலா இடும்பை எய்தி
நன்மையும் தீமையும் என்றிரு திறத்தால்
தன்னொடும் அவளொடும் தருக்கிய புணர்த்துச்
சொல்லெதிர் பெறாஅன் சொல்லி இன்புறல்
புல்லித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பே'

என்னும் தொல்காப்பிய அகத்திணையியல் நூற்பாவால் அறிக. காட்டாகக் கலித்தொகைக் குறிஞ்சிக்கலியில் வரும்,

[2] 'முதிர்கோங்கின் முகையென முகஞ்செய்த குரும்பையென
பெயல்துளி முகிழெனப் பெருத்தநின் இளமுலை
மயிர்வார்ந்த வரிமுன்கை மடநல்லாய் நிற்கண்டார்
உயிர்வாங்கும் என்பதை உணர்தியோ உணராயோ?
........................................
நீயும் தவறிலை நின்னைப் புறங்கடைப்
போதர விட்ட நுமரும் தவறிலர்

1. தொல். பொருள். அகத்திணையியல்: ருO.
2. கலித்தொகை: ருகூ.

*நிறையழி கொல்யானை நீர்க்குவிட் டாங்குப்*
*பறையறைந் தல்லது செல்லற்க என்னா*
*இறையே தவறுடை யான்.'*

என்னும் இப்பாடலைக் குறிஞ்சித்திணை நலம்பாராட்டல் துறையில் கொள்வதோடு கைக்கிளைப்பாற்படுத்தினும் இழுக்காகாது. இதனோடொத்ததே, இக்கருத்தமைந்த இப்பாடலெனக் கொள்க.

உறுப்புக்களில் ஏனைய எல்லா உறுப்புக்களினும் தலைசிறந்தது கண். கண்ணின்றேல் ஒருவனுக்குக் காட்சியின்பம் இன்றாம். கண்ணே காதலர்க்கு முதற்கண் கூட்டத்தை நிகழ்த்தும் சிறந்த கருவி. இதனானே, வள்ளுவர் தந்த காதலனும்,

[1] 'கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின்'

என்பன். ஆகவே, இக்காதலன், தன் இன்னமர் காதலியின் கண்களையே பாராட்டிக் கூறி, 'நெடுநாட்டத்து அஞ்சனம் முழுதூட்டி.................போதரவிட்டாா' என்றான்.

புரிகுழல் - நெளிநெளியாகக் கருமணல்போல் இலகும் கூந்தல். மடமான் - இளமை பொருந்திய மானைப் போன்றவள்: உவமையாகுபெயர். போதருதல் - வருதல். வர என்னும் பொருளது. உருவு - அழகு. எல்லா அழகினும் தன்னிகரில்லாத் தலைவியாக இருத்தலின், அவள் அழகை மீண்டும் மீண்டும் கூறுவானாயினன். தாயர்: பன்மை. தலைவிக்குப் பெற்றதாய், ஊட்டுந்தாய், பாராட்டுந்தாய் முதலிய பல தாய்மார்கள் உளராதலின், பன்மை வாய்பாடாகக் கூறினான். இவளழகில் கருத்துக் கொண்ட ஆடவர், தம் மனத்தை மீட்க இயலாது, அதே எண்ணமாய் வேறு செயல்களில் கருத்தில்லாது வருத்தமுறுவராகலான், 'அவ் வருத்தத்தை இவ்வாறு இவட்கு அழகு செய்து உண்டாக்கியோர் தம் பகைவரை அழித்தற்குப் படைபோல் இவளை அனுப்பிக் கெட்டொழியச் செய்தார் என்ற கருத்தை உட்கொண்டு 'உலகொடு பகை உண்டோ' என்றான். உலகு - உலகம், உலகில் வாழும் மக்களை இடவாகு பெயராகக் குறிததுச், சிறப்பு நோக்கி ஈண்டு இளமைச செவ்விபடைத்த ஆடவரைக் குறித்து நின்றது, இளமை மிக்க ஆடவர்க்கே இவளைக் காண்டொறும் காண்டொறும் காதல் விஞ்சுதலால் அவர்க்கே துன்பந்தருமாதலால். ஆல்: இசை இன்பம் நிறைக்க வந்த அசைச் சொல். ஓகாரம்: வினைப் பொருளில் வந்த இரக்கக் குறிப்பு. (எ௩)

---

1. திருக்குறள்: கக00.

## மதங்கியார்

### தரவு கொச்சகக்கலிப்பா

பகையின்றிப் பார்காக்கும் பல்லவர்கோன் செங்கோலின்
நகையும்வாண் மையும்பாடி நன்றாடும் மதங்கிக்குத்
தகையும்நுண் இடையதிரத் தனபாரம் அவற்றோடு
மிகைஒடுங்கா முன்இக்கூத் தினைவிலக்க வேண்டாவோ.

(இ - ள்.) பகை இன்றி - எங்கும் பகையென்பதொன்றில்லாமல், பார்காக்கும்-உலகை காத்து வருகின்ற, பல்லவர்கோன் - பல்லவர்குலத் தலைவனான நந்திமன்னனுடைய, நகையும் வாண்மையும் பாடி-ஆட்சியின் புகழையும் வாளின் ஆற்றலையும் பாடலாக அமைத்துப் பாடிக்கொண்டு, நன்று ஆடும் மதங்கிக்கு - சிறப்புறக் கூத்தாடுகின்ற பாணர்மகளுக்கு, தகையும - மெலிகின்ற, நுண் இடை அதிர - சிற்றிடை தளர்ச்சி கொள்ள, அவற்றோடு - அவ் ஆட்டத்துடனே, தனபாரம் மிகை - கொங்கைகள் மிக்க சுமையாக வுள்ளன, ஒடுங்காமுன் - (இவைகளால்) இவளிடை முறிந்துபோகு முன்பு, இக்கூத்தினை விலக்க வேண்டாவோ-இக் கூத்தாட்டத்தை நிறுத்த வேண்டாவா? (நிறுத்தாவிடின் இவள் இடை முறிந்து இறந்துபடுவது உறுதி! விலக்குமின்.)

(வி - ரை.) மதங்கியாரைப் பார்த்துக் காமங்கொண்ட ஒருவன் கூறியது. மதங்கம் - மத்தளம். அதைக் கொள்வோர், மதங்கர். இங்கே மத்தளத்தை அடித்துக் கொண்டு ஆடுகின்ற பெண்ணொருத்திக்குப் பெயராக, மதங்கி எனப்பட்டது. உயர்வுப்பன்மை உருபாகிய ஆர் விகுதி கொடுத்து 'மதங்கியார்' எனப் பட்டாள். ஆகவே, பாட்டுகள் பாடிப் பாட்டுக்கேற்ற தாளமாக மத்தளத்தை முழக்கிக் கொண்டு கூத்தாடுகின்ற இளம் பாணர் பெண்ணைக் குறித்தது. இப் பெண்கள் பண்டைக்காலத்தில் சிறந்த தலைவனையோ மன்னனையோ வீரனொருவனையோ அவன் சிறப்புத் தோன்றப் பாடி ஆடுவது வழக்கம் போலும்! அன்றியும் இக் கூத்தர்மகள் இரு கைகளிலும் வாள் பிடித்து வீசி ஆடித் தலைவன் புகழைப் பாடுவது மரபு என்பர்.

இக் கருத்தைக் கொண்டே குமரகுருபர அடிகளார் தாம் அருளிய மதுரைக் கலம்பகத்தில்,

[1] 'எறிவேல் இரண்டுமென துயிர்சோர உண்டுலவு
இகல்வாள் இரண்டு விசிறு
வெறிசேர் கடம்பவன மதுரேசர் முன்குலவி
விளையாடு மின்கொ டியனீர்'

எனக் காமுகன் மதங்கியாரைக் கண்டு மயங்கிக் கூறியதாக வருதலும் காண்க,

ஈண்டு, அம் மதங்கி, நந்தி மன்னன் ஆட்சிச் சிறப்பையும் வீர மேம்பாட்டையும் பாட்டாக அமைத்துப் பாடிக்கொண்டு கூத்தாடுகின்றாள். அவள் மெல்லியள்! இளமை மிக்க செவ்வியள்! கண்டார் உயிருண்ணும் கண்ணிணையாள்! இவள் ஆடலையும் பாடலையும் அழகையும் கண்டான் ஒரு காமுகன். அவளிடம் தன் நெஞ்சைப் பறிகொடுத்தான்! அவன் "இவள் என்ன இவ்வாறு ஆடுகின்றாள்! இவ் ஆட்டத்தால் முன்பே மெலிந்த இடை முறியாதோ! ஆட்டம் ஒருபால் இவள் இடையை மெலிவித்து வருத்த, இவள் கொங்கைச் சுமை கீழே வளைத்துச் செல்ல, இவ்விரண்டாலும் இவளின் இடை முறிந்துபோதல் உறுதி. இதை இங்கு வந்து வேடிக்கை பார்க்கும் மக்கள் பார்த்துக் களிக்கின்றார்களன்றி, 'இடை முறியுமே?' என்று கவலை கொண்டார் ஒருவரையும் காண்கிலேன்! விலக்காது இவ்வாறு வாளா வாயை மூடிக்கொண்டிருந்தால் என்னாகும்,'' எனப் பதறிக் கதறிக் கொண்டு கூறுகின்றான், கழிகாமுகன். இவ்வாறு அமைத்துப், பாட்டிடைத் தலைவன் சிறப்பைக் கூறுதல் கலம்பக உறுப்புக் களுள் ஒன்றாகும்.

இப்பாடல் அன்பின் ஐந்திணையைச் சாராது, கண்டதும் காமங்காழ்க்கொள்ளும் காமுகன் கூற்றாக வருதலால் பெருந் திணையாகும்.

[2] 'பெருந்திணை என்பது பொருந்தாக் காமம்'
என்பது, இலக்கண மரபு ஆகலான்.

'பகை இன்றிப் பார்காக்கும் பல்லவர்கோன்' என்றமையில் நந்தி மன்னன் நாட்டில் பகையென்பதே இல்லாமல் நாடு செழிப்புற மக்கள் இன்புற வாழ்ந்த நிலையைக் குறித்தார்.

நகை - ஒளி என்னும் பொருளது. ஒளியென்றது, அரசனது ஆட்சி செவ்விபெற நடக்கும் புகழைக் குறித்தது. என்னை?

---

1. மதுரைக்கலம்பகம் : கரு.
2. நம்பி அகப்பொருள் :

[1]'உறங்கும் ஆயினும் மன்னவன் தன்னொளி
கறங்கு வெண்திரை வையகம் காக்கும்'

என வரும் திருத்தக்கதேவர் உரையானும் அறிக. ஒளி இப் பொருட்டாதலை, [2]'உண்ணான் ஒளிநிறான் ஓங்குபுகழ் செய்யான்' என்னும் நாலடியார் அடியானும் அறிக.

வாண்மை: வாள் + மை—வாண்மை, வாளினது தன்மை. மை, தன்மை (இயல்பு)ப் பொருளுணர்த்தும் விகுதி. வாளினது தன்மை, தமவும பிறவும் ஒப்பநாடி ஒறுத்து அறத்தைக் காக்கும் தன்மை. இதனானே பண்டைச் சான்றோர் வாளின் மேலும் வேலின் மேலும் வில்லின் மேலும் மற்றும் பல படைகளின் மேலும் வைத்து அரசர், வீரர் பெருமைகளை விளக்குவாராயினர்.

[3]'திருந்துவேற் குமணன்'

[4]'வேலினும் வெய்ய கானம்'

எனவும் வருவன காண்க. வாளின் தன்மையைக் கம்ப நாடரும் வாண்மையென்றே கூறும் தன்மை கொண்டும் அறியலாம்,

[5]'நாண்மை யேயுடை யார்பிழைத் தால்நகு
வாண்மை யேபெற்ற வன்திறல் ஆடவர்'

என்பது காண்க.

தகை - மெலிவு. அதிர்தல் - தளர்தல். மிகை - மிகுதி. இங்கே சுமை, பெரும்பாரம் என்னும் பொருளில் வந்தது. ஓடு: மூன்றனுருபு. ஈண்டு உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது, இவளின் ஆட்டத்துடன் ஒன்றாகக் கொங்கைகளின் பாரமும் இணைந்து இவள் இடையை முறித்தற்குத் துணையாக இருத்தலான். உடனிகழ்ச்சிப்பொருள்கள்: ஆட்டமும், கொங்கைப் பாரமும். ஒடுங்குதல் - முறிதல்; தொலைந்துபோதல் என்னும் பொருளது.

இடை முறிதலைத் திருவள்ளுவர் காட்டும் காதலனும்,

[6]'அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை'

என்று கூறுவது, இதனோடொத்த கருத்தாதல் அறிக. (எச)

---

1. சீவக சிந்தாமணி: 2. நாலடியார்:
3. புறம்: கசுரு. 4. பட்டினப்பாலை: ௩00.
5. கம்பராமா. பால. தாடகை வதை:
6. திருக்குறள்: கககரு.

*செவிலி, நற்றாய்க்கு அறத்தொடுநிற்றல்*

**கலிநிலைத்துறை**

வேண்டார் எண்ணும் வேந்தர் பிராற்கே மெய்யன்பு
பூண்டாள் நங்காய் அன்றிவள் என்றால் பொல்லாதோ
மூண்டார் தெள்ளாற் றுள்ளே மூழ்க முனிவாறி
மீண்டான் நந்திக்கு என்மகள் தோற்கும் வெண்சங்கே.

(இ - ள்.) *நங்காய் - பெண்களிற் சிறந்த தாயே! மூண்டார்-பகையால் மூளப்பெற்றுவந்த அரசர்கள், தெள்ளாற்று உள்ளே மூழ்க - தெள்ளாறென்னுமிடத்தில் நிகழ்ந்த போரில் மடிந்தொழிய, முனிவு ஆறி - (அவர்பால் கொண்ட பகைச்) சினந்தணிந்து, மீண்டான் - (வெற்றி கொண்டு அப்போர்க்களத்தினின்று) மீண்டு வந்தவனாகிய, நந்திக்கே - நந்தி மன்னனுக்கே, என் மகள் வெண்சங்கு தோற்கும் - என் புதல்வியாகிய நம் செல்வி தன் வெண்ணிறச்சங்கு வளையல்களை இழந்து வெறுங்கையளாய் நின்றாள், வேண்டார்-பகைவர்கள், எண்ணும்-நினைந்து அச்சங்கொள்கின்ற, வேந்தர்பிராற்கே - மன்னர் மன்னனாகிய நந்தி ஏந்தலுக்கே, அன்று - முன்பே, இவள் மெய்யன்பு பூண்டாள் என்றால் - இவள் உள்ளன்பு கொண்டிருக்கிறாள் என்று கூறினால், பொல்லாதோ - குற்றமாகுமோ? (உண்மையைக் கூறுவது தவறா? ஆதலால் விரைவில் நந்தி மன்னனுக்கே இவளை மணம் புணர்த்துதலே நன்மை.)*

(வி - ரை.) *தோழி, செவிலிக்கு அறத்தொடுநிற்ப, செவிலி நற்றாய்க்கு அறத்தொடுநிற்கும் துறையில் அமைந்தது இப்பாட்டு. நற்றாய் - பெற்றதாய். அகப்பொருள் நூலார் பெற்ற தாயை இப்பெயரால் வழங்குதல் மரபு. செவிலி - வளர்ப்புத்தாய்.*

*வேண்டார் - விரும்பாதவர்; பகைவர். எண்ணுதல், நினைந்து நினைந்து அச்சங்கொள்ளுதல். வேந்தர்பிரான் - அரசர்களில் உயர்ந்தோன். அன்றி மன்னர் மன்னன் என்றலுமாம். மெய்யன்பு - உள்ளன்பு. அன்புடையார், தம்மால் அன்பு கொள்ளப் பட்டாரை நினைதோறும் காண்டோறும் உள்ளம் நெக்குருகி நிற்பர். அவர் மறவாது இடையறாமல் நினைவு கூர்வர். இதனை,*

[1]'அன்பிற்கும் உண்டோ அடைக்கும்தாழ் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும்.'

என்பர், வள்ளுவப் பெருமகனார். மணிமொழி வேந்தரும் இறைவனை [2]'ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த இன்பமே என்னுடை அன்பே' என, விளிப்பர்.

இத்தகைய காதலர்களிடத்தில் உள்ளங்கனிந்து ஊற்றெடுத் தொழுகுவதே அன்பு. இவ்வன்பு கட்டற்ற ஒன்று; அதனால் இவ்வன்பு தெய்வீகச் சிறப்புப் பெற்றதென ஆன்றோர் போற்றி உரைப்பர். ஆகலான், இவ்வன்பின் நிலையை 'மெய்யன்பு பூண்டா' ரென்று விளக்கினள். இதனைப் பரஞ்சோதி முனிவர் இறைவன்பால் வாதவூரடிகளுக்கு முறுகியெழுந்த பேரன்பை உணர்த்துதற்கு உவமங்காட்டும் வாயிலாக இக்காதலியர் இன்ப அன்பையே கட்டுரைப்பது, இவ்வன்பின் பெருமையைப் புலப்படுத்தாநிற்கும்.

[3]'கள்ளக் காதலன் இடத்தன்பு கலந்துவைத் தொழுகும்
உள்ளக் காரிகை மடந்தைபோல் உம்பரைக் காப்பான்
பள்ளக் காரியுண் டவனிடத் துள்ளன்பு பதிந்துகொள்ள.'

என்பது காண்க.

சங்கு - சங்குகளாலான வளையல்: காரியவாகுபெயர். காதல்கொண்ட நங்கையார்க்கு உடல்மெலிய, அதனால் ஏனைய உறுப்புக்களும் மெலிதல் இயல்பு. கைகளும் மெலிதலால் கையிற் கிடந்த வளையல் கழன்று கீழ்விழலாயின. இதை முன்னரே குறிப்பாகக் கூறியும் அதை உண்மையென்று கொள்ளாமல் நற்றாய் வாளா இருந்துவந்தாள்; அதைக் கூறினும் நற்றாய் குற்றமாகக் கருதினள். அதனால் இனிநாட் கடத்திச் செல்வது கூடாது, இஃது உண்மையென்று அறிவுறுத்துதற்கு, நன்கு உணர்ந்து ஆவன செய்யத் தூண்டுமுகத்தால் 'அன்பு பூண்டாள் நங்காய் அன்றிவள் என்றால் பொல்லாதோ' என்றாள். (எ௫)

## தலைவி இரங்கல்

### வெண்டுறை

வெண்சங் குறங்கும் வியன்மாதர் முற்றத்து விடியவேவான்
வண்சங் கொலிப்ப மடவார்கள் விளையாடு மல்லைவேந்தன்
தண்செங்கோல் நந்தி தனிக்குடைக்கீழ் வாழாரின்
கண்சிம் புளியாநோய் யார்மோ கடவோமே

1. திருக்குறள்: எக. 2. திருவாசகம்:
3. திருவிளை, வாதவூரடிகளுக்கு:

(இ - ள்.) வெண்சங்கு உறங்கும் - வெள்ளைநிறம் பொருந்திய சங்கினங்கள் உறங்குதற்கு இடமான, முற்றத்து - தம் வாசலின் முன்னிடத்தில், வான் வண் சங்கு ஒலிப்ப - உயர்ந்த வேலைப்பாடமைந்த சங்குவளைகள் ஒலிட, மடவார்கள் விடியவே விளையாடு - இளமகளிர் இரவு முழுதும் விளையாடல் செய்கின்ற, மல்லை வேந்தன் - மாமல்லபுரத்தின் அரசனாகிய, தண்செங்கோல் நந்தி - யாவவருக்கும் தண்ணருள் சுரக்கின்ற செங்கோற் சிறப்புடைய நந்திமன்னனது, தனிக் குடைக்கீழ் வாழாரின் - ஒப்பற்ற வெண்கொற்றக்குடை நிழலின் ஆட்சியிடத்தே வாழாத பகைமன்னர் நாடுபோல், கண் சிம்புளியா நோய் - கண்மூடி உறங்காத நோயினின்றும், யாம் கடவோமே - நாம் கடக்க மாட்டாமல் வருந்துவதானோமே! (இரவும் பகலும் எம் கண்கள் தூங்குகின்றதில்லையே! என்ன செய்வேன்! எவ்வாறு இவ் இரவுப்பொழுதைக் கடப்பேனோ! ஆ! ஆ!)

(வி - ரை.) வெண் சங்கு - வெள்ளைநிற வளைகள். இவை கடலில் வாழும் உயிர்வகைகளில் ஒன்று. இதனால் நெய்தல் நிலந்தோன்றக் கூறினாள். நெய்தல், இரங்கல் துறைக்கு வருவது. இங்கே தலைவி, தலைவனை நினைந்து நினைந்து அவன் பிரிவாற்றாமையால் வாடி, இரவும் பகலும் தூக்கங்கொள்ளாது கழியக் கழியாத காலத்தைக் கருதி வருந்துகின்றாள். வெண் சங்குறங்கும் என்றது, என் தலைவர் தாம் சென்றவிடத்துக் கவலையின்றி உறங்க என, உள்ளுறை தோன்ற நின்றது. அது மாமல்லபுர வீட்டுமுற்றங்களில் கவலையின்றி யாரும் அவைகளின் தூக்கத்தைக் கலைப்பாரின்றித் தாம் விரும்பியவாறு தூங்குதல் குறிக்கப்பட்டது. இதனால் மாமல்லபுர மன்னனான, நந்தி செங்கோல் ஆட்சியில் அஃறிணை உயிர்கள்கூடத் துன்பமின்றி இன்பத்துடன் வாழும் வகையை உணர்த்தி மன்னன் செங்கோல் மாண்பையும் கூறி, அரசன் அறவோன் என்பதைக் காட்டினாள். மடவார்கள், இங்கே பெதும்பைப் பருவ இளம்பெண்கள். இவர்கள் இரவு முழுதும் அச்சமென்ப தொன்றின்றி விளையாடுதல் குறிக்கப்பட்டுளது. இந்நாடு, அஃறிணை உயிர்களும் எம்போன்ற இளமகளிர்களும் களிப்புடன் வாழ, நான் மட்டுமே தூக்கங்கொள்ளாது வருந்துதல் விதியோ! அறமோ? எனத் தலைவி நோவது குறிப்பால் உணர்ந்தின்புறுக.

தான் கண் சிமிட்டாது விழித்தது விழித்தபடியே இருக்கும் தன்னிலையை, தன்னைப்போலவே கணவனைப்பிரிந்து வாழும்

நங்கையரெல்லாம் வருந்துவர்போலும் எனக்கருதியே இங்குத் தலைவி 'கண் சிம்புளியாநோய் யாமோ கடவோமே' எனத் தன் மைப்பன்மையில் கூறினாள்.

சிம்புளித்தல் - கண்மூடுதல். கண்கூட மூட இயலாது விழித்தகண் விழித்தவாறு தூங்காது இருக்கும தன்மையை நோயென்றாள், நோய்போன்று வருத்தஞ்செய்தலான். ஓகாரம் இரக்கப்பொருளில் வந்தது. காதலர்க்குப் பிரிவால் கண்கள் தூங்கா என்பதை.

[1]'வாராக்கால் துஞ்சா வரின்துஞ்சா ஆயிடை
ஆரஞர் உற்றன கண்.'

என்னும் திருக்குறளானும் அறிக. தூங்காதிருக்கும் தன் நிலைக்கு 'நந்தி மன்னன் தனிக்குடைக்கீழ் வாழாரின்' என ஒப்பிட்டுக் கூறி உரைத்தாள். நந்திமன்னன் பகைவர்நாட்டு மக்கள் நந்தி வேந்தன் படை இன்று வருமோ, இரவு வருமோ, பகல் வருமோ இன்னே தான் வந்துறுமோ என, அஞ்சி அஞ்சிக் கண்ணுறங்காது இருப்பர்; அதையொப்ப யாம் இருக்கின்றேமென்று நந்திமன்னன் வீரமேம்பாட்டை விளக்குகின்றாள். பகைவர் நாடு, உறங்காது வருந்தும் என்பதை,

'துஞ்சாக் கண்ண வடபுலத் தரசே'

என்றும்,

'பகைமுக ஊரில் துஞ்சலோ இலளே'

என்றும் வரும் பிறர் உரையானும் அறிக. 'வாழாரின்' என்பதிலுள்ள ஐந்தனுருபாகிய 'இன்' ஒப்புப் பொருளில் வந்தது. (எசு)

## இதுவும் அது

### கலிவிருத்தம்

கடற்கூதிர் மோய்த்த கழிப்பேண்ணை நாரை
மடற்கூறு தோறும் மலிமல்லை கங்குல்
அடற்கூடு சாவே அமையா தவர்வை
திடற்கூறு வேனுக் கேதாவி உண்டோ.

(இ - ள்.) (நெஞ்சே!) கடல் கூதிர் மொய்த்த - கடலினின்று வரும் வாடைக்காற்று மிகுந்த, கழி நாரை - உப்

---

1. திருக்குறள்; ககஎகூ

பங்கழிகளில் வாழுகின்ற நாரைகளானவை, பெண்ணை மடல் கூறுதோறும் - பக்கத்திலுள்ள பனையினது மடற் பாகங்களிலெல்லாம், மலி மல்லை - (அவ்வாடைக் காற்றின் குளிருக்கு அஞ்சிவந்து தங்கி) நிறைந்திருக்கின்ற மாமல்ல நகரிடத்தே, அடல் கங்குல் ஊடு - நிலைத்திருக்கின்ற இவ் விரவுப்பொழுதின் நடுவே, சாவே அமையாது - இறப்பே வாராமல், அவர் வைதிடற்கு - (பழி தூற்றிப் பேசுகின்ற) அந்த ஊர்மக்கள் வைவதற்கே, ஊறுவேனுக்கு - தெளிந் திருக்கின்ற எனக்கு, ஆவி உண்டோ - உயிர் இருக்கின் றதோ? ஏது - இருப்பின் அஃதெங்கே? (இரவு முழுதும் தூங்காதிருப்பதிலேயே ஆவி போகுமன்றோ! பற்றாக் குறைக்கு ஊரார் பழி தூற்றுகின்றனர்! அதனாலும் உயிர் போயிருக்கலாம்! உயிர் இருப்பின் அஃதெங்கே ஒளித் திருக்கின்றது! கூறுக.)

(வி - ரை.) தலைவனைப் பிரிந்து ஒருநாள் எழுநாள்போல் கழிக்கும் காரிகைக்கு, இரவு முழுதும் பகலிலும் கண்கள் உறக் கங்கொள்வதில்லை, அதனால் நாணையும்விட்டாள்; தன்னையும் மறந்து துறந்து தத்தளித்தாள்; அவள் தனக்குத் துணையாகத் தன்னைவிட்டு நீங்காத நெஞ்சொடு பகர்கின்றாள்.

'ஆ! இன்றிரவு எளிமையானதன்று! மற்ற இரவுகளிலும் கொடுமையானது! இது வாடையோடு சேர்ந்து வளர்வதாக இருக்கின்றது! அதினும் இந்நகரமோ மிகத்துன்பந் தருவதாக இருக்கின்றது! இதற்கு மல்லையென்று பெயர். இது பெயருக் கேற்ப மற்போரே புரிகின்றதெனலாம். இதோ பனைகள் ஆங் காங்கே நிற்கின்றன; அதன் மடல் (மட்டை)களின் நடு இடம் நுனி இடம் அடியிடம் எங்கும் நாரைகள் தங்கியிருக்கின்றன! ஏன்? கடலில் தோன்றிக் கிளர்ந்தெழுந்து வருகின்ற குளிர்ந்த வாடையின் குளிர் தாங்கமாட்டாமையால்! இக்கொடிய கங்குற் போதில் தூங்காமல் இருக்கின்ற எனக்கு ஆவி உண்டோ! இல்லையென்பதே உறுதி. உயிர் இருக்குமானால் உயிர்க்குணங்க ளான உண்ணல் உறங்கல் முதலிய செயற்பாடுகள் இருக்கு மன்றோ? இல்லையே! ஒருகால் வன்மையுடைய உயிராக இருக்குமானால் இத்துன்பங்களையும் பொறுத்துக்கொண்டு வாழ லாம்! ஆனால் ஊர்மக்கள் பழிதூற்றுகின்றார்களே! அப் பழிக்கு அஞ்சியாவது உயிர்போயிருக்கலாம். அன்றி, அதிலும் நிலைத்திருக்குமேல் தம்வாயால் வைதுவைது பழிக்கின்றார்களே அதனாலாவது உயிர்போயிருத்தல்வேண்டும்! உயிர் இருப்பதற்கு

அறிகுறி, நல்லுணர்ச்சி, மானம் முதலியன! இவைகளில் ஒன்றும் இன்றேல் அஃது உயிருள்ள உடலாகாது; வெற்றுடம்பே! எனவே, எனக்கு உயிரே இல்லை! உயிர், இத்துன்பம் பொறுக்கலாற்றாது உடலைவிட்டு ஏகிவிட்டது. அஃதொன்றிருக்குமேல் அவ்வுயிர் எங்கே? அஃது எவ்விடத்தில் ஒளிந்துகொண்டிருக்கின்றது? நீ காணின் இருக்குமிடத்தைக் கூறு' என்று தன் நெஞ்சைக் கேட்கின்ற முறையில் அமைந்தது இப்பாடல்.

இப் பாட்டின் கருத்து, உண்ணுமலும் உறங்காமலும் இருக்கின்ற வருத்தம் ஓர்பால், இரவே துணையாக ஏக்கங்கொண்டிருக்கும் நிலை ஒருபால், ஊரார் பழிதூற்றல் ஒருபால், அவர் வைவது ஒருபால், இவ் இக்கட்டுகளுக்கு உள்ளாகி வருந்துதலைவிடச் சாதல் இனிது என்பதாம்.

திருவள்ளுவர் ஈகைப்பண்பு இல்லாதவர்களை நோக்கிக் கூறுவது இதனோடொத்ததாதலால் அதனை ஈண்டுக் காட்டி மகிழ்தல் சாலும்! அவர் கூறுகின்றார்:

இரவலர், உலோபி ஒருவன் முன்வந்து நிற்குமுன்பே 'பாவி நம்மிடம் பணங்கேட்க வந்துவிட்டானே,' என்று கருதும்போதே உலோபி உயிர் போய்விடுகின்றது! இரவலர் 'எமக்குப் பணம் தா' என்று கேட்டால் 'உயிர் அவர்க்கு எங்கே ஒளிந்திருக்கின்றது?' என்று நம்மையே கேள்வி கேட்கின்றார்.

[1]'கரப்பவர்க் கியாங்கொளிக்கும் கொல்லோ இரப்பவர்
சொல்லாடப் போஒம் உயிர்'

என்பது, அவ் உயிரோவியம். இதனால் இப்பாடல் காமமிக்க கழிபடர் கிளவித்துறையாகக் கொள்க

[2]'கேட்குந போலவும் கிளக்குந போலவும்'

எனவரும் நன்னூல் நூற்பாவில், கேட்காத நெஞ்சைக் கேட்பது போல் விளித்துக் கூறினாள். அன்றித் தோழிபால் கூறினாள் எனக் கொள்ளலுமாம்.

[3]'உறுப்புடை யதுபோல் உணர்வுடை யதுபோல்
மறுத்துரைப் பதுபோல் நெஞ்சொடு புணர்த்தும்
சொல்லா மரபி னவற்றொடு கெழீஇச்
செய்யா மரபின் தொழிற்படுத் தடக்கியும்.'

எனவரும் பொருளியல் நூற்பாக் கருத்தாற் கொள்க. (எஎ)

---

1. திருக்குறள் : க0எ0. 2. நன்னூல் : சூ0.
3. தொல், பொருள் : கக௯.

## தோழி கூற்று

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

உண்டிரையின் செங்கழுநீர் இலஞ்சி மாடே
ஒண்பொழிலில் சண்பகத்தார் தடவி ஓடித்
தண்டலையில் பூங்கமுகம் பாளை தாவித்
தமிழ்த்தென்றல் புகுந்துலவும் தண்சோ ணாடா!
விண்தொடுதிண் கிரியளவும் வீரம் செல்லும்
விடேல்விடுகு! நீகடவும் வீதிதோறும்
திண்தறுகண் மாத்தொழுத பாவை மார்க்குச்
செங்கோலன் அல்லையோ நீசெப் பட்டே.

(இ - ள்.) இலஞ்சி மாடு - தடாகங்களிடத்துள்ள, செங்கழுநீர் திரையின்உள் - செங்குவளைகளின் மலரும் பருவப் பேரரும்பினிடத்தும், ஒண்பொழிலில் - இயற்கை யழகுடைய சோலைகளில் நிறைந்துள்ள, சண்பகத்தார் - சண்பக மலர்களிடத்தும், தடவி - மேலே சேர்ந்து, ஓடி - சென்று, தண்டலையில் - மற்றுமுள்ள சோலைகளிடத்தி லுள்ள, பூ கமுகம் பாளை தாவி - அழகிய கமுகின் பாளை களினும் மோதிக்கொண்டு, தமிழ்த்தென்றல் - இனிமை தரும் தென்றற்காற்றானது, புகுந்து உலவும் - நகரிடங் களிலெல்லாம்போய்ச் சென்றுசென்று உலாவித்திரி கின்ற, தண் சோணாடா - வளமிக்க சோழநாட்டுக்குரி யோனே! விண்தொடு திண்கிரி அளவும் - வானளவும் உயர்ந்துள்ள வலிமைமிக்க வடவேங்கட மலையுள்ள எல்லை யளவும், வீரம் செல்லும் விடேல்விடுகு - தன் வீரச்சிறப் புச்செல்ல ஆள்கின்ற விடேல் விடுகு' என்னும் பட்டத்தை யுடையோனே, வீதி தொறும் - எல்லாத் தெருக்களினும், நீ கடவும் - உலா வருதற்காக நீ ஏறிக்கொண்டு செலுத்து கின்ற, திண் தறுகண் மாதொழுத - வலிமையுடைய அஞ் சாமையுடைய ஆண் யானையைக் கண்டு வணங்கிய, பாவை மார்க்கு - பாவையையொத்த இவ் இளமங்கையார்கட்கு மட்டும், செங்கோலன் அல்லையோ - கொடுங்கோல் செலுத்

தும் மன்னனே, நீ செப்பட்டு - நீயே நீயே கூறுவாயாக. (நீ செங்கோலனாக இருந்தால், இவர்கட்கு நன்மையன்றோ செய்தல் வேண்டும், இவர்களின் ஆடைகளையும் வளையல் களையும் கவர்ந்துகொண்டு செல்வது செங்கோல்முறை யாகுமா?)

(வி - ரை.) நந்தி மன்னன் பவனிகண்டு தொழுத மங்கை யர்கள் தம் நாணோடு கலைகளும் சங்கு வளையல்களும் கீழே நழுவி விழக் காதலால் திரிந்தமைக்கு வருந்தித் தோழியானவள், மன்ன னிடம் குறைகூறி முறைவேண்டுகின்றாள்.

'நந்திமன்னா! இனிய தென்றற் காற்று தடாகங்களில் புகுந்து, அங்கு வளர்ந்து செழித்துள்ள செங்கழுநீரின் மலரும் பருவப் பேரரும்புகளைத் தடவி, அதன் மணத்தை அள்ளிக் கொண்டும், சண்பகக்காவில் சென்று அதன் மலர்மணத்தைக் கவர்ந்துகொண்டும், கமுகஞ்சோலையில் நுழைந்து, கமுகின் பாளையைத் தோய்ந்து, அதன் இன்பமணத்தைக் கொள்ளை கொண்டும் நகர்களில் வந்துவந்து உலாவி இன்பந்தருகின்ற வளப்பமிக்க சோழநாட்டுக்கு வேந்தே! 'விடேல்விடுகு' என்னும் அரும்பெரும் பட்டம் பெற்றோய்! உனது அறமுறை தவறாச் செங்கோல்முறை, வடக்கே வேங்கட மலையளவும் சென்று நிலவு கின்றது! இதனால் எங்கும் போகிய இசை பெரிதாக இருக்கின் றது! ஆனால் நீ உலாவருங்கால் ஏறிச்செலுத்துகின்ற யானையை யும் உன்னையும், கண்டு வணங்குகின்ற பாவையனைய பண்புடைய மகளிர்கட்குமட்டும் அறமுறை திறம்பிய கொடுங்கோலனாக இருக்கின்றாயே! இவர்கட்குச் செங்கோலனல்லையா? இவர்களின் நாணும் நிறையும் ஆடையும் வளையும் கவர்ந்துகொண்டு நீ ஓடு வதானால் இஃது அறமா! செங்கோல் மாண்பா! இது நீரொழு கப் பாலொழுகாவாறாகவன்றோ இருக்கின்றது? இதன் உண் மையை ஒளியாது கூறு' என்று முறையும் நிறையும் வேண்டி முறையிடுகின்றாள், அன்புடைத்தோழி.

[1]'சீரொழுகு செங்கோற் செழியற்கே தக்கதோ
நீரொழுகப் பாலொழுகா வாறு'

[2]'கிள்ளி, முறைசெயும் என்பரால் தோழி—இறை இறந்த
அங்கோல் அணிவளையே சொல்லாதோ மற்றவன்
செங்கோன்மை செந்நின்ற வாறு'

1. 2. முத்தொள்ளாயிரம்: ருசு; கூ௩.

எனவரும் முத்தொள்ளாயிரத் தலைவியர் கருத்தும் இதனோ டொத்த தன்மையாக இருத்தல் காண்க.

செங்கழுநீர் உள்திரையில் எனக்கூட்டுக. உள்திரை - உள் ளிடத்தே திரைந்திருப்பது. திரைதல் - சுருளல், அரும்புகள் மலருமுன் இதழ் சுருண்டிருப்பது இயற்கை. அவ்வரும்புகள் பருவம் முதிர்ந்து செவ்வி வந்தவுடன் அதனுள்ளிருக்கும் தேன் பெருகி விம்ம மலர்கின்றது; அன்றி வண்டுகள் தேனுண்ண அவைகளை நெகிழ்சகின்றன; அவை மலர்கின்றன; மணங் கமழுகின்றன; இம்முறை நோக்கிச செங்கழுநீரின் மலரும் பருவப் பேரரும்பை 'உண்திரை' என்றார். உள் + திரை = உட் டிரை, பாட்டின் இசை எதுகைநோக்கி வல்லெழுத்து உண்திரை என மென்மையாயிற்று, சுவை இன்பம் பெற.

புனலோடாகிய சோணாடு, நீர்வளனும் நிலவளனும் சிறந்தது. அதற்குக் காரணம் பொய்யா வானம் புதுப்புனல் பொழிதலும், காவிரி நற்றாய் வளஞ்சுரந்தூட்டி உயிர்களை வளர்த்தலுமாம். இந்நாட்டு வளத்துக்கு ஏற்ற கருவிகளாய இலகி இன்பந்தருவன, சோலையும், தடங்களும், இளமரக்காக்களும், தண்ணடைப் பாஙகு களுமாம். இத்தகைய நாட்டின் வளத்தையும், வேனிற்கால விருந்தயரும் தென்றலின் சிறப்பையுங்கூறிப் பாட்டுடைத் தலை வனாகிய நந்திப் போத்தரையனின் தன்னிகரில்லாத் தனிவீர மேம்பாட்டையும் தோழி கூறுவதாக ஆசிரியர் அமைத்துக் காட்டுகின்றார். இங்கே தென்றற் காற்று, தடாகத்தில், இயறகை யழகுடைய பல்வகை மலர்ச்சோலைகளில், கமுகஞ்சோலையில் தடவித் தாவிச்செல்கின்றது. அவைகளிலுள்ள மணங்களையெல் லாம் திரட்டிக்கொணர்ந்து இன்பச செவ்விகொள்ளும் இள மகளிர்க்கும் ஆடவர்க்கும் இன்பத்தைச சொரிகின்றது. இதன் கருத்தோடொப்ப, பரஞ்சோதி முனிவார், தென்றலை, கலைகள் தேரும் அறிஞனுக்கு ஒப்பாக உரைத்து மகிழ்கின்றார்.

[1]"பொங்கரின் நுழைந்து; வாவி புகுந்துபங் கயந்துழாவி;
பைங்கடி மயிலை முல்லை மல்லிகைப் பந்தர்தாவி;
கொங்கலர் மணங்கூட் டுண்டு; குளிர்ந்துமெல் லென்று; தென்றல்
அங்கஙகே கலைகள்தேரும் அறிவன்போல் இயங்கும் அன்றே'

என்பதது.

ஆசிரியர் இளங்கோவடிகள் சிலம்பின் வேனிற்காதையில் தென்றலைக் கோவலனுக்கு ஒப்பாக்கிக்கூறி அவன், வறுமொழி யாளரொடு வம்பப் பரத்தரொடு, கழிகாமுகரைத் திரிதலைக் கண்டித்துக் கூறுமிடத்து,

---

1. திருவிளையாடல், தருமிக்குப் பொற்: கக.

[1]'குரல்வாய்ப் பாணரொடு நகரப் பரத்தரொடு
திரிதரு மரபிற் கோவலன் போல
இளிவாய் வண்டினொடு இன்னிள வேனிலொடு
மலய மாருதம் திரிதரு மறுகு'

எனக் கூறுவதும் மகிழ்ற்பாலன. அன்றியும் இத்தென்றல் இன்பத்துக்குரியதென மற்றோரிடத்தில் இவரே,

[2]'மலயத் தோக்கி மதுரையில் வளர்ந்து
புலவர் நாவிற் பொருந்திய தென்றல்'

என்பர். ஆகவே,

இங்கே தென்றலென வாளா கூருது 'தமிழ்த்தென்றல்' என்ருர். தமிழ் என்ற சொற்கு இனிமையென்னும் பொருளதாம். இவ்வினிமை பற்றியே என்றுமுள நம் இயற்றமிழுக்கு, தமிழென்றே பெயரீந்தனர் நம் பண்டைச்சான்ருேர். இதனுனே நாட்டுக்கவி பாரதியாரும், இவ்வினிமை பற்றிச்,

[3]'செந்தமிழ் நாடென்னும் போதினிலே—இன்பத்
தேன்வந்து பாயுது காதினிலே'

என்ருர். 'தமிழ் தழீஇய சாயலவர்' என்னும் சீவகசிந்தாமணிச் சொற்ருெடர்க்குப் பொருளுரைத்த ஆசிரியர் நச்சினுர்க்கினியர், தமிழ் என்ற சொற்கு இனிமையென்று பொருள் விரித்ததும்,

[4]'பொன்பாற் பொலிந்த விரையல்லி
புல்லிப்பொலிந்த பொலந்தாது
தன்பால் தழுவும்குழல் வண்டுதமிழ்ப்
பாட்டிசைக்கும் தாமரையே'

என்றவிடத்து, தமிழ் இவ் இனிமைப்பொருள்தருதலும் அறிக. அதனுல், தமிழ் என்ற சொற்கு ஈண்டு இனிமை எனப்பொருள் குறித்தாம். மா என்பது விலங்குகளின் பொதுப்பெயராயினும் 'திண்தறுகண்' என ஈரடைகள் வந்தமையால் ஆண்யானை யெனக் கூறப்பட்டது.

பாவைபோல் எல்லா அழகும் அமைந்த மங்கையரைப் பாவையென்றது ஆகுபெயர். செப்பட்டு - செப்பு : கூறு என்பதாம். அடுவும், ஏயும் அசைபோல் வந்த துணைசசொற்கள். ஒரு சொல்லின் நீர்மைப்பட்டு நின்றன. (எஅ)

1. 2. சிலப். கா : உரு - கூ. ரு : உ00-ச. 2. பாரதியார் பாடல்: 3. சீவகசிந்தாமணி : 4. கம்பராமா :

## தோழி, தலைவியின் உருப்புநலனை எழுதுதல் அரிதெனல்

**அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்**

பட்ட வேந்தர்தம் பூணெடும் பாவைமார்
  நாண்நெடும் தெள்ளாற்றில்
வட்ட வெஞ்சிலை நாணிடக் கழித்தவன்
  மல்லையின் மயிலன்னாள்
விட்ட கூந்தலும் விழியும்நன் முறுவலும்
  நுதல்மிசை இடுகோலம்
இட்ட பொட்டினோ டிளமுலைப் போகமும்
  எழுதவும் ஆகாதே.

(இ - ள்.) (தலைவ!) *பட்ட வேந்தர்தம் பூணொடும்* - பட்டம் பெற்றவரான அரசர்களின் மணிமுடியோடும், *பாவைமார் நெடுநாணும்* - அவர் தம் மனைவிகளின் நீண்ட மங்கலக் கயிற்றையுடைய தாலிகளும், *தெள்ளாற்றில்* - தெள்ளாற்றில் நிகழ்ந்த போர்க்களத்திடத்தே. *வட்ட வெம்சிலை* - வட்ட வடிவத்தையுடைய கொடுமையுடைய வில்லில், *நாண் இட* - நாண்பூட்டி வளைத்தலினால், *கழித்தவன்* - அறுத்தொழித்த பெருவீரனாகிய நந்தி மன்னது, *மல்லையின் மயில் அன்னாள்* - மாமல்லபுரத்தில் வாழுகின்ற மயிலையொத்தவளாகிய இத்தோழியினுடைய, *விட்டகூந்தலும்* - தொங்குகின்ற கூந்தலையும், *விழியும்* - கண்களையும், *நல் முறுவலும்*-அழகிய பற்களையும், *நுதல்மிசை* - நெற்றியிடத்தே, *இடுகோலம் இட்ட* - பொருந்திய அழகுடன் வைத்துள்ள, *பொட்டினொடு* - குங்குமப்பொட்டுடன், *இளமுலைப்போகமும்* - இளமைபொருந்திய கொங்கைகளின் பெருக்கத்தையும், *எழுதவும் ஆகாது* - (சொல்லுதலோடு) கிழியில் எழுதிக்கொள்ளவும் முடியாது! (இந்நிலையில் நீ எங்ஙனம் மடலேறுவது? இவள் உருவை எழுதுவது அரிது; உன் தகுதிக்கு மடலேறுவதும் சிறந்ததல்ல; அதை மறந்து விடுக.)

(வி - ரை.) தலைவியால் இன்பந்துய்த்த காதலன், காதலியைத் தன்னோடு உடன்புணர்த்தவேண்டித் தோழியால் குறை நயப்புக்கூறினானாக. அவள், இவன் மடலேறினால், பெருந்துன் பத்துக்கிடனாகும் எனக் கருதினளாய், 'தலைவ! நீ மடலேறத் துணிவது சிறந்ததல்ல; அஃது எளிமையான செயலுமன்று; பனங்கருக்குகளால் குதிரை உருவமைத்து, எருக்கு பூளை ஆவிரை முதலிய அணிதற்கொவ்வா மாலைகளணிந்து, இவளின் உருவைத் தடித்த துணியில் எழுதிக் கையிற் பிடித்துக்கொண்டு, அதைப் பார்த்தவண்ணம் இரவும் பகலுமன்றோ தூங்காது, உண்ணாது தவங்கிடத்தல்வேண்டும்! மற்றவற்றையெல்லாம் நீ எளிதில் செய்துவிடலாம்; இவளோ நந்தி மன்னனுக்குரிய மாமல்ல நகரில் வாழ்கின்ற மயில்போன்ற சாயலாள்; இவளின் தொங்க விட்ட கூந்தலையும், கண்களையும், நல்ல பற்களையும், நெற்றியில் இட்டுள்ள குங்குமப்பொட்டையும், இளமைபொருந்திய கொங்கைகளின் பெருக்கத்தையும் அவைகளின் அழகு சிறிதும் குறையாவண்ணம் எழுத உன்னாலும், ஒவிய வல்லுநர்களாலும் இயலாதே! ஆதலால் இம்முயற்சியை விட்டுவிடுதலே நன்று. என்று கூறித் தலைவனை மடலேறலாகாதெனத் தடுக்கின்றாள்' இதனை அகப்பொருள் நூலார் 'அவயவம் எழுதல் அரிதென விலக்கல்' என்றும் துறைப்பாற்படுத்துவர்.

இம்மடலேறல், இயற்கைக்காதலின்றிச் செயற்கையாக இயையச்செய்யும் முயற்சியாதலால், தொல்காப்பியர் போன்ற தொல்லாசிரியன்மார், '**பெருந்திணை**' எனப் பெயரமைப்பர்.

[1]'பெருந்திணை என்பது பொருந்தாக் காமம்'

என்பர், அகப்பொருள் விளக்க ஆசிரியர். ஆனால் தொல்காப்பியர்,

[2]'ஏறிய மடல்திறம் இளமை தீர்திறம்
தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்
மிக்க காமத்து மிடலொடு தொகைஇத்
தொக்க நான்கும் பெருந்திணைக் குறிப்பே'

என நால்வகைப்படுத்துப் பெருந்திணைக்கு இலக்கணங் கூறுவர்.

இதில் 'ஏறிய மடல்திறம்' என, முதற்கண் கூறுவதே இம் மடலேறல். இதில் உறுப்புநலனை எழுதல் அரிதென விலக்கும் துறைக்கு,

---

1. நம்பி அகப்பொருள் விளக்கம் :
2. தொல். பொருள். அகத்திணை : ருக.

[1]'தொடையேய் எருக்கென்பு நீயணிந்த தாலென்னை சூல்வளையூர்
மடையேய் வயல்தஞ்சை வாணன்வெற் பாமல ரோன்வகுத்த
படையே நயனம் படைத்தபொற் பாவை படியெடுக்க
இடையே தெனத்தெரி யாதுரை ஆணி இடஅரிதே'

எனவரும் தஞ்சைவாணன் கோவைப் பாடலானும்,

[2]'..................
கொந்தார் குழல்மணி மேகலைநூல் நுட்பங் கொள்வதெங்ஙன்
சிந்தா மணியும் திருக்கோ வையுமெழு திக்கொளினும்
நந்தா உரையை எழுதவெவ் வாறு நவின்றருளே'

எனவரும் திருவெங்கைக் கோவைப் பாட்டானும் அறிக.

பட்டவேந்தர் - முடிசூடி அரசாளும் மன்னர்; அன்றிப் பல்வகை வீரத்தால், கொடையால் புகழால் பல்வகைப் பட்டங்கள் கொண்டவர் என்றலுமாம். அல்லது, படுதல் - சாதல், ஆகலான் இறந்துபோன மன்னர் என்று பொருள் கூறலுமாம். பூண் - பல்வகை அணிகளை உணர்த்துமாயினும் அரசர்கள் சிறப்பாகப் பூண்பதற்குரிய சிறப்புப்பற்றி மணிமுடி எனப் பொருள்கூறப் பட்டது. நந்தி மன்னன் வில்லில் நாணேற்றினமையால் அரசர்களின் மணிமுடியோடு கூடிய தலைகளும் அவர்தம் இல்லக் கிழத்தியர்களின் கழுத்திலணிந்துள்ள மங்கலநாண்களும் கழிந்தன என நயம்பெறக் கூறினுள். இதனால் நந்தியின் வீரம் விளக்கப் பட்டது. மயில் - மயிலினது சாயல், தோற்றம். நெடும் என்பதிலுள்ள உம்மை எண்ணும்மையாக நாண் என்பதனோடு பிரித்துக் கூட்டப்பெற்றது. வட்டம் - வளைவு, வில்லிற்கு வளைவே சிறப்பு.

[3]'சொல்வணக்கம் ஒன்னார்கண் கொள்ளற்க வில்வணக்கம்
தீங்கு குறித்தமை யான்'

என்னும் வள்ளுவர் வாய்மொழியில் வில்லின் வணக்கத்தைக்கூறி அதன் சிறப்பு, வளைதலே எனக் காட்டியதறிக.

நாண் - ஈரிடத்தும் கயிறு என்ற பொருளில் வந்தது. இளமுலைப்போகம் - என்பதில், போகம் அதன் வளர்ச்சியைக் குறித்தது. எழுதவும் என்பதிலுள்ள உம்மை, இறந்தது தழீஇய எச்சம் ஆதலால் சொல்லவும் என எச்சம் விரித்துக் கூறப் பட்டது. (எக)

1. தஞ்சைவாணன் கோவை : க0ச.
2. திருவெங்கைக் கோவை : க0எ. 3. திருக்குறள் : அ௨எ.

### கலிநிலைத்துறை

[1]ஆகாது போக மயில்வினைத் தகன்ற லவன்கை
போகாத சங்கும் அருளார் என்ற போதுவண்டோ
... ... ... ... ... ... ...
... ... ... ... ... ... ... (அ0)

*தோழி, தலைவியின் நிலைகண்டு வருந்தியுரைத்தல்*

### கட்டளைக் கலித்துறை

[2]காவி அனந்தம் எடுத்தான் மதன்கைக் கரும்பெடுத்தான்
மேவி யளந்த வனம்புகுந் தானினி வேட்டஞ்செய்வான்
ஆவி அனந்தமுண் டோஉயிர் தான்விட் டகலுமுன்னே
தேவியல் நந்திக்கங் காரோடிச் செய்குவர் விண்ணப்பமே.

(இ - ள்.) (நெஞ்சே!) மதன் - மன்மதனானவன், கரும்பு கை எடுத்தான் - தன் கரும்புவில்லினைத் தன் கையில் எடுத்துக்கொண்டான், அனந்தம் வனம் - எண்ணில்லாத சோலைகள்தோறும், மேவி புகுந்தான் - போய் நுழைந்தான், (அங்கேயுள்ள மா அசோகு முல்லை முதலிய மலர்களைப் பறித்துக்கொண்டு அங்குள்ள வாவியில்) காவி - குவளை மலர்கள், அனந்தம் எடுத்தான் - அளவிறந்தவைகளைப் பறித்துக்கொண்டான், இனி - இதற்குமேல், வேட்டம் செய்வான் - (காதல்கொண்ட மங்கையர்மீது அம்மலரம்புகளை வில்லில் தொடுத்து எய்து) அவர் உயிர்களைக் கொள்ளைகொள்வான்,) (இனி என் தோழியையும் எய்து துன்புறுத்துவான்,) ஆவி அனந்தம் உண்டோ - அவட்கு உயிர் பலவா இருக்கின்றன? (ஓர் உயிர் இவள் உடலைவிட்டு நீங்கிப் போய்விட்டால் மற்றோர் உயிர் இருக்கின்றதே என்று கருதுதற்கு? ஆதலால் இம் மன்மதன் தான்கொண்ட குவளை மலர்களைக்கொண்டு

---

1. இப்பாட்டுச் சில ஏடுகளில் உள்ளது. பாட்டின் பின் இரண்டடிகள் கிடைக்கவில்லை. பொருள் செறிவின்மையால், இதற்குப் பொருள் எழுதப்பெறவில்லை.
2. இப்பாட்டு சில சுவடிகளில் காணப்படுகின்றது.

எய்து,) உயிர்விட்டு அகலும் முன்னே - இவளது உயி ரானது இவள் உடலைவிட்டுப் பிரிந்துபோகும் முன் னரேயே, தேவு இயல் - தெய்வத்தன்மை பொருந்திய, நந்திக்கு - நந்தி மன்னனுக்கு, அங்குஓடி - அவன் வீற்றிருக் கின்ற அந்த மாமல்லபுரத்துக்கு விரைந்து ஓடிப்போய், விண்ணப்பம் செய்குவர் ஆர் - தெரியப்படுத்துவோர் யாரிருக்கின்றனர்? (ஒருவருமில்லையே! என் செய்வேன்! விரைந்து அவனுக்குக் கூறினால், அவன் வந்து இவளுயி ரைக் காத்தருள்புரிவன்! இன்றேல் இறந்துபடுவாளே! அந்தோ!)

(வி - ரை.) நந்தி மன்னனிடம் காதலைப் புந்தியில் வைத்த பொற்கொடி யொருத்தி காதல் கொண்டு விம்ம, அதுகாலை மன் மதன் தன் கரும்பு வில்லை வளைத்து, அதில் குவளை மலரம்பு களைப் பொருத்தி எய்தானாக, அதனால் மயக்கங் கொண்டவளை உயிர்வாழாது இறப்பளே என்று அவள் தோழி தன் நெஞ்சோடு கூறிக் கவல்வதாக அமைந்த கருத்துடையது இப்பாடல்.

மன்மதனுக்குச் சோலைகளே படை வீடு என்பர் பழந்தமிழ் ஆசிரியர். அம்முறையில் மன்மதன் சோலைக்கண்ணுள்ள வாவி யில் சென்று குவளை மலர்களைப் பறித்துக் கொண்டானென்றாள். அவனுக்கு மலர்களே அம்புகள். இதனை, [1]“ஆலைக் கரும்புசிலை ஐங்கணை பூ’ என்பர் புகழேந்தியார். அப்பூக்கள் மா அசோகு முல்லை தாமரை குவளை என்னும் ஐவகையன. இவற்றுள் ஒவ் வொன்றுக்கும் தனித்தனி வெவ்வேறு குணமுண்டு.

[2]“நினைக்கும் அரவிந்தம் நீள்பசலை மாம்பூ
அனைத்துணர்வு நீக்கும் அசோகு—எனைத்துமே
முல்லை கிடைகாட்டும் மாதே முழுநீலம்
கொல்லும்மதன் அம்பின் குணம்’

இதில் குவளை மலருக்கு உயிரைப்போக்கும் கொடியதன்மை யுண்டு. இங்கே மன்மதன் குவளை மலர்களைப் பறித்துக் கொண்டு நின்றானாதலால் இனித் தலைவி இறந்து போவளே என்று தோழி கருதினாள். தான் இங்கிருந்தால் இவள் இறந்து போகாவாறு ஏதேனும் செயலாற்றலாம். இனியாரிடம் சொல்லி நந்தி மன்னனுக்கு விண்ணப்பஞ் செய்வது என்று வருந்தினாள் என்க.

---

1 - 2. இரத்தினச் சுருக்கம்:

வேட்டம் - வேட்டை. விலங்குகளை வேட்டையாடிக் கொல்லுதல்போல் மன்மதனும் மகளிரை வேட்டையாடிக் கொல்வன் என்ற குறிப்புத் தோன்ற 'வேட்டம் செய்வான்' என்றாள்.

ஓர் உடலில் ஒரே உயிர்தான் உளது; இவளை மன்மதன் கொன்றுவிட்டால் வேறுயிரை உடலில்பொருத்திக்கொள்ள மற்றோருயிரைக் காணேனே என்பாளாய் 'ஆவி அனந்தம் உண்டோ?' என்றாள். அனந்தம்-பல என்னும் பொருளது: வடசொல். அரசர்களைத் தெய்வத் தன்மையுடையவர்களாகக் கருதுவது, நம் தமிழர் மரபு. இந் நூலகத்துப் பல்லிடங்களில் இம் மன்னனையே திருமால் அவதாரமாகக் கூறுதல் கொண்டும்,

[1]'முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறையென்று வைக்கப் படும்'

எனத் தெய்வப் புலவரும்,

[2]'அனைவர்க்கும் தெய்வம், இலைமுகப் பைம்பூண் இறை'

எனக் குமரகுருபர அடிகளும்,

[3]'செங்கண்மால் அல்லனேல் தேர்வேந்தர் ஒப்பரோ
அங்கண்மா ஞாலத் தவர்க்கு'

எனப் புகழேந்திப் புலவரும், பிற ஆன்றோர்களும் பரக்கக் கூறுமாற்றானும் அறியப்பெறும். அன்றியும் தெய்வத்தைப் போல் மன்னன், ஒன்றை ஆக்கலும் காத்தலும் அழித்தலும் செய்யும் பேராற்றல் பெற்றவன் ஆகலானும் 'தேவியல் நந்தி' என்றாள் என்க. ஆர் : யாரென்பதன் மரூஉ. விண்ணப்பம் - விளக்கமாக எடுத்துக் கூறுதல். (அக)

### மறம்

#### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

அம்பொன்று வில்லொடிதல் நாண்அறுதல் நான்கிழவன்
அசைந்தேன் என்றே
வம்பொன்று குழலாளை மணம்பேசி வரவிடுத்தார்
மன்னர் தூதா
செம்பொன்செய் மணிமாடத் தெள்ளாற்றில் நந்திபதம்
சேரார் ஆனைக்
கொம்பன்றே நம்குடிலில் குறுங்காலும் நெடுவளையும்
குனிந்து பாரே.

---

1. திருக்குறள் : ருஅஅ. 2. நீதிநெறி விளக்கம் : உஎ.
3. நளவெண்பா.

(இ - ள்.) மன்னர் தூதா - அரசர் வரவிட்ட தூது வனே! அம்பு ஒன்று - அம்பினைக் கொள்ளும், வில் ஒடிதல்-என் வில்லானது ஒடிந்துளது, நாண் அறுதல் - அதன் பூட்டுக்கயிறும் தேய்ந்து போயுளது, நான் கிழவன் - நானே மூப்படைந்தேன், அசைந்தேன் என்றே - தளர்ந்து போயிருக்கின்றேன் என்று கருதியோ, வம்பு ஒன்று குழலாளை - நறுமணம் பொருந்திய கூந்தலாளாகிய என் அரிய புதல்வியை, மணம் பேசி வர விடுத்தார் - திருமணம் பேசி முடிபு செய்தற்கு அம்மன்னர் உன்னை இங்கே வரவிட்டார்கள், (என ஆற்றலும் எங்கள் குலப்பெருமையும் அவர் அறியாரோ?) செம்பொன் செய் - சிவந்த பொன்னால் இயற்றிய, மணிமாடத் தெள்ளாற்றில - அழகிய மாளிகைகளையுடைய தெள்ளாற்று நகரில் நிகழ்ந்த போர்க்களத்தில், நந்தி பதம் சேரார் - எம நந்தி மன்னனுடைய திருவடிகளைப் பணியாத பகை வேந்தர்களுடைய, ஆனைக் கொம்பு அன்றே - போர் யானைகளின் கொம்புகளல்லவா, நம் குடில் - நம்முடைய இச்சிறிய குடிசையிடத்தே, குறுங்காலும் - சிறிய தூண்களாகவும், நெடு வளையும் - நீண்ட வளைச்சட்டங்களுமாகவும் அமைக்கப் பெற்றுள்ளன, குனிந்து பார் - (உனக்கு ஐயமிருந்தால் இங்கே வந்து) தலைகுனிந்து பார்ப்பாயாக.

(வி - ரை.) கலம்பக உறுப்புக்களுள் மறம் என்ப தொன்று. போர் மறவர் பண்பை - வீரத்தை இடையில் வைத்து விளக்குவது நூலாசிரியர் கோட்பாடு. அதனை விளக்குவதே இப்பாட்டு.

மறம் என்பது பண்புப்பெயர். பாண், அரசு, அமைச்சு என்பனபோல அதனதன் பண்பை விளக்காது, பண்பியாக அதனை விளக்கு முகத்தால் கூறுவது சிறப்பு. இவ்வாறு கொள்வது தொல்லை ஆசிரியன்மார் மரபு. இதனை வள்ளுவர் பெருமான், அறப்பெரு நூலில், **இறைமாட்சி, அமைச்சு ஒற்று நன்றியில் செல்வம், உழவு** முதலிய தலைப்புக்கொடுத்து, அவ்வுரிமையுடையார் மேல் ஏற்றிக் கூறுமாற்றால் அறியப்பெறும். அவ்வாறே ஈண்டு மறவர் மறத்தன்மையை மறம் என்ற தலைப்பில் கூறியுள்ளனர்.

இதில் காணப்பெறும் மறமகன், தன் பகை வேந்தர் ஒரு தூதுவனை அனுப்பித் தமக்குப் பெண் கொடுக்குமாறு திருமுகம் தீட்டியதைக் கண்டு வெகுண்டுரைக்கின்றான்.

'மன்னன் தூதனே! என் வில் ஒடிந்து போயிருக்கின்ற தென்றும், வில் கயிறும் தேய்ந்து போயிருக்கின்ற தென்றும், நான் கிழவனாகித் தளர்ந்து போனே னென்றும் கருதியன்றோ துணிவுடன் என மகளை மணம் பேசுவதற்கு உன் அரசர் உன்னைத் தூதாக வரவிட்டுள்ளார்கள் போலும்! என் ஆற்றல் இத்தகைத்து என்பதனை அவர் அறியாரா! எம் வேந்தன் நந்தியின் வீரத்தையும் எண்ணினாரில்லையோ! இதோ நான் வாழுகின்ற இச் சிறு குடிசைக்குத தூண்களெல்லாம் யானைக் கொம்புகளே! வளைகள் வரிச்சுகள் யாவும் யானைக் கொம்புகளே! இவை எவ்வாறு எனக்குக் கிடைத்தன என்பதை நீ அறிவாயோ? தெள்ளாற்றுநகரில், எம் நந்திமன்னனுக்கும் வேற்றுநாட்டு வேந்தர்கட்கும் போர் நிகழ்ந்ததன்றோ! அப்போரில் போர் செய்த யானைகளைக் கொன்று அவைகளின் கொம்புகளைக் கொணர்ந்து இக் குடிலமைத்தேன். அவ்வாறானால் எத்தனை ஆயிரம் யானைகள் மடிந்திருக்கும்? அவ்வியானைகளை யெல்லாம் தமித்தோன் யானே! இதனையறியாது துணிந்து வந்தாயே! உனக்கு ஐயமானால் இக் குடிலில் யானைத்தந்தங்கள் இருப்பன பொய்யா மெய்யா என்று சற்றே தலை குனிந்து பார்! என்னைக் கிழவனென்றா கருதி வந்தாய்! நில்லாதே, அப்பாற் செல்! இனி நின்றால் வாளுக்கு இரையாக்குவேன்!' என்று சினந்து பேசுகின்றான்.

இதனை 'மகட் கொடை மறுத்தல்' என்னும் துறைப்பாற் படுத்துவர், புறப்பொருள் வெண்பாமாலையார். அதற்கு,

> [1]"வெம்முரணோன் மகள் வேண்ட
> அம்மதிலோர் மறுத்துரைத்தன்று'

என இலக்கணங் கூறி வரலாறுங் காட்டுவர்.

> [2]"ஒள்வாள் மறவர் உருத்தெழூந் தும்பர்நாட்
> கள்வார் நறுங்கோதை காரணமாக்—கொள்வான்
> மருங்கெண்ணி வந்தார் மழகளிற்றின் கோடிக்
> கருங்கண்ணி வெண்கட்டிற் கால்.'

என, உரைப்பதறிக.

இம்முறையை ஒட்டித் திருவரங்கக் கலம்பகத்தில் தன் மறப் பண்பைப் போர்மறவன் கூறுவதும் இக் கருத்தோடொப்ப இருத்தலான், அதனையும் கீழே தருதும்:

1, 2. புறப்பொருள் வெண்பாமாலை, கொச்சி : க.

[1]'கொற்றவன்தன் திருமுகத்தைக் கொணர்ந்த தூதா
குறையுடலுக் கோமறவர் கொம்பைக் கேட்டாய்
அற்றவர்சேர் திருவரங்கப் பெருமாள் தோழன்
அவதரித்த திருக்குலமென் றறியாய் போலும்
மற்றதுதான் திருமுகமே ஆனால் அந்த
வாய்செவிகண் மூக்கெங்கே மன்னர் மன்னன்
பெற்றஇள அரசானால் ஆலின் கொம்பைப்
பிறந்தகுலத் துக்கேற்கப் பேசு வாயே.'

எனவும்,

[2]'பேசவந்த தூதசெல் அரித்தஓலை செல்லுமோ
பெருவரங்கள் அருளரங்கர் பின்னைகேள்வர் தாளிலே
பாசம்வைத்த மறவர்பெண்ணை நேசம்வைத்து முன்னமே
பட்டமன்னர் பட்டதெங்கள் பதிபுகுந்து பாரடா
வாசலுக்கி டும்படல் கவித்துவந்த கவிகைமா
மகுடகோடி திரையளக்க வைத்த காலும்'நாழியும்
வீசுசாம ரங்குடில் தொகுத்த கற்றை சுற்றிலும்
வேலியிட்ட தவர்களிட்ட வில்லும்வாளும் வேலுமே'

எனவும் மிக இகழ்ந்துரைப்பனவும் சுவைகண் டின்புறற் பாலன.

இதில் மறவீரன் பேசும் பேச்சை விட இவ் வீரமறவன் மிகக்கடுமையாக வீறுப்புடன் பேசுவது, நந்திமன்னன் நாட்டுச் சிறப்பை விளக்குகின்றது.

வில் ஒடிதல், நாண் அறுதல் என்பன, தனக்குப் படைப் பலம் இன்மையை உணர்த்தியது; நான் கிழவன், அசைந்தேன் என்பன, தன் வலியின்மையைக் கூறியவாறு. வம்பு ஒன்று குழலாள் என்பது, பெண்ணின் அழகும் இளமைச் செவ்வியும் உணர்த்தியது. நந்திபதம் சேர்தல்-நந்தி மன்னன் திருவடிகளில் வணங்கி மன்னிப்புப் பெறுதல். ஆனைக்கொம்பு - இறந்துபோன யானைகளின் தந்தங்கள். தன் குடிசை கட்டுதற்கு மரங்கள் இல்லாமல் முழுதும் தந்தத்தால் ஆனமைகாட்டி, நந்தியின் வீரமும், தன் தோளாற்றலும் வாளாற்றலும் வில்லாற்றலும் கூறி, இறந்த யானைகள் அளப்பில எனக் குறிப்பால் உணர்த்தியதுமாம். மன்னர் என்பது, சினத்தால் உயர்வுப்பன்மை கொடுத்து இகழ்ந்து கூறிய இகழ்ச்சியுரை. ஏகாரம்: அசை. (அ௨)

1, 2. திருவரங்கக் கலம்பகம்: ௫௨ - ௯.

*செவிலி, தன்னை நொந்துரைத்தல்*

**அறுசீரடி ஆசிரியவிருத்தம்**

பாவையர் பரிந்து தாங்கும் பனிமலர் செறிந்த செந்தில்
கோவையேய் நந்தி காக்கும் குளிர்பொழிற் கச்சி அன்னாள்
பூவையும் பந்தும் தந்து புல்லினாள் என்னை என்னே
மாவியல் கானம் போந்த தறிகிலேன் மதியி லேனே.

(இ - ள்.) *பாவையர் - எழுதுபாவையை ஒத்த மங்கையர்கள், பரிந்து தாங்கும் - விரும்பிச் சூடுகின்ற, பனி மலர் - குளிர்ச்சியுள்ள பூக்கள், செறிந்த செந்தில் - நிறைந்த திருச்செந்தில்நகரில் எழுந்தருளியிருக்கின்ற, கோவை ஏய - இறைவனை முருகப்பெருமானையொத்த அழகும் இளமையுமுள்ள, நந்தி காக்கும் - நந்தி மன்னன் ஆளுகின்ற, குளிர்பொழில் கச்சி அன்னாள் - குளிர்ந்த சோலைகளையுடைய காஞ்சிமாநகரைப் போன்ற சிறப்புப் பொருந்திய என் மகளானவள், பூவையும் பந்தும் தந்து - தான வளர்க்கும் நாகணவாய்ப் பறவையையும தான் ஆடு கின்ற பந்தையும் என்னிடம் கொடுத்துவிட்டு, என்னைப் புல்லினாள் - என்னையும் (யாதோ கருதித) தழுவினாள், மதி இலேன் - (ஒரு நாளும் இல்லா இச்செயலையறியும்) மதி யற்ற நான், மா இயல் - பல்வகைக்கொடிய விலங்குகள் திரிகின்ற, கானம் போந்தது அறிகிலேன் - பாலை வனத்தின் வழியாகத் தன் காதலனோடு போகவிருப்பதை முன்னரே அறிந்தேன் இல்லையே, என்னே - இஃது வியப்பாக இருக்கின்றது! (என் செய்வேன்! அவளை இனி எக்கால் காண்பேன்! ஐயோ!)*

(வி - ரை.) *கச்சி நாட்டுத் தலைவன் ஒருவனும் தலைவி ஒருத்தியும் களவியல் இன்பந்துய்த்தனர் அஃது ஊரெல்லாம் அலராகப் பரவியது. தோழியின் உதவிபெற்றுத் தலைவியும் தலைவனும் உடன்போக்காக அந்நாட்டைவிட்டுச் சென்றனர். செல்லுதற்கு முதனாள் தலைவி செவிலிபால்வந்து தான் அன்புடன் வளர்த்துவரும் நாகணவாய் (மைனா) ப் பறவையையும், தான் ஆடும் பந்தினையும் கொடுத்துப் புன்சிரிப்போடு கூடிய முகத்தினளாய்ச் செவிலியைத் தழுவிக்கொண்டாள்; இவள்*

அங்கிருந்து வெளியேறிச் செல்வதை வஞ்சமற்ற செவிலியறி யாள்! என் செய்வாள் பாவம்! அவள் பாலும் நெய்யும் பரிந் தூட்டிய தாய்மை உள்ளத்தாள; அவட்கு இவள் பிரிவை உன் னும்போது தாங்கலாற்ருத துயரம் உந்தி உந்தி அவள் மனத்தை உருக்கி அலேக்கின்றது! பதறினுள், கதறினுள்! அவள் போனதுகூட அவட்கு அவ்வளவாகத் துன்பந்தரவில்லை! புலி கரடிகள் முதலிய கொடிய விலங்கினங்கள் எக்காலும் திரிகின்ற காட்டில் வழிகொண்டு சென்ருளே என்பதை எண்ணுந் தோறும் எண்ணுந்தோறும் அவள் நெஞ்சைக் கிழிப்ப, முன்னரே நான் அறிந்திலேனே! அவள் நாகணவாயையும் பந்தையும் தந்து தழுவிக்கொண்ட குறிப்பை உன்னித்து அறிந்திலேனே! மதிகெட்டேனே! என்று வருந்தினுள்.

பாவையர்: பாவைபோன்ற இயல்பினரான மங்கையர். பரிந்து - விரும்பி. தாங்குதல் - மேலாகக்கொள்ளுதல். கச்சி - காஞ்சிபுரம். தலைவி அதுபோன்ற சிறப்புப் பொருந்தியவள் என, நந்தி நாயகன் நகரப் பெருமைக்குக் குறித்தாள். இவ்வாறே மணிமொழிப் பெருமான், "பாயும் விடையரன் தில்லையன்னுள்' எனத் தலைவன் தலைவியைப் பாராட்டுவதாக அமைத்த கருத் தோவியம் காண்க. என்னே: வியப்பின்கண் வந்தவினு. 'மதி யிலேனே' என்று தன்னைத்தானே நொந்துகொள்கின்ருள்! இது அவலச் சுவையின் நிலையை அளந்துகாட்டும் அழகிய செய்யுளாக அமைந்து இன்பமூட்டுதலை அறிக. இதில் தாயின் உள்ளத் துடிப்பும் அறிக. (அ௯)

## தோழி கூற்று

### அறுசீரடி ஆசிரியவிருத்தம்

நீண்டதாம் கங்குல் எங்கும் நிறைந்ததாம்
வாடை போங்கி
மூண்டதாம் மதியி ஞேடே முயங்குதார்
வழங்கும் தேள்ளாற்று
ஈண்டினுர் பரியும் தேரும் இருகைவேன்
றேருகை வேழம்
தூண்டினுன் நந்தி இந்தத் தோண்டைநா
டுடைய கோவே.

---

1. திருக்கோவையார்: ௯.

(இ - ள்.) தெள்ளாற்று ஈண்டினார் - தெள்ளாற்றில் நிகழ்ந்த போர்க்களத்தில் நெருங்கிவந்த படைமன்னர் களையும் வீரர்களையும், பரியும் தேரும் இருகை வென்று - அவர்தம் குதிரைப்படை தேர்ப்படைகளோடு தன்னு டைய பெரிய தோள் வலியால் வெற்றிகொண்டு, ஒரு கை வேழம் தூண்டினான் - தும்பிக்கையுடைய யானைமீதேறி உலாவந்தோனே! நந்தி - நந்தியென்னும் திருப்பெயர் கொண்டோய்! இந்தத் தொண்டைநாடு உடைய கோவே - இந்தத் தொண்டை நாட்டுக்கு உரிமையான வேந்தே! கங்குல் நீண்டது ஆம் - (என் அருமைத தோழியாகிய தலைவிக்கு உன்பாற்கொண்ட காதல் நினைவால்) இரவெல் லாம் போகாது நிலைத்திருக்கின்றதாம், வாடை மதியினோடு- வாடைக் காற்றானது நிலவொளிக் கதிர்களுடன், பொங்கி எங்கும் நிறைந்தது ஆம் - மிகுதிப்பட்டு எல்லா இடங்களி லும் நிறைவுகொண்டுள்ளதாம், மூண்டது ஆம் - (அதனால் காதல்மேலும்) பற்றித் துன்புறுத்துவதாயிற்றும், மூயங்கு- எனவே, நீ இவளுடன் கூடுக, தார்வழங்கு-உன்தொண்டை மாலையையாவது ஈவாயாக. (இன்றேல் உயிர் வாழாள்! உயிரைக் காப்பது உன் போன்ற அரசர் கடப்பாடன்றோ!)

(வி- ரை.) காதலர்க்கு இரவுநேரம் நீண்டு காட்டி வாடைக்காற்றும் நிலவின்கதிர்களும் துன்பந்தருவது இயல் பாதலால் 'நீண்டதாம் மதியினோடே' என்றாள். 'மூயங்குதார் வழங்கு' எனக்கூட்டி உன்னைச் சார்ந்துள்ள மாலையைக்கொடு என்றலுமாம். வாடையும் மதியும் ஒன்றுபட்டு இவட்குத் துன் பந்தருதலால் உடனிகழ்ச்சிப்பொருள் குறிக்கும் மூன்றனுரு பாகிய 'ஓடு' கொடுத்துக் கூறினாள். ஈண்டுதல் - மேலும் பெருகு தல். [1]'இன்பம் இடையறா தீண்டும்' என்றவிடத்து, ஈண்டுதல - பெருகுதல் என மணக்குடவர் உரை கூறுவதும் அறிக. பரியும் தேரும் என்பன, அவ்வவைகளாலான படைகளைக் குறித்தலால் காரிய ஆகுபெயர். இருகை - இரண்டு தோள் களின் வலிமை : ஆகுபெயர். ஒரு கை - ஒற்றைக்கை : தும் பிக்கை. இருகை ஒருகை என்பன முரண்தொடை அழகு தோன்றி நின்று இன்பந்தருதல் அறிக. வேழம் தூண்டுதல் யானைமீதேறி உலாவருதல். தூண்டுதல் - செலுத்துதல். தூண்டி னான் - தூண்டியவனே! எனப்படுதலால் அண்மைவிளி. [2]'அண்

1. திருக்குறள் : ௲௬௬. 2. நன்னூல் : ௩௧௩.

மையின் இயல்பும்' என்னும் நன்னூல் விதிப்படி ஈறு திரியாது இயல்பாக நின்றது. நந்தி : இஃதும் அண்மைவிளி. இந்த - திரிந்த அண்மைச்சுட்டு. தொண்டை நாட்டின் சிறப்புணர நின்றது ஏகாரங்கள் : அசை நிலை. (அ௪)

நற்றாய் இரங்கல்

**வெண்டுறை**

கோலக்கொடி அன்னவர் நீள்செறுவில்
குறுதேன்வழி கொண்ட லருங்குவளை
காலைப்பொழு தின்னெழு கன்னியர்தம்
கண்ணின்படி காட்டிடு கச்சியின்வாய்
மாலத்தெள் ளாறெறிந்த மானே
தயன்குடைக்கீழ்
ஞாலத்தோ டொத்ததே நான்பெற்ற
நறுங்கொம்பே.

(இ - ள்.) கோலக்கொடி அன்னவர் - அழகிய பூங்கொடிபோன்ற களையெடுக்கும் இளமங்கையர்கள், நீள் செறுவில்-நீண்ட வயல்களிலிருந்து, குறு - பறித்தெறிந்த, தேன் வழிகொண்டு - தேன் பெருக்கெடுத்தோட, அலரும் குவளை - மலாகின்ற குவளைமலர்களானவை, காலைப்பொழுதின் - விடியற்காலை நேரத்தில், எழு கன்னியர் தம் - விழித்தெழுகின்ற இளம் பெண்களுடைய, கண்ணின்படி காட்டிடு - கண்களின் தன்மையைக் காட்டுகின்ற, கச்சியின் வாய் - காஞ்சிபுரநாட்டில் வீற்றிருக்கின்ற, மால் - திருமால்போன்றானும், அத்தெள்ளாறு எறிந்த - அந்தத் தெள்ளாற்றுப்போரில் பகைவரை அழித்தொழித்த, மானஉதயன் குடைக்கீழ் - மானம் பொருந்தியவனாகிய நந்தி மன்னனது வெண்கொற்றக்குடை நீழலினிடத்தே, நான் பெற்ற நறும் கொம்பு - நான் பெற்றெடுத்து வளர்த்த நல்ல இளங்கொடிபோன்ற என் மகளானவள், ஞாலத்தோடு ஒத்ததே - (அவன் ஆளுகின்ற) உலகமக்களோடு ஒத்தவளாகவோ எண்ணிக்காக்கப்படுகின்றாள்? (இல்லையே!

அவள் இவன் அருள்பெறாதன்றோ வருந்துகின்றாள் இஃது அரசர் அறனோ!)

(வி - ரை.) கோலக்கொடி - அழகுள்ள பூங்கொடி. மகளிர் பூங்கொடிபோன்ற மென்மையும் இளமையும் துவள்வும் கொண்ட அழகிய உடலினர் ஆகலான், இவ்வாறு கூறினாள். அம்மையின் திருவுருவப்படமாக எழுதிக்காட்டிய பரஞ்சோதியார்,

[1]'குமிழலர்ந்த செந்தாமரைக்கொடி'

என்று கூறியதும் காண்க.

[2]'வல்லியின் ஒல்கியொர் அனம்நடை வாய்ந்து,
உருவளர் காமன்றன் வென்றிக்கொடி'

எனத் திருக்கோவையார்க் காதலனும் தன் இன்னுயிர்க் காதலியைக் கொடியாகக் கூறியதும் அறிக.

நீள்செறு - நீண்ட வயல், மருதநிலம். வழிகொண்டு - பெருக்கெடுத்து; அன்றி அதைவிட்டு வெளியேறி என்றலுமாம். குவளை - கருங்குவளை; நீலம், நெய்தற் பூ. அலர்தல் - மலர்தல். காலைப்பொழுதில் விழித்தெழுகின்ற இளம்பெண்களின், கண்கள், கருநிறத்தொடு செவ்விபெற்று மிளிருமாதலின், அதனை உவமமாக்கிக் கூறினாள். விழித்தெழுங்கால் கண்களில் நீர் இருத்தல்போல, தேன் வழிதற்குங்கொள்க. 'காலைப்பொழுதின் எழு கன்னியர்தம் கண்ணின்படி காட்டிடுகச்சி' என்பதில் தன்பால் அன்புகொண்டார்க்கு நன்மைசெய்வதுபோற் காட்டுவோன் அன்றி, உண்மையில் நன்மைசெய்வோனல்லன் என, உள்ளுறை உவமம் கொள்ளக்கிடத்தல் அறிக. காட்டு+இடு—காட்டிடு. இசைநோக்கி இகரம் தொக்கது. இடு: பகுதிப்பொருள் விகுதி. கச்சி - காஞ்சிபுரம். ஆய், கீழ் இடப்பொருள் தரும் ஏழன் உருபு. மால் - பெருமையுடையான் என்றலுமாம். அ: பண்டறிசுட்டாய் முன்னிகழ்ந்த போரைக் குறித்தது. ஞாலம் - உலகம். அதிலுள்ள மக்கட்கு ஆகுபெயர். ஒத்ததே, ஏகாரம் வினாப்பொருளில் வந்து, ஒக்கவில்லையென எதிர்மறைப் பொருள் குறித்தது. மன்னுயிர் காவல் புரியும் வேந்தர்கள், 'கடிதோச்சி மெல்ல எறிக' என்றவாறு, ஆட்சியில் கடுமைகாட்டிச் செயலில் கடுந்தண்டம் கொடுக்காது இருத்தல்வேண்டும் நம் மன்னன் நல்லது செய்கின்றான்; ஆனால் என்மகள் அளவில் தீமையே புரிகின்றான்; இவளிடத்தில் நடுநிலைமாறியே செயலாற்றுகின்றான்; நடுநிலையாளனாக இருப்பின், இவள் தன்பால்

1. பரஞ்சோதி, திருவிளையாடல், திருநகரப்: கஎ.
2. திருக்கோவையார்: க.

அன்புபாராட்டுதல், கருதித் தன் தொண்டைமாலையைக் கொடுத்து இவளைக் காத்தலன்றோ முறையாகும். அவ்வாறின்றி, இவள்வருந்த வாளா இருக்கின்றான் என்னும் கருத்தை உட்கொண்டு 'ஞாலத்தோ டொத்ததே நான் பெற்ற நறுங்கொம்பே' என்றாள். 'நான் பெற்ற' என்பதில் நற்றாயின் உள்ளக் குமுறல் தெளிவது காண்க. தாய் தன் துயரத்தைப் பேசுவதுபோற் காட்டும் இந் நூலாசிரியராகிய அரசர் பெருமகனாரின் புலமை நுணுக்கம், போற்றற்குரியது. 'நறுங்கொம்பு' செவலி மிக்க இள நங்கை. தாய், தான் பெற்றுவளர்த்த இனிய மகளை வருத்தத்தினும் போற்றிக் கூறுதல் காண்க வளாப்புத்தாய் அல்லள் என்பதை உணர்தற்கு, 'நான் பெற்ற' என்னும் அடை கொடுக்கப் பெற்றது. (அரு)

## தோழி கூற்று

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

கொம்புயர் வாமை நாகம் எதிர்வந்த
நந்தி குலவீரர் ஆகம் அழியத்
தம்பியர் எண்ணம் எல்லாம் பழுதாக
வென்ற தலைமான வீர துவசன்
செம்பியர் தென்னர் சேரர் எதிர்வந்து
மாயச் செருவென்ற பாரி முடிமேல்
வம்புயர் தொண்டை காணும் மடமாதர்
தங்கை வளைகொண்ட தென்ன வலமே.

(இ - ள்.) உயர்வு ஆம் கொம்பு மை நாகம்-நாளுக்கு நாள் வளர்கின்ற தந்தங்களையுடைய கருநிறமுள்ள (கஜேந்திரன் என்னும்) யானை, (முதலையால் நீரில் இழுக்கப்பட்டு இறக்கும் நிலையில் இருந்தபோது அதனைக் காத்தற்கு) எதிர்வந்த நந்தி - அதனமுன் வந்து காத்த திருமாலான நந்தி என்னும் பெயருடையோனும், குலவீரர் ஆகம் அழிய - சிறந்த படை வீரர்கள் தம் உடலழிந்து இறக்கவும், தம்பியர் எண்ணம் எல்லாம் - தன் பின் தோன்றல்களான தம்பிமார்கள் தன்னை வெல்லுதற்குச் செய்த சூழ்ச்சிகள் யாவும், பழுது ஆக வென்ற-கெட்டொழியும்படி வெற்றி பெற்ற, தலை மான வீர துவசன் - சிறந்த மானத்தை

யும் வீரத்தையுங் கொண்ட விடைக்கொடியையுடையவ வனும், செம்பியர் தென்னர் சேரர் - சோழரும் பாண்டிய ரும் சேரருமாகிய முடியுடை வேந்தர் மூவர்களும், எதிர் வந்து மாய - எதிர்த்துப் போர் செய்தும் வெல்லஇயலாது இறந்து பட, செருவென்ற - போரில் வெற்றிபெற்ற, பாரி முடிமேல் - பாரி போன்ற கொடை வள்ளலாகிய நந்தி மன்னனது மணிமுடிமீது சூட்டி விளங்குகின்ற, வம்பு உயர் தொண்டை - மிக்க மணம் பொருந்திய தொண்டை மலர் மாலையானது, காணும் மடமாதர் தம்மை - தன்னைப் பார்க்கின்ற இளமங்கையர் தம் கைகளில் அணிந்துள்ள, வளைகொண்டது - வளையல்களைக் கவர்ந்தது, என்ன வலம் - எத்தகை வெற்றியோ?

(வி - ரை.) "நந்திமன்னன் பேராற்றல் பெற்றவன்; அவன் நீரில் முதலையால் பிடியுண்டு இறக்கும் நிலையில் இருந்த கசேந்தி ரன் என்னும் யானை, ஒருணர்வு தோன்றி 'ஆதிமூலமே' என்றல றிக் கூவியபொழுது எதிரே தோன்றி அதன் உயிரைக் காத்த திருமாலின் அவதாரமாக உள்ளவனும், நந்தியென்னும் பெயர் படைத்தோனும், தன்னை எதிர்த்துப் போராடிய போர்த்திறன் வாய்ந்த வீரர்கள் யாவரும் மடிந்தொழிய, தன்னைக்கொன்று தன் ஆட்சியைக் கைப்பற்ற எண்ணித் தன் தம்பிமார்கள் செய்த வஞ்சச் சூழ்ச்சிகள் யாவும் நிறைவேறாதொழிய வெற்றி கொண்ட வனும், சிறந்த மானமும் வீரமும் பொருந்திய விடைக் கொடியை யுடையவனும், சேர சோழ பாண்டியர்களாகிய முடியுடை வேந் தர்கள் மூவரும் ஒன்றுகூடி எதிர்த்துப் போராடியும் வெல்ல இய லாது அவர் மாண்டொழிய வெற்றிகொண்ட பாரி போன்ற கொடையையுடையவனுமாகிய நந்தி மன்னனுனவன், அவன் தன் மணிமுடிமீது அணிந்துள்ள தொண்டை மலர் மாலையானது, தன்னைக்கண்ட இளநங்கையர்களின் கைவளையல்களைக் கவர்ந்து கொள்வது என்ன வெற்றியோ?"

'களைகண் இல்லாது வருந்திய யானையைக் காத்த திருமால் அவதாரமான இவனுக்கு - நந்தி (ஆக்கம்) உடையான் என்னும் பொருள் தரும் பெயர் பெற்றவனுக்கு - எதிர்த்த படை வீரர்களை யெல்லாம் நொடியிற் கொன்ற பேராற்றலாளனுக்கு - தன் தம்பி யர் தன்னைவென்று தன் நாட்டைக் கைப்பற்ற எண்ணிய சூழ்ச்சி கள் யாவும் கெடும்படி வெற்றிகொண்டவனுக்கு - இவைகளின் அடையாளமாகச் சிறந்த மானமும் வீரமும் பொருந்திய எருதுக் கொடியை உயர்த்திய ஏந்தலுக்கு - சேர சோழ பாண்டியர்களை

யும் வென்ற பெருமையாளனுக்கு - பாரியொத்த கொடை மடங் கொண்ட கோமகனுக்கு - இன்னும் செயற்கருஞ் செயலெல்லாம் செய்த செம்மலாகிய நந்திக்கு - தன்னைக் காணும் மங்கையர் களின் கைவளையல்களைக் கவர்தல் ஒரு வெற்றியா!' என்று நந்தி மன்னன் உயர்வும் தாழ்வும் கற்பித்துக் காட்டுகின்றாள் தோழி.

வீரர்களை வென்றதால் உயர்வும், பெண்கள் வளையல்களைக் கொள்வதால் தாழ்வும் காட்டியபடி. தான் வெல்வதை, தன் மாலை வெல்வது சிறப்பா? எனவும் கூறுகின்றாள். மங்கைமார்கள் மன் னனைப் பார்த்தவுடன் அவன் அழகில் ஈடுபற்று மயங்குகின்றனர்; அவன் அணிந்த தொண்டை மாலை பெற்று அவனை மணக்க விரும்புகின்றனர்; அதனால் உடல்மெலிகின்றது; உடல் மெலி வால் கைவளையல்கள் கழன்று விழுகின்றன; இதனையே மாலை யின் சிறப்புத் தோன்றத் தோழி, 'தொண்டை வளைகொண்ட தென்ன வலமே' என்று ஏளனமாகக் குறிக்கின்றாள். இதில் 'தம்பியர் எண்ணம் எல்லாம் பழுதாக வென்ற' என் னுந் தொடரால், தன் மாற்றாந்தாயின் புதல்வர்களான, தம்பி யர்களை ஆதரவு செய்யாது துரத்திஞனுதல் வேண்டும்; அவர் கள் வெளிஇடங்களில் இருநதுகொண்டு வீரர்களையும் அரசர் பலரையும் துணைக்கொண்டு போர்செய்திருத்தல் வேண்டும்; இவன் அவர் சூழ்ச்சிகளை அறிந்து அவர்கட்குத் துணையாக வந்த யாவர்களையும் அழித்து வெற்றிக்கொடி உயர்த்தினு னுதல் வேண்டுமென்பதும அறியக்கிடக்கின்றன.

அன்றியும், வெல்ல இயலாது தப்பிப் பிழைத்த தம்பியர் களில் ஒருவரே தம் தமையனை இந் நந்தி மன்னனைக் கொல்வ தற்கு இந்நூலைப் பாடினுரென்று நாட்டில் வழங்கும் வழக்காற் றுக்கு இப்பாடலின் இவவடி அரண் செய்கின்றது. அன்றியும் இந்நூலில் பின்வரும் பாடலில் 'வானுறுமதியை அடைந்ததுன் வதனம்,' என்று துவங்கி, 'செந்தழல் புக்கதுன்மேனி......... எவ்விடம் புகுவோம' என முடிகின்ற பாடலினுல், இவன் இறந்து போகக் கருதி உறுதியுடன் இறந்து போனதாகப் பாடினு ரெனவும் கொள்ளக் கிடக்கின்றது. (அ௬)

## தலைவனது சிறப்பு

### குறள் வெண் செந்துறை

வலம்வரு திகிரியும் இடம்வரு பணிலமும்
மழைதவழ் கோடிபோலக்
குலமயில் பாவையும் எறிகடல் வடிவமும்
இவைஇவை கோண்டாயே.

(இ - ள்.) (நந்தி மன்னா!) வலம் திகிரியும் - வலக் கையில் சக்கரத்தையும், இடம் பணிலமும் - இடக் கையில் சங்கினையும், மழை தவழ்கொடிபோல்-மேகத்தில் தோன்றுகின்ற மின்னற் கொடிபோல, குமையில் பாவையும்-சிறந்த மயிலின் சாயலையொத்த திருமகளையும், எறிகடல் வடிவமும் - அலைமோதுகின்ற கடல்போன்ற கருநிறத்தையும், இவை இவை கொண்டாய் - இவ்விவைகளை உனக்கு உரிமையாகக் கொண்டு விளங்குகின்றாய். (திருமாலைப் போன்ற சிறப்புமிக்க நந்தி மன்னனே!)

(வி - ரை) இப்பாடல் நந்தி மன்னன் சிறப்பை ஆகுபெயர்ப்பொருளாக அமைத்துக் கூறியது. இதில் பாட்டுடைத் தலைவன் பேரோ, ஊரோ, நாடோ, மரபோ, பிற யாதொன்றுங் குறிக்கப் பெறவில்லை. திருமாலைப்பாடித் தொழுவதுபோல் கூறப் பட்டுள்ளது. ஆசிரியர் பாட்டுடைத் தலைவனைத் திருமாலாகவே கொண்டார் போலும்!

வலம்வரு திகிரி பணிலம் என்பன, முழுமுதற் பெருமானை திருமால் தம் கைகளிற் கொண்ட சக்கரப்படையையும் சங்கினையும் குறிப்பனவாகும. மழை - மேகம்; தவழ்கொடி - அதில் தோன்று மின்னல்: அஃது, அவன்றன் திருமார்பில் உறையும் திருமகளின் உருவத்தைக் குறிப்பதாகும். இக்கருத்து இளங் கோவடிகள் காட்டும்,

[1]'மின்னுக் கொடி உடுத்து விளங்குவிற் பூண்டு
நன்னிற மேகம் நின்றது போலப்
பகையணங் காழியும் பால்வெண் சங்கமும்
தகைபெறு தாமரைக் கையின் ஏந்தி...........
செங்கண் நெடியோன் நின்றவண்ணம்'

எனவரும் சிலப்பதிகார அடிகளோடு ஒருபுடை ஒத்ததாதல் அறிக.

'வரு' என்பன இரண்டும் அசையாக நின்றன.

[2]'வடமீன்போல் தொழுதேத்த வான்தரு கற்பினாள்'

என்னும் பாலைக்கலியில் வந்தது காண்க. வடிவம், ஈண்டு நிறத்தைக் குறித்த பண்புவமை. இவை இவை என்னும் அடுக்கு, தவறுமல் எக்காலும் கொண்டிருப்பதைக் குறிக்க வந்தன. (அஎ)

1. சிலப். கக: சரு - ருக. 2. கலித்தொகை: உ.

தோழி கூற்று

**கலிவிருத்தம்**

கொண்டல் உறும்பொழில் வண்டினம் மாமணி
வண்டல் இடுங்கடல் மல்லைகா வலனே!
பண்டை மராமரம் எய்தபல் லவனே!
தொண்டை ஒற்றுவள் இவள்தோள் வளையே.

(இ - ள்.) வண்டுஇனம் ஆம் - வண்டினங்கள் தங்கியிருக்கும், கொண்டல் உறும்பொழில் - மேகங்கள் தங்குகின்ற சோலைகளும், மாமணி - சிறந்த முத்துக்களுடன், வண்டல் இடும் - மணலை ஒதுக்குகின்ற அலைகளையுடைய, கடல் - கடலும் சூழ்ந்த, மல்லை காவலனே - மாமல்லபுரத்தைக் காக்கும் வேந்தே! பண்டை மராமரம் எய்த பல்லவனே - முன்காலத்தில மராமரம் ஏழையும் எய்த இராமனையொத்த பல்லவ குலத்து மன்னு! இவள் தோள்வளை - இவள் தோளிடத்தும் அதன் வளையலிடத்தும், தொண்டை ஒற்றுவள் - உன் ஆதொண்டை மாலையை அணைத்துக் கொள்ள விரும்புகின்றாள். (நீ வள்ளலாதலால் கொடுத்து இவளைக் காத்தருள்க.)

(வி - ரை.) கொண்டல் - மேகம்; நீர்கொண்ட மேகம். உறும் - தங்கும. சோலைகள் வானத்தளவு உயர்ந்து படர்ந்திருப்பதால், மேகங்கள் தங்குவதாயிற்று. [1]"புயல்கண் படுக்கும் பூந்தண் பொதும்பில்' தலஎனவும், [2]'வெயில்நுழைபு அறியாக் குயில் நுழை பொதும்பர்' எனவும் பிறர் கூறிக. சோலையென்றதனல் நகரின் சிறப்பும், கடல் என்றமையால், நாட்டுச் சிறப்பும் கூறினர்.

திருமால் பத்துவகைப் பிறப்பினுள், இராமனுகப் பிறந்ததும் ஒன்று. அப் பிறப்பில் காட்டில் பதினன்கு ஆண்டு தங்க நேர்ந்த போது, தன் மனையாளை இலங்கை மன்னன் இராவணன் கவர்ந்து சென்றுஞக, அவளைத் தேடி வருங்கால் வானர வேந்தனை சுக்கிரீவன் இராம இலக்குவர் வலிமையறிய மராமரம் ஏழினைக் காட்டி அம்பெய்து துளைக்கவேண்ட அவன் அவைகளை எய்து துளைத்தான். அப்பால் இராமபிரான் ஆற்றலை அறிந்து துணைவ

---

1. திருவாரூர் நான்மணி மாலை : ரு.
2. மணிமேகலை, ச : ரு.

னுகக்கொண்டானென்பது இராமாயணவரலாறு. நந்தி மன்னன் திருமால் பிறப்பினனுகக் கொள்ளப் படுதலால் 'மராமரம் எய்த பல்லவனே' என்றாள். 'தொண்டை ஒற்றுவள், என்பதில் ஒற்றுதல் - சேர்த்தல் என்னும்பொருளதாய் விரும்புதலைக் குறித்தது. இதுசொல்வோள் குறிப்பினுல் பெறப்படுகின்றது. தோள், வளை, உம்மைத் தொகையாகக் கொண்டு தோள்களிலும் வளையல்களிலும் அணைக்க விரும்புகின்றாளென்று கொள்க. அன்றி உன் தொண்ட மாலையை ஒற்ற விரும்புகின்றாள், உன் மாலையைக் கொடுத்து இவள் தோள்களை வளைத்துக்கொண்டு தழுவுக என்றலுமாம். வளை : ஏவல்வினை; வளைப்பாயாக. வளைத்தல்-இழுத்துப்பிடித்தல்.

'கொண்டல் உறும்பொழில்...வண்டலிடுங்கடல்' என்றது மேகங்கள் தங்குதற்கும், வண்டினங்கள் வாழ்தற்கும் இடமாகப் பொழிலும், தன்பாலுள்ள முத்தினத்தைக் கரையில் ஒதுக்கி அதை விரும்புவோர்க்குக் கொள்ளக்கொடுக்கும் தன்மையுடையதாகக் கடலும் இருத்தல்போல, நீ யாவர்க்கும் ஆதரவு தந்து பேணி, அவர்க்குத்தானே உவந்து அவர் விரும்பாதிருக்கவும் தானேகொடுத்துதவும் ஈகையாளன்; இவட்கும் உன் தொண்டை மாலையை கொடுத்துதவிக் காப்பாயாக என, உள்ளுறை தோன்ற நின்றறிக. (அஅ)

## தலைவி, தன் தோழியர்களைப் பார்த்துக்கூறல்

### நேரிசைவெண்பா

தோளான் மெலியாமே ஆழ்கடலால் சோராமே
வாளா பெறலாமே வாயற்றீர்—கேளாதார்
குஞ்சரங்கள் சாயக் குருக்கோட்டை அத்தனையும்
அஞ்சரங்கள் ஆர்த்தான் அருள்.

(இ - ள்.) (என் அன்புடைத் தோழியர்களே!) கேளாதார் - தன் பகைவேந்தர்களின், குஞ்சரங்கள் சாய - போர் யானைகள் இறந்து கீழேவிழும்படி, குருக்கோட்டை அத்தனையும்-குருக்கோட்டை நகரமெங்கும், அம் சரங்கள் ஆர்த்தான்-கெடாத அழகுவாய்ந்த அம்புகளைத் தொடுத்து நிரப்பியவனுகிய நந்திமன்னனது, அருள் - பேரன்பை, தோளான் - நம் தோள்களினுல், மெலியாமே - வாட்டங் கொள்ளாமலும், ஆழ் கடலால் சோராமே - ஆழம்பொருந்

திய கடலினால் தளர்ச்சியில்லாமலும், வாளா பெறலாமே - எளிதாகப் பெற்றுக்கொள்ளலாமன்றோ? வாயற்றீர் - குறைகூறிக் கேட்பதற்கு வாயில்லாதுபோனீர். (வேண்டியவற்றை அவன்பால் கேட்டிருப்பீரேல் எளிதாக அருள் புரிந்திருப்பன்.)

(வி - ரை.) தலைவி நந்தியேந்தல்பாற் காதல்கொண்டு ஏக்கமுற்றாள்; அதனைத் தாங்கலாற்றாது, வண்டைக், கிளியை, அன்னத்தையெல்லாம் அவன்பால் தூதனுப்பி, அவன் தொண்டைமாலையை வாங்கிவர ஏவினாள். அவைகள்போய்த் திரும்பிவரவில்லை; அப்பால் தோழிமார்களில சிலரை ஒவ்வொருத்தராக அனுப்பி மாலை வாங்கிவரப் பணித்தாள். தோழியர்கள் சென்றவர், அவன் வேத்தவைகண்டு, செல்லக்கூசித் திரும்பினர் சிலர்; போய் அவன் செவ்விபெறாது மீண்டனர் சிலர்; போய் நின்று வெட்கித் தலைகுனிந்து நின்று வந்தார் சிலராக, அவர்களின் நிலையறிந்த தலைவிக்கு மானம் ஒருபால், நாணம் ஒருபால், சினம் ஒருபால் நின்று அவள் நெஞ்சைப் புண்படுத்தின; அவ் வேகத்தில் தன் தோழிமார்களை வெறுத்துச சினந்து பேசுகின்றாள் :

'தோழிமீர்! உங்கள் எல்லோருக்கும் வாயற்றுப்போய்விட்டது. உங்கட்கு வாய்பேசும் திறமிருக்குமானால், காதலால் உடல் மெலிந்து தோளும் வாட்டங்கொள்ளாமலிருக்கலாம்; இக் கடலும் இரவும் பகலும தானும் உறங்காது, நம்மையும் உறங்கவிடாது செய்திருக்க முடியாது! நம் காதல் மன்னனை நந்தி போரென்ன வீங்கும் பொருப்பன்ன தோளாற்றலான்; அவன் ஒருகால் குருக்கோட்டைபபோரில் தன் ஒரு வில்லாற்றல் கொண்டு அம்புகள் தொடுத்து அப்போருக்குவந்த எண்ணற்ற யானைகளையெல்லாம் கொன்றுவென்ற மேதகை; பகைவர்க்குக் கொடியன்; நமக்கு நீரினும் இனிய சாயலான்; அவன் அருளைப் பெறவா முடியாது! அவனே நம் உயிர் காவலனல்லவா? அவன்பால் செய்திசொல்லப்போன நீங்கள் அங்கே போயும்கூட ஒன்றும் பேசாமல் சும்மாவா வருவது! எவ்வளவோ எளிமையில் பெற்றிருக்கலாம் அவன் அருளை! அன்புதரும் ஆதொண்டை மாலையை! வாயில்லாதுபோன உங்களிடம் இனி என்ன சொல்வது!' 'சொலல்வல்லன்; சோர்விலன்; அஞ்சான்; அவனை இகல்வெல்லல் யார்க்கும் அரிது' என்னும் முதுமொழியைக் கற்றறிந்த நீங்களே இவ்வாறு தவறினீர்கள் எனின், வேறென்ன விளம்ப இருக்கின்றது?' என்று கடுஞ்சொற்கூறி வருந்துகின்றாள்.

இக்கருத்தில் அமைந்தது இச்செய்யுள்.

தோளால், கடலால் என்பவற்றிலுள்ள 'ஆல்' மூன்றனுருபு. கருவிப்பொருளில் வந்தது, தான் மெலிதற்கும் சோர்தற்கும் அவைகள் கருவியாக இருத்தலான். வாய்: இடவாகுபெயராகச் சொல்லை, பேச்சை உணர்த்தி நின்றது. 'வாயற்றீர்' என்பதில் தலைவியின் நெஞ்ச நடுக்கமும் கவலையும் அவலமும் கலந்து சினக் குறிப்பும் தோன்றநிற்றல் அறிக. நந்திமன்னனிடம் என் இயல்பை எடுத்துச்சொல்லி அருள்புரியும்படி கேட்காதிருந்தீர் என்பதுணர நின்றது. குஞ்சரங்கள் - போர் யானைகள். அத்தனை - அவ்வளவும்; முழுதும் என்றபடி. உம்மை இனைத்தென்றறிந்த பொருளில் முற்றும்மை. ஆர்த்தான் - நிறைத்தவன்: தெரிநிலை வினையாலணையும் பெயர் ஆர் - நிறைவு. அருள் - அன்பு; பேரிரக்கம். குறைகூறி முறைவேண்டினோர்க்கும், இல்லையென்றிரப்போர்க்கும் இல்லையென்னாது கரவாதுவந்தீயும் கடப்பாட்டாளன்; கேட்டால், மாலையும், மனமும், தோளும், மார்பும் தருவன் என்ற குறிப்பால் 'அருள' என்ற சொல்லாற் கூறினாள். (அகூ)

### தோழி கூற்று

#### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

அருளான தெங்கையர்க்கே அன்றுயென்
றியம்பிடுமெம் கன்னி செஞ்சொல்
தெருளாமேல் நல்குநந்தி தெள்ளாற்றில்
பொருதபோர் தன்னில் அந்நாள்
இருளான மதகரியும் பாய்மாவும்
இரதமுங்கொண் டெதிர்ந்தார் தம்முன்
மருளாமே நன்கடம்பூர் வானேற
வளைந்துவென்ற மன்னர் ஏறே.

(இ - ள்.) நந்தி - நந்தி மன்னா! அந்நாள் - முன் காலத்தில், தெள்ளாற்றில் பொருதபோரில் - தெள்ளாறென்னுமிடத்தில் மூண்ட போர்க்களத்தில், இருள் ஆன மதகரியும் - இருட்டையொத்த கருநிற மதயானைகளும், பாய்மாவும் - தாவியோடுகின்ற குதிரைகளும், இரதமும் - தேர்களும், கொண்டு - படைகளாகக் கொணர்ந்துவந்து, எதிர்ந்தார் தம்முன் - எதிர்த்துநின்ற பகைமன்னர்களின் முன்

பாக, மருளாமே - மயங்காமல், நன்கடம்பூர் வான்ஏற - சிறந்த கடம்பூரில் வாழ்ந்திருந்த எல்லோரும் ஒருங்கே விண்ணுலகஞ் செல்லும்படி, வளைந்துவென்ற - சூழ்ந்து நின்றுகொன்று வெற்றிகொண்ட, மன்னர் ஏறே - அரசர் கட்கு ஆண் சிங்கத்தையொத்தவனே! அருள் ஆனது - 'எம் காதல் வேந்தனின் பேரருள்,' எங்கையார்க்கே - 'என் தங்கைமார்க்களுக்கே,' அன்னாய் என்று இயம்பிடும் - 'தாயே'யென்று என்னிடம் கூறுகின்ற, எம் கன்னி செம் சொல் - எம்முடைய இளம்பருவத்தோழி சொல்கின்ற மொழியின் உண்மையை, தெருளா - நீ தெரிந்துகொண்டு, மேல் நல்கு - இனியாவது அருள்புரிவாயாக.

(வி - ரை.) தோழி, தலைவி நிலையைக்கூறி, நந்திமன்னனிடம் வேண்டுகோள் விடுக்கின்றாள். அவள் கூறுகின்றாள்:

"நந்தி மன்னா! முன்னொரு காலத்தில் தெள்ளாறென்னும் இடத்தில் நடந்த போர்க்களத்தில் கருநிறமுள்ள யானைகளையும் தாவியோடுகின்ற குதிரைகளையும் இரதத்தையும் துணைப்படைகளாகக்கொண்டு எதிர்த்துப் போராடிய போர்மன்னர்களின் நேராகச் சிறிதும் தயக்கமின்றிச் சிறந்த கடம்பூர்மக்கள் யாவரும் ஒன்றாக மாண்டொழியும்படி வளைத்துக்கொண்டு வெற்றிபெற்ற ஆண் சிங்கம் போன்றவனே! என் இளம்பருவத் தோழியானவள், 'அன்னாய் எம் காதல் வேந்தனின் பேரருள் எம் தங்கைமார்களுக்கே' என்று என்னிடம் வருந்திக்கூறுகின்ற சொல்லின் உண்மையை நீ நன்கு தெளிந்துகொண்டு இனியாவது அவட்கு அருள்புரிவாயாக," என்று வேண்டுகின்றாள்.

அருள் - பேரிரக்கம். எங்கையர் - எம் தங்கைமார்கள்; எம தங்கை என்பதன் மரூஉ. தங்கைமார்கள் எனப்படுவோர், வேந்தன் காதற்கிழத்திகளும் இற்பரத்தையர்களும் சேரிப்பரத்தையர்களுமாம். மன்னனை விரும்பி அவர்கள்பாற் காதல்கொண்டொழுகுதல் தெரிந்து, எனக்கு எங்கே வேந்தாபெருமான் தம் தோளும் மார்பும் நல்கியருளப்போகின்றான் என்பாளாய் 'அருளானது எங்கையர்க்கே' என்றாள். ஏகாரம்: தேற்றமும், அன்றிப் பிரிநிலையுமாகக்கொள்க. கன்னி - இளம்பெண், கட்டழகுடையாள் என்றலுமாம். செம்+சொல்—செவ்விய சொல், உண்மை, நேர்மையான சொல் என்றலுமாம். தெருளா - தெளிந்து: செய்யா என்னும் வாய்பாட்டுவினையெச்சம். மேல் - இனிமேல் என்னும் பொருட்டு. தெள்ளாறு, கடம்பூர் என்பன தனித்தனி

ஊர்கள். கரி - யானை; கருநிறமுடையது, கரு+இ—கரி எனக் கொண்டு உருவில் பெரியது என்னும் பொருளுமாம். பாய்மா: முக்கால வினைத்தொகை. பாய்தல்-தாவுதல் என்னும் பொருளது. மா - விலங்குகளுக்கெல்லாம் பொதுப்பெயர். பாய் என்னும் அடையினால், ஈண்டுக் குதிரையைக் குறித்தது. குதிரைவிரைந்து செல்லும் ஓட்டமுடையதாகலின், 'பாய்மா' எனப்பட்டது. இதனால் 'கால் திரண்டன்ன கால' எனக் குதிரைகளின் காலின் மேல வைத்துப் பாராட்டுவர் ஆன்றோர். இரதம் - தேர்: வடசொல். கரி பரி தேர் காலாள் ஆகிய நால்வகைப் படைகளையும் வென்ற மன்னன் வீரப்பண்பு விளம்பியவாறு. மூவகைப் படைகளைக்கூறி, காலாட்படை கூறாதது, போர்வீரரன்றிப் போர் நிகழாதென்பதையுட்கொண்டு. ஒருமொழி தன் இனங்கொளற் குரித்தாகலின் அதனையுங்கொள்க. மருளாமே - மயங்குதல் கொள்ளாமல். மயங்குதலாவது படைப்பெருக்கைக் கண்டு அஞ்சுதல். பாரதக் கதையில் உத்தரகுமாரன் துரியோதன மன்னன் படைப்பெருக்கங்கண்டு அஞ்சியோடப் பேடிவடிவில் இருந்து அவன் தேரோட்டிய பார்த்தன் தடுத்ததும் அவன் அப்பால் போருக்கு ஒருவீரனாக ஒருப்பட்டதும் இதற்குச்சான்று. அவ்வாறின்றிக் 'கூற்றுடன்று மேல்வரினும் கூடி எதிர்நின்று போர் செய்துவென்ற மன்னன் தறுகண்மையை, 'மருளாமே...... வென்ற' என்றார். ஏறு - விலங்கின் ஆண்களின் பொதுப்பெயர். அது ஈண்டுச் சிறப்புப்பற்றி சிங்க ஆணுக்கு வந்தது. ஏறு ஆண் விலங்குகளைக் குறித்தலை,

[1]'ஏறும் ஏற்றையும்' எனவரும் தொல்காப்பிய மரபியல் நூற்பாவால் அறிக. அஃது மன்னனுக்கு மாண்பை விளக்க வந்தது. (கo)

இதுவும் அது

அறுசீரடி ஆசிரியவிருத்தம்

ஏறு பாய விளைவித்த தெல்லாம் வார்க்குங் குமக்கொங்கை
வீறு பாயக் கொடுக்கின்ற விடலை யார்கொ என்கின்றீர்
மாறு பாயப் படைமன்னர் மாவும்,தேரும் தெள்ளாற்றில்
ஆறு பாயச் சிவந்ததோ ளிணைகா விரிநா டாள்வானே.

(இ - ள்.) (ஏ தோழிமார்களே!) வார் குங்குமக் கொங்கை - நும்முடைய கச்சணிதலையுடைய குங்குமத்தை

1. தொல். பொருள். மரபியல்: உ.

யுடைய கொங்கைகளானவை, ஏறுபாய-விம்மி மேலெழும் படி, விளைவித்தது எல்லாம்-செய்தனயாவும், வீறுபாய-அக் கொங்கைகளின் மேலிடம் அழுங்குமாறு, கொடுக்கின்ற - (தன் மார்பைத் தழுவத்) தருகின்ற, விடலை - இவ்வீரனை யாவன், யார்கோ என்கின்றீர் - நீர் இவனை (அறியார் போன்று) யாருக்குத் தலைவன், (மன்னன்) என்று கேட் கின்றீர்கள்; (இம் மன்னனை நீர் அறியீரோ?) மாறுபாய்-பகைகொண்ட, அப்படை மன்னர் - அழகிய படைகளை யுடைய வேந்தர்களுடைய, மாவும் தேரும - குதிரைகளை யும் அவை பூட்டிய தேர்களில் இருக்கும் வீரர்களையும், தெள்ளாற்றில் சிவந்த ஆறு பாய - தெள்ளாறென்னுமிடத் தில் செந்நிற இரத்தம ஆறுபோல் பரந்தோடும்படி வெட் டிச் சாய்த்த, தோள்இணை - தோள்களையுடைய, காவிரி நாடு ஆள்வானை - காவிரியாற்றையுடைய புனல்நாட்டை யாளுகின்ற நம் நந்திமன்னனையாவனன்றோ?

(வி - ரை.) நந்திமன்னன் மேளதாளங்கள் முழங்க, ஆடல் மகளிரும் பாடல் மகளிரும் ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் முன் செல்லத் தேர்மீதேறி உலாப் போந்தான்; அவ்வுலாக் காண நகர மாந்தர் குழுமினர்; உலாவைத் தொடர்ந்து வந்த னர்; இளம் பருவ மங்கையர்களின் கூட்டம் நான்கு பக்கமும் மொய்த்துத் தொடர்ந்து வந்தது; அக் கூட்டத்துள் வந்த மங்கையர் பலர், மன்னன் திருமுகத்தைபும் மார்பையும் தோளை யும் கண்டு கண்ணால் முகந்துண்டு பருகிக் காதல் விஞ்சத் தன் வயம் இழந்து நின்றனர்; முகத்தின் அழகை வியந்தார் சிலர்; தோளழகைச் சொல்லினர் சிலர்; காலழகைக் கழறினர் பலர்; மார்பழகை வழுத்தினர் பலருமாக நின்று மயங்கினர். அவருள், தம் மதிமயக்கத்தால். தம் பக்கத்தில் நின்ற தோழியொருத்தி யைப் பார்த்து, 'இவன் யார்?' என்று வினவினர் சிலர். அவர் கட்கு விடையாகத் தோழி கூறுகின்ற ஒவியமே - கருத்தின் திரளே இப்பாடல் :

"தோழிமார்களே! நும் கச்சணிந்த குங்குமங் கொட்டிய கொங்கைகள் விம்மிதங் கொள்ளச் செய்து அக்கொங்கை கள் மேலிடம் அழுங்குமாறு தன் மார்பைத் தழுவத் தருகின்ற இவ் விடலையை, 'யாருக்குத் தலைவன் என்றோ?' கேட்கின்றீர்; இவனை நீர் முன்பின் அறியீரா? மாறுபட்ட படைத் திரள் கொண்ட அரசர்களுடன் தெள்ளாறென்னுமிடத்தில் நிகழ்ந்த போரில் குதிரைகளையும் தேர் வீரர்களையும் இரத்தம் ஆறுபோல்

பாய்ந்தோடும்படி கொன்று வென்ற தோள்களையுடைய காவிரி நாடாகிய புனனாட்டை ஆள்கின்ற புங்கவனாகிய நம் நந்தி மன்னனே இவன்; நன்கு காணுங்கள்" என்கின்றாள்.

ஏறு - ஏறுதல், உயர்தல்: இது முதனிலைத் தொழிற்பெயர். காதல் கொண்ட மங்கையர்க்குக் கொங்கை அல்குல் முதலிய பெண்களின் சிறந்த உறுப்புக்கள் விம்முதலும், உடல் பூரிப்புக் கொள்ளுதலும் இயல்பாகும். இதனைக் கம்ப நாடரும் [1]'வாமமே கலையினுள் வளர்ந்த தல்குலே' என்றதால் அறியப் பெறும். அத னால் 'ஏறுபாய' என்றாள். இச் சொற்றொடர், கொங்கைகளின் நிலைக்கு அடையாக விளக்க வந்தது. வார் - கச்சு. இதனைத் தற்காலம் இரவிக்கை என வழங்குவர். கொங்கைகட்குக் குங்கும மும் சாந்தும் அப்பி எழுதுவரிக் கோலம் எழுதி, மகளிர் அழகு படுத்துவர். ஆதலால் 'குங்குமக் கொங்கை' என்றாள். குமர குருபர அடிகளாரும் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் அம் மையைக் குறிக்குங்கால், [2]'வருகுங் குமக்குன் றிரணடேந்து மலர்ப்பூங் கொடியே' என்றதறிக. வீறு-வீறாப்பு. கொங்கை கட்கு வீறாவது, இளமையால் மேலோங்கித் தாழாது அண்ணாந்து நிற்றல். இதனைச் சங்கப் புலவரும், [3]'அண்ணாந் தேந்திய வன முலை' என்பர். கொடுக்கின்ற என்ற வினையால், கொங்கை கட்குக் கொடுப்பதெது என்பதைக் கொண்டு 'மார்பு' என்ற சொல் வருவித்து இயைபுநோக்கிப் பொருள்கூறப்பட்டது. [4]'மகளிர் மலைத்தல் புல்லிய மலர்த்தார் மார்ப' எனவும் [5]'மலைத்த லல்லது மலர்ப்பறி யலையே' எனவும் பிற சான்றோர்கள் கூறு வது கொண்டும் அறிக. விடலை - இளம்பருவத்தோன். இங்கே, பாட்டுடைத்தலைவனாகிய நந்தியேகுதல். யார் - எவர் என்னும் வினா. கோ - அரசன் மாறு - மாறுபாடு, முரண்பட்ட நிலை. மா - குதிரை. தேர் - தேரிலுள்ள போர்வீரர்: இடவாகுபெயர். சிவந்த ஆறு எனக் கூட்டுக: செந்நிற ஆறு என்பது, போர் வீரர்களும் குதிரை முதலிய படைகளும வெட்டப்பட்டுக் கொன்றகாலை ஒழுகும் அவரின் இரத்தப் பெருக்கு. சிவந்த என்ற குறிப்பால் இவ்வாறு பொருள்கூறப்பட்டது. தோள் இணை - இருதோள்கள். ஆள்வான் - ஆள்கின்றவன். ஐயங் கொண்டோ, மதிமயக்க மேலீட்டினாலோ தோழியை 'விடலை யார்கோ?' என வினவிய மங்கையர்க்கு அவன் சிறப்புத் தோன்ற விரித்துக் கூறினாள் தோழி, 'திறமலி சின்மொழிச்' சேயிழை யாகலான் என்க. (கூக)

---

1. கம்ப ராமா, பாலகாண், மிதிலைக்:
2. மீனாட்சியம்மை பிள்: சரு. 3, 4. புறம்: 5. பதிற்று:

இதுவும் அது

கலிவிருத்தம்

ஆயர் வாய்க்குழற் காற்றுறு கின்றிலள்
ஏயும் மாங்குயிற் கென்னேகோல் ஆவதே
தேயம் ஆர்புகழ்த் தேசபண் டாரிதன்
பாயல் மேல்வரல் பார்த்துநின் றளுக்கே.

(இ - ள்.) தேயம் ஆர் புகழ் - எல்லா நாடுகளிலும் நிறைந்த புகழையுடைய, தேச பண்டாரி - தேச பண்டாரி யென்னும் பட்டப்பெயரையுடைய நந்திமன்னனானவன், தன் பாயல் மேல்வர - தன் கனவின்கண் தன் படுக்கை யிடத்தே வருவதாக, பார்த்து நின்றாளுக்கு - கண்ட என் அன்புடைத் தோழிக்கு, ஆயர்வாய் குழற்கு - இடையர் தம் வாய்வைத்து ஊதுகின்ற வேய்ங்குழல் ஓசைக்கு, ஆற்று உறுகின்றிலள் - பொறுக்கலாற்றாளாய்த் துன்புறு கின்றாள், ஏயும் - தங்கியிருத்தற்கு இடனான, மாங்குயிற்கு- மாமரத்தில் வாழ்கின்ற குயிலின் குரலுக்கு, என்னேகொல் ஆவதே - என்ன துன்பம் அடைவாளோ? (அறிகின்றி லேனே! இனி இவள் உய்யும்வழி யாதோ! என் செய்வது!)

(வி - ரை.) தோழி, தலைவியானவள் காதலால் பிணக் குண்டு துன்புறுதற்கு வருந்துகின்றாள்.

'எல்லா நாடுகளிலும் நிறைந்த புகழ்படைத்தவனான நந்தி மன்னனானவன், தன் கனவிலே தன் படுக்கையிடத்து வருவ தாகக் கண்ட என் தோழிக்கு இடையர்கள் மாலைநேரத்தில் கன்று காலிகளை அழைத்தற்கு வாய்வைத்து ஊதுகின்ற புல்லாங்குழலின் இன்னிசைக்கே வருந்துவாளாயின், மாமரச் சோலைகளில் வாழ்கின்ற குயிலின் குரலைக் கேட்டால் என்ன பாடுபடுவளோ? அறியேனே! இதுவே காதலின் நிலை போலும்! மன்னன் அருளானே!' என்று கூறுகின்றாள்.

காதலர்க்கு வேய்ங்குழலின் இன்னிசையும் குயிலின் கூவுங் குரலும் தென்றற் காற்றின் மெல்லிய நடையும் காதல் நினைவை எழுப்பிக் காதலுணர்ச்சியை மிகுதிப்படுத்துவனவாம். அம் முறைக் கேற்பக் காதல் கொண்டு நந்திமன்னனை நினைத்துத்தங்கிய காரிகைக்குக் காதலின் எண்ண விளைவு முறுகத் தன்னை மறந்து சோர்வால் படுக்கையில் தூங்குகின்றாள்; மன்னன் தொண்டை

மாலை புரளும் தோளனாய்க் கண்டியணியொளிரும் மார்பனாய்க் கனவிற் காட்சியளிக்கின்றான்; தழுவுகின்றான்; அவ்வுணர்வோடு ஆசை கிளர்ந்தெழ விழிக்கின்றாள். 'மன்னா! மன்னா! மாலை மார்ப வருக! வருக!' என்று வாய்பிதற்றிய வண்ணமாய் எழுகின்றாள். இதைப் பக்கலில் பாயல் கொண்ட தோழி கண்டு, இவள் நிலைக்கு இரங்கி, முன்னரே ஆயர்வாய்க் குழற்கு ஆற்றாதவள். குயிற்குரலுக்கு என்ன துன்புறுவளோ? எனக் கலங்கினாள். குயிற்குரல், பகல் முழுதும் கேட்கப்பெறுவதால் ஓயாது வருந்துவளே என்றபடி.

வேய்ங்குழல் இசைக்குக் காதலி கலங்கும் நிலையை,

> [1]'வானண்டர் உண்டி வழங்குஞ்செவ் வாய்சசி மணிகறங்கும்
> ஆனண்டர் வேயிசை கேட்கப் பொறாள்'

என வரும் மறைசையந்தாதியானும், குயிலின் குரலிசைக்கு ஆற்றாத நிலையை,

> [2]'சேவற் குயில்பெடைக்குப் பேசும் சிறுகுரல்கேட்டு
> ஆவி உருகி அழிந்திட்டான்'

என வரும் நளவெண்பாவானும் அறிக. இதிற் குழல், குயில் என்பன, அவைகளின் ஒலியை உணர்த்தி நின்ற ஆகுபெயர்கள்.

காதலன் கனவின்கண்தோன்றி இன்புறுத்தல் நினைவின் முதிர்ச்சி யென்க. எண்ணம் வலுப்படின், அவ் வெண்ணம் முறுகிப் பயன்விளைக்கும் என்பது உளநூற்புலவர் துணிபு. உண்மையைத் தெள்ளத் தெளிந்த வள்ளுவர் பெருமானும்,

> [3]'எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்
> திண்ணியர் ஆகப் பெறின்'

என்றருளினார், தம் திருக்குறள் மறையில்.

காதலர் கனவின்கண் வருதலைத் தலைவி கூற்றாக.

> [4]'காதலர் தூதொடு வந்த கனவினுக்கு
> யாதுசெய் வேன்கொல் விருந்து'

எனவும்,

> [5]'துஞ்சுங்கால் தோள்மேலர் ஆகி விழிக்குங்கால்
> நெஞ்சத்த ராவர் விரைந்து'

எனவும் காட்டும் வள்ளுவர் வாய்மையானும்,

---

1. மறைசையந்தாதி: 2. நளவெண்பா:
3, 4, 5. திருக்குறள்: ௬௬௬; ௧௨௧௧; ௧௨௧௮.

[1]'களியானைத் தென்னன் கனவில்வந் தென்னை
அளியான் அளிப்பானே போன்றான்—தெளியாதே
செங்காந்தள் மெல்விரலாற் சேக்கை தடவந்தேன்
என்காண்பேன் என்னலால் யான்'

[2]'ஓராற்றான் என்கண் இமைபொருந்த அந்நிலையே
கூரார்வேல் மாறனென் கைப்பற்ற—வாரா
நனவென் றெழுந்திருந்தேன் நல்வினையொன் றில்லேன்
கனவும் இழந்திருந்த ஆறு'

என வரும் முத்தொள்ளாயிரத்தானும் அறியப் பெறும்.

'நின்றாளுக்கே' என நின்ற சீரில் கடையிலுள்ள 'கு'வ்வுருபு, எழுவாய்ப் பொருள் பெற நின்றது. அன்றி நேர்ச்சிப் பொருளாகக் கொள்ளலுமாம். பாயல் - படுக்கை; உறங்கல். மேல் வரல் - அதனிடம் உருவாக வெளிவருதல். பார்த்துநின்றாள்: பார்த்தாள் என, ஒரு சொன்னீர்மைப்பட்டு நின்றது. (௬௨)

### தலைவி கூற்று: புள்ளொடுபுகலல்

**கட்டளைக்கலித்துறை**

துளவுகண் டாய்பெறு கின்றிலம்
சென்றினிச் சொல்லவல்ல
அளவுகண் டாய்வந்த தாதிகண்
டாயடல் வேழமுண்ட
விளவுகண் டாலன்ன மேனிகண்
டாய்விறல் மாரன்செய்த
களவுகண் டாய்நந்தி மல்லையங்
கானற் கடற்கம்புளே.

(இ - ள்.) நந்தி - நந்திமன்னனுக்குரிய, மல்லை அம் கடல் கானல் கம்புளே - மாமல்லபுரத்து அழகிய கடலின் கரைக்கண் வாழ்கின்ற சம்பங்கோழிப் பறவையே! துளவு கண்டாய் - துழாய் மாலையை நீ அறிவாய், பெறுகின்றிலம் - எமக்கு நந்திமன்னனிடமிருந்து பெற்றோமில்லை, வந்த தாதி கண்டாய் - அவன்பாற் சென்று மாலை பெறாது மீண்டு

---

1 2. முத்தொள்ளாயிரம்: ௩௪; ௩௬.

வந்த தாதியையும் நீ கண்டாயன்றே, வேழம் உண்ட - யானைத்தீ என்னும் ஒருவகை நோயால் பிடிபட்ட, விளவு கண்டால் அன்ன - விளாங்கனியைப் பார்த்தால் ஒத்த, மேனி கண்டாய் - என் உடலின் நிலையையும் நீ அறிவாய், விறல் மாரன் செய்த - காதல் வெற்றிக்கொள்ளும் மன்மதனால் உண்டான, களவு கண்டாய்-திருட்டுத்தனமையையும் நீ அறிந்தாய், சென்று - சமநந்தியேந்தல்பால் போய், இனி சொல்ல வல்ல - மேல் எடுத்துக்கூறுகின்ற திறங்களினது, அளவு கண்டாய் - வரையறையையும் நீ நன்கு அறிவாய். (ஆதலால் நீ சென்று, என் நிலையை எடுத்துச் சொல்லி, அவன் துளவ மாலையை வாங்கி விரைந்து வருவாயாக.)

(வி - ரை.) நந்தி மன்னனிடம் காதல்கொண்ட மங்கையொருத்தி, தன்னோடு உடனுறைபவளாகிய தாதியை நந்தி மன்னனிடம் தூதனுப்பினாள்; அவன் துளசிமாலையை வாங்கி வரும்படி கூறி அனுப்பினாள்; போனாள்; வறுங்கையோடு மீண்டாள்; அவள், மன்னனிடம் செய்தி கூற அஞ்சினாள்; தான் போய் வந்த செய்தியைத் தலைவியிடம் சொல்ல நாணினாள்; அஞ்சினாள். இந்நிலை கண்ட தலைவி நெஞ்சம் துணுக்குற்றது; நீடு நினைந்தாள்; எண்ண அலைகள் தோன்றித்தோன்றி மறைந்தன; இறுதியாகத் தன்முன் காட்சியளிக்கும் கடலைப்பார்த்தபோது, ஆங்கே வாழும் நாரை கொக்கு தாரா கம்புள் முதலிய பறவைகள் இன்புடன் துணைபிரியாது வாழ்தலைக் கண்டாள்; அவைகட்குத் தான், காதல்தன்மை, துணையைப் பிரிந்தால் வரும் துயர் தெரியுமென்று கருதினாள். அவற்றுள் சம்பங்கோழி ஒன்றைத் தன் முன்னிலையில் அழைத்துத் தன் குறையைக் கூறி, நந்திமன்னன்பால் சென்று அவன் துளவமாலையை வாங்கிவருமபடி குறிப்பால் கூறித் தூதனுப்புகின்றாள். அவள் அதற்குக் கூறியது இதன் கீழ்க் காண்க :

'நந்திமன்னனுக்குரிய மாமல்லபுரத்துக் கடற்கரையில் வாழ்கின்ற கம்புட் பறவையே! நீ எம் நந்தி ஏந்தலின் துளவ மாலையை அறிவாய்; அதை யாம் அவனிடமிருந்து பெற்றோமில்லை; அதை வாங்கிவரச்சென்ற தாதி, அதைவாங்காது போனபடி மீண்டாள்; அதையும் நீ அறிவாய்; நானோ யானைத் தீயென்னும் ஒருவகை நோய்கொண்ட விளாம்பழம்போல் உள்ளம் நொந்து வெறுங்கூடாக இருக்கின்றேன்; அதையும் நீ அறிவாயன்றோ? அல்லாமலும் மன்மதன் செய்யும் வஞ்சத்தன்மையையும் நீ அறிந்ததே. இவைகளையெல்லாம் நன்கு அறிந்த உனக்கு

நான் எடுத்துச்சொல்லி அறிவிக்க வேண்டுவதில்லை; நீயோ நந்தி மன்னனிடஞ் சென்று சொல்ல வேண்டுவதிது; சொல்லத்தகாதது இது என்னும் சொல்லின் அளவுகளையெல்லாம் நன்கு அறிவாய்: ஆகவே, நீ நந்தி மன்னனிடஞ் சென்று, என் நிலையை எடுத்து விளக்கிச்சொல்லி, அவன் துளவ மாலையை வாங்கிக் கொண்டு விரைந்து வா' என்று கூறித் தூதனுப்புகின்றாள். இக் கருத்தை உட்கொண்ட பாடல் இது.

துளவு - துளசிமாலை. நந்திமன்னன் திருமால் அவதாரமாகக் கொள்ளப்படுதலால், திருமாலுக்குரிய துளசிமாலையை மன்னனுக்கும் ஏற்றிக் கூறினாள். துளவு, மாலைக்காதலால் ஆகுபெயர்.

தூது செல்வோர்க்குச் சொல்லுந் திறம், கேட்போர் மனங் கொள்ளுமாறு தொகுத்துச் செப்புதல், அதனை வெறுப்பில்லாது கேட்க இனிமையாகச் சொல்லும் இயல்பு, இவைகள் அமைதல் வேண்டும்.

இதனை வள்ளுவர் தூதின் தன்மையை விளக்குங்கால்,

[1]'அறிவுரு ஆராய்ந்த கல்வியிம் மூன்றன்
செறிவுடையான் செல்க வினைக்கு'

[2]'தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி
நன்றி பயப்பதாம் தூது'

என்பர். இதனையொப்பக் கம்புளைக் கருதிக் கூறுகின்றாள் தலைவி.

சொல்லவல்ல அளவாவது, சொல்லை மிகைப்படக் கூறாமலும் சொல்லும் அளவுக்குக் குறையாமலும் பயனில சொல்லாமை முதலியவைகள் நீக்கிக் கேட்போர் உளங்கொள்ளும் வகை அளந்துரைத்தல்.

வேழம் - யானைத் தீயென்னும் ஒருவகை நோய். இதனை இடத்திற்கேற்ப, ஆசிரியர்கள், யானையின் பல்வகைப்பெயர்களாக அமைத்துக் கூறுவர். விளங்கனிக்கு வரும் நோய்க்கு 'யானை'யென்று பெயர். தேங்காய்க்கு வரும் நோய்க்குத் 'தேரை' பெயர். யானைத்தீ நோய் வரும் விளங்கனிக்கு உள்ளே விளவின் கனிக்குரிய சததில்லாது வெறுங்கூடாக இருக்கும். அத்தன்மை போல மனம் உட்கிளர்ச்சியில்லாது துன்புற்று இருக்கும் நிலைக்கு இதனை உவமமாக்கிக் கூறுவது நல்லாசிரியன் மரபு [3]'வெருவரு

1, 2. திருக்குறள்: சுஅச - ரு.
3. திருவிளையாடல், மாபாதகம்: உச.

வேழ முண்ட வெள்ளில்போல் வறியளுகி' என்ருர் பரஞ்சோதி முனிவரும். துன்பங்கொண்ட நிலேக்கு 'கையறு நெஞ்சம்' என்பர் இளங்கோவடிகளார். இங்கே மேனியைச் சுட்டிக் கூறிஞர். வெளிப்பார்வைக்கு விளங்கனிபோல் தோன்றுகின்றது. மனத்திஞுள்ளே கிளர்வு இல்லேயென்றற்கு. மாரன் செய்த களவாவது, வஞ்சத்தன்மை. தான் காதல்கொண்ட மன்னன்பால் மலர்ப் பாணத்தை ஏவாது என்மீதே ஏவித் துன்புறுத்துகின்ருன் என்பதைக் காட்டுதற்கு, கண்டாயென நான்கிடத்தும் வந்தது, உனக்கு நன்கு தெரியும் நீ அதை அவனுக்கு எடுத்துச் சொன்ஞயில்லே யென்பதுணர்த்துதற்கு. கம்புள் - ஒருவகைக் கோழி. அது கடற்கரை ஓரங்களில் வாழ்வது. (கூரு)

மன்னன் மாலேயின்மாண்பு

நேரிசைவெண்பா

என்னையா னேபுகழ்ந்தேன் என்ருதே எப்புவிக்கும்
மன்னர்கோன் நந்தி வரதுங்கன்—போன்முடியின்
மேல்வருடும் தோண்டை விரைநாறும் இன்னமும்என்
கால்வருடும் சேடியர்தம் கை.[1]

(இ - ள்.) (என் தோழீ!) என் கால் வருடும் - என் கால்களைத் தடவிப் பிடிக்கின்ற, சேடியர் தம் கை - என் பணிபெண்களின் கைகளானவை, எப்புவிக்கும் - எல்லா நாடுகளுக்கும், மன்னர்கோன் - அரசர்க்கரசஞன, வரதுங்கன் நந்தி-மிக மேன்மைபொருந்திய நந்தி மன்னனுடைய, பொன் முடியின்மேல் வருடும் - அவனது பொன்ஞலான மணிமுடியின்மீது கிடந்து அசைகின்ற, தொண்டை - ஆதொண்டை மலர் மாலேயினது, இன்னமும் விரைநாறும்- இப்போதுகூட மணங் கமழ்கின்றது, என்னே யானே புகழ்ந்தேன் என்ருதே - அதனுல் எனனே நாஞகவே புகழ்ந்து பேசுகின்றேனென்று கருதாதே. (மனனன் மாலே மிக மணமுடையது; அதையே விரும்புகின்றேன்.)

---

1. இப்பாட்டு முதல் பின்வரும் பாட்டுகள் சில ஏடுகளில் காணப்படுகின்றன. கலம்பகத்துக் குரிமையான அந்தாதித் தொடையும் அமையவில்லே.

(வி - ரை.) தோழி! நந்தி மன்னன் மாலையின் உயர்ந்த மணத்தை என்னென்பேன்! மற்ற மாலைகள் அன்றலர்ந்த மலர்களாக இருந்தால் மணமிருக்கும்; வாடினால் மணங்கெட்டுப் போம். எம்வேந்தன் மாலை, அத்தகையதன்று; மன்னனுக்கு மாலை தொடுத்துக் கொடுக்கும் வண்ணமகளிர் எனக்கும் மாலை தொடுத்துக் கொடுப்பர்; அவர்கள் என்காலைத் தொட்டுத் தடவிப் பிடித்து எனக்கு இன்பூட்டுவர் அப்போதுகூட அவர் கைகளில் தொண்டைமாலையின் மணங்கமழ்ந்து கொண்டிருக்கும். என்னே மாலையின் மாண்பு! இத்தகைய மாலையைப் பெற்றாலே யாம் பெற்ற பெரும் பேறாகும். இதனால் மாலையைப் புகழ்ந்து என்னையே புகழ்ந்து கொளவதாகக கருதாதே. மாலை எவ்வளவு சிறந்ததென்பதை உனக்கு உணர்த்துதற்குத்தான் இதைக் கூறுகின்றேனென்று' தலைவி தன் தோழிபாற் பேசுகின்றாள்.

'என்னை யானே புகழ்ந்தேன்' என்பது தன்னைப் புகழ்வது கூடாதென்பதை விளக்குகின்றது. [1]"தோன்றா தோற்றித் துறை பல முடிப்பினும், தான்தற் புகழ்தல் தகுதி அன்றே' என்பது சான்றோர் மறையாதலின்.

மன்னர்கோன் - அரசர்கட்குத் தலைவன் என்றபடி. வரதுங்கன் - மேலான உயர்வுடையோன். மேல் வருடுதல்-மேலேகிடந்தசைதல். தொண்டை: அதனாலான மாலைக்காதலால், இருமடி ஆகுபெயர். விரை - மணம். நாறுதல் - கமழுதல். இக்காலத்து நாறுதல், தீ நாற்றத்தைக் குறிக்கின்றது; முற்காலத்து நன் மணத்தைக் குறித்தது;

[2]'நாறாத் தகடேபோல் நன்மலர்மேற் பொற்பாவாய்' எனவும், [3]'இணரூழ்த்தும் நாறா மலரனையர்' எனவும், [4]'பொன் மலர் நாற்றம் உடைத்து' எனவும், [5]'நறுந்தண் நாற்றம் பொதிந்த நன்மலர்த் தடம்' எனவும் வரும் ஆன்றோர் வழக்குக்காண்க. தலைவி, தலைவனது மாலையின் சிறப்பை வாயாரப் புகழ்ந்து மனமாரக் கூறியது, வியத்தற் குரியதாக அமைந்துளது.

இன்னமும் என்பதில் உம்மை உயர்வு சிறப்பு. கால் வருடுதல், இன்பமாகத் தூங்கும்பொருட்டு காலை நெருடிக் கொடுத்தல். இதனால் தலைவனது மாலையின் சிறப்புக் கூறியபடியாம்.

(௬௪)

---

1. நன்னூல் : ௫௨.  2. நாலடியார் : உ௬௬.
3. திருக்குறள் : ௬௫௦.  4. நீதிநெறிவிளக்கம் : ௫.
5. பெருங்கதை, உஞ்சை. ௪௮ : ௫௪ - ௫.

## தலைவன், தலைவியின் இடையை வியந்தல்

### நேரிசைவெண்பா

கைக்குடமி ரண்டும் கனககும் பக்குடமும்
முக்குடமும் கொண்டால் முறியாதே—மிக்கபுகழ்
வேய்க்காற்றி னல்விளங்கும் வீரநந்தி மாகிரியில்
ஈக்காற்றுக்கு ஆற்ற இடை.

(இ - ள்.) *மிக்க புகழ் - பெரும் புகழ் வாய்ந்த, வீர நந்தி - வீரத்தையுடைய நந்தி மன்னனது, வேயக் காற்றினல் விளங்கும் மாகிரியில் - மூங்கிற் புதர்களினின்றும் மேலெழுந்துவருகின்ற தென்றற்காற்றால் மேம்பாடுற்ற பெரிய மலையிடத்தே வாழும், ஈ காற்றுக்கு ஆற்ற இடை - ஈயின் சிறகுக் காற்றுக்குக் கூடத் தாங்காது துவள்கின்ற இந் நங்கையின் இடுப்பானது, கை குடம் இரண்டும் - அழகு செய்யப்படுகின்ற குடம் போன்ற கொங்கைகள் இரண்டோடும், கனக கும்பக் குடமும் - பொன்னலான குடம் ஒன்றும், முக்குடமும கொண்டால் - ஆகிய இந்த மூன்று குடங்களையும் இவள் சுமப்பாளானல், முறியாதே - முறியாமல் இருக்குமோ? (ஏன் இவள் இந்தப் பொற்குடத்தை யெடுத்துச் செல்கின்றளோ?)*

(வி - ரை.) *'தலைவன், தலைவியின் இடைசசிறுமை கண்டு வருந்துகின்றன். அவன் கூறுகின்றன்; இவளின் ஒப்பனை செய்கின்ற கொங்கைகள் இரண்டுமே பெரும்பாரமுள்ளன; இவைகளைத் தாங்கலாற்றது இடை வருந்துகின்றது; அப்படியிருக்க இவள் பொன்குடத்தை யெடுத்துக்கொண்டு நீர் மொண்டுவரச் செல்கின்றள்; முன்பே பெருஞ்சுமையாக இரண்டு இருக்க, இப்போது மூன்றவது சுமையாக இக்குடத்தையெடுத்தாளே ஏற்றுக்கு? இவைகளைஇனி இவள் இடைதாங்குமோ? முறிந்து போகாதா! ஈ பறக்குங்கால் அதன் சிறகினின்று வெளிவரும் சிறுகாற்றுக்கே ஆற்றது முறியும் நிலையிலுள்ள தன்றே இவள் சிற்றிடை! முறியுமே! இனி என் செய்வது! இதைப் பார்த்துக் கொண்டு இருக்கின்ற கல் நெஞ்சம் படைத்தவர்களே! போகாவாறு தடுத்துக் குடத்தைப் பறியுங்கள்' என்று கூறிக் கண்டோரை வேண்டுகின்றன்.*

இவ்வாறு இடையின் சிறுமைகண்டு வருந்துவதாக,

[1] 'நாமே இடையுள்ள வாறறி வோம்இனி நாங்கள்சொல்லல்
ஆமே மருதன் மருத வனத்தன்னம் அன்னவரை
பூமேல் அணிந்து பிழைக்கசெய் தார்ஒரு பொட்டுமிட்டார்
தாமே தளர்பவ ரைப்பாரம் ஏற்றுதல் தக்கதன்றே'

எனப் பட்டினத்தடிகள் பாராட்டும் தலைவனாலும்,

[2] 'அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை'

எனத் திருவள்ளுவர் படைத்த தலைவன் கூற்றானும்,

[3] '.....தளரும் சிறுநுண் மருங்குல்......
......தெய்வமகளிர் புடையிரட்டும்,
செங்கைக் கவரி முகந்தெறியும்
சிறுகாற் கொசிந்து குடிவாங்க'

என மீனாட்சியம்மையார் திருவுருச சிற்றிடையை வியந்து கூறுவதானும் அறிக.

கை - கைகளால் புனைதல் என்னும் பொருளது. கொங்கை கட்குச சாந்தப்பிக் குங்குமங்கொட்டி எழுதுவரிக் கோலம் எழுதுவராதலான், 'கைக்குடம்' என்றான். குடம்போன்ற வடிவுடைய கொங்கைகளைக் குடமென்றது ஆகுபெயர். [4]'அமுதம் மேவுங் குடங்கள் இரண்டு' என்பர், சிவப்பிரகாச அடிகள். வேய்காற்று, மூங்கிற் புதர்களினின்றும் தோன்றி வருகின்ற மெல்லிய பூங்காற்று மலைக்குச சிறப்பு தென்றல். இதனைப் [5]'பிறந்ததெங்கள் பிரான்மலய த்திடை' என்பர் சேக்கிழார். ஈ காற்று - ஈயின் இறகினின்றும் தோன்றும் மெல்லிய சிறுகாற்று. ஆற்று - ஆற்றாத, தாங்காத: ஈறுகெட்ட எதிர் மறைப்பெயரெச்சம். (கூரு)

---

1. திருவேகம்பமுடையார் திருவந்தாதி :
2. திருக்குறள் : ககக௫.
3. மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் : சுக.
4. திருவெங்கைக் கோவை : க.
5. பெரிய புரா, தடுத்தாட் : கசுஎ.

### நந்தியின் கொடைப்பெருமை

#### நேரிசைவெண்பா

இந்தப் புவியில் இரவலருண் டென்பதெல்லாம்
அந்தக் குமுதமே அல்லவோ—நந்தி
தடங்கைப்பூ பாலன்மேல் தண்கோவை பாடி
அடங்கப்பூ பாலரா னார்.

(இ - ள்.) நந்தி - நந்தியென்னும் திருப்பெயருடைய, தடம் கை பூபாலன்மேல் - நீண்ட கைகளையுடைய உலக காவலனான நந்திமன்னன்மீது, தண் கோவைபாடி-வளப்ப மிக்க கோவைகளைப்பாடி அவன்பால் பரிசுபெற்று, அடங் கப் பூபாலர் ஆனார் - இரவலரென்போர் எல்லோருமே ஒவ் வொரு மன்னராகளாக மாறிவிட்டனர், இந்தப் புவியில் - இனி இவ்வுலகத்தில், இரவலர் உண்டு என்பது எல்லாம் - இரவலர்கள் இருக்கின்றாரகளென்று சொல்வன யாவும், அந்தக் குமுதமே அல்லவோ - அழகிய அலலி மலர்களே யன்றோ? (அவைதான் இரவில் அலர்கின்றன! இனி அவைகளே இரவலர் என்னும் பெயர் பெறுதற்குரியன.)

(வி - ரை.) நந்தி மன்னன் கொடைப்பெருமை இப்பாட் டால் கூறப்பெறுகின்றது. இதில், இந்த உலகத்தில். இரவலர் - யாசகர், உண்டு என்று கூறுவதெல்லாம், இனி அவர்களைக் குறிக்காது இரவில் அலர்கின்ற அல்லி மலரையே குறிக்கும். இரவு + அலர் = இரவலர், இரவில் அலர்வது, இரவு நேரத்தில் மலர்வது என்னும் பொருளது. இதில் இருபொருள் நயந் தோன்ற உரைத்த ஆசிரியரின் திறப்பாடு, மகிழ்தற்குரியது. ஏனென்றால், நம் நந்தியேந்தல் புகழினைத் தொடுத்துக் கோவைப் பாடலாகப் புலவர்களும் அவரல்லாதோரும் பாட, அதற்கு மகிழ்ந்த மன்னன், அவர்கட்கு அவர்வேண்டியாங்கு பொன்னும் பொருளும் ஆடையும் மணியும் தண்ணடைகளும் நாடும் நகர்களும் அவர் மனங்கொள்ளுமளவுக்கு மகிழ்ந்து கொடுத்துச் சிறப்புச் செய்துள்ளான்; நாட்டில் பெரும்பாலான மக்கள் யாவரும் தனித் தனி அரசர்களாக மாறிவிட்டார்கள், இரவலர், ஏழை மக்கள் என்ற பேரே நாட்டில் இல்லாது போய்விட்டது. இனி, அப்பெயர் நாட்டில் இல்லாததால், இரவுக் காலங்களில் மலர் கின்ற பூக்களுக்குத்தான் வழங்கும் வழக்கம் ஏற்பட்டுவிட்டது;

இரவில் மலர்கின்ற பூக்கள் மல்லிகை முல்லை இருவாட்சி முதலி யன உள்ளனவேனும் நிறமாண்பும், பெருமையும். சிறப்பும் பற்றிக் குமுதத்தையே குறிப்பதாயிற்று. என்னே! மன்னன் கைம்மாறு கருதாத கொடைமாண்பு' என்றுகூறி மகிழ்கின்றார், ஆசிரியர்.

அந்தக் குமுதம் - அச்சிறப்புடைய குமுதம் எனப் பண்டறி சுட்டாகவும், அந்தம் - அழகு எனக்கொண்டு, அழகுள்ள குமுதம் என்றும், அந்தம் - முடிவு என்றுகொண்டு, மற்ற மலர்களெல்லாம் தன் அழகின்முன் நிற்கலாற்றாது முடிவு - முடிதல், கெடுமாறு செய்கின்ற என்றும் பலபொருள் நயந்தோன்ற நின்றது. ஓகாரம்: வியப்பின்மேல் வந்தவினு. பூபாலன் - உலகைப் பாதுகாப்பவன். தண்கோவை - இன்பந்தரும் கோவைப்பாட்டு. தண்மை - குளிர்ச்சியென்னும்பொருள்; குளிர்ச்சியைத்தரும் இன்பத்துக்கு வந்தது. அடங்க - முழுதும், யாவரும் என்றபடி. ஆனார்: இறந்த காலத் தெரிநிலை வினையாலணையும் பெயர். சொற்செறிவும் பொருட்செறிவும் மிக்க சிறந்த பாட்டு இது. (௬௬)

## நந்தியின் நாட்டில் முத்துச்சிறப்பு

### கட்டளைக்கலித்துறை

அடிவிளக் கும்துகில் ஆடை விளக்கும் அரசர்பந்திப்
பிடிவிளக் கும்எங்கள் ஊரார் விளக்கும் பெரும்புகழால்
படிவிளக் கும்நந்தி எங்கோன் பெரும்படை வீட்டுக்கெல்லாம்
விடிவிளக் கும்இது வேநாங்கள் பூண்பதும் வெண்முத்தமே.

(இ - ள்.) (என் அன்புத்தோழீ!) வெண்முத்தமே - வெண்ணிற முத்துக்களே, அடி விளக்கும் - எங்கள் கால் களில் அணியாக அமைந்து அழகுதரும, துகில் ஆடை விளக்கும் - அதுவே எங்கள் மெல்லிய மேலாடையின்மீது மாலையாக அமைந்து அழகொளிரச் செய்யும், அரசர் பந்தி - மன்னர் வரிசைகளுக்கு, பிடி விளக்கும் - கையிற் பிடித்துச் செல்கின்ற விளக்குகளும், எங்கள் ஊரார் விளக் கும் - எங்களின் ஊர் மக்கட்கு விளக்குகளும், பெரும் புக ழால் - தன்மிக்க புகழினுல், படி விளக்கும் - இவ்வுலகை மேம் படுத்துகின்ற, எம்கோன் நந்தி - எம் நந்தி மன்னனுடைய, பெரும்படைவீட்டுக்கு எல்லாம் - பெரிய போர்ப்பாசறை

கட்கு எங்கும், விடி விளக்கும் - இரவு போகும்வரை வைக்கின்ற விளக்குகளும், நாங்கள் பூண்பதும் - நாங்கள் இன்னும பல்வகை அணிகளாக அமைத்து அணிகொள்வதும், இதுவே - இம்முத்துக்களேயாம். (எம் நந்தி ஏந்தல் நாட்டில முத்துககளுக்குப் பஞ்சமில்லை. அதனுல், நான் யாவும் முத்தலான அணிகளே பூண்டுள்ளேன் என்றபடி.)

(வி - ரை.) களவிற் புணர்ந்து கற்பாக இல்லறக்கடமை பூண்டு விருந்துபுறந்தந்து அருந்தவர்ப்பேணி, அறவோர்க்களித்தலும் அந்தணரோம்பலும் துறவோர்க்கெதிர்தலும் தன் இல்லறககிழமையாகக் கொண்டொழுகும் தலைவியைக காண்பதற்கு ஒருநாள் அவள் அன்புடைத்தோழி சென்ருள். பார்த்தாள்; தலைவி தன் தோழிக்கு முகமன்கூறி வரவேற்ருள்; தலைவியின் இல்லற நிலை; கணவன் குறிப்பறிந்து நடக்கும் இயற்கை; இருவரும் பாலும் நீரும் கலந்தனைய ஒற்றுமை வாழ்வு; செல்வ வளம் இவை யாவும் தோழிக்கு இன்பததை ஊட்டின. அப்பால் தலைவி, அடிமுதல் முடிவரை முத்துக்கள் மிகுதியாகப் பதித்த பற்பல அணிகள் பூண்டிருந்தநிலை, தோழிக்கு வியப்பைத் தந்தது. அவள் தலைவியை நோக்கி, 'என் அன்புகனிந்த தோழி! நீ அணிந்துள்ள அணிகள் ஒவ்வொன்றினும் மற்ற மாணிக்கம் வைரம் நீலம் முதலிய ஒளிக்கற்களினும காட்டில், முத்துக்களே மிகுதியாகப் பதித்து அமைக்கப்பெற்றுள்ளனவே, முத்துக்கள் இஙகே மிகுதியாகக் கிடைக்கின்றனவா? அன்றி அதற்குத் தான் மதிப்பா? என்ன?' என்று வினவினுள்; அதற்குத் தலைவி,

'எங்கள் காலில் அணிந்துள்ள சிலம்புகளில் பதித்து அணியாக அமைந்துள்ளனவும் முததுக்களே; எங்கள் மேலாடையின் மீது விளங்க மாலையாகச செய்து அணிந்திருப்பதும் இம் முத்துககளே; இவையன்றி, அரசர்கள் திரன்திரளாக வருவோர் கையில் விளக்காகக் கொண்டிருப்பதும் இம்முத்துக்களே; ஊர் மக்கள் தம் வீடுகளில் விளக்காக இரவு நேரங்களில் பயன்படுத்தப்படுவன, இம்முத்துக்களே; எம் நந்தியேந்தல் போர்க்களப் பாடி வீடுகளில் இரவுக்காலத்தில் விடியும்வரை விடிவிளக்காக வைத்துப் பயன்கொள்வதும் இம்முத்துக்களே; நாங்கள் இன்னும் காதணி, மூக்கணி, தலையணி முதலியவாகக் கொள்வதெல்லாம் இம்முத்துக்கள்தான். எங்கட்கு இந்நாட்டில் முத்துக்கட்குப் பஞ்சமில்லை; இங்கே இந்நாட்டில் அவை எங்கும் விளைந்து கிடக்கின்றன!' என்று தோழி மேலும் வியப்புறப் பெருமிதத்தோடு தலைவி கூறினுள். இக்கருத்தைக்கொண்டது, இப்பாட்டு.

நந்தி மன்னன் நாட்டுவளங் கூறியவாறு; முத்துக்கள் இருபது இடங்களில் பிறப்பதாக ஆன்றோர் அறிந்துரைத்துள்ளனர். அவை :

> [1]'தந்தி வராகம் மருப்பிப்பி பூகம் தணிக்கதலி
> நந்து சலஞ்சலம் மீன்தலை கொக்கு நளினம்மின்னார்
> கந்தரம் சாலி கழைகன்னல் ஆவின்பல் கட்செவிகார்
> இந்து உடும்பு கராமுத்தம் ஈனும் இருபதுமே.'

எனவரும் இரத்தினச்சுருக்கச் செய்யுளான் அறிக. எனவே, நந்திமன்னன் வளம்மிக்க நாட்டில் ஏனைய விளைபொருள்கள் போலக் கமுகு, வாழை, மூங்கில், கரும்பு முதலியவற்றிலும் அவைகளின் செழுமையால் முத்துக்கள் விளைந்துகிடப்பதாலும், சங்கு சலஞ்சலம்போன்ற நீர்வாழ் இனங்களிடத்தும், பிற காடுவாழ் விலங்காகிய யானை பன்றி முதலியவைகளிடத்தும் முத்துக்கள் நிறைய விளைந்து சிதறிக்கிடப்பதாலும் அவைகளையே அணிகளுக்கு எளிதாகப் பயன்படுத்துகின்றாரென்கின்றார்.

அடி - கால், பாதம், விளக்கும் அதை விளக்குதலாவது அழகுறும்படி சிலம்புமுதலிய அணியாக அணிவித்துவிளங்குதல். அன்றியும் அடிகளுக்கு இடும் துகில்களுக்கு விளக்கஞ்செய்தலுமென்றலுமாம். பிடி-பிடித்தல், கையில் கொண்டுசெல்லல். முதனிலைத் தொழிற்பெயர். ஊரார்-ஊர்க்குடிமக்கள்; இரவு ஆனவுடன் விளக்கேற்றாது நன்கு விளைந்த முத்துக்களையே வேண்டுமிடங்களிலெல்லாம் குவித்துவைத்துப் பயன்படுத்துவர். அவைகள் குவியலாகக் கிடப்பதால் அவைகளின் ஒளி, விளக்கேற்றிவைத்திருப்பது போல் சுடர்வதாதலால், ஊரார் வேறு தீ விளக்கேற்றாது இதனையே பயன்படுத்துவர் என்றபடி. படை வீடுகளுக்குப் பெருவிளக்காகக் கொள்வதும் இதுவே என்றார். முத்து அளவின்றிப் பெருகிக்கிடக்கும் செல்வச்செழிப்புக் கூறியவாறு. [2]'பூழியர் கோன் தென்னாடு முத்துடைத்து' என்பர் ஆன்றோர். (கஎ)

### நந்திமன்னன் வருகைச்சிறப்பு

#### நேரிசைவெண்பா

> ஏம வரைசலிக்கும் ஏழாழி யுங்கலங்கும்
> காம வயிரி களங்கறுக்கும்—சோமன்
> வருநந்தி யானத்து மாறரை விட்டுப்
> பொருநந்தி போந்த பொழுது.

---

1. இரத்தினச் சுருக்கம் : 2. தனிப்பாடல் :

(இ - ள்.) சோமன் வரு நந்தி - சந்திரன்போல வருகின்ற சிறப்புடையானும் பொரு நந்தி - போர் செய்கின்ற நந்தியென்னும் பெயரினனுமான மன்னன், மாதரை விட்டு - காதல்நங்கையரை விட்டுவிட்டு, யானத்து போந்த பொழுது - வானவூர்தியேறிப் புறப்பட்டபோது, ஏம வரைசலிக்கும் - பொன்மலையாகிய இமயமும் அசையும், ஏழ் ஆழியும் கலங்கும் - எழுவகைக் கடல்களும் கலக்கமடையும், காம வயிரி - காமனென்னும் பகைவனும், களங்கு அறுக்கும் - தன் குறைபாட்டை நீக்கிக்கொள்வான்.

(வி - ரை.) நந்தி மன்னன் புறப்பட்டால் நிகழும் நிகழ்ச்சிகள் இதனால் கூறப்படுகின்றன. மன்னன் விமானத்தில் ஏறிப் புறப்பட்டபோது, பொன்மலை அசையாததும் அசைந்துகொடுக்கும்; கலங்காத கடல்கூடக் கலக்கங்கொள்ளும்; காமனாகிய வயிரிபோல்பவனும் தான் செய்யுங்குற்றத்தை நீக்கிக்கொள்வான் என்பதாம்.

ஏமம் - பொன். பொன்னையுடைய மலை, பொன்மலை, அதாவது இமயம். மலை, அளக்கலாகா அளவும், அசைக்க இயலா வலிமையும் உடையது. அதினும் மலைகளிற் பெரியது இமயம். அதுவும் அசைவதானால், நந்திமன்னன் ஆற்றல் எவ்வளவு சிறந்தது என வியந்தவாறு. தன் ஆற்றலால் உக்கிர குமார பாண்டியன் மேருவைச் செண்டாலடித்த வரலாறும், முடியுடைவேந்தர் மூவரும் இமயத்தின் உச்சியில் தம் கொடிகளாகிய மீன் புலி வில் வடிவங்களைச் செதுக்கிய வரலாறும், கண்ணகியார் உருவமைத்தற்கு இமயத்தில் சேரன் செங்குட்டுவன் கற்பெயர்த்துக் கொணர்ந்த வரலாறும் இமயம் சலித்தற்கு ஏற்ற சான்றுகள். நந்தியேந்தலும் இன்னன போன்றவைகளை இமயத்தில் ஆற்றித் தன் உலையா வீரத்தை உயர்த்துவன் ஆதலால் 'சலிக்கும்' எனப்பட்டது. ஏழ் ஆழி - எழுகடல் என்பதோடன்றி, அலைமேலெழுகின்ற கடல் என்றலுமாம் அது, கலங்குதலாவது, உக்கிரகுமார பாண்டி வேந்தன் கடல் சுவற வேல்விட்ட வரலாறும், அயோத்தியேந்தல் வருணனைக் கடலில் வழிவிட வேண்டி அம்பு தொடுத்த வரலாறும், அகத்தியர் உழுந்தளவாக்கிக் கடல் நீரை உண்டு வறிதாக்கிய வரலாறும் போன்ற அருஞ் செயல்கள் செய்து, கடல் மீதும் தன் ஆணை செல்ல நிற்பனாதலால், 'கலங்கும்' எனப்பட்டது. காம வயிரி: இருபெயரொட்டுப் பண்புத்தொகை. காமனாகிய வயிரி என விரியும்.

வயிரி - வயிரிப் பறவை போன்ற கொடியன். களங்கு : களங்கம் கடைக் குறைந்தது. களங்கமாவது குற்றம், தன் குற்றத்தை விட்டுவிடுவான். அஃதாவது, காதல் கொண்ட ஆடவர்மீதோ பெண்கள் மீதோ ஓவாது மலரம்பு தொடுத்து ஒருசார் ஆண் பெண்ணுக்கே துன்பங் கொடுப்போன் ; அவ்வாறே, நந்தி மன்னன்பாற் காதல் கொண்ட மங்கையர் பலர் ; அவர், 'நந்தி மன்னன் திருமுகத்தைக் காண்பேமோ ! அவன் தோளை-தாளைத் தோய் தடக்கைகளைக் காணும்பேறு பெறுவோமா' என, எக்கற்று நிற்பர். அவர்தம் காதல் மேலும் விஞ்ச, அம்புதொடுத்து மன் மதன் அம்பெய்த வண்ணமாக இருப்பன் ; நந்திமன்னன் வெளி வந்து அம்மகளிர்கள் கண்டால் அவர் விருப்பமாகிய காண்டல் நிறைவேறலால், அவர்தம் காதல்வேட்கை சிறிது தணியும். ஆகவே, காமன் தன் களங்கமாகிய அம்பெய்தலை விட்டுவிடுவான். எனவே, இதனைக் 'காமன் களங்கறுக்கும்' என்றார். சோமன்- நிறை நிலா ; நிறை நிலாவின் தோற்றம் பேரழகாக இருத்தலால் நந்தி வருகையை சோமன் வருதல் போன்று என, உவமை குறித் தார். யானம் - விமானம் என்னும் சொல்லின் சிதைவு ; அஃது வானூர்தி. மானார் - பெண்கள் ; ஈண்டுக் காதற் கிழத்தியராகிய இற்பரத்தையர், சேரிப்பரத்தையர்கள். பொருதல் - போர் செய்தல். போந்த - வந்த. பொழுது - காலம், நேரம். காதற் கிழத்தியர் இல்லில் தங்கியிருப்பவனாகிய நந்தி வெளித்தோன்றி வந்தால், தன் பகைவர் நடுக்கங் கொண்டு கலக்கமுறுவர், என, நந்திமன்னன் வீரத்தைப் பாராட்டி, அதற்கு இவ்வாறு மலை மீதும் கடல்மீதும் காமன்மீதும் வைத்துக் கூறிய நயம் பாராட் டற்குரியது. (கூஅ)

### நந்திமன்னன்வீரம்

#### கட்டளைக்கலித்துறை

ஊரும் அரவமும் தாமரைக் காடும் உயர்வனமும்
தேரும் உடைத்தென்பர் சீறுத நாள்நந்தி சீறியபின்பு
ஊரும் அரவமும் தாமரைக் காடும் உயர்வனமும்
தேரும் உடைத்தென்ப ரேதெவ்வர் வாழும் செழும்பதியே.

(இ - ள்.) தெவ்வர் வாழும் - நந்திமன்னனுக்குப் பகை வேந்தர்கள் இருக்கின்ற, செழும்பதி - வளப்பமுள்ள நகர்கள், நந்தி சீறுத நாள் - நந்திமன்னன் சினங்கொண்டு போர்தொடுக்காத நாளில், ஊரும் - பல நாடுகளையும், அரவமும் - அவைகளில் மங்கலமுள்ள ஆடல் பாடல்களா

லான பல்வகை ஒலிகளும், தாமரைக்காடும் - தாமரை மலர் பூத்துள்ள நீர்நிலைகளும், உயர் வனமும் - வானந்தொட உயர்ந்த பூங்காக்களும், தேரும் - தேர்களும், உடைத்து என்பர் - தமக்குரியனவாகக்கொண்டு திகழுமென்று கண்டோர் கூறுவர், சீறிய பின்பு - நந்திமன்னன் சினந்து போர்தொடுத்த பின்னால், (அந் நகர்கள் தம் நிலைமாறி நாடெல்லாம் காடாகி) ஊரும் அரவமும் - ஊர்ந்து செல்கின்ற பாம்புகளும், தா - தாவி ஓடுகின்ற, மரைக்காடும - மான் குதிரை புலி கரடி போன்ற பல்வகை விலங்குகளும் நிறைந்த, உயர்வனமும்-செறிந்துள்ள காடுகளும், தேரும்-பேய்த்தேராகிய கானல் நீரும், உடைத்து என்பரே-தமக்கு உரிமையாகக் கொண்டிருக்குமென்றன்றோ பேசுவர்! (என்னே நந்தியின் வீரம்!)

(வி - ரை.) முற்பாட்டில் நந்திமன்னன் வெளிப்புறப்பட்டால் நிகழும் நிகழ்ச்சிகளையும், இப்பாட்டில் அவன் பகைமன்னர் நாடுகளில் படையெடுத்தால் நாடுகள் பாழாகிக் காடாக மாறிக் காண்டற்கரிய கொடுமையாக இருத்தலையும் விளக்குகின்றார்

நந்திமன்னன் படையெடுக்கும் முன்பு, பகை மன்னர் நகரங்கள், பல்வகை ஊரும், அவ்வூரினகண் ஆடலும் பாடலும் ஆகிய மங்கலவொலிகளும், தாமரைகள் படர்ந்துள்ள பல்வகைத் தடாகங்களும், வானைத்தொட வளர்ந்துள்ள இளமரப் பூங்காக்களும், நினைந்தவிடத்துக்கு விரைந்து செல்லத் தக்க புரவி பூட்டிய தேர்களும் உடையனவாய், ஒரு நாள் இருந்தோர்க்கும் மறுநாள் தம் நகரையே மறக்கும் சிறப்புடையதாக மேம்பட்டு விளங்கும்; அதே நகர்கள், நந்தி சினந்து படையெடுத்தால், அன்றே அவைகள் யாவும் அழிந்து பெருங் காடாகி, அங்கே யாரும் செல்லுதற்கேலாத அச்சந்தரும் கொடிய பாம்புகளும், தாவி ஓடுகின்ற பலவகை விலங்கினங்களும் காரை ஈஞ்சு சூறை வாகை முதலிய முட்செடிகளும் மரங்களும் நிறைந்த பாலைவனக் காடாகி, வெப்பத்தால் கானல் நீர் மிக்கதாக மாறிவிடும். ஆகவே, நந்தியை யெதிர்ப்பவர், நந்தலுறுதல் தவறாது என மன்னன் வீரத்தை விளக்கிக் கூறுகின்றார்.

ஊரும் முதலியவற்றில் வரும் உம்மைகள் எண்ணுப் பொருளில் வந்தன. சீறுதல் - சினங்கொள்ளல். ஊரும் என்பன இரண்டில் முன்னது, நாடு என்னும் பொருளது. பின்னது, ஊர்கின்ற என்பதால் பெயரெச்சம் அரவம் - பேரொலி, பாம்பு. தாமரை - தாமரை, தாவுகின்ற மரை. காடு - மிகுதி என்னும்

பொருளது. வனம் - பூங்கா ; பாலைவனம். தேர் - பேய்த்தேர். முதற் குறையாகத் தேரென வந்தது அதாவது, கானல் நீர். கதிரவன் வெப்பம் மிகுதியால் நிலம் சுவறி வெளிக் கிளம்பும் வெப்பக்கதிர்கள் தூரத்து நின்று பார்ப்பதற்கு நீர்போல் தோன்றுவதால் அதைக் கானல் நீர் என்றனர்.

இவ்வாறே முத்தொள்ளாயிரத்துப் பாண்டி மன்னனைப் பகைத்த வேந்தர்களின் நாடு சீர்கெட்ட நிலையைக் கூறுங்கால்

[1] ‘வாகை வனமாலை சூடி அரசுறையும்
ஓகை உயர்மாடத் துள்ளிருந்து—கூகை
படுபேய்க்குப் பாட்டயரும் பண்பிற்றே தென்னன்
விடுமாற்றங் கொள்ளாதார் நாடு’

எனவும், சோழமன்னன் பகைவர்நாட்டின் அழிவைக் கூறுங்கால்,

[2] ‘வேரறுகை பம்பி சுரைபடர்ந்து வேளைபூத்து
ஊரறிய லாகா கிடந்தவே—போரின்
முகையவிழ்தார்க் கோதை முசிறியார் கோமான்
நகையிலைவேல் காய்த்தினார் நாடு’

எனவும், இன்னும் மதுரைக் காஞ்சியில் ‘நாடாகும் பேர் காடாக’ என வருவனவும் பிற ஆன்றோர் உரைப்பனவும் பகைவர் நாடு சீர்கெட்டு ஒளிகுன்றிப் பாழானநிலைக்கு எடுத்துக் காட்டாக இக்கருத்தோடொப்ப இருத்தலை அறிக. (௬௬)

தலைவன், தன் தேர்ப்பாகனுக்குக்கழறல்

**கட்டளைக்கலித்துறை**

திருத்தேர் புகழ்நந்தி தேசபண்
டாரிதேள் ளாறைவெற்பில்
மருத்தேர் குழலிக்குக் கார்முந்தும்
ஆகின் மகுடரத்னப்
பரித்தேரும் பாகுமங் கேன்பட்ட
வோஎன்று பங்கயக்கை
நெரித்தே வயிற்றில்வைத் தேநிற்ப
ளேவஞ்சி நெஞ்சுலர்ந்தே.

---

1, 2. முத்தொள்ளாயிரம்: ௨0; ௧௧௬.

(இ - ள்.) (பாகனே! விரைந்து தேரைச் செலுத்து!) திருத்து ஏர் - சீர்பெற்ற அழகும், புகழ் - கீர்த்தியும் உடைய, தேசபண்டாரி நந்தி - தேசபண்டாரி யென்னும் சிறப்புப்பட்டம் பெற்றவனுமான நந்திமன்னனின், தெள்ளாறை வெற்பில் - தெள்ளாறு நாட்டுக்குரிய குறிஞ்சி நாட்டில் வாழ்கின்ற, மருத்தேர் குழலிக்கு - வண்டுகள் மணத்தை ஆராய்ந்து காண்கின்ற கூந்தலையுடைய எம் காதலிக்கு, கார்முந்தும் ஆகின் - மேகங்கள் நாம் போகு முன் தோன்றுமானால், வஞ்சி நெஞ்சு உலர்ந்து - வஞ்சிக் கொடி போன்ற எம காதலி மனம் தளர்ந்து, ரத்ன மகுட-மணிகளாணியன்ற முடியையுடைய, பரித்தேரும் - குதிரை பூட்டிய நம் தேரும, பாகும் - பாகனும், அங்கு என்பட்டவோ என்று - அங்கே எவ்வாறு வருத்தமுற்றனவோ என்று கூறிக்கொண்டு, பங்கயக்கை நெரித்து - செந்தாமரைமலா போன்ற தன் கைகளை முரித்து, வயிற்றில் வைத்து நிற்பள்-வயிற்றைப் பிசைந்து கொண்டு நிற்பளே! (என் செய்வது! விரைந்து தேர் செல்லவில்லையே!)

(வி - ரை) தலைவன் வேந்தன் பொருட்டுப் போருக்குச் சென்றான்; செல்லுங்கால் தலைவிபால் தான் கார்காலத்தில் வருவதாகக் கூறிசசென்றான்; போரும் முடிந்தது; கார்காலமும் வந்தது; மேகங்கள் சூல்கொண்டு விண்ணிடமெங்கும் கன்னங்கரே லென்று பரந்து, இடிஇடித்து முழக்கஞ் செய்தன; தலைவன் கண்டான்; அவனுக்கு மனம் பகீரென்றது; நாம் குறித்த காலம் வந்தது போலும்! இஃது ஆவணித் திங்களன்றோ என்று கருதினான்; பாகனை அழைத்தான்; தேரை ஒழுங்கு செய்; குதிரைகளைப் பூட்டு; விரைந்து செலுத்து என்றான்; அவ்வாறே ஒழுங்குபடுததிக் கொணர்ந்து நிறுத்தினான், பாகன்; தாற்றுக்கோலை கையில் எடுத்தான்; குதிரைகள் பறந்து செல்கின்றன. அப்போது தலைவன் பாகனை நோக்கிக் கூறுகின்றான்; 'பரிப்பாக! குதிரைகளை விரையச் செலுத்து! இங்கே மேகங்கள் கவிந்து நிற்கின்றன; உங்கே மின்னலுடன் முழங்குகின்றன; அங்கே மழைபொழிகின்றன; இம் மேகங்கள் எம் தலைவி வாழ்கின்ற நாட்டில் தோன்றாமல் இரா; தோன்றுமேல் நாம் கூறிய காலம் வந்தும் கேள்வர் வந்தாரில்லையே! எனக் கருதுவள்; செந்தாமரை மலரின் செந்நிறமும் மென்மையும் போன்ற தன் கைகளை நெரித்துக் கொண்டு வயிற்றைப் பிசைந்தழுவளே! என் செய்தும்; குதிரைகள் இன்னும் பறந்து செல்லத் தூண்டு'

என்று போர்முற்றி விரைபரித் தேரூர்ந்து வருகின்ற தலைவன் மொழிவதாக அமைந்தது இச் செய்யுள்.

திருத்துதல் - ஒழுங்குபடுத்துதல், இயற்கை யழகுமிக்க நந்தி மன்னன் செயற்கையால் புனைந்து மேலும் அழகு தோன்ற விளங்குவோனாதலான், 'திருத்து ஏர்' என அடைகொடுத்தான். தேச பண்டாரி: மன்னன் பட்டப்பெயர்களுள் ஒன்று. வெற்பு, அதன் சாரலில் உள்ள குறிஞ்சி நிலத்து ஊர்; மரு - மணம் ஈண்டு இயற்கை மணம். நல் இலக்கணம் வாய்ந்த மகளிர்க்குக் கூந்தலில் இயற்கையான தனி மணம் உளதென்பது, உடற்கூறு ஆயும் நுண்ணறிஞர் கண்டவுண்மை. இதனைத் திருக்கோவையார்த் தலைவன், தன் 'தலைவியின் வாய்போல் இயற்கை மணங்கமழும் அல்லிமலர்கள் நும் மருதநிலப் பாங்குகளில் உள்ளனவோ?' என்று வண்டுகளை நோக்கிக் கேட்பதாக வரும் செய்யுளும், குறுந்தொகைத் தலைவன், வண்டுகளை நோக்கி, 'என் தலைவியின் கூந்தல் மணம்போல் நீயறிந்தவரை மலர்களில் எங்கேனும் இருக்கின்றனவா?' என்று வினவுவதும் இயற்கை மணம் உண்டு என்பதை மெய்ப்பிப்பதாம்.

[1]'......ஈங்கிவள் தீங்கனி வாய்கமழும்
ஆம்பலம் போதுளவோ அளிகாள்நும் அகன்பணையே'

என்பதும்,

[2]'கொங்குதேர் வாழ்க்கை அம்சிறைத் தும்பி
காமம் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியல்
செறியெயிற் றரிவை கூந்தலின்
நறியவும் உளவோ நீயறியும் பூவே'

எனவும், முறையே அவை வருவன காண்க. அதனால் இங்கே தலைவன் தன் காதலி கூந்தலை, 'மருத்தேர் குழல்' எனப் பேசுகின்றான்.

மகுடரத்னம், இரத்தின மகுடம் என மாற்றித் தேருக்கு அடையாக்குக. பரித்தேர்: பரியையுடைய தேர்; உருபும் பயனும் தொக்கதொகை. பாகு - பாகுத்தொழில்; பாகன் - தேர் ஓட்டி. ஒற்று, அமைச்சுபோலவந்த பண்பு குறித்த உயர்திணைச் சொல். கைநெரித்தல் - துன்பம் வந்தகாலத்து மகளிர்கள் கையை நெரித்துக்கொண்டு வயிற்றைப் பிசைந்து, அல்லது வயிற்றிலடித்

1. திருக்கோவையார்: ௧௧. 2. குறுந்தொகை: ௨.

துக்கொண்டு அழுவது இயற்கையாகலான், அதை நினைவு கொண்டு தன் பாகனுக்கு விரைந்து குதிரையைத் தூண்டிச் செலுத்தும்படி குறிப்பால் குறிக்கின்றான் தலைவன். அவன, தன் உள்ளத்துத் தோன்ற 'வஞ்சி நெஞ்சுலர்ந்து பங்கயக்கை நெரித்தே வயிற்றில் வைத்தேநிற்பள்' என்று கூறியது நெஞ்சின் உள்ளன்பின் திறத்தை விளக்குகின்றது. (கOO)

தலைவி, கார்ப்பருவங்கண்டு வருந்துதல்

**எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்**

சிவனை முழுதும் மறவாத சிந்தையான்
செயமுன் உறவு தவிராத நந்தியூர்க்
குவளை மலரின் மதுவாரும் வண்டுகாள்!
குமிழி சுழியில் விளையாடு தும்பியே!
அவனி மழைபெய் குளிர்காலம் வந்ததே
அவரும் அவதி சொனநாளும் வந்ததே
கவலை பெரிது பழிகாரர் வந்திலார்
கணவர் உறவு கதையாய் முடிந்ததே.

(இ - ள்.) சிவனை - சிவபெருமானை, முழுதும் - எக்காலத்தும், மறவாத சிந்தையான் - மறவாமல் அன்பு கொண்ட நெஞ்சத்தையுடையானாகிய, முன் உறவு தவிராத - பழைய நட்பைவிடாத, செயநந்தி ஊர் - வெற்றியையுடைய மன்னனுக்குரிய நாட்டிடத்துள்ள, குவளைமலரின் - கருங்குவளை மலரிடத்துள்ள, மது ஆரும் வண்டுகாள் - தேனைக்குடிக்கும் பொறிவண்டுகளே! குமிழி சுழியில் - குமிழிகளையுடைய நீர்ச்சுழல்களில், விளையாடு தும்பியே - (ஓடியும் பறந்தும் வீழ்ந்தும் கிடந்தும்) விளையாட்டுச் செய்கின்ற கருவண்டுகளே! அவனி - இம் மண்ணுலகில், மழைபெய் - மழைபொழிகின்ற, குளிர்காலம் வந்ததே - கார்காலமும் இதுகாலை வந்துவிட்டதே, அவரும் - எம் காதற்கணவரும், சொ(ன்)ன அவதி நாளும் வந்ததே - கூறிய குறித்தகாலமும் வந்துவிட்டதே, (இவைகள் வந்துங்கூட) பழிகாரர் வந்திலார் - பழிகாரப் பாவி

வந்தாரில்லை, கவலை பெரிது - இதனால் எனக்கு வருத்தம் மிகுதி, கணவர் உறவு - எம் கணவரின் காதல் நட்பு, கதை யாய் முடிந்தது - பொய்க் கதைபோல் ஆயிற்று. (உண்மை யில்லை; அவர் இனி என்று வருவரோ? ஆ! நீங்களேனும் கூறுங்கள்!)

(வி - ரை.) மேற்பாட்டில் கூறியவாறு தலைவன் தேர்கடாவி விரைந்து வந்து கொண்டிருக்கின்றான்; தலைவி வாழும் குறிஞ்சி நிலத்தூரில் மேகங்கள் கறுத்துக்கூடி வானிற் படர்ந்தன. தலைவி கண்டாள். மலைச்சாரலில் சிறு சிறு சுனைகள்; அவற்றில் மணி போல் தெளிந்த நீர்பெருகி ஓடிக்கொண்டிருக்கிறது. அச்சுனை களில் குவளைகள் மலர்ந்து கண்கள்போற் காட்சியளிக்கின்றன; அக்குவளை மலர்களில் தேன்சுரந்து மேலே வந்துகொண்டிருக் கின்றது; அவைகளைப் பொறிவண்டுகள் கூடி மொய்த்து உண் கின்றன ஒருபால்; மற்றொருபால் கருவண்டுகள் மதுவுண்ட களிப் பால் அச்சுனைகளில் தோன்றும் குமிழிகளையுடைய சுழிகளில் பாய்ந்தும் விழுந்தும் மேலே பறந்தும் ஓடியும் விளையாட்டுச் செய் கின்றன; அவைகளை விளித்துத் தலைவி தன் காதற் கணவன் குறையைக் கூறி வருந்துகின்றாள்.

'பொறிவண்டே! கருந்தும்பியே! இப்போது உலகில் மழை பெய்யும் காலமோ வந்துவிட்டது. எம் கணவரும் கெடுச்சொல் லிப் போன காலமும் வந்துவிட்டது. இவைகள் வந்தாலும் அப் பழிகாரப் பாவி மனிதர் வந்தாரிலலை; இதனால் எனக்குக் கவலை மிகப் பெரிதாக வளர்ந்துவிட்டது. இதை யெண்ணிப் பார்த்தால் எம் கணவர் செயல், கதைபோல் முடிந்து பொய்யாகவே இருக் கின்றது! உண்மையென்பதே இல்லை! நீங்களாவது அவரிடம் போய் என் குறையை எடுத்துசசொல்லி கார்காலம் வந்துவிட்ட தையும் அவருக்கு நினைப்பூட்டுங்கள்' என்கின்றாள்.

'சிவனை மறவாத சிந்தையான்' என்றமையால் நந்தி மன் னன், சிவபெருமான்பால் பேரன்பு கொண்டவன் என்பது பெறப்பட்டது. முழுதும் - முற்றம் என்னும் பொருளது. அது நாள்முழுதும் என்றாகி, எக்காலத்தும் என்னும் பொருளில் வந் தது. முன் உறவு - பழைய நட்பு. முன்பே உண்டான நட்பு. நட்பை மூவகையாகப் பிரிப்பர். அவை: புணர்ச்சி, பழகுதல், உணர்ச்சியென. அவற்றுள், புணர்ச்சி ஒன்றுபட்டு இயற்கையாக ஓரிடத்தில் பிறந்து தொடர்பு கொள்வது; பழகுதல், ஒத்த குண முடையராகி நாள்தோறும் கண்டும் பேசியும் உதவியும் அளவளா வுவது; உணர்ச்சி முன்பின் நேரிற் காணாதவர்களாக இருந்தும் ஒருவர் சிறந்த புகழ்மைக் குணங்களை அறிந்து அன்புகொள்வது.

இவற்றுள், நாள்தோறும் கண்டும் பேசியும் கூடிசசேர்ந்து அளவளாவி நட்புக்கொண்டிருப்பதே பழமை நட்பு. இந்நட்பைப் பழைமை என்று தனி அதிகாரம் அமைத்துத் திருக்குறள் அறநூலில் வள்ளுவர் வகுத்துரைப்பர். இங்கே, 'முன்னுறவு தவிராத நந்தி' யென்றது, பழகுதல் நட்பை. பழைய நட்பினர்பால் குற்றங் காணப்படுங்காலும் அதைப் பொருட்படுத்தாது பழகிய பண்பையே பாராட்டுவனென, நந்தியின் உயர்ந்த குணப்பண்பையும், கண்ணோட்டத்தையும் காட்டியவாறும்.

குவளை - நீலமலர். வண்டுகள் மலர்தோறும் தேன் தேர்ந்துண்ணச சுற்றித்திரியும் தன்மையது; நந்தி நாட்டில் நீர்வளனும் நிலவளனும் மிக்குப் பெருகியிருப்பதால் குவளைமலர்களில் தேனைத் தேர்ந்துண்டு களியாட்டங் கொள்வவாயின. அந்நாட்டில் அஃறிணை உயிர்கள்கூட, இன்பமாக வாழ்கின்றன. மக்களின் சிறந்த வாழ்வு, சொல்லவேண்டாவெனக் குறிப்பால் தலைவி கூறி, தான் மட்டும் கணவரைப் பிரிந்து கலங்குகின்றேனென்பதையும் காட்டி, வண்டுகளை விளித்துக் குறை கூறுகின்றதாக அமைத்தார் ஆசிரியர்.

கணவர்மீது சினம் வந்தகாலை கற்புடை மகளிர் 'பழிகார'னென்றும் 'கொடிய'னென்றும் பிறவாறெல்லாம் வைவது உலகியல் முறை. அத்தன்மையால் இங்கே 'பழிகாரர்' என்றார். இவ்வாறே திருக்குறள் தலைவியும்,

[1]'கொடியார் கொடுமையின் தாங்கொடிய இந்நாள்
நெடிய கழியும் இரா'

எனக் 'கொடியார்' என்றதும், [2]'சிறுபட்டி' [3]'கள்வன் மகன்' என்றெல்லாம் பிறசான்றோர் கூறுவனவும் காண்க. (கoக)

நந்திமன்னன் மாலைச்சிறப்பு

**நேரிசைவெண்பா**

தொடர்ந்து பலர்இரந்த தொண்டையந்தார் நாங்கள்
நடந்த வழிகள்தோறும் நாறும்—படர்ந்த
மலைகடாம் பட்டனைய மால்யானை நந்தி
முலைகடாம் பட்டசையா முன்.

1. திருக்குறள் : ககசுக. 2, 3. கலித்தொகை: கூக.

(இ - ள்.) படர்ந்த - அகன்றுள்ள, மலை கடாம்பட்ட அனைய - மலையானது மதநீர் ஒழுக்குவதை யொத்த, மால் யானை நந்தி-பெரிய ஆண் யானையையுடைய நந்திமன்னனுக்குரிமையான, முலைகள் தாம் பட்டு அசையாமுன் - எம் கொங்கைகளின்மேல் அணியப்பெற்றுப் புரள்வதற்கு முன்பு, தொடர்ந்து - (நந்திமன்னன் உலாவரும்போதெல்லாம் அவனை) விடாதுபற்றிச் சென்று, பலர் இரந்த-பல மங்கையர்கள் விரும்பிக்கேட்ட, அம் தொண்டைத்தார் - அழகிய (அவனது) தொண்டை மலர்மாலையானது, நாங்கள் நடந்த-நாங்கள் போன, வழிகள்தோறும் நாறும்-பாதைகளிலெல்லாம் தன் மணங்கமழும்.

(வி - ரை.) நந்தியேந்தல் ஒருகால் பவனி வருங்கால் இள மங்கையர் காதலாற் கனிந்து தொடர்ந்து சென்றனர்; அவன் தொண்டை மாலையை விரும்பினர்; இரந்து முன்னின்று கேட்டனர்; அவன் அவர்கட்கெல்லாம் தொண்டைமாலையை அருளாது சென்றான்; காதலாற்கன்றிய நங்கையொருத்தி, அம்மாலையின் மணத்தைத தான் செல்லும் இடமெல்லாம் முகர்ந்து இன்புற்றாள்; அவள் கூறுகின்றாள்; 'எம் கொங்கைகள் நந்தி மன்னனுக்கே உரியவை; ஆகவே, ஒருகால், அக் கொங்கை முற்றத்தில் அவன் மாலைகிடந்து புரள்வது உறுதி. அதற்கு முன்னரேயே எங்கட்கு அதன் மணத்தை ஈந்து இன்புறுத்துகின்றது' என்கின்றாள்.

பலர். ஈண்டு ஒன்றொழி பொதுச்சொல்லாய் மங்கையர்களைக் குறித்தது. நாறும்-மணக்கும்; கமழும். நந்திமன்னனது பட்டத்தியானை பெரிது; அதன் தோற்றம் மலையேபோல் காணப்பெறும்; அது, மலையே மதம்பட்டு நீரொழுக்கிக்கொண்டு வருவதுபோல் தோன்றும் என்று யானையின் தன்மையை வியந்தவாறு. இத்தலைவி, நந்தியையன்றிப் பிறரைக் கனவினும் கருதாத் திண்ணிய நெஞ்சினள்; ஆகாலன் 'நந்தி முலைகள்' என்று தன் கொங்கைகளை அவனுக்கே உரிமைப்படுத்திக் கூறினாள்.

[1]" எங்கொங்கை நின் அன்பர் அல்லார் தோள்சேரற்க
எங்கை உனக்கல்லா தெப்பணியும் செய்யற்க
கங்குல் பகல்எங்கண் மற்றொன்றும் காணற்க'

என்று கூறும், நல்லியல் நங்கையர் கொள்கையும் உணர்க. (கOஉ)

---

1. திருவாசகம், திருவெம் : கக.

*தலைவி வருந்தல்*

**தரவு கொச்சகக்கலிப்பா**

நம்ஆவி நம்கொழுநர் பாலதா நம்கொழுநர்
தம்ஆவி நம்பால தாகும் தகைமையினால்
செம்மாலை நந்தி சிறுகுடிநாட் டன்னமே!
தம்ஆவி தாமுடையார் அல்லரே சாகாமே.

(இ - ள்.) செம் மால் ஐ நந்தி - சிறந்த திருமால் போன்றவனும் தலைவனுமாகிய நந்தியினது, சிறுகுடிநாட்டு அன்னமே - சிறுகுடி நாட்டிடத்தே இருக்கும் அன்னப் பேடையே! நம ஆவி - எம் உயிரானது, நம் கொழுநர் பாலதா - எம்முடைய கணவரிடத்ததாக, நம் கொழுநர் ஆவி - எம் கணவரது உயிரானது, நம்பாலது ஆகும் தகைமையினால் - நம்மிடத்தே இருக்கின்ற சிறப்பினால், சாகாமே - இறந்துபோகாதிருந்தும், தம் ஆவி - தம் முடைய உயிரானது, தாம் உடையர் அல்லரே - (காதலர் கள்) தமக்கே உரிமையாகவுடையரல்லரோ? (நீ கூறு; அறிவாயன்றோ?)

(வி - ரை.) தலைவி, தலைவன் பிரிவாற்றாது அன்னத்தோடு கூறி அலமருகின்றாள்: 'திருமால் போன்றவனும், தலைவனும் ஆகிய நந்தி மன்னனுக்குரிய சிறுகுடி நாட்டின்கண் வாழ்கின்ற அன்னப்பேடையே! உலகில் காதலராகவுள்ள ஆடவர் பெண் டிர் இருவர்களின் உயிரும் அவ்வவரைவிட்டுப் பிரிந்துபோய் ஆடவர் உயிர் பெண்டிரிடத்தும், 'பெண்டிர் உயிர் ஆடவ ரிடத்தும் மாறி நிற்பதனால், அவரவர் உயிர் அவரவர்கட்கு உரிமையில்லையோ! இறந்துபோனால்தானே உயிர், உடலைவிட் டுப்போகுமென்பர், உலகினர். சாவாதிருந்தும் என் உயிரைக கண்டேனில்லையே' என்று அன்னத்திடங்கூறித் தன் ஆற்றா வருத்தத்தை ஆற்றுகின்றாள். இக் கருத்தைக் காட்டுவது இப் பாட்டு. அரிய கருத்துச்செறிந்த அழகிய பாடல்.

கழியக் கழியாக் காதலன்புடையார்க்கு, [1] 'உயிரொன்று; உளமும் ஒன்று; ஒன்றேசிறப்பு' ஆகலானும், [2] 'தோகைக்கும் தோன்றற்கும் ஒன்றாய்வரும் இன்ப துன்பங்களே' என்ற

1, 2. திருக்கோவையார்: கஅ; எக.

லானும், கருத்தொருமித்த காதலர்கள் இன்பத்தினும் துன்பத்தினும் பங்குகொண்டு வாழ்வது உலகியல்பாகலான், அவ்வொருமைப்பாடு கருதிச் 'சாகாமே தம் ஆவி தாமுடைய ரல்லரே' என்றாள். இறப்பதென்பது, அவரவர் உடலைவிட்டு உயிர் பிரிந்துபோதல். இறக்காமலே என் உயிர் அவரிடம் சென்றுவிட்டது; அவருயிரும் அவ்வாறே என்பால் வந்து விட்டது என்கின்றாள். என்றால், இவள் எண்ணம் அவன்பாலே யும் அவன் எண்ணம் இவள்பாலேயும் உள்ளனவென்றபடி. இக் கருத்தையொப்ப, இராமாயணப்பெருங்காப்பியத்தில் வரும் ஓர் அரிய கருத்தும் இங்கே அறிதற்குரியது. ஆகலான், தருகின்றோம்:

அயோத்தியேந்தல் அடுகணையால், கிட்கிந்தைமன்னன் வாலி இறந்துபட்டானாக, அவன் பிரிவுக்காற்றாத அவன் மனைவி தாரையென்பாள் அழுதுபுலம்புங்கால்,

[1]"செருவார் தோளா! நின் சிந்தை உளென்எனில்
மருவார் வெஞ்சரம் எனையும் வெளவுமால்
ஒருவேன் உள்ளெனை ஆயின் உய்தியால்
இருவேம் உள்ளிரு வேமும் இருந்திலேம்'

என்று இறந்துகிடக்கும் வாலியை நோக்கி, 'செருவார்தோளா! நீ ஒருகால், என் நெஞ்சில் நீயுளாய் என்று கூறினையன்றோ? அது பொய்யென்றே கருதுகின்றேன். என் எனில்? உன் நெஞ்சில் நான் உளேனானால், அப்பகைவரின் கொடிய அம்பு, என்னையும் கொன்றிருக்குமன்றோ? நான் உயிர் வாழ்கின்றேனே! பிரியா தவனாகிய நீ, என் நெஞ்சில் இருப்பதுண்மையானால், நீ இறவா தன்றோ இருக்கவேண்டும். ஆகவே, நம் இருவர் உள்ளத்தினும் நாம் இருவரும் இல்லையென்பதுவே துணிபு' என்று கூறுவது, வியப்பொடு வருத்தத்தின் உயரிய தன்மையையும் அவலத்தை யும் உணர்த்துதல் காண்க. தம் என்னும் படர்க்கையிடப்பன் மைச்சொல், முன்னிலை, தன்மைகளில் வந்த வழுவமைதி. போர்க்களத்தில் வீரமரணம் எய்திய கணவனுடன் உயிர்நீத்த கற்புடையாளின் அரியசெயல் கண்டு மக்கள் வியந்ததாகப் புறப் பொருள்வெண்பாமாலை நூலார்,

[2]"ஓருயிர் என்ப துணர்க உடன்கலந்தார்க்கு
ஈருயிர் என்பர் இடைதெரியார்—போரில்
விடனேந்தும் வேலாற்கும் வெள்வளையி னாட்கும்
உடனே உலந்த துயிர்' என்றனர். (௧0௬)

1. கம்பராமா, கிட்கிந்தா காண்டம். அரசியல் : ௧0.
2. புறப்பொருள் வெண்பாமாலை :

### காலம்

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

மங்கையர்கண் புனல்பொழிய மழைபொழியும் காலம்
மாரவேள் சிலைகுனிக்க மயில்குனிக்கும் காலம்
கொங்கைகளும் கொன்றைகளும் பொன்சொரியும் காலம்
கோகனக நகைமுல்லை முகைநகைக்கும் காலம்
செங்கைமுகில் அனையகொடைச் செம்பொன்பெய் ஏகத்
தியாகியெனும் நந்தியருள் சேராத காலம்
அங்குயிரும் இங்குடலும் ஆனமழைக் காலம்
அவரொருவர் நாமொருவர் ஆனகொடுங் காலம்.

(இ - ள்.) *(என் அன்புடைத் தோழீ! இக்காலக் கொடுமையை என்னென்பேன்! கூறுவேன் கேள்!) மங்கையர் கண் புனல் பொழிய - (கணவர் பிரிவையாற்றலாற்றாத) மங்கையர்களின் கண்களினின்றும் நீர் பெருக்கெடுத்தோடும்படி, மழைபொழியும் காலம் - மேகங்கள் மழைபெய்கின்ற கார்காலமும் இதுவேயாகும், மாரவேள் சிலைகுனிக்க - மன்மதனானவன் தன் கரும்புவில்லை வளைத்து மலரம்பைத் தொடுக்க, மயில் குனிக்கும் காலம் - ஆண் மயில்கள் ஆடுகின்ற காலமும் இதுவேயாகும், கொங்கைகளும் கொன்றைகளும் - மகளிர்தம் கொங்கைகளும் கொன்றை மரங்களும், பொன்சொரியும் காலம் - முறையே பொன்போன்ற தேமலும் மலர்களும் மிகுதியாக மலர்கின்ற காலமும் இதுவேயாகும், கோகனகம நகைமுல்லை முகை - தாமரைகளும் ஒளி பொருந்திய முல்லைச்செடிகளும் தத்தம் செவ்வியரும்புகொண்டு, நகைக்கும் காலம் - மலர்கின்ற காலமும் இதுவேயாகும், முகில் அனைய - மேகத்தையொத்த, கொடைச் செங்கை - (கைம்மாறு கருதாது) கொடுத்தலையுடைய சிவந்த கைகளினால், செம்பொன் பெய் - (இரவலர்களுக்குச்) சிறந்த பொன்னைப் பெய்தருளுகின்ற, ஏக தியாகி எனும் - ஒப்பற்ற தன்னலந் துறந்தவனாகிய, நந்தி அருள் சேராத காலம் - நந்திமன்னது அருளானது (அவன் காதல் மங்கையர்களுக்குக்) கிட்டாத காலமும்*

இதுவேயாகும், அங்கு உயிரும்-(நம் கணவர் வாழும்) அத் தொலைநாட்டிடத்தே என் உயிரும், இங்கு உடலும் - இவ் விடத்தே என் உடலும், ஆன மழைக்காலம்-ஆகித் தனித் தனியே இருக்கச் செய்த கார்காலமும் இதுவேயாகும், அவர் ஒருவர் - அக் கணவர் தன்னந்தனியராகவும், நாம் ஒருவர் ஆன - நாமும் தன்னந்தனியராகவும் ஆக்கிய, கொடுங் காலம் - கொடுமையையுடைய காலமும் இதுவே யாகும். (கார்காலம் வந்ததே! இன்னும் காதலர் வந்திலரே! என் செய்வேன்!)

(வி - ரை.) தலைவி, கணவன் கூறிச்சென்ற கார்காலம் வரக்கண்டு வருந்துவதாக அமைந்தது இப்பாட்டு. கலம்பக உறுப்புக்களுள், காலம் என்பதும் ஒன்றாகும். பாட்டுடைத் தலைவன் நாட்டில் வாழுகின்ற கணவரைப் பிரிந்துறையும் மங்கையர், தம் காதற்கணவர் வேற்றுநாட்டுக்குப் பிரிந்துசென்றவர்- கார்காலம் வந்தவுடன் வருவதாகக் கூறிசசென்றவர் - வாராமை கருதி வருந்துவதாகப்பாடி நந்திமன்னன் நாடு, தங்கள் நாயகரில் தெய்வம் தவம்பிறிதில வென்றெண்ணும் மங்கையர்களைக்கொண்ட நாடு என, நாட்டின் சிறப்பைக் குறித்தாள். என்னை? கற்புக்கடம்பூண்ட பொற்புடை நங்கையர் வாழும் நாட்டில்,

[1]'வானம் பொய்யாது வளம்பிழைப்பு அறியாது
நீணில வேந்தர் கொற்றஞ் சிதையாது
பத்தினிப் பெண்டிர் இருந்த நாடு'

என்பது ஆன்றோர் மறையாகலான் என்க.

மங்கையர் - கணவரைப்பிரிந்து வாழ்வோர். கண்புனல் - அழுகைக்கண்ணீர். சிலை - வில். குனித்தல் - வளைத்தல்; ஆடுதல். சொரிதல் - உதிர்தல்; மிகுதியாக உண்டாதலை இங்கே குறித்தது. நகைத்தல் - சிரித்தல், சிரித்தல்போலிருத்தலால் மலர்தலை நகைத்தல் என்றாள். முகில் - நீர்கொண்டமேகம். கொடை - கொடுத்தல். ஈண்டு, மேகம் நந்தி மன்னன் பயன் கருதாது கொடுக்கும் கொடைக்கு உவமை. செங்கையென்பது சிவந்த கை. கொடுத்துக்கொடுத்து இயற்கையோடு மிகச் சிவந்தகையென்பதாம். தியாகி - தன்னலம் துறந்தோன்; தனக்கென வாழாதோன் என்பது பொருள். அங்கு உயிர் இங்கு உடல் என்பது, தன் கணவன் பிரிவுக்காற்றாது வருந்தி அவன்போன இடத்தையே யெண்ணியெண்ணி உயிரின் உணர்வு அங்கேயே

1- சிலப்பதி. கூ : கஎ௫ - எ.

நிற்ப, உடல் மட்டுமே உணர்வற்றிருக்கும் நிலை. அதனால் பின்னரும், 'அவரொருவர் நாமொருவர்' என்று வாய்விண்டுகூறி மறுகுகின்றாள். இதனால் கார்காலம் வந்ததை அவ்வந் நிகழ்ச்சிகளால் கூறியதறிக.

பொழிய பொழியும், துனிக்க துனிக்கும் என்பன, சொற்பின் வருநிலையணியாக அமைந்தின்பந்தருதலை அறிக. (௧௦௪)

## இதுவும் அது

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

அன்னையரும் தோழியரும் அடர்ந்துபொருங் காலம்
ஆனிபோய் ஆடிவரை ஆவணியின் காலம்
புன்னைகளும் பிச்சிகளும் தங்களின்மகிழ்ந்து
பொற்பவள வாய்திறந்து பூச்சொரியும் காலம்
செந்நெல்வயற் குருகினஞ்சூழ் கச்சிவள நாடன்
தியாகியெனும் நந்திதடந் தோள்சேராக் காலம்
என்னையவர் அறமறந்து போனாரே தோழீ!
இளந்தலைகண் டேநிலவு பிளந்தெரியும் காலம்.

(இ - ள்.) தோழி - என் அரிய தோழியே! அன்னையரும் தோழியரும் - அன்னைமார்களும் தோழிமார்களும், அடர்ந்துபொரும் காலம் - நெருங்கிவந்து எம்மை வைகின்ற காலமும் இதுவேயாகும், ஆனிபோய் ஆடிவரை - ஆனித்திங்கள் கழிந்துபோய் ஆடித்திங்கள் முடிந்து, ஆவணியின் காலம் - ஆவணித் திங்களாகிய கார்காலத் துவக்கமும் இதுவேயாகும், புன்னைகளும் பிச்சிகளும் - புன்னை மரங்களும் சாதிமல்லிகைச் செடிகளும், தங்களின் மகிழ்ந்து - தம் உள்ளிடம் செழித்து, பொன் பவள வாய் திறந்து - அழகிய பவளத்தையொத்த தத்தம் வாய்களாகிய இதழ் விரிந்து, பூ சொரியும் காலம் - மலர்களைக்கொட்டுகின்ற காலமும் இதுவேயாகும், செம்நெல் வயல் - செந்நிற நெற்பயிர்களையுடைய வயல்களில், குருகு இனம் சூழ் - பல்வகைப் பறவைக்கூட்டங்கள் வட்டமிட்டிருக்கின்ற, கச்சிவளநாடன் - காஞ்சி நகர வளநாட்டுக்குரியோனும், தியாகி எனும் - தன்

னலந் துறந்தோனும் என்று புகழப்படுகின்ற, நந்தி தடம் தோள் சேரா காலம் - நந்திமன்னனுடைய தோள்களைச் சேராமல் அவன் காதல் மகளிர் கண்கலங்கி இருக்கின்ற காலமும இதுவேயாகும், அவர் - வேற்றுநாடு சென்றவ ராகிய என் கணவர், என்னை அற மறந்துபோனாரே - என் னைச் சிறிதும் கருதாமல் மறந்துபோய்விட்டாரே, இளந் தலை கண்டு - என் எளிய நிலையை அறிந்து, நிலவு பிளந்து எரியும் காலம-சந்திரனினின்றும ஒளிக்கதிர்கள் வெடித்து எரிந்துகொண்டிருக்கின்ற காலமும இதுவேயாகும். (இன் னும் வந்திலரே! என் செய்வதென்று தோன்றவில்லையே!)

(வி - ரை.) இதுவும் முற்பாட்டில் கூறிய கார்காலங்கண்டு தலைவி வருந்துவதாகக் கூறுகின்ற துறைப்பாட்டாகும்.

அன்னையர்: ஊட்டுந்தாய், பாராட்டுந்தாய் முதலிய செவிலி கள். தோழியர்: தன்னோடு ஒருமையுள்ள நட்புடை இளமகளிர் கள். பொருதல் - போர செய்தல். அவர் போர் செய்தலாவது, இவள் ஓவாது கணவனை நினைந்து வருந்துதற்கு ஆதரவு கூறித் தேற்றுதல். தேற்றியும் தேறாதிருப்பது கண்டு கடிந்து பேசுதல். 'ஆனிபோய் ஆடிவரை ஆவணியாம் காலம' என்பது, நிலத்தை யும காலத்தையும் **முதற் பொருள்** என்றும், காலத்தில் தோன்றும் பொருள் முதலியவற்றைக் **கருப்பொருள்** என்றும், காலத்தில் காதலர்க்குத் தோன்றும் **ஊடல் கூடல் பிரிதல் இருத்தல் இரங்க** லாகிய நிகழ்ச்சிகளை **உரிப் பொருள்** என்றும் அகப்பொருள் நூலார் வழங்குப. அம் முறையில காலத்தைச் சிறுபொழுது பெரும் பொழுது என இருவகைப்படுத்துவர். சிறுபொழுது ஒவ்வொரு நாளும் தோன்றும் காலை மாலை நண்பகல் முதலிய ஆறு வகையது. பெரும் பொழுது, கார் கூதிர் **முன்பனி பின் பனி** இளவேனில் முதுவேனில் என்பனவாம். இது ஆவணித் திங்கள தொடங்கி இவ்விரண்டு திங்களாக வகுத்துரைப்பர். இதனை நம்பியகப் பொருளில்,

[1] 'காரே கூதிர் முன்பனி பின்பனி
சீரிள வேனில் வேனில் என்றாங்கு
இருமூன்று திறத்தது பெரும்பொழு தாகும்'

என்று கூறும் நூற்பாவால் அறிக.

---

1. நம்பியகப் பொருள்:

இதில் முதுவேனிற் பருவமே ஆனியும் ஆடியும் ஆகும். இப் பருவம் போனவுடன் கார்காலம் துவங்குகின்றது. ஆவணித் திங்களும் பிறக்கின்றது. தலைவிக்குத் தலைவன் வருவதாகக் கூறிச் சென்ற காலம் இத் திங்களேயாலான், 'ஆவணியின் காலம்' என்றாள்.

புன்னை பிசசி முதலிய மரங்களும் செடிகளும் கார்காலம் துவங்கி மழை பொழிந்தவுடன் தளிர்ன்று இலை கொண்டு அரும்பு கட்டிப் பேரரும்பாகி மலர்வது இயல்பு. அதனை வாயாக்கி, வாய்திறத்தலை மலர்தலாகக் கொண்டு, சொரியும் காலம் என்றாள். குருகு - பறவைகட்கெல்லாம் பொதுப் பெயர். ஆயினும் ஈண்டு நீர்வாழ் பறவைகளையே முதன்மையாகக் குறிப்பதாகும். நந்தி மன்னன் கச்சிநாட்டு வளங் கூறியவாறு. இளந்தலை - எளிமை, இளக்கம் என்பர், உலக வழக்கில். 'என்னையவர் அறமறந்து போனாரே தோழி' என்பதில் பிரிவுத் துன்பந் தாங்கலாற்றாத பெணமையுள்ளமென்மை புலனாதல் காண்க. என்னே நூலாசிரியர் தம் புலமை மாண்பு! நிலவு - சந்திரன். பிளந்து எரிதல்-வெடித்துக் கொண்டு வந்து கதிர்களைக் கொட்டுதல். நிலவின் ஒளி மிகுதி கூறியவாறு. காதலர்க்கு நிலவின் ஒளி வெப்பத்தைத் தந்து துன்புறுத்துவதாதலான் இவ்வாறு கூறினாள். (க0ரு)

## தலைவி, பாணனைப் பழித்துரைத்தல்

### நேரிசைவெண்பா

ஈட்டு புகழ்நந்தி பாண!நீ எங்கையர்தம்
வீட்டிருந்து பாட விடிவளவும்—காட்டிலழும்
பேயென்றாள் அன்னை பிறர்நரியென் றார்தோழி
நாயென்றாள் நீயென்றேன் நான்.

(இ - ள்.) பாணநீ - பாணனே! எங்கையர்தம்-என் தங்கைமார்களுடைய, வீட்டு இருந்து - வீடுகளில் தங்கியிருந்து கொண்டு, விடிவு அளவும் பாட - இரவு நேரமெல்லாம் விடிகின்றவரையிலும் நீ பாடுதலால், அதைக் கேட்டு, அன்னை - என் தாயானவள், ஈட்டு புகழ்நந்தி காட்டில் அழும் - சேர்ந்த புகழையுடைய நந்திமன்னனது வனத்தில் அழுகின்ற, பேய் என்றாள் - இது பேயின் குரல் என்று கூறினாள், பிறர் - மற்றையோ ரெல்லோரும், நரி என்றார் - (இல்லை இல்லை) இது நரியின் ஊளைக்குரல் என்ற

னர், தோழி - என் தோழியானவள், நாய் என்றாள் - (இல்லை, இல்லை) இது நாய் குரைக்கின்ற குரலென்று கூறினாள், நான் - நான் மட்டும், நீ என்றேன் - நீ பாடுகின்ற பாட்டினது குரல் என்று கூறினேன். (நீ இவ்வளவு அழகுபெறப் பாடுகின்றாய்; இந்தப் பாட்டையும் இன்புற்றுக் கேட்கின்றனரே!)

(வி - ரை.) களவில் இன்பந் துய்த்த தலைவன், தலைவியை மணந்து கொண்டு, இருவரும் இல்லற வாழ்வாகிய கற்பில் ஒழுகி வந்தனர். இவர்கட்குச் செல்வப் புதல்வன் தோன்றினான். தலைவன் காதற் பரத்தை இல்லினைக் கருதினான்; சென்றான்; அவண் தங்கலானான்; தன் இல்லிற்கு வாராது காலங் கடத்தினான்; ஒருநாள் தன் புதல்வனைப் பார்க்கத் தலைவனுக்கு வேட்கை மிக்கது. தான், தன் இல்லத்திற்குப் பன்னாட்களாகச் செல்லாததால் தலைவி வெகுண்டிருப்பது அறிவான்; ஆகவே, தலைவியின் சினத்தைத் தணித்தற்குத் தன்னுடன் திரிதருகின்ற பாணனைத் தூதனுப்பினான். அவன் வந்து தலைவிக்குத் தலைவன் வருவதாகக் கூறினான்; தலைவி கடுஞ்சினங் கொண்டாள்; கடிந்து பேசினாள்; பின்னர்ப் பாணன் பாடினான்; ஆடினான்; தலைவன் சிறப்பைப் பாட்டாக அமைத்து இசைத்தான்; அது கேட்டாவது சினந்தணிவாள்; தலைவனை வரவேற்பாளென்ற எண்ணத்தால். அதுகாலை மேலுஞ் சினங்கொண்டு கூறியதாக அமைந்ததே இப் பாடற் கருத்து. அவள் பேசுகின்றாள்:

"பாண! உன் பாடலை நிறுத்து; உன் பாட்டின் தன்மையை-உன் குரல் அழகையெல்லாம் - நான் நன்கறிவேன். நீ நாள்தோறும் இற்பரத்தையா, சேரிப் பரத்தையர்களாகிய எம் தங்கையர்களின் வீட்டில் இரவெல்லாம் பாடுகின்றாயன்றோ? அதை ஒருநாள் கேட்ட என் தாய், 'இஃதென்ன குரல்? நந்திமன்னனுக்குரிய காடுகளில் இருந்து பேய் அழுகின்றதோ?' என்று என்னை வினவினாள். அதைப் பக்கத்திலிருந்தோர் கேட்டு 'இல்லை, இல்லை! காடுகளில் நரி ஊளை இடுகின்றது!' என்று கூறினார்கள், என் தோழி அதைக் கேட்டு, 'நீங்கள் அறியாது கூறுகின்றீர்கள்; அடுத்த வீட்டில் நாய் குரைக்கின்றது! அந்தக் குரல்தான் இது' என்று கூறினாள். இவைகளையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்த நான் மட்டும் 'நீ பாடுகின்ற பாட்டு' என்று கூறினேன். இந்த அழகில் உன் பாட்டைப் பாராட்டிப் பேசுவதை நீயறியாய்! நான் அறிவேன். கொல்ல தெருவில் என் ஊசி விற்கின்றாய்! போ போ! வந்தவழியைப் பார்த்துக்கொண்டு! அவர் இங்கே வரவேண்டா! என் தங்கையர் இல்லமே தமக்குரிமையாகக்

கொண்டு வாழ்வாராக. நாங்கள் இதோ எம் அருமைச் செல்வன் இருக்கின்றான்! அவனைப் பாராட்டிச் சீராட்டிப் போற்றி வாழ்கின்றோம்! இதுவே இன்பப் பொழுதாகக் கழிகின்றது! அவர் என் தங்கையாக்கே வாழ்நாள் முழுதும் அருள்வாராக. நீ, இனி இங்கே இமைப்போதும் நில்லாதே! அங்கே செல்; அவர் உன்னை எதிர்பாரா திருப்பர்! புலைத்தின்னிப் பாணா! போ போ! இங்கே உனக்கொரு வருகையா!'' என்று கடுகடுக்கின்றாள்.

'ஈட்டு புகழ் நந்தி'யென்னும் சொற்றொடரைக் காட்டில் என்பதனோடு கூட்டிப் பொருள் கொள்க. பரத்தையிற் சேரும் ஆடவர்க்கு அதற்கு உதவியாக அமைவோர் பாணர். ஆகவே, பாணர்களைத் தூதாக அனுப்புதலை வழக்கமாகக் கொண்டிருந் தனர். அதனால். இத தலைவனும் தனக்குப் பணிந்தொழு கும் பாணனைத் தூதாக அனுப்பினான். பாணன் பாடுவதைக் கேட்டுப் பேயென்றும் நரியென்றும் நாயென்றும் இகழ்ந்தவாறு.

இக் கருத்தோடொப்ப வேறுபல நூல்களினும் வருவன பரக்கக் காணலாம். திருக்கோவையார்த் தலைவி,

[1] 'மைகொண்ட கண்டர் வயல்கொண்ட
தில்லைமல் கூரர்நின் வாய்
மெய்கொண்ட அன்பினர் என்பதென்
விள்ளா அருள்பெரியர்
வைகொண்ட ஊசிகொல் சேரியின்
விற்றெம்இல் வண்ணவண்ணப்
பொய்கொண்டு நிற்கலுற் றோபுலை
யாத்தின்னி போந்ததுவே'

என்பதும், தஞ்சை வாணன் கோவைத் தலைவி,

[2] 'தலையா கியதன்மை ஊரற்கு
வாணன் தமிழ்த்தஞ்சைசூழ்
மலையா கியமதில் வையைநன்
னாட்டெங்கை மான்படுக்கும்
கலையாகும் நின்னிசைக் கண்ணிகொண்
டேயெதிர் கன்றுதின்னிப்
புலையா கடக்களம் இற்போக
போக புறங்கடையே'

1. திருக்கோவையார் : நஅக.
2. தஞ்சைவாணன் கோவை : நகந.

என்பதும் பாணனைப் பழித்துரைத்தலாக வருதல் காண்க. பிற்காலம் விரைந்து பாடும் புலவராகத் திகழ்ந்த காளமேகப் புலவர் ஒரு தேவடியாளின் பாட்டைக் குறித்து வசைகூறிப் பாடியதும் இப்பாடலோடொத்த கருத்தாகலான், இலக்கியச் சுவைதேர் இன்பினர் கொள்ள அதனையும் வரைகின்றாம்; காண்க:

[1] 'வாழ்த்து திருநாகை வாகான தேவடியாள்
பாழ்த்த குரலெடுத்துப் பாடினாள்—நேற்றுக்
கழுதைகட்ட வண்ணான் கண்டேன்கண் டேனென்று
பழுதையெடுத் தோடிவந் தான் பார்'

என்பது அறிக.

பேய், நரி, நாய், நீ என்பன, அவ்வக்குரல்கட்கு ஆகுபெயராக வந்தன. எங்கையர் என் தங்கையர் என்ற சொல்லின் மரூஉ. வீட்டிருந்து: ஏழன் உருபு தொக்க வேற்றுமைத் தொகை. விடிவு - விடிதல். இராப்பொழுது நீங்குதல்: தொழிற்பெயர். இப் பாட்டு நகைச்சுவைக்கு விருந்தாக அமைந்து இன்பந்தருதல் அறிக. (கo௬)

செவிலி இரங்குதல்

**கட்டளைக்கலித்துறை**

கோட்டை இடித்தகழ் குன்றாக்கிக்
குன்றகழ் ஆக்கித்தெவ்வர்
நாட்டை மிதிக்கும் கடாக்களிற்
றான்நந்தி நாட்டினில்போன்
தோட்டை மிதித்தந்தத் தோட்டுடு
பாய்ந்து சுருள்அளகக்
காட்டை மிதிக்கும் கயற்கண்ணி
யோசுரம் சால்வைப்பதே.

(இ ள்.) கோட்டை இடித்து - (பகைவர் நாட்டின்) மதில்களைத் தன் கொம்புகளால் குத்தித் தகர்த்து, அகழ் குன்று ஆக்கி - அங்குள்ள அகழிகளின் பள்ளத்தை அவைகளைக் கொண்டு கொட்டி நிரப்பி மலைபோல மேடாக

---

1. தனிப்பாடல்:

ஆக்கி, குன்று அகழ் ஆக்கி - மலைபோல் உயர்ந்த மதில்களை இடித்துக் கீழே பள்ளமாகச் செய்து அகழியாக உண்டாக்கி, தெவ்வர் நாட்டை மிதிக்கும் - பகை மன்னர்களின் நாட்டுக்குள் (வெற்றியுடன்) தன கால்களை வைத்துச் செல்கின்ற, கடாக்களிற்றான் - களிற்றியானையை யுடையனுனை, நந்தி நாட்டினில - நந்திமன்னனுக்குரிய நாட்டினிடத்திலே, பொன் தோட்டை மிதிதது - பொன்னுலான காதணியையும கடந்து சென்று, அந்தத் தோடு ஊடு பாய்ந்து - அததோடுகளுள்ள காதுகளின் நடுவிடத்தில் சென்றேறி, சுருள் அளகக் காட்டை மிதிக்கும் - சுருண்டுள்ள கூந்தலாகிய காடுவரை போய் மீள்கின்ற, கயல் கண்ணியோ - கெண்டை மீனையொத்த கண்களை யுடைய என் மகளோ, சுரம் கால் வைப்பது - நடத்தற்கரிய இப்பாலைநில வழியில் கால் வைத்து நடந்து செல்வது! (அந்தோ! பஞ்சினும மெல்லிய கால்களை இதில் எப்படி வைத்தனளோ! எவ்வாறு நடந்து சென்றனளோ! ஆ! கொடுமையே! காதலே!)

(வி - ரை.) கோட்டை - பகை மன்னர்களின் மதில்கள் நந்தி மன்னனுடைய யானைகள் பகைமன்னர் நாட்டில் போருக்குப் புகுந்தால் வறிதே மீள்வதில்லை; அங்குள்ள கோட்டை கொத்தளங்களையெல்லாம் இடிததுத் தகர்த்து, கோட்டையின் கீழே உள்ள கட்டிடம் வரை தோண்டி அகழ்போல் ஆக்கிவிடுமென்றும் இடித்த அக்கோட்டையின் இட்டிகைகளைக்கொண்டு அகழியைத தூர்த்து விடுமென்றும் கூறுவதால், நந்திமன்னன் வீரச சிறப்பும, எதிர்த்தோர் கெட்டொழிவதும் கூறப்பட்டன. இத்தகைய மன்னன் நாட்டில் இவ்வாறு! இவள் செல்வதென்று உடன்போக்கில் சென்ற தலைவியை நினைத்து அவளைத் தேடிச் சென்ற செவிலி வருந்துந்துறையில் அமைந்தது, இப்பாட்டு.

பொன்தோடு - காதில் அணியும் பொன்னுலான தோடு· சிறந்த இலக்கணம் வாய்ந்த மங்கையர்க்குக் கண்கள மிக நீண்டு காதளவோடியிருப்பது இயற்கை இதனைக் [1]"குமிழ்மிசைமறிந்து குழையெதிர் நடந்து' என்பதால் அறிக. மிதித்தல் - கடத்தல் என்னும் பொருளில் வந்தது. செவிலி, பெற்றதாயினும் பெரிதுவந்து வளர்தத நற்பேறுடையாள். அவளைவிட்டுச சென்றது, செவிலிக்குத் தாங்கொணுத வருத்தத்தைத் தந்தது. தேடினுள்;

1. நைடதம், அன்னத்தைத் தூது : கரு.

ஓடினாள்; காணவில்லை. காலடிச்சுவட்டைப் பினபற்றினாள். கொடுங்காடு வழி அச்சுவடு போயின. அக் காட்டின் கொடுமையைக் கண்டு தாங்கலாற்றாது 'சுரம் கால் வைப்பதே' என்று கூறிக் கலுழ்கின்றாள். இதில் தாய்மை உள்ளப்பண்பு தோன்றுதலை அறிக. இக்கருத்தொப்ப அம்பிகாபதி கோவையில் வரும் செவிலி வருந்துவதும் படித்து இன்புறற்குரித்து.

[1]'கல்லார் சுரத்தில் வருவார் இருவரைக் கண்ட எல்லை
எல்லாம் அவரவர் என்றிருந் தேனவர் எம்இருவர்
அல்லா நிலைமை அருவினை யேனிங் கறிந்தபின்னும்
செல்லாது நீண்டொரு காலிரு காலும்என் சிந்தையுமே'

எனவருவது காண்க.

அளகக்காடு - கூந்தல். காடுபோல் அடர்ந்திருப்பதால் புலவர் பெருமக்கள் காடென்றே வழங்குவர் [2]'ஐம்பாற் காடும் சுமக்கும் கரும்பே' என்று குமரகுருபர அடிகள் கூறுதலானும் அறிக. (௧0எ)

தலைவி வருந்தல்

**நேரிசைவெண்பா**

செந்தழலின் சாற்றைப் பிழிந்து செழுஞ்சீதச்
சந்தனமென் றாரோ தடவினார்—பைந்தமிழை
ஆய்கின்ற கோன்நந்தி ஆகம் தழுவாமல்
வேகின்ற பாவியேன் [3]மெய்.

(இ - ள்.) பைந்தமிழை - இனிய தமிழ் நூல்களை, ஆய்கின்ற - கற்று ஆராய்ச்சி செய்கின்ற, கோன் நந்தி - அறிஞர் தலைவனை நந்தி மன்னனது, ஆகம் தழுவாமல் - மார்பைச் சேராததால், வேகின்ற - கொதிக்கின்ற, பாவியேன் மெய் - நல்வினையில்லாதேனாகிய என் உடலின்மீது, செழும் சீத - மிகக் குளிர்ச்சியுடைய, சந்தனம் என்று - சந்தனக் குழம்பென்று பெயர் வைத்து, செம் தழலின் சாற்றை பிழிந்து - செந்நிறம் வாய்ந்த நெருப்பின் திரளையெல்லாம் ஒன்றாகக்கூட்டி, ஆரோ தடவினார் - அதன்

1. அம்பிகாபதி கோவை: ௪0அ.
2. சகலகலாவல்லிமாலை: உ. (பாடம்) 3. மேல்.

தன்மையறியாத எவரோ பூசிவிட்டார்கள். (இல்லையேல் இவ்வளவு சுடாதன்றோ? சந்தனக்குழம்பா சுடும்! உடலெல்லெல்லாம் எரிகின்றதே! ஆ!)

(வி - ரை) நந்திமன்னன்மேல் காதல்கொண்ட நங்கை ஒருத்திக்கு உணவு செல்லவில்லை; உறக்கமும் கொள்ளவில்லை; காதல் மிக விஞ்சியது; உடல் முழுதும் அவட்கு நெருப்புப்போல் கொதிக்கின்றது; கதறினாள்; வாய்புலம்பினாள். அதைக் கண்ட அவள் தோழிமார் வெப்பந்தணிதற்குச சந்தனத்தை மணப் பொருள்களோடு கூட்டிககலந்து குழைத்து அவள் உடலெங்கும் தடவினர். காதலர்க்குக் காதல் வெப்பத்தால் குளிர்ந்த பொரு ளெல்லாம் சுடுவது இயற்கை. ஆதலால் அதைச சுடுவதாகத் தலைவி கூறி வருந்துகின்றாள். நெருப்பின் சாரத்தையெல்லாம் ஒன்றாகச் சேர்த்தெடுத்துக் குழப்பி அதற்குச சந்தனமென்று பெயர் வைத்து, அறியாத (பைததியக்காரததனமுள்ள)வர்கள் எவரோ தடவிவிட்டனர். இதுவா சந்தனக் குழம்பு? சந்தனமானால் சுடுமா? யாரை ஏமாற்றுகின்றனர்? என்று சினங்கொண்டு வருத் தத்துடன் கூறுகின்றாள்.

தழலுக்குச் சாறில்லை; ஆயினும் இலக்கணை வழக்கால் மிக்க வெப்பம் என்பதைக் காட்டுதற்கு இவ்வாறு கூறப்பட்டது. சாறு, நெருப்பினது மிக்க சூட்டைக் குறித்தது. இல்பொருள் உவமையாகக் கொள்க. ஆர் - யார் என்பதன் மரூஉ. ஓகாரம்: இரக்கப் பொருள் குறித்தது. ஆர், தன்மை தெரியாத வேறொரு வர் என்னும் பொருளில் வந்தது. தோழிமார் அல்லர் என்றபடி.

பைந்தமிழ் - பசுமை தமிழ. பண்புப் பெயராகலான், நிலை மொழி, வருமொழியோடு புணர்ந்து முதனிலை திரிந்தது. பசிய தமிழ் என்பது பொருள். தமிழினாலாய நூல்களுக்கு ஆகு பெய ராயிற்று. அரசருக்குச் சிறப்பு, நூல்களை ஆராய்தல். அதினும் தமிழ்நூல்கள், இன்ப ஊற்றாய் அன்பின் ஆறாய் அமைவன. கற்கக்கற்க இன்பம் தருவன; அவைகளைக் கற்பார் உண்ணும் நீரினும் உயிரினும் அவற்றையே உவப்பர்; கொள்வர்; அவை களில் முழுகமுழுக நூலே தாமாய் தாமே நூலாய் பிரிவின் றியைந்து இன்பந்துய்த்து இலகுவர். அவர் அறவோராய், அன்ப ராய், ஏழைகட்கு இரங்கும் பண்பாளராய்த் திகழ்வர். ஆகலான், பாட்டுடைத் தலைவனும் அத்தகைய நீர்மையன் என்பதை விளக்க 'பைந்தமிழை ஆய்கின்ற கோன்' என்றாள்.

ஆகம் - மார்பு; உடல் என்றலுமாம். பாவியேன் - நல்லூழ் அற்றவளாகிய நான்: தன்மையொருமை. மெய் - உடம்பு. தலைவி, தன்னிலை குறித்து வருந்தியது, இப்பாடலில் விளங்கு கின்றது. (கo அ)

## தலைவி, பாலனைப்பழித்தல்

### கட்டளைக்கலித்துறை

சதிராக நந்தி பரன்தனைக் கூடிய தையலரை
எதிராக்கி என்னை இளந்தலை ஆக்கியென் அங்கமெல்லாம்
அதிராக்கித் தூசும் அழுக்காக்கி அங்கம்அங் காடிக்கிட்ட
பதராக்கி என்னையும் பற்றுமல் ஆக்கிய பாலகனே.

(இ - ள்.) *சதிர் ஆக - பெருமை பெற, நந்திபரன் தனைக் கூடிய தையலரை - நந்திமன்னனைத் தழுவிய மங்கையர்களை, எதிர் ஆக்கி - எனக்கு எதிரியாகச்செய்து, என்னை இளந்தலை ஆக்கி - என்னையும் மிக ஏழ்மையுள்ளவளாகச் செய்து, என் அங்கம் எல்லாம் - என் உடலுறுப்புகள் யாவும், அதிர் ஆக்கி - தளருளும்படி செய்து, தூசும் அழுக்காக்கி - எனது மெல்லிய ஆடையையும் அழுக்கு மயமாகச் செய்து, அங்கம் - உடலும், அங்காடிக்கு இட்ட பதர் ஆக்கி-கடைத்தெருவில் கொட்டிய பதரைப்போல் உள் ளீடு இல்லாமல் மெலிவித்து, பற்றுமல் ஆக்கிய பாலகனே - அவர் கண்ணுக்குப் போதாதவளாகச் செய்த என் அரிய மகனே! (நீ ஏன் பிறந்தாய்! நீ பிறந்ததால் பெற்றபயன் இதுவோ!)*

(வி - ரை.) *இல்லறக் கிழமைபூண்டு இன்பந்துய்த்த தலைவன் தலைவியர்க்கு அன்பின் முகிழாகப் புதலவன் தோன்றினான்; தலைவன் தலைவியையும் அரும்பெறல் மகனையும் பிரிந்து பரத்தையில் ஏகினான்; அங்கே தங்கினான்; மகவைப் பார்க்கவும் வந்தானில்லை; அதனால் தலைவி, உள்ளம் உடைந்தாள்; அழுத கண்ணீரும், ஆடைநனைவும், மாறுக்கவலையும் கொண்டாள். இதற்கிடையில் அவட்கு ஓர் எண்ணமும் இடையில் தோன்றிற்று. அது, தலைவன் நம்மை விரும்பாததற்குக் காரணம் இச் செல்வனன்றோ? இவன் பிறந்தன்றோ எங்கள் அன்புக்கு இடையில் அணைகோலித் தடுத்தானென்றெல்லாம் எண்ணி, எண்ணங்கள் அலைஅலைகளாக உருவெடுத்தன. அதனால் தன் புதல்வனைநோக்கி அவனைப் பழிப்பதுபோல் கூறித் தன் கவலையை ஒருவாறு மாற்றுகின்றாள். இக் கருத்தை உள்ளடக்கிப் 'பாலனைப் பழித்தல்' துறையில் அமைந்தது இப்பாட்டு.*

நந்திபரனைக் கூடிய தையலார், காதற் பரத்தையர். அவர்கள் தலைவனைத் தன்பால் வரவிடாது தம் இல்லத்தில் வைத்துக் காதலுரிமை கொண்டாடுவதால் எதிராக்கி யென்றாள். இளந் தலை - எளிமை. இளக்கம், அல்லது இளப்பம் என்பர், உலக வழக்கில். அங்கம் இரண்டில் முன்னது, உடலுறுப்பு; பின்னது உடம்பு என்னும் பொருளது. அதிர்தல் - தளர்தல். அதிர் என விகுதி குறைந்துநின்றது. தூசு - மெல்லிய ஆடை. அங்காடி - கடை. பதர் - உள்ளீடற்ற கருக்காய். நெல்லில் உண்டாகும் பதர்; பதரால் யாருக்கும் பயனில்லாததுபோல் நானும் பயனின்றி இருக்கின்றேன் எனத், தன்னையே வெறுததாள். கடைசியாக அவள உள்ளத்தை உறுத்தி நின்றது, தலைவன் தன்னைக் கண்ணாலும் எறெடுத்துப் பாராமல் பரத்தையர் இல்லே பயனெனக்கொண்டு அங்கேயே இருந்துவரும் கொடிய நிலைமை. அதனால், 'என்னையும் பற்றாமல் ஆக்கிய பாலகனே' என்றாள். பற்றாமல் - போதாமல், இங்கே கண்களுக்குப் போதாமல - கவர்ச்சியில்லாமல் ஆக்கினாய்' எனப் பாலகனைப் பழிப்பதுபோல் தலைவனைப் பழிக்கும் மங்கையர் உள்ள ஒருமை - அறிவு நுட்பத்தை அறிந்து இன்புறற்பாலது. இவ்வாறே பிறசான்றோர் வேறு பல தலைவியர் வாயிலாகக் காட்டும் ஓவியங்களும் கண்டு இன்புறற்பாலன. அவருள் ஒருத்தி,

[1] 'அரும்பாக் கியகொங்கை பாலாக்கியே உங்கள் அப்பனெஞ்சை
இரும்பாக்கி என்னெஞ்சைப் பித்தளை யாக்கியவ் வந்திழையைக்
கரும்பாக்கி என்னையும் வேம்பாக்கி இவ்வணம் கண்டனையே
பெரும்பாக் கியமலவோ மகனேயுனைப் பெற்றதுவே'

என்பதும், மற்றொருத்தி,

[2] 'குன்றே அனைய கடவுட் குலம்வலம் கொண்டுவந்தது
என்றே விடுத்த திருவினை யேயினி எங்கையர்பால்
சென்றே வருக மறக்கஇன் றேசெம்மல் ஊரன்செல்வக்
கன்றே உனக்கும் கசந்தன வோஇக் கனதனமே'

என்பதும், வேறொருத்தி,

[3] 'செம்மால், வனப்பெலாம் நுந்தையை ஒப்பினும் நுந்தை
நிலைப்பாலுள் ஒத்த குறியென்வாய்க் கேட்டொத்தி
கன்றிய தெவ்வர்க் கடந்து களங்கொள்ளும்

1. தனிப்பாடல்: 2. அம்பிகாபதிகோவை : ௫0௬.
3. கலித்தொகை : அ௬.

வென்றிமாட் டொத்தி பெரும! மற்றெவ்வாதி
ஒன்றினேம் யாமென் றுணர்ந்தாரை நுந்தைபோல்
மென்தோள் நெகிழ விடல்'

என்பதும், பிறண்டும் யாங்கும் பரந்துபட்ட இலக்கியங்களில் வருவனயாவும் காண்க. (௧0௯)

மேகவிடுதூது

ஓடுகிற மேகங்காள்! ஓடாத தேரில்வெறும்
கூடு வருகுதென்று [1]கூறுங்கள்—நாடியே
நந்திச்சீ ராமனுடை நல்நகரில் நல்நுதலைச்
சந்திச்சீர் ஆமாகில் தான்.

(இ - ள்) ஓடுகிற மேகங்காள் - நில்லாமல் விரைந்து செல்கின்ற மேகங்களே! நந்தி சீராமன் உடை நல்நகரில்- இராமபிரான் போன்ற நந்திமன்னனுக்குரிய சிறந்த கச்சி நகரிலே, நல்நுதலை - அழகிய நெற்றியாளாகிய என் காதலியை, சந்திச்சீர் ஆம் ஆகில் - நேரில் நீங்கள் காண நேர்ந்தால் ஓடாத தேரில - விரைந்து செல்லாத தேரினிடத்தே, நாடி - உன்னை விரும்பி, வெறும் கூடு வருகுது என்று கூறுங்கள் - உள்ளீடிழந்த வறிய வெற்றுடல் ஒன்று வந்து கொண்டிருப்பதாகச் சொல்வீர்களாக!

(வி - ரை.) தலைவன் இல்லறக் கிழமைபூண்டு தலைவியுடன் இடையறா இன்பந்துய்த்தான். அப்பால் இல்லறம் நல்லறமாக மேலும் நடத்தற்குப் பொருளீட்டக் கருதினான். பொருளின் றேல் வினைத்தன செய்வதின் முடியாவன்றே? இது கருதியே மணிமொழிப் பெருமானும் தலைவன் தோழி வாயிலாக,

[2]'முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னான் முடியும்'

எனவும்,

[3]'வறியார் இருமையறியார'

எனவும் அருளுமாற்றால் தெளிக. ஆகலான், 'சென்றான், பொருளீட்டினான்; அவன் குறித்தகால எல்லையும் வந்தது. தேரூர்ந்து

(பாடம்) 1. கூறுங்கோள்.
2, 3. திருக்கோவையார்: ௩௩௨ - ௩.

ஊர் நோக்கி விரைகின்றான்; மேகங்கள் கன்னங்கரேல் எனக் கறுத்து வானிடமெங்கும் பரந்து விரைந்து ஓடிக்கொண்டிருந்தன. தலைவன் அவைகளை நோக்குகின்றான்; அவை கடுவேகத்தில் செல்வது கண்டான்; 'ஆ! இம்மேகங்கள் எவ்வளவு விரைந்துசெல்கின்றன; நம் தேர் நகர்ந்துதான் செல்கின்றது! குதிரைகள் விரைந்துசென்றில'என்று கருதினான். பின்னும் அவன், எவ்வளவு விரைந்து செலவினும் இம்மேகங்கட்கு முன் நம் தேர் செல்ல இயலாது' என எண்ணமிட்டான்! அவ்வெண்ணத்தினிடையே இவைகளையாவது போனவுடன் நம் காதலிக்குச் சொல்லச் செய்வோமென்று கருதி, மேகங்களைத் தூதாக ஆக்கிக் கூறுவதாக அமைந்த இக்கருத்தை உணர்த்துவது இச்செய்யுள்.

'ஓடுகிற மேகங்காள்! ஓடாது நகர்ந்து மெல்லமெல்ல வருகின்ற தேரில் கூடுவருகின்றதென்று என் காதலிக்கு முன்னரே அறிவியுங்கள். நீங்கள் போகின்ற வேகத்தில் அவளை எங்கே நீங்கள் சந்திக்கப்போகின்றீர்கள்! ஒருகால் அவளைக் காண நேர்ந்தால் இவ்வளவுதான். இச் செய்தியை மட்டும் கூறுங்கள்' என்று வேண்டுகின்றான்.

மேகங்காள் பன்மை விளி. ஓடுகிற, ஓடாத என்பன, முரண்தொடை அழகு தோன்ற நின்றன. வெறுங்கூடு - வெற்றுடல். தலைவியைக்காண எண்ணங்கொண்டு வருகின்ற தலைவனுக்கு உயிர் தலைவியிடத்தே இருக்கின்றது உயிர்நின்ற உடம்பென்பது, உணர்வு, எண்ணம் உள்ளது அவையில்லாதது, உயிரற்ற உடலாகும், இதனாலே வள்ளுவர்பெருமான் [1]'அன்பின் வழியது உயிர்நிலை அஃதில்லார்க்கு என்புதோல் போர்த்த உடம்பு' என்றார். ஆதலால் வேறு நினைவின்றிவரும் தன் உடலை, 'வெறும் கூடு' என்றான். கூடு, உடம்புக்குப் பெயராதலை, [2]'கூடுவிட்டிங் காவிதான் போயினபின்' எனவரும் ஔவையார் மொழியானும் அறிக. நல்நுதல் - பண்புத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகையாகத் தலைவியைக் குறித்தது. மகளிர் அழகின் செம்மை, முகத்தில் தோற்றமுற்றுச் சிறக்கும்; அதிலும் சிறப்பாகத் தோன்றுவது, அவர்தம் நெற்றியிடத்தேயாம். இச் சிறப்பாலே, வள்ளுவர் பெருமான், தலைவன் தன் காதலியின் உள்ள நிலையை உணர்ந்ததாகக் கூறுமிடத்து,

[3]'முயங்கிய கைகளை ஊக்கப் பசந்தது
பைந்தொடிப் பேதை நுதல்'

---

1. திருக்குறள்: ௮௦. 2. நல்வழி:
3. திருக்குறள்: ௧௨௩௮.

என நெற்றியிடத்துவைத்துணர்த்துதலும் காண்க. வருகுது - வருகிறது : மரூஉமொழி. சந்தித்சீர் - சந்திச்சீர் என, த, வுக்குச், ச, போலியாகவந்தது. சந்தித்தல் - நேரில் காணல். தான் : அசைநிலை. (௧௧0)

தலைவி, நிலவைப்பழித்தல்

தரவு கொச்சகக்கலிப்பா

மண்ணெலாம் உய்ய மழைபோல் வழங்குகரத்
தண்ணுலா மாலைத் தமிழ்நந்தி நல்நாட்டில்
பெண்ணிலா ஊரில் பிறந்தாரைப் போலவரும்
வெண்ணிலா வேயிந்த வேகமுனக் காகாதே.

(இ - ள்.) மண் எல்லாம் உய்ய - இவ்வுலகிலுள்ள யாவரும் நன்கு வாழ, மழைபோல் வழங்கு கரம் - மேகத்தைப்போலக் கொடுக்கின்ற கைகளையுடைய, தண் உலா - இன்பம் உலவுகின்ற, மாலை - இயற்கைப்பண்பு பொருந்திய, தமிழ்நந்தி - தமிழ்மொழிக்குரியனான நந்திமன்னனது, நல் நாட்டில் - பயனுள்ள நாட்டின்கண்ணே, பெண் இலா ஊரில் - பெண்பிறப்பே இல்லாத நகரிலே, பிறந்தாரைப் போலவரும் - பிறந்தவர்கள்போல இரக்கமில்லாமல் தோன்றுபவர், வெண்நிலாவே - வெண்ணிறமுடைய சந்திரனே, இந்த வேகம் - இந்தக் கொடியதன்மை, உனக்கு ஆகாது - உனக்கு இருப்பது தகாது

(வி - ரை.) நந்தி மன்னனுக்குரிய கச்சிவள நாட்டில், காளைப்பருவக கட்டழகனொருவனை, உருவினும் அறிவினும் உயர்ந்த மங்கைநல்லாள் ஒருத்தி காதலகொண்டாள்; காதல் நெஞ்சைக் கவற்றிற்று ; அன்று மாலைவந்தது ; இவட்கு மாலைத் தந்தது ; இரவு சூழ்ந்தது ; இருள் பரவிற்று ; திங்களஞ் செல்வனும் தோன்றினன் ; அன்று நிறைநிலா தன் தண்ணிய கதிரை அள்ளிச் சொரிந்தான் ; இவட்குக் காதலால் அக்கதிர்கள் சுடுநெருப்பெனச் சுட்டு வாட்டின ; படுத்தாள் ; எழுந்தாள் ; இருந்தாள் ; விழுந்தாள் ! கதிர்கள் பொழிவது நின்றபாடில்லை. அப்போது நிலவை நோக்கி அவள் பேசிய புனைவே இப்பாட்டு.

'எம் மன்னன் நந்தி நாட்டில் வறுமையாளரே இல்லை. அவன் கொடையால் யாவரையும் வாழ்வித்தான் ; அன்றியும்

அவன் நாடு முழுவதும் இன்பந்தரும் குளிர்மைமிக்க தமிழ் மொழியே வழங்குகின்றது. அத்தகைய சிறந்த நாட்டில், பெண்ணே பிறக்காத ஊரில் பிறந்தவர்களைப்போல நெஞ்சிரக்க மில்லாமல் உன் ஒளிர்கதிர்களை அள்ளிச் சொரிவதற்கே வருகின்ற வெண்ணிலாவே! இக்கொடிய தன்மை உனக்கு ஒவ்வாத ஒன்று; எனவே, இஃது ஆகாது; விட்டுவிடு' என்று நிலவொடு கூறி வெறுத்துரைக்கின்றாள்.

மண்: ஆகுபெயராய், மக்களைக் குறித்தது. மழை - மேகம். அதுபோல் பயன் கருதாது, நல்லார், பொல்லார், இல்லார், இரப்பார் என எண்ணாமல் கொடுத்தல். இதன் இயல்பை,

"அறுகுளத் துகுத்தும் அகல்வயற் பொழிந்தும்
உறுமிடத் துதவாது உவர்நிலம் ஊட்டியும்
வரையா மரபின் மாரி போலக்
கடாஅ யானைக் கழற்கால் பேகன்
கொடை மடம் படுதல் அல்லது
படைமடம் படாஅன பிறர் படைமயக் குறினே'

என்றும்,

'பாரி பாரி என்றுபல ஏத்தி,
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி ஒருவனும் அல்லன்
மாரியும் உண்டீண்டு உலகுபுரப் பதுவே'

என்றும், பேகன், பாரி, ஆகிய வள்ளல்களைப் பாராட்டுமிடத்து மேகங்களையே உவமமாகக் குறித்ததும் அறிக. இவர், இங்கே நந்தி மன்னன் கைகளின்மேல் ஏற்றிக் கூறினார்.

தண்மை: குளிர்மை, இன்பம், மென்மை, அமைதி என்னும் பலபொருள் குறிக்கும் அரிய சொல்லாகும். தமிழ்மொழியைப் பயில்வார்க்கு இவைகளெல்லாம் ஒருங்கே கிட்டும். தமிழ்ச் செய்யுட்களைப் பயின்றால் இனிய ஓசை நயமும் பொருள் நயமும் ஒருங்கே கூடி நம் உள்ளத்தைக் குளிர்வித்தலோடு அதன் மெய்ப்பாடாக உடலும் மயிர்க்கூச்செறிதல் காண்டுமன்றே! அதன் இன்பம் ஏனைய இன்பங்களெல்லாம் இதன்கீழடங்க இவ்வின்பமொன்றே கங்குகரையற்றதாய்—பேரின்பமிக்கதாய்—உண்ணும் நீரினும் மிக்கதாய்—நெஞ்சை ஈர்த்து ஈர்த்து என்பையும் உருக்கும் பெற்றித்தாய் - இன்பம் பயத்தல் பழக்கத்தால் அறிது

1, 2. புறம்: கசஉ; கOஎ.

மன்றோ! அதன் மென்மை, வல்லினம் மெல்லினம் இடையினம் என மூவ்வகை ஒலியினவாய், ஏனைய மொழிகளைப்போலாகாது, இதன் வன்மை, சார்ந்ததன் வண்ணமாய் வல்லோசை தோன்றாது பதப்பட்டு நிற்றலை ஊன்றிப் பயில்வார் நன்குணர்வர். தமிழ் மொழியைக் கற்கக் கற்க அவர் உள்ளம் கனிவுடையதாய்—வேறுபாடின்றி ஓரறிவுயிர்க்கும் இரங்குந்தன்மைபெற்று அருளுளமாய் - மனவிளக்கங்கொண்டு அமைதி பெறும் ஆகவே, இந்நீர்மையான தமிழ்மொழியின் சிறப்பை உணர்ந்த நம் தமிழ்ச் சான்றோர், தமிழ் என்று வாளா கூறாது, **வண்டமிழ், ஒண்டமிழ், தண்டமிழ், செந்தமிழ், நறுந்தமிழ், இன்றமிழ்** என்றெல்லாம் அடைகொடுத்தே வழங்குவாராயினர். மணிமொழி வேந்தரும் ஆண்டவனைக் குறித்துப் பேசுங்கால்,

[1] '**தண்ணார் தமிழளிக்கும்** தண்பாண்டி நாட்டான்'

[2] 'என் சிந்தையுள்ளும், உறைவான் உயர்மதிற் கூடலின்
ஆய்ந்த **ஒண்டீந்தமிழின்** துறை'

என்றும் பிற ஆன்றோர்களும் தத்தம் இலக்கியங்களில் உரைப்பன பரந்துகிடப்பதைக் காணலாம். இச்சீரிய தமிழ் பயின்று யாவர்க்கும் நலஞ்செய்யும் பொருளாளன் என்பாராய்த் 'தண்ணுலாமாலைத் தமிழ் நந்தி' என்றார். அன்றித் தமிழில் உலா நூலையும், மாலை நூலையும் புலவர்கள் பாடிப் போற்றப்பெற்ற நந்தி என்றலுமாம்.

உலக வழக்கில் 'பெண்ணென்றால் பேயும் இரங்கும்' என்பர்; ஆனால், இங்கே சந்திரன் தன்னைப் பெண்ணென்றுகூடக் கருதாது, பெணணில்லாத ஊரிற் பிறந்து பெண்ணியல்பறியாப் பேதையர்போல் வருத்துதல் குறிக்க 'வெண்ணிலா.........வேகம் உனக்கு ஆகாதே' என்றாள். வேகம் என்னும் சொற்கு விரைவு என்ற பொருளும் நஞ்சு என்ற பொருளும் உள்ளனவாதலால் நஞ்சுபோன்ற தன்மையாக வரவர மிகத்துன்புறுத்தும் நிலைமையினால், வேகம் - கொடுமையென்னும் பொருளில் வந்தது. [3]'தள்ளுண்ட கொடிய நஞ்சம் தலைக்கொண்டால் என்ன' என, ஆன்றோர் உவமையாக இதனைக் கூறுதலும் இதனை விளக்கும்.

உனக்கு ஆகாதே என்பதில், தலைவி உள்ளொடுங்கிப் பேசும் இரங்கிய நிலையைக் காட்டும் குரல் இசைந்து இயற்கையாக அவலச்சுவை கொண்டிருப்பதறிக. (கககக)

---

1. திருவாசகம், திருவம்மானை: க0.
2. திருக்கோவையார்: உ0. 3. திருவிளை, மாபாதகம் தீர்த்த:

நந்திமன்னன் கொடைச்சிறப்பு

**நேரிசைவெண்பா**

செய்ய கமலத் திருவுக்கு முன்பிறந்த
தையல் உறவு தவிர்ந்தோமே—வையம்
மணக்கும் பெரும்புகழான் மானபரன் நந்தி
இணக்கம் பிறந்தநாள் இன்று.

(இ - ள்) வையம் மணக்கும்-உலகம் எல்லாம் நிறைந்துள்ள, பெரும் புகழான் - மிக்க சீர்த்தி வாய்ந்தவனும், மானபரன - தன் மதிப்பில் சிறந்தவனுமான, நந்தி - நந்தி மன்னனது, இணக்கம் பிறந்த நாள் இன்று - நட்பைப் பெற்ற நாளில் இப்பொழுதே, செய்ய கமலத்திருவுக்கு - செந்தாமரைமலரில் வீற்றிருக்கின்ற திருமகளுக்கு, முன் பிறந்த - முன்பு தோன்றிய, தையல் உறவு தவிர்ந்தோம் - பெண்ணாகிய மூத்த நங்கையின் நட்பு நீங்கப் பெற்றோம்.

(வி - ரை.) நந்தி மன்னனால் சிறப்புச் செய்யப்பெற்ற இரவலர் இருவர், தமக்குள் பேசிக்கொள்வதுபோல் அமைந்தது இப்பாட்டு.

இருவர் இரவலர், அவர்தம் வாழ்நாளில் பெரும்பகுதியை நாட்டில் இரந்துண்டு உயிர்வாழ்ந்து காலங்கழித்தே வந்தனர். ஒருகால் நந்தி மன்னன்பால்வந்து தம் குறைகூறி இரந்து நின்றனர். இரக்க உள்ளங்கொண்ட வேந்தன், அவர்க்கு வேண்டும் பொன்னும் பொருளும் நிலமும் கரியும் பரியும் ஈந்து அவர் வறுமையைப் போக்கினன். அவவிருவரும் மகிழ்வுகொண்டு, 'இன்றோடு நமக்கு மூத்தவள் (மூதேவி) வறுமைத்துன்பந் தொலைந்தது, நந்திபரன் பேரருளினால்' என்று கூறினர்.

செய்ய - செந்நிறமான. செம்மை + அ—செய்ய என வந்தது பண்புப் பெயராதலால். இதனை, "முன்னின்ற மெய்திரிதல்"[1] என்னும் நன்னூல் விதியாற் கொள்க: தாமரைக்கு அடை. கமலம் - தாமரை. அது முதலாகு பெயராக அதன் மலருக்கு வந்தது. திருமகள் செந்தாமரை மலரினும் கலைமகள் வெண் தாமரை மலரினும் வாழ்வதாக உருவகப்படுத்துக் கூறுவது பண்டை நம் தமிழகச் சான்றோர் வழக்கு. அதற்கு உள்ளீடான பொருள், திரு - செல்வம்: அவை, பொன் மணி முதலிய பொருள்கள். அவை சிவந்த நிறமுடையனவாதலால், அவைகளைச்

1. நன்னூல்: கருசு.

செந்தாமரைகளாகவும், கல்வி கலை முதலியன அறிவொளியால் விளங்குவன. அறிவு தூய்மையானது. அறிவை ஒளியென்றும் அறியாமையை இருளென்றும் கொள்வது ஆன்றோர் மரபு. இதனை வள்ளுவர் பெருமான் [2]'காரறிவு' என்பர். ஆகவே, செல்வத்தைச் செந்தாமரை மலராகவும் அறிவொளியை வெண்தாமரை மலராகவும் கொண்டு அவைகளில் முறையே திருமகளும் கலைமகளும் இருப்பதாகக் கூறினர். புராணங்கள் இவைகளை வெவ்வேறு வகையாகக் கூறும்.

இவ்வாறே செல்வத்தை இன்பந்தருதலால் இளையளாகவும், வறுமையைத் துன்பந்தருதலால் மூத்தாளாகவும குறித்தனர். ஏனெனின், பிறக்கும் பொழுது, யாரும் எப்பொருளையும கொண்டுவருதலில்லை; தம் உடலுறுப்புகளோடேதான் பிறக்கின்றனர்; இடையில் சேர்வனவே பொன்னும் பொருளும் பிறவும். ஆகலான், முன் தன்னுடனே இயற்கையாக இருந்த நிலை, வெறுநிலை, வறுமையே. அதனால், அதை மூத்தாள் என்றும், அதற்குப் பின் செயற்கை முறையில் சேர்ந்த செல்வநிலையை, இளையாள் என்றும் நுணுகி ஆய்ந்து கற்பித்தனர். எல்லாவுயிர்கட்கும் இளமைப் பருவம் எல்லாவகையானும் இன்பந்தருதலும், முதுமைப் பருவம் துன்பந்தருதலும் கண்கூடாக நாம் கண்டுவரும் உண்மையன்றோ? ஆகவே, இன்பந்தருதற்குக் காரணமான செல்வத்தை இளையள் (தங்கை) ஆகவும், துன்பந்தருதற்குக் காரணமான வறுமை (ஒரு பொருளும் இல்லாமை)யை மூத்தாள் (தமக்கை) ஆகவும் உருவகித்துக் கூறினா என்றலுமாம். இதனைத் தேவரும்,

> [3]'அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவள்
> தவ்வையைக் காட்டி விடும்'

என்றும்,

> [4]'மடியுளாள் மாமுகடி என்ப மடியிலான்
> தாளுளாள் தாமரையி னாள்.'

என்றும் முறையே செல்வத்தையும் வறுமையையும் குறித்தல் காண்க.

இம்முறையில் இங்கே 'செய்யகமலத்திருவுக்கு முன்பிறந்த தையல் உறவு தவிர்ந்தோம்' என்றார். உறவு - சேர்க்கை; நட்பு. தம் வறுமை தீர்ந்த நிலையை. வையம் - உலகம்: யாவையும் வைத்தற்கிடனானது என்பது பொருள். மணத்தல் - கமழுதல்;

---

1, 2, 3. திருக்குறள்: உஅஎ; கசுஎ; சுகஎ.

மணம் பரவுவதுபோல் எங்கும் பரந்து நிற்கும் தன்மையைக் குறித்தது. இன்று - இப்பொழுதென்னும் பொருளது. கால இடப்பொருள் குறித்து நின்றது. (௧௧௨)

கையறுநிலை

**எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்**

வானுறு மதியை அடைந்ததுன் வதனம்
மறிகடல் புகுந்ததுன் கீர்த்தி
கானுறு புலியை அடைந்ததுன் வீரம்
கற்பகம் அடைந்ததுன் கரங்கள்
தேனுறு மலராள் அரியிடம் புகுந்தாள்
செந்தழல் அடைந்ததுன் தேகம்
நானும்என் கலியும் எவ்விடம் புகுவேம்
நந்தியே நந்தயா பரனே.[1]

(இ - ள்.) நந்தியே - நந்தியென்னும் பெயருடைய மன்னா! நம தயா பரனே - எம்முடைய அருளிற் சிறந்தவனே! (நீ இன்று இறந்துபட்டமையால் உன்னிடத்துள்ளனவற்றுள்) உன் வதனம் - உனது முகத்தின் நல்லொளி, வான் உறு மதியை அடைந்தது-வானிடத்துத் தோன்றும் நிலவிற் சேர்ந்துவிட்டது, உன் கீர்த்தி - உனது புகழ், மறி கடல் புகுந்தது-அலைகள் மோதுகின்ற கடலில் மூழ்கிவிட்

(பாடம்) 1. வானுறை மதியில் புக்கதுன் தட்பம்
மறிகடல் புக்கதுன் பெருமை
கானுறை புலியிற் புக்கதுன் சீற்றம்
கற்பகம் புக்கதுன் கொடைகள்
தேனுறை மலராள் அரியிடம் புகுந்தாள்
செந்தழல் புக்கதுன் மேனி
யானுமென் கலியும் எவ்விடம் புகுவோம்
நந்தியே எந்தைபி ரானே.

என, வேறு சுவடிகளில் இவ்வாறு இப்பாட்டு சில வேறுபாடுகளுடன் காணப்படுகின்றது.

டது, உன் வீரம் - உன்னிடமுள்ள வீரமானது, கான் உறு புலியை அடைந்தது - காட்டில் வாழ்கின்ற புலியினிடத்தே புகுந்துவிட்டது, உன் கரங்கள் - உன்னுடைய கொடைத் திறம், கற்பகம அடைந்தது - கற்பகதருவிடத்தே போயி ருக்கின்றது, தேன் உறு மலராள் - தேன் பொருந்திய செந்தாமரைமலரில் வீற்றிருக்கின்ற செல்வத்திருமகள், அரியிடம் புகுந்தாள் - திருமாலிடம் குடிபுகுந்துவிட்டாள், உன் தேகம் - (இவைகளெல்லாம் நீங்கிவெறிதான) உனது உடல், செம் தழல் அடைநதது - செந்நிற நெருப்பில் புகுந்து அழிந்தொழிந்தது, நானும என் கலியும் எவ் விடம் புகுவேம-(இனி உன்னை இழந்து தவிக்கின்ற எளிய னை) நானும (எனனைவிடாது பற்றி வருகின்ற) என் வறுமைத் துன்பும் எவ்விடத்தே சென்று வாழ்வோம். (எங்கட்கு ஒருபற்றுக் கோடும் இல்லையே!)

(வி - ரை.) இப்பாட்டு, நந்திமன்னன் இறந்தபின் இவ்வா சிரியர் வருந்திப் பாடியதாகத் தெரிகின்றது; அன்றி இந்நூல் பாடி முடிதற்கு முன் பாட்டுடைத் தலைவன் இறந்தானுதல் வேண் டும். இந் நூல் நந்திமன்னனின் இளவல்களில் ஒருவர், நந்தி யைக் கொல்வதற்காகவே, அறம் வைத்துப் பாடியதாக நாட்டில் வழங்கும் வழக்காறுண்மையால் அதற்காகப் பாடியதாகவும் கொள்ளக் கிடக்கின்றது. அறம் வைத்துப் பாடியதற்கு அகச் சான்றுகப் பல் பாட்டுக்களில் இருபொருள், கவர்படு பொருளாக இந் நூலகத்து வந்திருத்தல் கொண்டும் அறியலாம். அவை களைத் தனியாக இந் நூலகத்து மற்றோரிடத்துக் குறிக்கப் பெற் றுள்ளன. அவைகளை ஆங்கே காண்க.

ஒருவன் முகத்துக்கு நிலவையும் வீரத்தன்மைக்குப் புலியை யும் கொடுக்கும் கைகட்குக் கற்பக தருவையும் ஒப்பாக ஆன்றோர் கூறுவது மரபு. நந்தி இறந்தான். அவன் முகத்தொளி, நிலவில் போய்ச சேர்ந்ததென்றும், வீரம் புலியிடத்துச் சேர்ந்ததென்றும், அவன் கொடை கற்பகத்தருவைப் போய்ச் சேர்ந்ததென்றும் நந்தியின் முகச் சிறப்பு, வீரம், கொடை இவைகளைக் குறித்துக் கவன்று **தற்குறிப்பேற்ற அணி** தோன்றக் கூறினர். பின்னரும் அவனிடம் மாறுது குடிகொண்டிருந்த செல்வச செவிலியாகிய திருமகள், தன் கணவனுகிய திருமாலைப்போய் அடைந்தாளென் றும், அவன் திருவுடல் நெருப்பைப்போய் அடைந்ததென்றும் அவன் செல்வச் சிறப்பு, அவன் உடல் இவைகள் அழிந்தன வென்று கூறி வருந்தி, அவனைச் சேர்ந்தவைகளெல்லாம், அவை

யவை சாரவேண்டிய இடத்துப்போய் உரிமையுடன் சார்ந்தன. நமக்கு எங்காம் புகலிடம் என்று கருதியவராய், அவன் இருந்தால் தம்மை விடாது பற்றி நிற்கும் வறுமையைத் தொலைக்கலாமே என்ற வருத்த மேலிட்டவராய் 'நானும் என் கலியும் எவ்விடம் புகுவேம்' என்று தம் உள்ளமுடைந்து கூறினர். இதில், ஆசிரியரின் உள்ளக் கலக்கம் 'நந்தியே நந்தயா பரனே' என்ற தொடரினல் நன்கு வெளிப்படுகின்றது.

அதிகமான் நெடுமானஞ்சி இறந்தகாலை அவன் கொடைத் திறத்தையும் பாடல்சால் சிறப்பையும் பாராட்டி ஔவை மூதாட்டியார் வருந்தியதும் இதனோடொத்த கருத்தாகலான், அவ்வோவியத்தையும் ஈண்டுக் காண்பாம்:

[1]'...........................

ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ
இனிப், பாடுநரும் இல்லைப் பாடுநர்க்கொன் றீகுநரும் இல்லைப்
பனித்துறைப் பகன்றை நறைக்கொள் மாமலர்
சூடாது வைகி யாங்குப் பிறர்க்கொன்று
ஈயாது வீயும் உயிர்தவப் பலவே'

என்றது காண்க.

நந்தி முகம் வீரம் முதலியன வேறு இடங்களில் போய் மறைந்ததாகக் கூறும் கருத்துக் கொப்ப,

[2]'ஒருபாதி மால்கொள மற்றொரு பாதி உமையவள்கொண்டு
இருபாதி யாலும் இறந்தான் புராரி இருநிதியோ
பெருவா ரிதியில் பிறைவானில் சர்ப்பம் பிலத்தில்கற்ப
தருவான போச! கொடைஉன்கை ஓடென்கை தந்தனனே'

எனவரும் சிவபெருமான் இறந்ததாகக் கற்பித்துக் கூறும் பழம் பாட்டு அவலச் சுவைக்கு ஏற்ற சான்றாயமைவதறிக.

மறிதல் - மடங்குதல். இச் செயலால், அலைக்கு வந்தது. தேனுறுமலர்: ஈண்டுச் சிறப்பு நோக்கிச் செந்தாமரை மலரைக் குறித்தது. செம்தழல் - செந்நிறங்கொண்டு எரியும் நெருப்பு. கலி - வறுமை. தயாபரன் - இரக்கத்தில் உயர்ந்தோன்; அருளாளன். (௧௧௩)

1. புறம்: உ௩௫. 2. தனிப்பாடல்.

## தலைவன், தலைவியின் உறுப்புநலனைப்புகழ்தல்

### கட்டளைக்கலித்துறை

வாரூரும் மென்முலை வார்த்தைகண் டூரும் மதிமுகத்தில்
வேரூரும் மேனி வியன்தளிர் ஊரும் விசயனுக்குத்
தேரூரும் மால்நந்தி தேசபண் டாரிதெள் ளாறைவெற்பில்
காரூர் குழலிக்குக் காதள வூரும் கடைக்கண்களே.

(இ - ள்.) விசயனுக்கு - அருச்சுனனுக்கு, தேர் ஊரும மால் - (பாரதப் போரில் தேர்ப்பாகனாக) தேரோட்டிய திருமாலையொத்தவனும, தேச பண்டாரி - தேசபண்டாரியென்னும் பட்டங் கொண்டவனுமாகிய, நந்திதெள்ளாறை வெற்பில் - நந்திமன்னனுக்குரிய தெள்ளாற்று மலையிடத்தே இருக்கின்ற, கார் ஊர் குழலிக்கு - மேகத்தைப் போன்ற கருங்கூந்தலையுடைய என காதலிக்கு, மென் முலை - மெல்லிய கொங்கைகள், வார் ஊரும் - கச்சினைக் கிழித்துவிம்மும், வார்த்தை - அவளின் சொற்கள், கண்டு ஊரும் - கற்கண்டினும் இனிமை மிக்கதாக இருக்கும், மதி முகத்தில் - அவளின் நிறைநிலாவையொத்த முகத்திடத்து, வேர் ஊரும் - வேர்வைநீர் துளிக்கும், மேனி - அவள் உடலானது, வியன்தளிர் ஊரும - மென்மைமிக்க தளிரினும சிறந்ததாக இருக்கும், கண்கடைகள் - கடைக்கண்களானவை, காதளவு ஊரும் - காதுகள்வரை நீண்டு போய்க்கொண்டிருக்கும். (என்னே! என் காதலியின் உறுப்பு நலங்கள்! அவளை எவ்வாறு பிரிவேன்! பிரிந்து எவ்வாறு வாழ்வேன்!)

(வி - ரை.) தலைவன் பொருளீட்டும்பொருட்டு வேற்று நாடு செல்ல எண்ணினன்; தலைவியின் பேரழகு, அவன் நெஞ்சைக் கவற்றியது; அவன் தன் நெஞ்சொடு அவள் உறுப்புநலங்களைக் கூறி வியக்கின்றான். அத்துறையில் தன் நெஞ்சொடு கூறுவதாக அமைந்தது இப் பாட்டு.

தலைவியின் உறுப்புக்கள் யாவும் வியக்கத் தக்கதாக அழகெலாம் திரண்ட அருமை பெருமை மிக்கனவாதலால், அவைகள் ஒவ்வொன்றையும் எண்ணியெண்ணிக் கவன்று பேசுகின்றான்.

இதில் தலைவனது பிரிவாற்றாமையுணர்வு உறுப்புகளைப் புகழ்தலின்வாயிலாகப் புலனாதல் கண்டு இன்புறுக.

ஊர்தல்-செல்லுதல், மேலேறிச் செலுத்துதல் என்னும் பல பொருள் குறித்த உரிச்சொல். இங்கே இடங்கட்கேற்றவாறு பொருள் கூறப்பட்டது.

வார் - கச்சு; இதனை இக்காலம், இரவிக்கையென வழங்குகின்றனர். அதை ஊர்தல் - கொங்கைகள் தன் இளமை மதர்ப்பால் மேலெழுதல். கண்டு - கற்கண்டு; கரும்புக் கட்டி: முதற்குறை. சொற்கள் கனியினும் கட்டிபட்ட கரும்பினும் கேட்கக் கேட்க இன்பமாக இருத்தலால், அவ்வினிமைக்குக் கற்கண்டைக் கூறினான். மதிமுகம்: உவமைத்தொகை. வேர் - வியர்வை நீர். அது முகத்தில் காதலுணர்வால் மிகுதியாகத் தோன்றுவது. மேனி உடம்பின் நிறம்: ஆகுபெயர். தளிர் போன்று செம்மை கலந்த வெள்ளை நிறமாக இருத்தல் சிறப்பு. இதனைச 'செண்பக மலரெனச் சிவந்த மேனியாள்' எனவரும் கொக்கோக நூற்பாட்டானும் அறிக. திருமால் கிருட்டின அவதாரத்தில், பாரதப் போர் நிகழ்ந்தபோது பார்த்தனுக்குத் தேரோட்டியாக அமர்ந்து தேரோட்டினான் என்பது வரலாறு. நந்திமன்னன் அவ்வவதாரமாகக் கொள்ளப்பெறுதலால் 'மால்நந்தி' என்று கூறப்பட்டது. தெள்ளாறை - தெள்ளாறென்னும் ஊர். கார் ஊர் குழலி - மேகத்தைத் தன் கருமையானும் குளிர்மையானும் பளப்பளப்பானும் மண முதலியவற்றானும் தூரத்துகின்ற கூந்தலையுடையாள் எனக் கூந்தலின் சிறப்பைக் கூறினான். கண்களுக்கு நீட்சி சிறந்தது. ஆன்றோா தம் நூல்களில் 'நெடுங்கண்' என்றே வியப்புறக் கூறுவர். இவற்றுள், இவனுக்கு மிக்க இன்பமளித்தன, குங்குமக் கொங்கைகள். துன்பந்தந்தன, கண்கள். ஆதலால் முதலிற் கொங்கைகளையும் இறுதியில் கண்களையும் வியந்தான். ஏனெனின், காதலை முதல்முதன் ஊட்டுவது, கண்களின் பார்வை. இதனை வள்ளுவர் கண்ட காதலன், [1]"இருநோக்கு இவள் உண்கண் உள்ளது ஒருநோக்கு, நோய்நோக்கு' என்பன். ஆகவே, காதல்நோயைத் தருவது, காதலி கண்கள். அதனை நீக்கி இன்புறுத்துவது கொங்கை இணைகள்.

இதனை மானனீகையின்பாற் காதல்கொண்ட உதயண மன்னன், அவள் பந்தாடுங்கால், தன்நெஞ்சம் பறையடிப்பது போல் துடித்தமையும், அதை நீக்கும் மருந்து நகில்களே யென்பானாய், அவட்குத் தன் காதற்கிழத்தியாகிய வாசவதத்தையின் நெற்றியையே ஓலையாகக்கொண்டு வரைந்த கடிதத்தில்,

1. திருக்குறள்:

தன் மனநிலைதோன்ற விரித்தெழுதிய கருத்து, ஒவ்வொருவரும் கற்றுச் சுவைத்து மகிழ்தற்குரித்தாதலோடு கொங்கைகளையே குறித்துச் சுட்டிக் கூறுவதும் வியத்தற்பாலதாம், ஆகலான் தருகின்றாம் :

[1] 'ஒடியா விழுச்சீர் உதயணன் ஓலை
கொடியேர் மருங்குற் குயில்மொழிச் செவ்வாய்
மான னீகை காண்க சேணுயர்
மாட மீமிசை மயிலிறை கொண்டென
ஆடல் மகளிரொ டமர்ந்தொருங் கீண்டி
மூந்துபந் தெறிந்தோர் முறைமையிற் பிழையாப்
பந்துவிளை யாட்டினுள் பாவைதன் முகத்துச்
சிந்தரி நெடுங்கணென் நெஞ்சகங் கிழிப்பக்
கொந்தழற் புண்ணொடு நொந்துயிர் வாழ்தல்
ஆற்றேன் அவ்வழல் அவிக்குமா மருந்து
கோற்றேன் கிளவிதன் குவிமுலை ஆகும்
பந்தடி தானுறப் பறையடி உற்றஎன்
சிந்தையும் நோயும் செப்புதற் கரிது'

என்று குறிப்பிட்டமையும் இக்கருத்துக்களோ டொன்றியதாதல் அறிக. கடைக்கண்களே என்பதில் தலைவன் காதலியின் உயரிய நிலையும் அவன் தலைவியைப் பிரிந்து செல்லற்கு ஒருப்படாது தாமரை இலைத் தண்ணீரென அங்குமிங்கும் தத்தளித்து அலைதலும் கண்ணுடியெனத் தெற்றெனத் தோன்றுதல் இன்புறற் குரியன. இப்பாட்டு,

[2] 'நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு'

என, வள்ளுவர் கூறும் வாய்மொழிக்கு எடுத்துக்காட்டாக விளங்குதலையறிந்து படித்துச் சுவைத்து பயன்கோடற் குரியதாக இன்பந் தருகின்றது, இப்பாடலும் இந்நூலும் என அறிக. (கக௪)

**நந்திக்கலம்பகம் மூலமும் உரையும் முற்றும்.**

---

1. பெருங்காதை, வத்தவ, முகவெழுத்து : சுரு-எ௫.
2. திருக்குறள் : எ௮ரு.

## பின் இணைப்பு

### நேரிசை வெண்பா

[1]ஊரைச் சுடுமோ உலகம் தனைச்சுடுமோ
யாரைச் சுடுமோ அறிகிலேன்—நேரே
பொருப்புவட்ட மானமுலைப் பூவையரே இந்த
நெருப்புவட்ட மான நிலா.

### வஞ்சி விருத்தம்

புரம்பற்றிய போர்விடை யோனருளால்
வரம்பெற்றவும் மற்றுள விஞ்சைகளும்
உரம்பெற்றன ஆவன உண்மையன்றன்
சரம்பற்றிய சாபம் விடுந்தனையே.

---

1. இப்பாடல்கள் இரண்டும் முன்பதித்துள்ள சுவடிகளில் காணப்பெறவில்லை. அண்மையில் ஸ்டார் பிரசுரத்நார், திரு. டி. கே. சி. அவர்களால் எழுதி வெளியிட்டுள்ள பதிப்பில் காணப்படுகின்றன. இவைகளில் பாட்டுடைத் தலைவன் பெயர் முதலியன இல்லை; ஆகலான் இவைகட்கு உரை யெழுதப் பெறாது, பின் இணைப்பாகச் சேர்த்துள்ளோம். இன்னும் வேறு சுவடிகளில் இவை கிடைக்கப்பெறுமேல் அடுத்த பதிப்பில் ஒன்றாக இணைத்து உரையுடன் வெளியிடுவோம்.

## வசைக் குறிப்புக்கள்

### [எண்கள் பாட்டைக்குறிப்பன]

### நற்சிறப்புப்பாயிரம்

'திருப்பெருக' என்பது செல்வம் தொலைக என்னும் பொருள் குறிக்கும் வசைமொழி. தாலி தழைக்க; நன்கு வாழ்க என்பன போல வழங்கும் உலக வழக்கை ஓர்க. (உ)

### நூல்

'மண்டலம்' என்பது உலகமென்னும் பொருள் தருவதாய் நூலுக்கு முதல்வரும் மங்கலசொல்லாக இருப்பினும் மண்டு+அலம் எனப் பிரிவுபட்டு மிக்க வருத்தம் என, மங்கலமல்லாத பொருள் தருதலையும் அறிக. (க)

'உலகுடையான் திருமுடியும்' என்பதில் திரு - செல்வமானது, முடியும் - முடிந்துபோம். இல்லாமற்போகும் என. வசைப்பொருள் தருதல் காண்க. (க)

'முதல்வனுக்குப் பழுது' என்பதில், பழுது - கேடு என்று பொருள் தருதல் அறிக. (எ)

'ஒழிகின்றது தொண்டை' என்பதில் தொண்டைமாலை இல்லாது அழிந்துபோகின்றது என்றும், 'நந்தி சினக்கலி' என்பது சின - சிறிய, கலி - சனி, சின்னச்சனியெனப் பொருள்தருதல் காண்க. (கடு)

'நந்தி மதியிலி' என்பது, நந்தியாகிய அறிவில்லாதவன் என்றும் பொருள்தருதல் அறிக. (உக)

'பரவாதை நந்தி' என்பது மிக்க துன்பத்துக்குள்ளான நந்தி என்னும் பொருள்படுதல் காண்க. (உங)

'உலகளிப்பன்' என்பது, உலகை அளிக்கமாட்டான் என்னும் பொருள்தருதல் அறிக. (உசு)

'கோமுற்றப்படை நந்தி' கோ முற்று அப்படை நந்தி எனப் பிரிவுபட்டு விண்ணுலகஞ்சேர்ந்த படையையுடை நந்தி எனப் பொருள்படுதல் காண்க. கோ - விண்ணுலகம். (ஙங)

'வென்றான் கடையாறு' என்பது, வென்றான்தான் முடியும் வழியாக என்று பொருள் கொள்ளக்கிடப்பதறிக. (ஙடு)

'கரியாய் நின்ற மன்னு' என்பது எரிந்து சாம்பலாய்ப்போன அரசே எனப் பொருள்தந்து மங்கலமின்மை அறிக. (௫௩)

'மனக்கினியான்' என்பது, மனத்துக்கு இனிக்கமாட்டான் என்றும் பொருள்தருதல் காண்க. 'செய்யாள் பலநலமும் செய்வள்' என்பதில், செய்யாள் - செய்யமாட்டாதவள் என்னும் பொருள்தருதல் போல. (௫௭)

'நாடுடை' என்பது நாடு அழிந்துபோன என்னும் பொருள் படுமாறு காண்க.

'அறம் பெருகும்' என்பது, அறம்கெடும் என்னும் பொருள் தருதல் காண்க. தாலி பெருகிற்று என்பதுபோல. (௯௪)

'தென்னுடை மன்னன்' என்பது, தென்னுடுகெட்ட மன்னன் என்றும், 'வையமெலாம்பட' என்பது உலகமெல்லாம் அழிய என்றும் பொருள்படுதல் காண்க. (௯௯)

'அவனிதனில் எங்கும் அவன் உடைய' என்பது உலகத்தில் எந்த இடத்திலும் அவன் தோற்றுப்போக' என்னும் பொருள் படுதல் காண்க. (௭௨)

குறிப்பு: பின்னும் இந்நூலகத்து ஆங்காங்கே வசைக்குறிப்புக்கள் வருவன உளவேல் அவைகளையும் கொள்க.

---

# செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை

